கழக வெளியீடு: ௮௨௮

# பதினெண்கீழ்க்கணக்குச் - - - சொற்பொழிவுகள்

[பேராசிரியர் பதின்ஒருவர் சொற்பொழிவுகள்]

திருநெல்வேலித்
தென்னிந்திய தமிழ்ச்சங்கத்தின் சார்பில்
திருநெல்வேலிச் சந்திப்பு, தருமபுர மடத்தில்
12—2—1956 இல்
*நிகழ்த்தப்பெற்ற*

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

தமிழ்நாடு வானினும் உயர்ந்த வண்புகழுடையது; அந் நாட்டில் இயற்கையாகத் தோன்றி உலகிற் பரந்த விழுப்பமிக் கது இழுமென் ஓசை இன்பஞ்சானற நம் செந்தமிழ் மொழி; இம் மொழிக்கண் இலலாத எப்பொருளும் இல்லையெனலாம். இத்தகைய வீறு பெறறது அம் மொழிக்கண் அமைந்த நுண்கலை வண்மை வளனேயாம்

பொற்கால மெனப் போறறத் தக்க நறகாலம், சங்க காலம். அக்காலம் நாடு அடிமையிற பிணிப்புறுதிருந்ததால், கலை வளர்ந் தது; இசை இயனறது; நாடகம் நயந்தது. அக்கால மக்கள் நாடக மோர்த்தும், பாடல் நயந்தும், வெண்ணிலவின் பயன் துய்த்தும், தண்ணிலவு தமிழ வளர்த்தும் மகிழ்ந்து வாழ்ந்தனர்.

அம் மகிழ்வு பூத்த காலத்தே அருங்கலைக் கருவூலங்கள் பல தோன்றின. அக்காலத்தே வாழ்ந்திருந்த நல்லிசைப் புலமை நல்லார் அக்கலை நூலகளின் நுட்பதிட்பங்கட் கேற்பவும், அடி களின் சிறுமை பெருமைக் கேறபவும் பாகுபாடு செய்து பத்துப் பாட்டு எட்டுத்தொகை யெனத் தொகுத்தும் மேற்கணக்கு கீழ்க் கணக்கென வகுத்தும் நாட்டில் வற்று வளனுக—அறிவு ஊற் றுக—பலவான் துறை வழிகாட்டியாக—அமைத்துதவியருளினர்.

இவற்றுள் பெரும்பான்மை நான்கடிக்குமேல் இயன்றன வான பேரெல்லை அடிகளுடைய பாடல்களைக் கொண்டவை மேற் கணக்கென்றும், பெரும்பானமை நானகடிக்குள் இயன்றனவான சிற்றெல்லை அளவைக்கொணட அடிகளானியன்ற பாடல்களைக் கொண்டவை கீழ்க்கணக்கென்றும் கூர்த்தறிந்து வரையறை செய்து அமைத்தனர். மேல் கீழ் என்பன முறையே பெரிது சிறிது என்னும் பொருளது. கணக்கு என்பது, நூல் என்னும் பொருளது. இதனுனே நூலாசிரியர்க்குக் கணக்காய ரென்னும் பெயர் வழக்குண்மையும் அறியலாம். மேற்கணக்கு பத்துப் பாட்டும் எட்டுத் தொகையுமாம். கீழ்க்கணக்கு திருக்குறள் முதலாகக் கைந்நிலையீருகவுள்ள பதினெட்டு நூல்களுமாம். இவற்றை விளக்கப் பண்டே ஒரு பாட்டு அமைந்துள்ளது.

> "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
> பால்கடுகம் கோவை பழமொழி—மாமூலம்
> இன்னிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
> கைந்நிலைய வாம்கீழ்க் கணக்கு"

என்பதது.

இப்பதினெண்வகை நூல்களும் அகம் புறம் என இருவகைப் பொருள்களைக் கொண்டு மக்களுக்கு உறுதி பயக்கும் பயனை அறம் பொருள் இன்பம் வீடு எனனும் நான்கையும் நன்கெடுத்து நுவல்வனவாம்.

இந் நூல்கள் யாவும் சில்வகை யெழுத்தில் பல்வகைப் பொருளைச் செவ்வன் செறித்துப் பலவான் துறை வாய்ந்து கற்போர் நற்பயன் பெறத் துணைபுரிவனவாம்.

இத்தகைய சீரிய கூரிய தீஞ்சொல் பொருள்வளஞ் செறிந்த நூல்களுள் மேற்கணக்கு நூல்களான பத்துப்பாட்டு எட்டுத் தொகை நூல்களுக்கும் முன்னரேயே பலலாண்டுகளாகத் தொடங்கிப் புலத்துறை முற்றிய நலத்துறைப் பேரறிஞர்களால் சொற்பொழிவு ஆற்றச் செய்து அப்பொழிவு நூல்களையெல்லாம் தனித்தனி நூல்களாக உருவாக்கி நம் கழகவழி வெளியிட்டுள் ளோம். இதுகாலை மாநாடு கூட்டி ஒருமறை முதல் மணிமொழிக் கோவை ஈருகப் பத்துப் பகுதிகளாகப் பகுத்துப் பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள யாவறறையும் முத்தமிழத் துறையின் முறை போகிய வித்தகர்களைச் சொற்பொழிவாற்றச் செய்தும் இம் மாநாட்டுக்குத் தலைவராகச் சித்தாந்த கலாநிதி உயர்திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்களைக்கொண்டு தலைமை யுரை நிகழ்த்தச் செய்தும் இவைகளைக் கோத்து நூலுருவாக்கிப் '**பதினெண் கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள்**' என்னும் பெயரால் இன்று வெளியிட்டுள்ளோம்.

இதனைச் சொற்பொழிவாற்றித் தம் அரிய கருத்துத் திரளுடன் முன்னரே திரட்டித் தந்த அறிஞர் பெருமக்கள் பதின்மருக்கும், இம்மாநாடு இனிது நிகழத் தலைமையேற்று நடத்தித் தலைமைப் பேருரைச் சொறபொழிவைத் தந்துதவிய சித்தாந்த கலாநிதி உயர்திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கட்கும் எம் உளகனிந்த நன்றி.

அரிய இப் பதினெண் கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகளைத் தம் பத்தாம் தமிழ்த் திருவிழா நனாட்போதில் ஆற்ற உதவிய **திருமை அருள்பெறு நெல்லை அருணகிரி இசைக் கழகத்தார்க்கும்** எம் எழுமையுந் தொடர்ந்த நன்றி உரித்தாகுக.

பேரறிவுப் பேழையாகிய இச் சொற்பொழிவு நூலையும் இதற்குமுன் வெளிவந்துள்ள ஏனைய சொற்பொழிவு நூல்களையும் நம் தமிழ் நன்மக்கள் வாங்கிக்கற்று வானமளந்த தனைத்தும் அளக்கும் மாண் பெருநூற் செல்வர்களாய்ப் புகழ் மிகுந்து பொற்புடன் வாழ்வார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை



## சொற்பொழிவுகள்



*சித்தாந்த கலாநிதி விததுவான,*

**ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்**

## தலைமையுரை - - -

[சித்தாந்த கலாநிதி,
வித்துவான், ஔவை சு. துரைசாமிப்பிள்ளை]

### தோற்றுவாய்

பெருமக்களே,

தமிழ்மக்களின் தமிழகம் இடம் சுருங்கி, பண்பாடு மெலிந்து, அடிமையுணர்வு மிகுந்து, வறுமையில் நெளிந்து கொண்டிருக்கும் நிலையில் நிறுத்தப் பெற்றுளது. காணும் இடமெல்லாம் தமிழர் அறியாத மொழிகள் காட்சி தரு கின்றன. காணப்படும் ஒரு சில தமிழ்ச் சொற்களும் பெயர்களும் பிழையும் வழுவும் பெருகியுள்ளன. அரசியல் நிலையங்களிலும் தொழில் வாணிக அலுவலகங்களிலும், புகைவண்டி முதலிய போக்குவரவுகளிலும் சமய நிலையங் களான கோயில் வழிபாடுகளிலும் பிற துறைகளிலும் தமிழர்களின் தமிழ் இல்லை; தமிழர் உள்ளம் வளர்க்கும் தமிழக் கருத்தும் ஒழுக்க நெறியும் தக்கவாறில்லை. தமிழர் அனைவரும் பிறர் யாருக்கோ அடிமைப்பட்டு உரிமை யிழந்து மானமில்லாத வற்றல் மரங்கள் போல வாடிய உள்ளமும் கோடிய நினைவும் கொண்டு குனிந்து தோன்று கின்றனர். தமிழரது தமிழ வாழ்வு தமிழகத்தில்தான் இது நிலை என்றால், அவருடைய கிளைஞர் வாழும் பிறநாடு களிலும் இந்த அவல நிலையே நிலவுகின்றது. தமிழருக் கும் தமிழ்க்கும் ஆதரவு செய்யாதே என்ற கொள்கையும் செய்கையும் கிளர்ந்து எழுந்துள்ளன. “உடன் பிறந்தே கொல்லும் வியாதி” களைப் போலத் தமிழர்களோடு தமிழ ராயிருந்தே தமிழக்கேடு செய்யும் தகவிலார் கூட்டம் வாழ்

வின் எல்லாக் கூறுகளிலும் செல்வாக்குப் பெற்றுத் தமிழர் வாழ்வு தலைநிமிரா வண்ணம் தாழத்தி அடக்குவதும், ஒடுக்குவதும் செய்து திரிகிறது. தமிழரினம் வாழ்வதா அன்றித் தலை சமழத்துச் சாவதா என்ற எல்லையை நோக்கிச் சாய்ந்து செல்கிறதெனின், அது மிகையாகாது.

இந்தத் தாழ்ந்த நிலையில் ஒரு சில நன்முயற்சிகள் காணப்படுகின்றன. அரசியல் தொழில் வாணிகம் சமயம் ஆகியவற்றில் தமிழே மொழியாதல் வேண்டுமெனச் சிலர் நினைக்கின்றனர்; பேசுகின்றனர்; பலர் அஞ்சுகின்றனர். கல்வி நிலையங்களில் கற்பிக்கும் யாவும் தமிழிலே இருக்க வேண்டும் என்று இசைக்கின்றனர்; பலவேறு மொழிகளைப் புகுத்தி அதனை இடாப்படுத்தற்குரிய செயல்வகைகளையும் சிலர் செம்மையாகச் செய்கின்றனர்; இடையூற்றுக் கிடையூறு செய்யும் இயற்கை ஆண்மையும் அறிவுணர்ச்சியும் தமிழரிடையே இன்னும் நன்கு எழ அஞ்சுகின்றன. வீழ்ந்தவன எழ முயலும் இயற்கை போல, வீழ்ச்சியுணர்ந்த சிலர் தாழ்ச்சி போக்கவும் எழுச்சி நோக்கியும் நன் முயற்சிகளைச் செய்கின்றனர். அம் முயற்சிவகைகளில் இம் மாநாட்டு நிகழ்ச்சியும் ஒன்று.

பிறரை அடிப்படுத்தித் தாம் அவரின் மேனின்று வாழ்தலே வாழ்வென்று கருதும் பேய் வாழ்வை நாடாது, பிறர் இனிது வாழ அவரோடு தாம் உடன் வாழ்தலே வேண்டுவது என்பது பண்டைத் தமிழக ஒப்புரவு வாழ்க்கை 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற நோக்கமும், தமக்கென முயலா நோன்றாள், பிறர்க்கென வுழைக்கும் பெருந்தகைமையே செயலும் கொண்ட தமிழ் வாழ்வை வற்புறுத்துவன பண்டைத் தமிழ் நூல்கள். அவற்றைப் பயிலுவதால் இன்றைய தமிழரினம் இழந்த தம் தமிழ் வாழ்வைப் பெறுவர் என்ற கருத்தை மேற்கொண்டு பழந்தமிழக் கொள்கைகளைச் சென்ற சிலபல ஆண்டுகளாக அறிஞர்கள் சொற்பொழிவுகள், கட்டுரைகள், மாநாடுகள் வாயிலாக நாட்டில் பரப்பி வருகின்றனர். பழந்தமிழ் நூல்களைத் தூயமுறையில் ஆராய்ந்து விளங்

காப்பகுதிகட்கு விளக்கம தந்து வெளியிட்டுவரும் தென் னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார், நூலறிவு நன்கு பரவும் வகையை எண்ணிச் சங்க இலக்கிய மாநாடுகள் கூட்டி நல்லறிஞர் பலரைக்கொண்டு சொற் பொழிவுகள் நிகழ்வித்தும அவற்றையே நூல்வடிவில் அச்சிட்டு வெளியிட்டும அரிய பணி செயது வருகின்றனர். அண்மையில் சென்னை நகரத்தில் இவர்கள் நடத்திய பதிற்றுப்பத்து மாநாடு நமது மாநில அரசியல் அமைச் சர்களாலும், அறிஞர் பெருமக்களாலும பெரிதும் பாராட் டப்பட்ட செய்தியை நாம் நன்கு அறிவோம். சஙக இலக்கி யஙகள் எட்டுததொகை, பததுபபாட்டு என்ற பதினெட்டு நூல்களாகத் திகழ்கின்றன. அவை பதினெண் மேற் கணக்கு நூல்கள என்றும குறிக்கப்படுவது உண்டு. மேற் கணக்கு நூல்கள பற்றிய மாநாடுகள் ஒருவகையில் நிறை வுற்றமையின் இபபோது பதினெண் கீழககணக்கு நூல் கள் பற்றிய மாநாட்டினை இன்று நடத்துகினறனர்.

இங்ஙனம காலத்துக்கேற்ற தமிழ்ப்பணி புரிந்து தமிழ்கும் தமிழ நன்மக்கட்கும் வேண்டும் அறிவுத் தொண்டு ஆற்றும் இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக மேலாளா திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள, தமிழ் நலம் பேணும் தககோர்களுள் முன்னணியில் நிற்கும் நல்லோராவர். அவருடைய நினைவெல்லாம் தமிழ் மொழிக்கு ஆக்கமும அரணும் நல்கும் அமைவுடைய செயல்களிலே இயங்கிய வணணம இருக்கும். தமிழ்மொழி, அரசியல் வழக்கிலும் நீதி வழஙகும் நிலையுடை மன்றங்களி லும் தொழில் வாணிகத் துறைகள் பலவற்றிலும் தனித்த் நிலையில் பிழை சிறிதுமில்லாத பெருமிதத்தோடு விளங்கு தல் வேண்டுமென்ற கனவே அவரது மனக் கண்ணில் மாண்புடன் தோன்றிய வண்ணமிருக்கிறது. அத்தகைய தமிழ்த் தோன்றல் மேற்கொண்டு நடத்தும் இம்மாநாடு தக்க காலத்தில் நடைபெறுதலால் இனி, "உய்வண்ண மன்றி வேறு துயர் வண்ணம் உறுவதுண்டோ?" எனக் கட்டுரைத்து, இம் மாநாட்டுத் தலைமைக்கு உரிய சால்

புடையார் பலர் இருப்பவும் என்னைப் பற்றிக் கொணர்ந்து இத் தலைமைப் பணியை ஆற்றுமாறு சிறப்பிக்கும் அவர் களுடைய பேரன்புக்கு என் மனங்கொண்டெழும் நன்றி யினைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். நாடுபாராட்டும் நற்புகழ் பெற்று இன்று நமக்கு இனிய காட்சி வழங்கும் இத் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தின் மாண்பினைத் தோற்றுவித்து வளர்ததற்குரிய பெரு முயற்சியும உழைப்பும கொண்டு நிலவிய காலஞ் சென்ற உயர்திரு. வ. திருவரங்கம் பிள்ளையவர்கள இன்றுகாறும் இருந்து காண்டற்கு இல்லாமையை என நெஞ்சு நினைந்து கலுழகின்றது. இறைவன் அருள நீழலில் வீற்றிருக்கும் அவரது பெருநிலை இக கழகம கருதும் பணியனைத்தும் இனிது நிறைவெயதத் துணைபுரிவதாக.

## கீழ்க்கணக்கு நூற்களின் பெயரும் சிறப்பும்

பெரியோர்களே,

நமது தமிழகத்தில் நிலவும் தமிழநூல்களுள் நாலடி யார், நான்மணிக் கடிகை, இனியவை நாற்பது, இன்னு நாற்பது, கார நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை யைம் பது, ஐந்திணை யெழுபது, திணைமொழி யைமபது, திணை மாலை நூறறைம்பது, திருககுறள், திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி நானூறு, சிறுபஞசமூலம, முது மொழிக்காஞசி, ஏலாதி, கைந்நிலை என ற பதினெட்டு நூல் களையும் ஒன்றுகக் கூட்டிப பதினெண் கீழக்கணக்கு என வழங்கும வழக்காறு ஒன்று உளது. இதனை,

> "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
> பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
> இந்நிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
> கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு."

என்ற பழைய பாட்டொன்று வற்புறுத்துகிறது. இது பற்றி நிகழ்ந்த ஆராய்ச்சியில், இவ்வெண்பாவின் பின் னிரண்டு அடிகளில் காணப்படும் இந்நிலைய என்பதை இன் னிலைய எனக்கொண்டு, இன்னிலை யென்றெரு நூலுண்டு

என்போரும், இந்நிலைய என்றே கொண்டு கைந்நிலை யென்ஞெரு நூலுண்டு எனபோருமாய் அறிஞர் இருதிறத்தார் உளராயினர். அவருள் காலஞ்சென்ற திரு. வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள, இன்னிலை யென்று கொண்டு, அப்பெயரியதொரு நூலை கி. பி. 1915-இல் வெளியிட்டார்கள்; அந்நூலை இயற்றியவர் பொயகையார் என்றும், அதனைத் தொகுத்தவர் மதுரையாசிரியர் எனறும், அதற்குக் கடவுள் வாழ்த்துப்பாடியவர் பாரதம பாடிய பெருந்தேவனுரென்றும திரு. பிளளையவர்கள குறித்தார்கள். "இவ் வெண்பாப் பழமபிரதிகளுள் இன்னிலைய காஞசியுடனேலாதி என்பவே, நன்னிலைய தாகும கணக்கு; 'ஐந்தொகை முப்பால்', 'நனனிலையவாங் கீழ்க்கணக்கு' எனச் சிறிது சிறிது வேறுபட்டுக காணபபடுதலின், சிலர் இன்னிலை யெனறு பொய்கையாா பாடிய 45 வெண்பாக்கள் அடங்கிய நூலை மேற்குறித்த கைந்நிலைக்குப் பதிலாகக் கூறுவர்" எனறு தாம எழுதிய திரிகடுக முன்னுரைக்கண் பேராசிரியா, திரு. புனனைவனநாத முதலியார் அவர்கள் புகன்று உரைத்துளளார்கள. இப் பாட வேறுபாடு பற்றி நெடியதோர் ஆராயசசியினைப் பேராசிரியர். எஸ். வையாபுரிப்பிள்ளையவாகள் செயது, "இனனிலை என்பது இக்காலத்து யாரோ ஒருவர் புதுவதாக இயறறிச் சங்கப புலவர் ஒருவரது தலையில் சுமத்திய கறபித நூல் என்றே கொள்ளத்தக்கது" எனறும், "இபபொயந்நூலை ஸ்ரீ செல்வக் கேசவ முதலியார் அவர்கள கூடத் தமது பழமொழிப் பதிப்பிலும் ஆசாரக் கோவைப் பதிப்பிலும கீழககணக்கு நூல்களில் ஒன்றெனவைத்து எண்ணி எழுதியது பெருவியப்பே" எனறும முடிவு கூறுகினறா.

இவ்வாறு ஆராய்ச்சியால் விலக்குண்ட இன்னிலையிடத்தே நிற்கும கைந்நிலை எனபதே பதினெண் கீழ்க்கணக்கினுள அடஙகுதற்குரிய நூல் என்பது பெறப்படுகிறது.

இனி, இவ்வெண்பாவின் சொன்முடிவு காணப்புகுந்த பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள, "இன்னிலைய

காஞ்சியோடேலாதி என்பதூஉம் கைந் நிலையுமாகும் கணக்கு" என்று முதலில் அளபெடையோடும், அள பெடையின்றியும வரும் உம்மை பயின்ற பாடத்தில் ஐயப் பாடு தோனறுதற்கு இடமுண்டு; எனவே, ஐந்திணையென் பதனுள் கைந்நிலையை அடக்கிக் கூறுவதே பொருத்த மானதாகும ; கீழக்கணககு நூல்களை வகைப்படுத்திக் கூறும் செயயுளின உண்மை வடிவம்,

> 'நாலடி நாண்மணி நானாற்ப தைந்திணைமுப்
> பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
> இன்னிலைய காஞ்சியுட னேலாதி யென்பவே
> கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு'

என்பதாகலாம ; 'ஐந்திணை யெனபதன்கண் ஐந்திணை யைம்பது, ஐந்திணை யெழுபது, திணைமொழி யைம்பது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை எனற ஐந்து நூல் களும அடஙகும" எனறு கூறுகினறார்கள. இது கருத் தாயின், **இன்னிலைய**வென்பதும, **கைந்நிலைய**வெனபதும் பயனில மொழிதலாய இவவெண்பாவிற்குக் குற்றம உண் டாக்குவதும், கைந்நிலை எனற நூற்பெயருணர்த்தும சொல் நிகழ்சசி இருக்கவும, ஐந்திணை என்பதன்கண் உயத்துணாந்து அடக்குதல குற்றமாதலும ாண்டு அறி ஞர் எணணுதற்குரியவாகினறன. "உய்த்துணர்வது சொல்இல்வழி என மறுக்க" என்பது தமிழாசிரியனமார் அறிவுறுத்தும ஆராயசசி நெறி. ாதொருபுறம இருக்க, திரு. பேராசிரியர் புன்னைவனநாத முதலியார் அவர்கள், "கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டு இவை என்று இன் னும் வரையறுக்கபபடாமை வியபபே" என்று உண்மை யிலேயே வியந்து கூறுகின்றார்கள.

திரு. இ. வை. அனந்தராமையர் அவர்கள, தாம் வெளியிட்ட கைந்நிலை என்ற நூறபதிப்பில், இவ்வெண்பா பாட வேறுபாடு என,

> 'நாலடி நான்மணி நானாற்பதைந் திணைமுப்
> பால்கடுகு கோவை பழமொழி மாமூலம்
> இன்னிலைய காஞ்சியோ டேலாதி என்பதூஉம்
> கைந்நிலையு மாகுங் கணக்கு'

என்ற வெண்பாவைக் காட்டுகின்றார்கள் ; இது, கணக்கு. நாலடி... ஏலாதி என்பதூஉம கைந்நிலையும ஆகும் என இனிது முடிகின்றது. " அளபெடையோடும் பின்னர் அள பெடையின்றியும வரும உம்மை பயினற பாடத்தில் " எண்ணும்மைககு விலக்கு யாதும எந்த இலக்கண நூல் களிலும இல்லாமையால், " ஐயப்பாடு " தோன்ற இட மில்லை. " கைந்நிலையு மாஙகீழக கணககு " என்றொரு புதுப்பாடம தோன்றினும இழுககுககு வழியில்லை. ஒருவர் சொல்ல ஒருவா ஒருகையில் ஏடும ஒருகையில் எழுத்தாணி யும கொண்டு எழுதுவது ஏடுகளைப படியெடுக்கும் மரபு ; அதனால் எழுதுபவா சொற்பொருளுணாசசி யுடையராயின் பாடம் வேறுபடுவது உணடு. இதனால், திரு. அனந்த ராமையர் வேறு பாடமாகக் காட்டிய வெண்பாவே மிகுதி யும் பொருத்தமுடையதெனபது விளஙகுகிறது.

நாலடியாா முதல் கைந்நிலை யீறாகக் கூறப்படும் பதி னெட்டு நூல்களையும சுமாா ஒருநூறு ஆண்டுகட்குமுன் தோன்றிய பிரபநத தீபிகை எனற நூல்,

" ஈரொன்ப தின்கீழ்க் கணக்கினுட் படும்வகை
இயம்பு நாலடி நானூறும்
இன்னுமை நாற்பது நான்மணிக் கடிகைசதம்
இனிய நாற்பான் காரதே
ஆருகள வழிநாற்ப தைந்திணையு மைம்பதும்
ஐம்பதுட னிருபா னுமாம்
அலகில்ஆ சாரக்கோ வைசதம் திரிகடுகம்
ஐயிருப தாகு மென்பர்
சீருறும் பழமொழிக ளுனூ று நூறதாம்
சிறுபஞ்ச மூலம் நூறு
சேர்முது மொழிக்காஞ்சி ஏலாதி எண்பதாம்
சிறுகைந்நிலை அறுப தாகும்
வாரிதிணை மாலைநூற் றைம்பதாம் திணைமொழி
வழுத்தைம் பதாம் வள்ளுவ
மாலையீ ரொன்பதாய்ச் சாற்றுபிர பந்தம்
வழுத்துவர் கள்புல வோர்களே "

என்று கூ

பதினெண் கீழ்க்கணக்கு என்ற தொடர் முதன் முதலாகத் தொல்காப்பியப் பேராசிரியர் உரையிலும் நன்னூல் மயிலைநாதர் உரையிலும் காணப்படுகிறது. அம்மையென்னும் வனப்புப் பொருளாக எழுந்த தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாவுரையில், " தாயபனுவலோடு என்றது, அறம் பொருள் இனபம் என்னும் மூனறற்கும் இலக்கணம் சொல்லுவபோன்று வேறு இடையிடை அவையன்றியும் தாய்ச் செல்வது எனறவாறு; அஃதாவது பதினெண் கீழ்க்கணக்கெனவுணர்க; அதனுள, இரண்டடியானும் ஐந்தடியானும ஒரோ செயயுள வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம் பொருள இன்பமென அவற்றுக்கு இலக்கணம் கூறிய பாட்டுப் பயின்று வருமாறும், கார்நாற்பது களவழி நாறபது முதலாயின வந்தவாறும் கண்டுகொள்க" என்று பேராசிரியா கூறுகினறுா. அன்றியும, "பொருள் கருவி காலம் வினையிடனொ டைந்தும, இருள்தீர எண்ணிச் செயல்" என்ற குறட்பா "இலககணம கூறியது" என்றும், "மலர்காணின் மையாததி நெஞ்சே இவள்கண், பலர்காணும பூவொக்கும எனறு" எனவரும குறட்பா "இலக்கியமாகலான்" எனறும கூறி, திருக்குறள் பதினெண் கீழக்கணக்கினுள ஒனறென்பதுணர வுரைக்கின்றார்.

இக் கீழ்க்கணக்கு நூல்கள அம்மை என்னும் வனப்புவகையுள் அடங்குவது ஒருபுறம் நிற்க, கீழக்கணக்கு, எனத் தொகையால் ஒன்றாயினும், வகையால் பதினெட்டு என்பது, மேலே இவறறை எடுத்துரைத்த வெண்பாவால் அறியபபடுகிறதில்லை; பேராசிரியர் முதலிய சான்றோர் உரைகளால்தான் அறிய நிற்கிறது. இவ்வெண்பாவைப் பாடிய சான்றோர் காலத்தில் கீழக்கணக்கு நூல் பதினெட்டு என்ற வரையறை காணப்படவில்லையோ, இன்னிலை, கைந்நிலை என்ற இரண்டனையும் கண்டு உண்மை துணியப்படவில்லையோ யாதோ ஒரு காரணம் பற்றி, இவ்வெண்பாவைப் பாடியவர் தொகைகொடாது ஒழிந்தாராதல் வேண்டும்.

## மேற்கணக்கு கீழ்க்கணக்கு இயல்புகள்

ஒரு காலத்தே பண்டைத் தமிழ்நூல்கள் மேற் கணக்கு எனவும், கீழ்க்கணக்கு எனவும் வகுககப்பெற்றன என்பதைப் பன்னிரு பாட்டியல் என்ற நூலால் அறிகின் றோம். "மேல் கீழக்கணக் கென இருவகைக் கணக்கே" என்பது பன்னிரு பாட்டியல். அஃது அவ்வாறு கூறற்குக் காரணம, "மேற கணககெனவும கீழக் கணககெனவும், பாற்படுவகையாற் பகாந்தனா கொளலே" என அந் நூற் கண் காட்டப்படும மேற்கோளாகும். எனவே, இப்பாகு பாடு பன்னிருபாட்டியல் தோன்றுதற்கு முன்பே நமது நாட்டில் நிலவிய தொனறு எனபது தேற்றம.

இனி, பனனிருபாட்டியல் காட்டும் மேற்கோள்கள், மேற்கணக்கின் இயலபை,

> "ஐம்பது முதலா ஐந்நூறு ஈறு
> ஐவகைப் பாவும் பொருள் நெறிமரபின்
> தொகுக்கப் படுவது மேற்கணக் காகும்"

எனறும, கீழககணககின இயலபை,

> "அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
> அறம்பொருள் இன்பம் அடுக்கி யவ்வகைத்
> திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்"

என்றும் இயம்புகின்றன. இவற்றையும் ஏனைச் சங்கத் தொகை நூல்களையும் பிறவற்றையும் கண்டு,

> "அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்
> பதிற்றைந் தாதிபதிற் றைம்ப தீரு
> மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக் கெனவும்
> வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின்
> எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே"

என்று பன்னிருபாட்டியல் கூறுகிறது. இவ்வாறு அடி யியல்பு கூறும் இந் நூல் மேற்கணககுக் கீழ்க்கணக்கென் பனவற்றின வகை இத்துணையெனக் கூறவில்லை. ஒரு கால் எட்டுத்தொகை பத்துப்பாட்டு என்பன அடிநிமிர் புடையவாய், பதினெட்டாகும் தொகையினவாய் இருத்

தல் கண்டு அவற்றை மேற்கணக் கென்றும், அடிமிமிர் பில்லாத இவற்றைக் கீழக்கணக் கென்றும் கொண்டனரோ என நினைப்பாரும் உண்டு. திரு. வையாபுரிப பிள்ளையவர் கள், “ஒருகால் கீழக கணக்கு என்ற வழக்கினை மனத்துட் கொண்டு மேறகணக்கு எனற குறியீட்டினைப புதுவதாகப் படைத்துக்கொண்டு தொகை நூல்களையும் பத்துப்பாட் டினையும் இக் குறியீட்டால் வழங்கத் தலைபட்டனரென்று எண்ண இடமுண்டு” என்பர். ஆனல், உழத்திப்பாட்டு, குறத்திப் பாட்டு, கோவை, தொடர்நிலைச் செயயுள என்ற நூலினம் போலப பத்துபபாட்டு எனபதும் ஓர் இன மெனக் கொண்டு,

> “நூறடிச் சிறுமை நூற்றுப்பத் தளவே
> ஏறிய அடியின் ஈரைம்பாட்டுத்
> தொடுப்பது பத்துப் பாட்டெனப் படுமே”

எனறும,

> “அதுவே,
> அகவலின் வருமென அறைகுநர் புலவர்”

என்றும பன்னிருபாட்டியல் கூறுகிறது. இதனை நோக் r, முன்னே கண்ட நினைவுகட்கும இடமில்லாமல்

இனி, கீழககணக்கு என்பது, வணிகர்கள நாளும் தம வாணிக நிலையஙகளில் நிகழும வரவு செலவுகளைக் குறிக்கும் கணக்கு என்றும, அதனை அடிபபடையாகக் கொண்டே மேல், பேரேடு, அணிவு முதலாக உள்ளன மேற்கணக்கு கள என்றும் வாணிகர் சூழலில் வழங்குவதுண்டு. கீழக் கணக்கு, கைக்குறிப்பு[1] என இக்காலத்து வழங்கு கிறது. இவவாறே உயிர்கள் உடம்பொடு கூடி உல கில் போக்குவரவு புரியுங்கால் அவற்ருல் ஈட்டப்படும் வினையும் நுகரப்படும் நுகர் பயனும இறைவனுடைய “வரி நெடும பொத்தகத்து”க் குறிககப்படுமென்னும், அதனைச் சுட்டியே, திருநாவுக்கரசர், “எழுதும் கீழக்கணக்கு இன்

1. Day book.

னம்பர் ஈசனே" என்று அருளுகின்றார் என்றும் கூறுவர். அக்கீழ்க் கணக்குக்கும் இப்பதினெண்கீழ்க் கணக்குக்கும் பெயரியைபு ஒன்றைத் தவிர வேறு தொடர்பு அறிதற் கில்லை.

நிற்க. இக்கீழ்க்கணக்கு நூல் பதினெட்டையும் சங்கம் மருவிய நூல்கள் என்று நம நாட்டு அறிஞர் வழி வழியாக மொழிந்து வருகின்றனர். தொல்காப்பியத்துக்கு உரைகண்ட பெரியோர்களுள் பதினெண் கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியின் ஏறாமல் செய்யுள் செய்தார் பிற்சான்றோரும் எனக் கொள்க" எனப் பேராசிரியரும், பிறரும் கூறுகின்றனர். அதனை நோக்கின், இவையனைத்தும் சங்கத்தொகை நூல்களான எட்டுத் தொகை பத்துப்பாட்டு என்ற பதினெட்டுக்கும் காலத்தால் பிற்பட்டுப் பண்டைத் தமிழ்ச் சங்கம் மருவிய நூற்றொகுதியல்லவாதல் தெளிவாகிறது. அவ்வாறாயின், இக்கீழ்க்கணக்கு நூல்களைச் சங்கம் மருவின என்ற கூற்றுப் பொய்யாம். மற்று, பொய் என்றும் நிலைபெறாது; சங்கம் மருவியது என்ற கூற்றோ வழி வழியாக வந்து கொண்டிருத்தலின் பொய்யாதற்கில்லை. இந்நிலையில் ஒரு கருத்துப் புலனாகிறது: எட்டுத்தொகை பத்துப் பாட்டுக்களைத் தொகுத்த சங்கத்தின் வேறாகப் பிறிதொரு சங்கம் பிற்காலத்தே இருந்திருக்கவேண்டும் எனவும், அச்சங்கத்தே இக்கீழ்க்கணக்கு நூல்கள் தொகுக்கப் பெற்றிருக்கலாம் எனவும், அவற்றுள் பண்டைத் தொகை நூல்கட்கு முன்னும் பின்னும் தோன்றிய நூல்கள் பிற்காலச் சங்கச் சான்றோரால் தொகுக்கப் பெற்றிருக்கலாம் எனவும், அங்ஙனம் தொகுக்கப்பெற்றமையின், இப்பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் சங்கம் மருவிய நூல்கள் எனப்படுவன வாயின எனவும் கருத இடமுண்டாகிறது.

## தமிழ்நாட்டில் சமய நிலைகள்

நம் தமிழக வரலாற்றில், சங்ககாலத் தமிழ் வேந்தரை அடுத்து வந்த காலத்தில் களப்பிரர் என்ற நாடோடி

கள் சிலர் நம் தமிழ் நாட்டின் அரசுநிலை கெடுத்து, தமிழ ரது தமிழ் வாழ்வைச சீரழித்தனர்; அவர் காலத்தே தமிழ் இலக்கியங்களும தமிழ தந்த இசை கூத்து முதலி யனவும் நிலைசரிந்து இறந்தன. அந்நாளில் வடபுலத் திருந்து போந்த வடமொழியும் வடநூன மரபுகளும் தமிழ மக்களிடையே சிறிதே இடம் பெற்றிருந்தன. வடமொழி வடபுலத்து வேதியர்பால் ஒடுங்கிக் கிடந்தது. களப்பிரர் காலத்தில் வடநாட்டினின்று புத்தமும் சைனமும் வைதிக பௌராணிக சமயமும் தமிழ நிலத்திற பரவின. புததரும் சயினரும் ஆங்காங்கே இருந்து மடங்கள் அமைத்துத் தமக்குள் சங்கங்கள் நிறுவித் தங்கள் சமயக கருத்துக் களை மக்களிடையே உரைபபாராயினர். தொடக்கத்தில் வைதிக சமயம தனக்கு மாறுபட்டெழுந்த புத்த சயின சமயங்களை ஒழித்துக் கட்டுவதில் முறபட்டு நின்று மக்க ளைத் தமபால் ஈர்த்துச செல்வாக்குப் பெற்றுக் கொண்ட மையின், சங்கங்கள் நிறுவவில்லை. மேலும் புத்தருககும் சயினருக்கும் இடையே பூசல் தோனறி ஒருவரை யொருவர் தொலைக்க முயன்றனா. அம முயறசியின விளைவாகப் புத்த சமயம் தமிழகத்தினின்றும் நீங்கிறறு. சயின சமயம் வெற்றி கொண்டு நாடாளும வேந்தர் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டது. தொண்டை நாட்டிலும பாண்டி நாட்டிலும அரசியற் சமயமாகச சயினமே தழைத்து விளங் கிற்று. கி. பி. ஏழு எட்டாம நூற்றாண்டில் தமிழகததில் கிளர்ந்தெழுந்த சைவ வைணவ சமயததுறைகளால் சயினம் தாக்குண்டு தளர்சசியுற்றுச் சமழ்த்துப போயிறறு. வைதிக பௌராணிக சமயம சைவ வைணவத் தொடு கலந்து தனிதது நிறபதினறி அவறறோடு பிரிபபற இயைந்துவிட்டது. வைதிக நெறியைக் கொள்ளாது ஆகம வழி நின்ற சைவம, இக கலப்பால் வைதிக சைவம் எனற பெயர் கொண்டு பிறங்கத் தலைபபட்டது.

"வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க" நிலவிய காலத்தில் நிலையிழந்து வீழ்ந்த சயினச் சான்றோர் தமது வீழ்சசிக்குரிய காரணத்தை ஆராய்ந்து

தாம் மேற்கொண்டுள்ள வடமொழிக்கும் தமிழ்மக்களது தமிழ்மொழிக்கும் தொடர்பில்லை என்பது கண்டு, தமிழ் மொழியின் வாயிலாகத் தங்கள் சமயக் கருத்துக்களைப் பரப்புவதுதான் இனிச் செயற்பாலதெனத் துணிந்து தமிழ் மொழிக்கு இலக்கணம் இலக்கியம் என்ற துறைகளில் இனிய தொண்டு புரிவாராயினர். இவ்வாறே ஆந்திர நாடு, கன்னடநாடு, கேரள நாடு என்ற நாடுகளிற் புகுந்தோர் ஆங்காங்கு அவ்வம் மொழிகளைக் கற்று அவற்றின் வாயிலாகத் தம் சமயப் பணிகளைச் செய்யும் சால்பு கொள்வாராயினர். அந்நாளில் தமிழ்நாட்டில் திரமிட சங்கமும், ஆந்திர நாட்டில் ஆந்திர சங்கமும், கன்னட நாட்டில் கன்னட சங்கமும், கேரள நாட்டில் கேரள சங்கமும் நிறுவினர். அவ்வாறு நிறுவப் பெற்ற சங்கங்களுள் திரமிட சங்கம் எனப்பட்ட தமிழ்ச் சங்கம் பாண்டி நாட்டு மதுரையைச் சூழவுள்ள பகுதிகளில் இருந்து தமிழ்ப் பணிபுரிந்தது. அச் சங்கத்தின் செயலால் விளைந்த இனிய தமிழ்க் கனிபோல் சீவகசிந்தாமணி முதலிய காப்பியங்கள் தமிழில் தோன்றின. அச் சங்கத்தார், பண்டு கூடலின் ஆய்ந்த தமிழாகிய எட்டுத் தொகை பத்துப்பாட்டுக்களுக்கு முன்னும் பின்னுமாகிய நூல்களைத் தொகுத்து உதவினர். அதுபற்றியே இப் பதினெட்டு நூல்களும் சங்க மருவிய நூல்கள் என்று வழங்கிவரலாயின. இவ்வாறே நான்கு ஐந்தாம் நூற்றூண்டில் காஞ்சி நகர்க்கண் இருந்த புத்த சங்கத்தே மணிமேகலை என்ற காப்பியநூல் எழுந்தது. பண்டைச் சங்க காலத்தை யடுத்துத் தோன்றியது இளங்கோவடிகளது சிலப்பதிகாரம். இவையெல்லாவற்றையும் சமய வேற்றுமை சிறிதும் நோக்காது தொகுத்துப் பெருங் காப்பியம், சிறுகாப்பிய மெனவும், மேற்கணக்கு, கீழ்க்கணக்கு எனவும் தொகுத்துத் தமிழ்மொழிக்குப் புத்துயிர் தந்த பெருமை தென்றமிழ் நாட்டுச் சயின சமயத்துத் திரமிட சங்கத்துக்கு உரியதாகும். ஆதலால் சீவகசிந்தாமணி முதலிய காப்பியங்களையும் பெரியோர் சங்க நூல்கள் என்று கூறி வந்தனர். நம் தமிழகத்துக்கெனத் தனிப்பட்ட வரலாறென்று இதுகாறும் எழுதப்

படாமையால் இவ்வுண்மைகள் நமக்குத் தெரியாமல் கிடக்கின்றன.

இவ்வாறு புத்தரும் சயினரும் மடங்களும் சங்கமும் நிறுவி மக்கட்கு மொழிப்பணியும் சமயப்பணியும் புரிவது கண்ட சைவரும் மடங்களும் குகைகளும் நிறுவித் தமிழ் வளர்த்ததுண்டு. சோழ வேந்தராட்சியில் கிளர்ந்தெழுந்த குகையிடிகலகம் என்ற கிளர்ச்சியால் அவைபலவும் அழிந்து போயின. அவற்றின் நினைவுக்குறியாகத்தான் இன்றும் திருவாவடுதுறை, தருமபுரம், மதுரைத் திருஞானசம்பந்தராதீனம, செப்பறை முதலிய இடங்களிலுள்ள மடங்களில் ஏடுகள் தொகுத்து வைக்கபெற்றுள்ளன. இதனால், சஙக மருவிய நூல்கள் என ஒரு சிலவற்றைக் கூறுவது பொயயனறு எனறும, இவை இச்சஙகஙகள் இருந்து செய்த பணியிடைத் தோன்றிச் சிறபபுற்றவையென்றும் நாம் நன்கு உணர்தல் வேண்டும். இவறறின் உண்மைகளை நாம் அறிந்து கொள்ளும் வகையில குறிப்புக்கள் வழங்கும் கல்வெட்டுக்களையும் செப்பேடுகளையும் பிறவற்றையும கண்டு தமிழர் உள்ளத்தில் தமிழ வாழவு காண்டற்கு விழையும் வேட்கையும முயறசியும் மானவுணர்ச்சியும் இல்லாமையால் வெளிவராமல் மறைந்து கிடக்கின்றன. மகேந்திரவன்மன் காஞ்சிமாநகர்க்கண் இருந்து எழுதிய மத்தவிலாச பிரகசனமும், திருநாவுக்கரசர் தருமசேனராக வாழ்ந்த பாடலிபுர (திருபபாதிரிப புலியூர்)த் திரமிட சங்கத்து லோகவிபாகமும், பாரமார்த்தா, யூன்சாங் முதலிய சீனர்களின் குறிப்பும் பிறவும் இச்சஙகங்களின் உண்மையைக் குறிக்கின்றன.

## கீழ்க்கணக்கு நூற்கள் நுவன்றவை

இனி, இக் கீழக்கணககு நூல்களைக் காண்போம். "கீழ்க்கணக்கு நூல்களுள், நீதி ஆசாரங்கள் பற்றியன பதினொன்றும், திணையொழுககம்பற்றியன ஐந்தும், காலம் பற்றியது ஒன்றும், இடம் பற்றியது ஒன்றும் உள்ளன. நீதி ஆசாரங்கள் பற்றியனவற்றுள், முப்பால் நாலடி

என்ற இரண்டும் உறுதிப் பொருள்களைப் பால் இயல் அதிகாரங்களாக வகுத்துக் கூறுகின்றன ; இன்னா நாற்பது இனியவை நாற்பது முதுமொழிக்காஞ்சி என்ற மூன்றும இன்னாமை முதலிய இயல்பு நோக்கிச் செய்யுட் பொருள்களை வகுத்து உரைககின்றன. பழமொழி முற்காலத்துத் தமிழ நாட்டில் வழங்கிய பழமொழிகள் பலவற்றைச் செயயுட்களின் ஈறறில் வைத்து அவற்றை உதாரணம முதலியவறறால் விளக்குகிறது. நான்மணிக் கடிகை அறியவேண்டும உறுதிப பொருள்களில் நான்கினை ஒவ்வொரு செயயுளிலும அமைத்துத தெரிவிக்கின்றது. ஆசாரக கோவை கையாளவேண்டும ஆசாரங்களைத் தொகுத்து உணர்ததுகினறது. திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி இவை மூனறும நோய் நீக்கி உடல்நலம் பேணும் மருந்துச சரக்கின பெயர்களை மேறகொண்டு உயிர்ககு நலமாய பொருளகளை முறையே மூன்று, ஐந்து, ஐந்தின மேற்பட்டனவாக அமைத்து மொழிகின்றன," என்று பேராசிரியர் திரு வையாபுரிபபிள்ளையவர்கள் வடித்

திரு. பிளளையவர்களள, ஆசாரக்கோவை, சிறுபஞ்சமூலம் ஆகிய நூல்களைப் பற்றிக் கூறுமிடத்து வடமொழி நூல்களிலிருந்து ஒபபுமைப பகுதிகள் பலவற்றை எடுத்துக காட்டுகினறாகள். ஒன்றில் விளங்காதது ஒன்றில் விளஙக நிற்பதும, ஒன்றில் சுருஙகித் தோன்றுவது ஒன்றில் விரிந்து நிற்பதும் பல மொழிகளையும் ஒப்பு நோககுவோர் இனிது அறிவர். மணிமேகலையில், சமயக் கணககா தம் திறம் கேட்ட காதை, தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதை, பவத்திறமறுகெனப் பாவை நோற்ற காதை என்ற பகுதிகட்கு உரைகண்டபோதும், ஞானமிர்தம எனற சமய நூலைப பதிப்பித்தபோதும் வடமொழி நூல்களையும் தமிழ நூல்களையும் ஒப்பவைத்து நோக்கும பேறு எனக்கு வாயத்தது. அதனால் இருமொழியினையும் ஒருங்கு காண்பதால் உளதாகும் இன்பத்தை நான நனகு அறிவேன். ஆயினும், என்போன்றுக்

உள்ளம் சில சமயங்களில் அந்த இன்பக்களிப்பில் இன்னது இது எனப் பகுத்துணர்ந்து உள்ள தன் உண்மை துணியும் வகையில் நிலைபிறழ்ந்து மயங்கிப் போவதுண்டு.

## தமிழும் வடமொழியும்

இன்றைய நமது வாழ்விலே பலவேறு மொழிகளின் தொடர்பு நமக்கு உண்டாகியிருக்கிறது: அம மொழிகளின் தோற்றம வளர்ச்சி முதலியன பற்றிய வரலாறும் நாம் இனிது அறியக் கிடக்கிறது. எந்த மொழியும் மக்கள் அறிதற்குரிய அறிவெல்லாம பெறுமாறு எல்லா நூல்களையும் தன்கண் கொண்டிருத்தல் இல்லை. மக்களினம் நாளும் வளர்ந்து வருவதாகலின், அதன் அறிவு வளர்ச்சிக் கேற்ப அது வழஙகும மொழியும் வளாந்து நூல்களால் வளம்பெறும். நமது தமிழ்மொழியும் ஒரு காலத்தே ஒரு சில மக்களிடையே தோன்றி அவர் பெருகப் பெருக அவர் அறிவு வளத்துக் கேற்பச் சொல்லும சொற்றொடரும் பெருகிப் பாட்டும் உரையுமாய உருக்கொண்டு எழுத்து வடிவம் எய்தி இனிய நூல்கள் நின்று நிலவுவதற்கு இடமாகியிருக்கிறது; இதனோடு நில்லாது இனனும் எத்துணையோ பல அறிவு நிறைந்த நூல்களை ஆக்கிக்கொள்ளும் அமைதியுடன இருந்துவருகிறது. இவவாறே வடமொழியும் ஒரு சில மக்களிடையே தோன்றிற்றாயினும், அம மககள் நாடோடிகளாய்த் திரிந்து செனறவிடத்தே வாழ்ந்த மக்களோடு கலந்து அவர் மொழியையே தாமும் பேசிப் பயின்றனரென அவர்களது வரலாறு கூறுவதனால், அவ வடமொழி பேச்சுவழக்குச் சுருங்கி, எழுதப்படும் திறம் இன்றிப் பன்னூறு ஆண்டுகளைக் கழித்தது. இப்போதுதான் அது மராட்டியர் மொழிக்குரிய நாகரி எழுத்தைத் தனக்கு உரியதாகக கொண்டு நிறகிறது. தமிழகத்தில் வந்தபோது அது தமிழ உருவு திரிந்த கிரந்த எழுத்துக்களைத் தனககாக அமைத்து அவற்றால் எழுதப்பட்டது. சங்கத் தொகை நூல்கள் தோன்றிய காலத்தில் வடமொழியாளர் தமது மொழியை எழுதும் வாய்ப்பில்

லாத மொழியாகவே வைத்திருந்தனர் என்பதை அந்த நூல்களே எடுத்துக் கூறுகின்றன. எனவே, அந்த மொழியில் எத்தனை சொற்கள் இருந்திருக்கும்? எத்தனை நூல்கள் இருந்திருக்கும்? என்பதை யாரும் எண்ணியறிய லாம். அதன்பால் உளள சொறகளை நோக்கின், வட மொழிக்கே உரியவெனத் தகுவன விரல்விட்டு எண்ணக் கூடிய சில சொற்களே காணப்படும்; பிறவெல்லாம் வட மொழியாளர் கூடிப பயினற மக்கள வழங்கும் மொழியி லிருந்து பெறற சொறகளே என்பது இனிது தோன்றும்.

வடமொழியாளர்க்கு வேறொரு வாய்ப்பு உண் டாயிற்று. அவாகள் தொழில் எல்லாம் தஙகள மொழியை ஓதுவதல்லது வேறுகிடையாது. தொல்காப்பியர் முதல் மேனுட்டவர்காலம வரை அவர்கள் தஙகள் மொழியை ஓதிப் பேணுவதையே பெருந் தொழிலாகக கொண்டிருந் தனர். இந்த நாட்டுப பேரரசர் முதல் பெருஞ் செல்வர் ஈருக அனைவரும் அவர்களை அத் தொழிலில் ஊக்கிவந் தனர். அவர்கள் அவ்வப பகுதியில் நிலவிய உயரிய நூல் களைத் தங்கள் மொழியில் தஙகள மொழி நடைக்கேற்பப் பெயர்த் தெழுதித் தமது மொழியைப பொன்போலப் போற்றி வருவாராயினர். பிற மொழியாளரில் நம் தமிழ்ப் பெருமக்கள் தஙகள மொழியைக் கைவிடுவதில் முன்னணியில் நின்று, உயரிய நூல்கள் பலவற்றைத் தீயிலிட்டுப் பொசுக்கியும் ஆற்றிலிட்டு நீராடியும் இன்புற் றனர். பெற்றோர் தேடித்தந்த பெருஞ் செல்வத்தைப் பேணுது ஒழித்த பேதைபோல இன்று தமிழர் ஏமாந்து நிற்கின்றனர். எனினும, இத்துணைப் பேதைமைச் செயற் கும் தப்பி நின்ற ஒருசில தமிழ் நூல்களின் உண்மைப் பொருளை உணர்தறகு வடமொழியில் பெயர்த்து எழுதப் பட்டுள்ள நூல்கள் பெருந் துணைபுரிகின்றன. வடமொழி யில் உள்ள காமிகம் காரணம் முதலிய சிவாகமங்களைப் பார்த்தால், தமிழிலிருந்து கருத்துகள் பல எடுத்து வட மொழியாக்கும் திறம் இனிது புலப்படும். தென்பாண்டி நாட்டுக்கே உரிய முத்து, முக்த என மாறுவதும், நீர்

வரும் பதினோராந் திருமுறையிற் காணப்படுபவருமாவர் என்று பின்னத்தூர், அ. நாராயணசாமி ஐயர் முதலியோர் கருதிவந்துள்ளனர். களவழி நாற்பது பாடிய பொய்கை யாரையும் சங்க நூல்களில் சேரமான் கோக்கோதைமார் பனைப்பாடிய பொய்கையாரென்று கூறியுள்ளனர். ஆழ் வார்களுள் காணப்படும் பொய்கையாழ்வார் இவரல்லர் என்று டாக்டர். உ. வே. சாமிநாதையர் கூறுவர். இவ் விருவரையும் பொருளாகக் கொண்டு நல்லமுறையில் ஆராய்ச்சி நிகழ்த்திய பேராசிரியர் திரு. வையாபுரிப் பிள்ளை யவர்கள். "பெயரொற்றுமையுள்ள இருவா தாமும் (கபிலர், பொய்கையார்) சஙகப் புலவரே எனறகுத் தகக சான்று இன்மையானும், இந் நூல்களை இயற்றியோர் பிற்காலத் துச் சான்றோர் எனனும் வழககினனும சங்கச் செய்யுட் களின் கருத்துக்கள் கீழக்கணக்கு நூல்களில் பயின்று வருதலானும் இக் கீழ்க்கணகசு நூல்களின் ஆசிரியர் கள் சங்கப்புலவர்கள் ஆகார் எனபது திண்ணம்" என்று கூறுகின்றார். நானமணிக் கடிகையின் ஆசிரியரான விளம்பிநாகனார் எனற பெயர் விளம்பில் நாகனர் என்று இருத்தல் வேண்டும; அழுமபில், பொதும்பில் என்றாற போல விளம்பில் எனபது நாகனாரது ஊாப் பெயர்: இது வடவார்க்காடு மாவட்டததுக கலவைக்கு அண்மையில் உளது; இதனை, "விளம்பிலான வீர நாராயணச் சதுர் வேதி மங்கலம" எனறு கல்வெட்டுககள குறிககின்றன. இந்த ஆசிரியாகளுள், காாநாற்பது பாடிய கண்ணங் கூத்தனா, கணிமேதாவியார், கூடலூர் கிழார் ஆகிய மூவரும மதுரையைச சோந்தவாகள; கைந்நிலை பாடிய புல்லங்காடனார் தென்பாணடிநாட்டுச சேரன் மாதேவி யைத்[1] தன்னகத்தே கொண்ட முளளிநாட்டு நல்லூருக்கு உரியவராவர். ஆசாரக கோவையின் ஆசிரியர் பெரு வாயில் முள்ளியாா என்போராவர்; பெருவாயில் என்பது ஓர் ஊர்; வாயில் என்று முடியும் ஊர்ப பெயர்கள். கடம் பெருவாயில், களவாயில எனப பல தமிழகத்தில் உள்

1. S. I. I. Vol. V: No. 440.

ளன; மதுரையின் ஒரு பகுதி ஆலவாயில் எனப்படுகிறது; 'கூடல் ஆலவாயிலாய' என்றும். 'மதுரை ஆலவாயிலாய்' என்றும் ஞானசம்பந்தா பாடியருளுவதால், இதன் உண்மை விளங்கும். இவவாலவாயில் என்பது ஆலவாய் எனவும் வழங்கும்: தொண்டைநாட்டுக் களவாயிலும் இப்போது களவாய் என்றே வழங்குகிறது. முள்ளியார்க் குரிய பெருவாயில் இன்னதெனத் தெரிந்திலது.

திணைமாலை நூற்றைம்பது, ஏலாதி என்ற நூல்களை எழுதிய கணிமேதாவியார், மதுரைத் தமிழாசிரியர் மாக் காயனார் மாணுக்கர் கணிமேதாவியார் எனப்படுகின்றார். சயினத் துறவிகளிடையே ஆசிரியர் மாணுக்கர் முறைமை பற்றிப் பெயர் குறிக்கும் நெறி கல்வெட்டுக் காலங்களிலும் இருந்திருக்கிறது. கழுகு மலையிலுள்ள சயினக் கல்வெட் டுக்கள். "உத்தணந்திக் குரவடிகள மாணுக்கர் சாந்தி சேனப் பெரியார்"[1] என்றும், "ஸ்ரீ குரண்டி கனகநந்தி படாரர் மாணுக்கன் பூரணசந்திரன"[2] என்றும் வருவன இதற்குப் போதிய சான்ருகும். ஏனைய பூதஞ் சேந்தனர், கண்ணங் கூத்தனர், மாறன் பொறையனர், மூவாதியார், சாத்தந்தையார் மகனர் கண்ணம்பூதனர், முள்ளிநாட்டு நல்லூர்க் காவிதியார் மகனர் புல்லங் காடனர், நல்லாத னர், காரியாசான, கூடலூர்கிழார் முதலிய பெயர்கள் நம் தமிழ் நாட்டில் சஙக காலமுதல் நாயக்க மன்னர் காலம் வரை மக்களிடையே பெரிதும் பயின்று வந்துள்ளன. இடைக்காலச் சோழ பாண்டியா கல்வெட்டுக்களை நோக் கின் இப்பெயர்கள் நமககுப புதுமையாகத் தோன்ரு. தமிழரல்லாத மக்கள தமிழகத்தை ஆட்சி செய்த காலத் தில்தான் பெரும்பான்மையாகத் தமிழர் பெயர்களும் தமி ழக ஊர்ப் பெயர்களும் வடமொழியாக மாறின. சமய நிலையங்களில் வடமொழி முதலிடம் பெற்றதும் தமிழரல் லாத தெலுங்கரும் முகமதியரும் வெள்ளையரும் ஆட்சி புரிந்த காலத்தில்தான் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

---

1. S. I. I. Vol. V: No. 316.
2. S. I. I. Vol. V: No. 359.

## கீழ்க்கணக்கு நூல்களின் காலம்

இனி, இந்த நூல்களின் காலத்தைச் சிறிது நோக்கு வோம் : கால ஆராய்ச்சியென்பது ஆங்கிலநாட்டு வரலாற் றறிவும் இலக்கியப் பயிற்சியும் புகுந்த பின்பே நம் நாட்டில் கற்றோரிடையே சிறந்து தோனறுவதாயிற்று. கால ஆராய்ச்சி மேற்கொண்ட நம்மவரிடையே தவறுன கருத் தொன்றும் உடன் தோன்றுவதாயிற்று. ஒரு நூல் காலத் தாற் பழமை பெற்றதாயின் அதற்கு ஓர் உயர்வும், பிற் பட்டதாயின் ஒரு தாழ்வும் உண்டென்பது அக்கருத்து. இஃது எங்கே முதற்கண் எழுந்தது என்று ஆராய்ந்த போது வடநூல் அறிஞர்களிடையில் இது மேமபட்டு நிற் பது விளங்கிற்று. அதனைச் சுமார் 600 ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த உமாபதி சிவனூர் கண்டு, அது தீதென்று உரைப்பாராய், "தொன்மையவாம் எனும் எவையும் நன்றுகா, இனறு தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா" என அறிவுறுத்தினா. என்றுலும் அவர் கருத்துக் கற்றோர் உள்ளத்தில் தோயவேயில்லை. வட நூல் வெறிமிக்க சிலருள் அது குருதியிற் கலந்து வழிவழி யாகத் தொடர்ந்து வருவதாயிற்று; அதன்பயனுக மக்க ளால் செய்யப்பட்ட வடமொழி நூல்கள் சில தெயவங் கட்கு ஏற்றப்பட்டன. மேனுட்டவர் காட்டிய கால ஆராய்ச்சி தோன்றியதும் வடமொழி யொழிந்த ஏனை மொழியிடத்து நூல்கள் பலவும காலத்தாற் பிற்பட்டன எனக் காட்டு தற்கு ஏற்ற செய்வினைகள் உண்டாயின. வடமொழி யினின்றே தமிழ் முதலிய எல்லா மொழிகளும் தோன்றின என்ற கருத்துத் தலைநிமிர்ந்தது. நல்ல காலமாக மொழி நூல் ஆராய்ச்சி தோன்றிற்று; உலக வரலாறும் ஓரளவு தெரிந்தது. நம் தமிழ்மொழியின் தொன்மை வரலாறு வெளிப்படுதற்கு வாய்ப்புண்டாயிற்று.

மேனுட்டவர் தங்கள் நூல்கட்குரிய கால ஆராய்ச் சியை நடத்துதற்கு வாய்ப்பாகத் தங்கள் நாட்டு அரசி யல் சமுதாய வரலாற்றை ஒரு தொடர்ச்சியாகக் கண்டு எழுதிக் கொண்டார்கள். நம் நாட்டில் அவ்வரலாறு

இன்று வரை எழுதப்படவில்லை. எழுதற்குரிய தூய நேரிய முயற்சிகள் இன்னும் தோன்றவேயில்லை. இன்றுள்ள அரசியல் சூழ்நிலை அதற்கு இடம் தருவதாகவும் இல்லை. நம் தமிழகத்தைத எடுத்துக்கொண்டால், இதன் வரலாறு தொல்காப்பியர் காலம், சங்க காலம், களப்பிரர் காலம், பல்லவர் காலம், பாண்டிய சோழர் காலம், விசய மன்னர் காலம், முகமதியர் காலம், மேனுட்டவர் காலம், உரிமைக் காலம் என்ற தலைப்பில் அமைந்து விளங்குதல் வேண்டும். இம்முறையில் தமிழக வரலாறு அமைய வேண்டுமெனில், இது குறுகிய மனப்பான்மை என்று இகழும் மடமையிருள் இபபொழுது அரசியல் வானத்தை மூடிக்கொண்டிருக் கிறது. தமிழ், தமிழர், தமிழ்நாடு என்ற பெயர்களே அரசியல் ஏடுகளில் இடம்பெறக்கூடாது என்ற குறிக் கோள் கொண்டு தமிழ மாகாணம் என நமது மாகாணத் துக்குப் பெயர் குறியாது "சென்னை ராஜ்யம" என்றே அரசியல் வாணாகள் குறித்து வருகின்றனர். ஆந்திர கன்னட கேரள நாடுகள் என்று பெயர் கூறுவது அந் நாட்டவருக்குக் குறுகிய மனப்பான்மையாகாது; தமிழர் தங்கள் நாடு தமிழ்நாடு என்பது குறுகிய மனப்பான்மை என்றும் கூறும் மேதைகள் அரசியற் சூழலின் மேனிலையில் உள்ளனர். தஙகளைத் தமிழ நாட்டுத் தமிழர் என்று கூறுதற்கு அஞ்சி நாணிக் கோணும் மக்களிடத்தே அரசி யற் செல்வாக்கு இருப்பதே இந்த இழிநிலைக்குக் காரணம். இதனல், தமிழநூல்களை உண்மை நெறியில் ஆராய்ந்து காணும் நல்லறிவு அலமருகின்றது.

## திருக்குறளின் காலம்

வழங்கிய திருக்குறள் இந்தப் பதி கீழ்க்கணக்கு வகையுள் ஒன்ருகத் தொகுக்கப் பட்டிருப்பது கொண்டு, இது கீழ்நிலை நூலேயன்றி மேனிலைக்குரியதன்று என்பது ஒரு சாரார் கருத்து. இந் நூல்கள் பதினெட்டனுள் திருக்குறள் ஒழிந்த ஏனைய யாவும் சங்க காலத்துக்குப் பிற்பட்டவையாதல் கண்ட தொல்காப்பியப் பொருளதிகார உரைகாரர்கள், பெரும்

யின்மைபற்றி இப்பதினெண் கீழ்க்கணக்குகள் பிற்காலச் சான்றோர்களால் செய்யப்பட்டன என்று கூறி யொழிந்தாராக, பேராசிரியர் முதலிய பெருமக்களே பிற்காலச் சான்றோர் செய்தவை என்பதால் திருவள்ளுவர் சங்ககாலச் சான்றோர்க்குப் பிற்பட்டவரென்றும், அவர் வழங்கிய திருக்குறள் சங்க இலக்கியங்கட்கெல்லாம் பிற்பட்டது என்றும் கூறி மகிழ்வோர் சிலர் உண்டு. திருக்குறள் முதலிய அறநூல்களிலும் பிறமொழிகளிலுள்ள அறநூல்களிலும் காணப்பட்ட அறங்களைத் தன்னகத்தே கொண்ட வடநூல் மிருதிகளும் நீதி சதகங்களிலும் காணப்படுவன திருக்குறளில் உள்ளதனால் திருவள்ளுவர் அவ்வடநூலாசிரியர்கட்கெல்லாம் காலத்தால் பிறபட்டவரென்று பேசியின்புறுபவரும இப்போது உள்ளனா. திருவள்ளுவர் அவர் எல்லாாக்குமேயன்றிச் சஙகரர், இராமாநுசர், மாத்துவர், சீகண்டர் முதலிய பலர்க்கும் பிற்பட்டவரென்று கூறினும் நமக்குக் குறையில்லை; அஃது உண்மையுரையா என்பதுதான் வேண்டப்படுவது.

திருவள்ளுவர், வழஙகிய திருக்குறளைப் பற்றித் தம் கருத்துரைக்கப் புகுந்த கல்லாடனார் என்பவர், "சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் பொருள் இது என்ற, வள்ளுவன்" என்றார். அது முற்றிலும உண்மையே என்று இக்கால அறிஞர் அனைவரும் ஒருமுகமாக வுரைக்கின்றனர். அவர் தமது நூலில் உவமைவாயிலாகப் பல பொருள்களைக் காட்டுகின்றார்; அவை யாவும் உலகியலில் அவர் கண்டு பயின்றனவே என்பதை யாரும் மறுக்கவில்லை. வலியுடைய பொருளாயினும் அதன் ஆற்றலுக்கு மேற்படத் தொடுப்போமாயின் அது கெட்டழியும் என்ற கருத்தை விளக்குதற்குத் திருவள்ளுவர், "பீலி பெய்சா காடும் அச் சிறும் அப்பண்டம் சால மிகுத்துப் பெயின்" (சஎ௫) என்று உரைக்கின்றார். மயிற்பீலியேற்றிய வண்டியை ஏன் அவர் உவமைகாட்டவேண்டும்? சங்க காலத்தும் பிற்காலத்தும் மக்கள் பட்டினாலும் பருத்தியாலும் ஆகிய உடையணிந்திருந்தனர். அதனால்

வண்டிகளில் பருத்திப் பஞ்சியினை ஏற்றிச் சேறல் இயல்பு: அக் காலத்தே வண்டியிலேற்றிக் கொண்டு செல்லக் கூடிய அளவு மயிற் பீலிக்குத் தேவை கிடையாது. மயிற் பீலிகளை வண்டியிலேற்றிச் சென்று வாணிகம் புரியக் கூடிய நிலை நம் தமிழகத்தில் கிறித்து பிறப்பதற்கு முன்பு நிலவிய காலத்தில் இருந்தது என்பதை விவிலிய நூலால் (இராஜா.) அறிகின்றோம். அக் குறிப்புக் கிறித்து பிறப் பதற்குப பனனூறு ஆண்டுகட்கு முனனைய தென்பது வரலாறறிந்த வுண்மை. எனவே, திருக்குறள் நூல் கிறித்து பிறப்பதற்கு முனனே நிலவிய காலத்ததென்பது தெளிவாகும். மயிற்பீலி மேலை நாடுகட்கு வணிகப் பொரு ளாகச் சென்ற செய்தி சஙக இலக்கியஙகளான எட்டுத் தொகையிலும் பத்துப் பாட்டிலும காணபபடாமையால், திருவள்ளுவர் சஙககாலச் சானறோர்க்கு முனனோராவர் ஏன்பது இனிது விளஙகும.

அன்றியும், தொல்காப்பியர் காலத்தும் சங்க இலக் கியக் காலத்தும் தமிழ்மக்களிடையே நிலவிய மணமுறை அன்பின் ஐந்திணை யொழுக்கம் பற்றிய தென்பது நாடறிந்த வுண்மை. ஒருவனும் ஒருத்தியும் தம்மில் காதலுறவு கொண்டு உள்ளம் ஒன்றுபட்டுக் கடிமணத் தால் கணவனும் மனைவியுமாய் ஒருவர்கொருவர் உலகில் வாழ்வாஙகு வாழ்தற்குத் துணைவராதல் அன்பின் ஐந் திணை நெறியின பயன். அதனால் பெற்றோர்க்குத் தம் மக்கட்குத் தக்க துணைவரைத் தேடி மணம் புணர்த்துவது கடனாகத் தமிழரிடையே குறிக்கப்படவில்லை. ஒருவருடைய வாழக்கைக்குரிய துணைவரை, வாழக் கருதுவோர் தேடிக் கோடல் இயற்கையாமேயன்றிப் பிறர் ஒருவரைத் தேடி இவர்க்குத் துணையாகுக எனபது யாருக்கும் பொருந்தாத ஒன்று என்பதுபற்றி ஒருவனுக்கு அவன் மனைவியைத் திருவள்ளுவர் வாழ்க்கைத் துணையென்று குறித்துள்ளார். ஒருவனும் ஒருத்தியும் தத்தம் மனக்கினிய துணையைத் தேடிக் கோடலை அவர் காமத்துப்பாலில் அழகுறக் கூறி னார். இதனை உணர்ந்துகொள்ளாது, காமத்துப்பாலில்/

திருவள்ளுவர் கூறுவன வெறுங் கற்பனை யென்று கொள்வோமாயின், பிறவும் கற்பனையாம் என்பது முடிபாய் அவரைப் பொய்யில் புலவர் என்றும் பொய்யாமொழி யென்றும் தெய்வப் புலவரென்றும் கூறுவன முற்றவும் பொய்யாம். இதனால் திருவள்ளுவர் காலத்துத் தமிழர் வாழ்வு தொல்காப்பியர் காலத்துக்கு முன்னும் பின்னு மாகிய காலத்தது என்பது தேற்றமாம்.

மேலும், இளங்கோவடிகள் காலம் போலத் தாம் பெற்ற மக்கட்கு வாழ்க்கைத் துணையைத் தேடிப் புணர்ப்பது பெற்றோர் கடனாக இருப்பின், திருவள்ளுவர் மக்கட் பேறு குறித்து உரைத்த பகுதியில், தந்தையும் தாயும் மக்கட்குச் செய்தற்குரிய நலங்கள் இவை யென்று வற்புறுத்தியவர் மகனுக்கும் மகளுக்கும் தக்கோரைத் தேடி மணம் செய்தல் கடன் என்று வற்புறுத்தியிருப்பர். மகப்பேற்றின் சிறப்பையும், மக்கள் கல்வியும் சான்றாண்மையு முடையராகச் செய்தலின், இன்றியமையாமையையும் கூறி, அவர் இனிய வாழ்க்கைத் துணைபெற்று இன்ப வாழ்வு நடத்துமாறு மணம் புணர்த்தல் கடன் என்று கூறாதொழிந்தது குற்றமாம். கூறாமைக்குக் காரணம் அவர்கால மக்களிடையே வாழ்க்கைத்துணை தேர்ந்து புணர்க்கும் மனவுரிமை பெற்றோர்பால் இன்மையேயாகும். மண வாழ்வு என்பது, மனங் கலந்த முறையில் அமைந்தாலன்றி உலகியல் வாழ்வு சுற்றமொடு துவன்றிச சிறந்தது பயிற்றும் சீர்மையுடையதாகாதென்ற கொள்கையால் பொருளதிகாரப் பகுதியில் அதன் இயல்புகளை விரியக் கூறி வேண்டுவன விதித்த தொல்காப்பியர் தாமும், மக்கட்கு மணம் புணர்த்தும் உரிமை பெற்றோர்க்கே யுரியதென்ற கருத்தை யாண்டும் குறிக்கவில்லை. இவ்வாற்றால் திருவள்ளுவர் சங்க காலத்துக்குப் பின்னே தோன்றியவர் என்பது பொருந்தாமை காணலாம்.

## ஏனை நூல்களின் காலம்

இனி, இம்மட்டில் நிறுத்தி வேறு நூல்கட்குச் செல்வோம், சங்க இலக்கியங்களிலும் அவற்றிற்கு முன்

தோன்றிய தொல்காப்பியத்திலும் சயினம் பவுத்தம் முத லிய வேற்றுச் சமயக் கருத்துக்கள் பெரும்பாலும் இல்லை யென்பது அவற்றைப் பயின்றோர் நன்கு அறிவர். வைதிக ரும் முகமதியரும் போல நெடுங்காலம் வரையில் அவர்கள் தம் சமயப் பணிக்கு மக்கள் பேசும் தமிழ்மொழியை மேற் கொள்ளாதிருந்து, பினனர்த் தோன்றிய எதிர்ப்புக்களால் அதனை மேற்கொண்டன ரென்பது வரலாறு காட்டும் உண்மை. அதனால் அவர்கள சமயக் கருத்துக்களைப் பெருகவுரைக்கும் நூல்கள தமிழில் பல்லவர் காலத்துக்கு முன்பு மிகுதியாகத் தோன்றவில்லை. இன்று நிலவும் நூல்கள் பலவும் அக் காலத்துக்குப் பிற்பட்டனவே என்ப தில் யாரும் ஐயுறத் தேவையில்லை. அவ்வகையில் சமண சான்றோர் தமிழ்ப்பணி மேற்கொண்டபோது தொடக்கத் தில் தோன்றியது நாலடியார் என்பது சாலப் பொருந்துவ தாம், இந்நாலடியாரில். "பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும் கருனைச்சோ றார்வர் கயவர்" என்றும், "நல்கூர்ந்தக் கண்ணும பெருமுத் தரையரே, செல்வரைச் சென்றிரவா தார்" என்றும் வரும் பாட்டுக்களால், முத்தரையர் என்னும் அரசியல் தலைவாகள காணப்படுகின்றனர். இவர்கள் திருச்சிராபபளளி, தஞசாவூா, புதுக்கோட்டை என்ற மாவட்டப் பகுதிகளில் பல்லவர் காலத்தில் சிறந்து விளங்கினர். மலையடிப்பட்டி, நார்த்தாமலை, செந்தலை முத லிய இடங்களில், தந்திவனம பல்லவமல்லன், மாறஞ் சடை யன் முதலியோர் கல்வெட்டுக்கள் இவர்களைக் குறிக்கின் றன. இவர்கட்கு விடேல்விடுகு, பெருமபிடுகு என்ற பட் டங்கள் உண்டு; இவருள் பெரும்பிடுகு என்ற சிறப்புடைய முத்தரையர் பெரு முத்தரையர் என இப்பாட்டுக்களில் குறிக்கப்படுகின்றனர் என்பர். இப்பெரு முத்தரையருள் பெரும் பிடுகு முத்தரையன் குவவன்மாறன் என்பவன்[1] பழையவனாகக் காணப்படுகின்றான்; இவன் மகன் பெரும் பிடுகு கவான்மாறன் பாண்டியரொடு பொருது வெற்றி பெற்றதாகக் கூறுகின்றான். இவர்கள் கி. பி, எட்டு ஒன்ப

1. Epi. Indi. XIII. P. 186.

தாம் நூற்றாண்டுகளில் சிறப்புற்று விளங்கினர்; சயின முனிவர் சிலர் இவர்களைப் பாடியிருத்தலால், இந்நூல் அவர்கள் காலத்தே தோன்றிய பின்னே தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது. இது போலவே, பழமொழி நானூறு பாடிய முன்றுறையரையர், முல்லைக்குத் தேர் ஈந்த வேள்பாரியையும், மயிலுக்குப் போர்வை தந்த வையாவிக் கோப்பெரும பேகனையும் சுட்டி, "முல்லைக்குத் தேரும் மயிலுக்குப போர்வையும், தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்" என்பதனால், காலத்தால் பிற்பட்டவரென்பதும, "கூர்த்துநாய் கௌவிக் கொளக் கண்டும் தம் வாயால், பேர்த்து நாய் கௌவினு ரீங்கில்லை" என்ற நாலடித் தொடர் "கதம் பட்டு நாய் கவ்வின், பேர்த்து நாய் கவ்வினர் இல்" என்றும், ஞானசம்பந்தர் திருத்தக்கதேவர் முதலியோர் காட்டிய பழமொழிகளை "ஆகாதே உண்டது நீலம் பிறிது" என்றும், "நாய மேல் தவிசு இடுமாறு" என்றும், பிரமன் தலையில் எழுதினன் என்ற பிறகாலப் பழமொழியை "முன்னம் எழுதினன் ஓலைபழுது" எனறும் கூறுவதனால் அது வற்புறுத்தப்படுவதும் காண்க. இனிக் களவழி நாற்பது நாலடியார்க்கும காலத்தால் முறபட்டது. கார் நாற்பது, நாலைந்திணை, கைந்நிலை ஆகியவை களவழி நூற்குப் பிற்பட்டவையாகும். ஏனையவை பழமொழி நானூற்றுக்குப் பின்னே தோனறியவையாகும். இவற்றின் காலத்தை இங்கே நிறுவ முற்படின் இது வரம்பின்றிப் பெருகும்.

## இந்நூல்கள் உணர்த்துவன

இக்கீழ்க் கணக்கு நூல்கள் பதினெட்டனுள், அகப்பொருள் பற்றியன நாலைந்திணையும் கைந்நிலையும் கார் நாற்பதுமாகிய ஆறுமேயாகும்; களவழி நாற்பது ஒழிந்த ஏனைப் பதினொறும் அறமும் ஒழுக்கமும் உரைப்பதே பொருளாகக் கொண்டன. அவற்றின் நலங்களை ஆராய்ந்து பிற தமிழ் நூல்களையும் வடமொழியுள்ளிட்ட வேற்று மொழிகளிற் காணப்படும் நூல்களையும் ஒப்புநோக்கி விளக்

கக் காண்போமாயின், இந்நாளைய சட்டக்கலையின் அடிப் படையும் பரப்பும் இனிது புலனாகும். இவை மக்கட்கு வேண்டிய அறங்கட்கு இலக்கணம் கூறியும், காரணம் குறித்தும், எடுத்துக் காட்டியும், வகுத்தும் தொகுத்தும் உரைக்கும் திறத்தைக் கண்டு உணர்ந்து இன்புறுவோர் அருகி வருகின்றனர். கல்வித் துறைகளும் அவற்றைக் கைந்நெகிழ்க்கின்றன.

களவழி நாற்பது என்ற நூல் சோழன் செங்கணான் தன்னொடு பகைத்துப் போர்தொடுத்த பகைவேந்தரைக் கழுமலம் என்ற இடத்தே எதிர்நின்று பொருதுபெற்ற சிறப்பைப் பாராட்டிக் கூறுகிறது. இக்கழுமலம் கொங்கு நாட்டிலோ கொச்சி நாட்டிலோ இருத்தல் வேண்டும் என்பர். கொச்சி நாட்டில் கணையனூர் என்ற பெயரால் ஒரு பேரூர் இன்றும் உளது: கொங்கு நாட்டுக் கணைய னூர் கணியனூர் என வழங்குவது போலும். கழுமலம் கணையன் ஆட்சியிலிருந்ததென்பதைக் "கணையன் அகப் படக் கழுமலம் தந்த, பிணையலங் கண்ணிப் பெரும்பூண் சென்னி" (அகம். 44) என்று குடவாயிற் கீரத்தனார் கூறு கின்றார். இக் கணையன் சேரவேந்தர்க்குத் தானைத் தலை வனாய்க் குட்டநாட்டில் வாழ்ந்தவன்; கொச்சி நாடும் அதன் ஒரு பகுதியான கணையனூர் தாலூகாவும் குட்ட நாட்டைச் சேர்ந்தவை. இக் கழுமலமும் குட்டுவற்குரிய தென்பது தோன்ற, "கொய்சுவற் புரவிக் கைவண் கோமான், நற்றேர்க் குட்டுவன் கழுமலம்" (அகம். 270) என்று அகநானூறு குறிக்கின்றது. திருவிதாங்கூர்க் கல்வெட்டுக்கள், இக்கழுமலப் போரில் கலந்து பொருத நன்னனேற்றை முதலியோர்க்குரிய ஊர்ப் பெயர்களைக்[1] குட்ட நாட்டின் ஊர்களாகக் குறிக்கின்றன. இவ்வாற்றால் இக்கழுமலம் குட்டநாட்டின் கண்ணது என்றும், அதுவே கணையனுக்குடைமையின் கணையனூர் எனப் பெயர்பெற்ற தென்றும் அறியலாம். இதுபற்றி மேலும் ஆராய்தல் இங்கே வேண்டா.

---

1. T. A. S. Vol. III பக். 10, 20.

இக் களவழி நூலைப் பொய்கையார் பாடிய கருத்தை,

" களவழிக் கவிதை பொய்கை உரை செய்ய உதியன்
கால்வழித் தளையை வெட்டியர சிட்ட பரிசும் "

எனச் சயங் கொண்டாரும் பிறரும் பெரிதெடுத்துப் பாடு கின்றனர். வெற்றி மிகுதியால் மறம் சிறந்து நின்ற செங்கட் சோழன் உள்ளத்தில் அருள சுரந்து பெருகிய திறமும், அதனால் தோல்வியுற்றுச் சிறைப்பட்ட சேரன் அது நீங்கி அரசு நல்கப்பெற்ற திறமும் " கால்வழித் தளையை வெட்டியரசிட்ட பரிசும் " என்றும், " பொய்கை களவழி நாற்பதுக்கு வல்லவன் காற்றளையை விட்டகோன் " என்றும் வரும் சான்றோர் கூற்றுக்களால் வெளிப்படை யாகின்றன.

அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தன் உடற்றிய கடும் போரில் கேடுறும் உயிர்கள எய்தும் துன்பத்தைக் காணுந்தோறும் மறமே வீறுபெற அவன் உள்ளம் அமைந்திருந்ததனை மாற்றி, மன்பதை காக்கும் அம்மன்னவன் அருள் மேவிய நெஞ்சும் சொல்லும் செயலும் உடையனாதல் வேண்டுமெனக் கருதிய பொய்கையார் இந்நூலைப் பாடியுள்ளார். சங்க காலத்துச் சான்றோர், மறவுணர்வு மீதூர்ந்தவழி அது மக்களை மாக்களாக மாற்றும் கொடுமை கண்டு அஞ்சிப் போரை விலக்குதற்குரிய சூழ்ச்சியினையும் புறப்பாட்டுக்களில் அமைத்திருந்தனர். அதனைப் பின் பற்றியே களவழிபாடிய பொய்கையார்,

" கடிகாவில் கால்துற் றெறிய வெடிபட்டு
வீற்றுவீற் றோடும் மயினம் போல்—நாற்றிசையும்
கேளிர் இழந்தார் அலறுபவே செங்கண்
சினமால் பொருத களத்து "

என்றும்,

" ஓ ஓ உவமன் உறழ்வின்றி யொத்ததே
காவிரி நாடன் கழுமலம் கொண்டநாள்
மாவுதைப்ப மாற்றார் குடையெலாம் கீழ்மேலா

ஆவுந்த காளாம்பி போன்ற புனல்நாடன்
மேவாரை அட்ட களத்து"

என்றும்,

போர்க்களத்தை அழகுறப்பாடியுள்ளார். எதிர்த்த வேந்தரைப் பொதுவாகத் தெவ்வர், துன்னார், மேவார், கூடார் என்று சொல்லிக்கொண்டு சென்றாலும், ஓரிடத்தே "வஞ்சிக்கோ அட்டகளத்து" என்பதனால், கழுமலப் போரில் முடியுடைவேந்தான சேரமான் ஒருவன் என்பது புலப்படுகின்றது.

இனியவை நாற்பது என்ற நூல், குழந்தைகளைப் பற்றிய இனிய நலங்களை, "குழவி பிணியின்றி வாழ்தல் இனிது," "குழவி தளர்நடை காண்டல் இனிது;" "அவர் மழலை கேட்டல் அமிழ்தின் இனிது" என்று கூறிற்றாக, நாற்பது, "தந்தையில்லாத புதல்வன் அழகு " "இளமையுள் மூப்புப் புகல்இன்னா" "அறிவறியா மக்கள் பெறல் இன்னா" "குழவிகள் உற்ற பிணி இன்னா" "சிறியார் மேல் செற்றங் கொளல்இன்னா" என்று கூறுவனவற்றையும் ஒருங்கு நோக்குமிடத்து, இந்நூல்கள் மக்கட் பேற்றின் சிறப்பையும் மக்களைப் பிணியின்றி வளர்த்து அறிவுடையராக்கும் முறையையும் எத்துணை நுணுக்கமாக நோக்கிக் கூறுகின்றன என்பது இனிது புலப்படும். இவ்வாறே இவ்வற நூல்களைப் பல வேறு தலைப்புக்களில் வகுத்துத் தொகுத்துநோக்கின், தமிழர் வாழ்வின் சால்பும் இன்றும் என்றும் இன்பநிலை குன்றாத உணர்வொழுக்கங்களும் இனிதுவிளங்கக் காணலாம். நற்பண்புடைய மகளொருத்தியின் மாண்பை,

"நல்விருந் தோம்பலின் நட்டாளாம்; வைகலும்
இல்புறம் செய்தலின் ஈன்றதாய்—தொல்குடியின்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன்"

என்று திரிகடுகம் கூறுகிறது. "செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல் ஆன்ற பெரியாரகத்து" என்ற

திருக்குறட் கருத்தினுள், "சேர்ந்த நகை"யை விலக்கி, வேறு சில பெய்து,

"உடுக்கை யிகவார் செவிசொறுண் டார் கைமேல்
எடுத்துரையார் பெண்டிர்மேல் நோக்கார் செவிச்சொல்லும்
கொள்ளார் பெரியார் அகத்து"

என்று ஆசாரக்கோவை கூறுவது ஆராயத்தக்கது. "தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை" என்பது திருவள்ளுவா பெண்டிர்க்குரைக்கும் பேருரை: சிறு பஞ்சமூலம் பாடிய சயினச் சான்றோராகிய காரியாசான்,

"வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்துவிருந் தோம்பித்—திருவாக்கும்
தெய்வதையும் என்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு"

என்று இசைக்கின்றார். தெய்வ வழிபாடு சயினநெறி.

நற்பண்பே உருவாகவுடைய ஒருவனும் ஒருத்தியும் மணம்புரிந்துகொண்டு மனையறம்செய்து வருகையில் கடமை காரணமாக அவன் தன் காதலிபால் விடை பெற்று நீங்குகின்றான். காதலுறவால் ஒன்றாய்ப் பிணிப்புண்டிருந்த இருவா உளளங்களும் பிரிவால் பேதுற்றுத் துடிக்கின்றன. பிரிபவன், தான் கார்கால வரவில் நீட்டியாது வருவதாக வற்புறுத்தி நீங்குகின்றான். அவன் உள்ள முழுதும் கடமையுணர்வு நிறைந்து நின்றமையின், அது முடியுங் காறும் அவன உள்ளத்தில் அவளது நினைவு எழவே இல்லை; கடமை முடியவும் கார்காலம் வருகிறது. தன் காதலியின் அழகிய வடிவம் அவன் மனக்கண்ணில் தோன்ற, புறத்தே வானமெங்கும் மழைமுகில் எழுந்து பரந்து கார் கால வரவைக் காட்டிற்று. இரண்டையும் ஒருங்குகண்ட அவனது இளமையுள்ளம் துள்ளி எழுகிறது.

'வீறுசால் வேந்தன் வினையும் முடிந்தன
ஆறும் பதம்இனிய வாயின—ஏறொடு
அருமணி நாகம் அனுங்கச் செருமன்னர்

என்று கூறுகின்றான்; எதிரே தோன்றும் கார்மழையில் கானம் தளிர்த்துத் தண்ணிய காட்சி வழங்கக்கண்டு, "நல்லார், இளநலம் போலக் கவினி வளமுடையார், ஆக்கம் போல் பூத்தன காடு" என்று வியக்கின்றான். அவன் வரவு நோக்கி மனையின்கண் இருக்கும் காதலி, அவன் குறித்த கார்ப்பருவ வரவு கண்டதும் அவன் உடனே வாராமை நினைந்து வருந்தி மெலிவள் என்பது உணர்ந்த அவள்தோழி,

" கால்பயில் கானம் கடந்தார் வர ஆங்கே
நல்லிசை ஏறொடு வானம் நடுநிற்பச்
செல்வர் மனம்போல் கவின்ஈன்ற நல்கூர்ந்தார்
மேனிபோல் புல்லென்ற காடு "

என்று சொல்லி மகிழ்விக்கின்றாள். இவை கார்நாற்பது காட்டும் காட்சிவகை.

காலந்திணையும் கைக்கிளையுமாகிய ஐந்து நூல்களும் ஒருவனும் ஒருத்தியும் வாழ்க்கைத் துணையாம் வகையில் ஒருவரையொருவர் இன்றியமையாக் காதலுறவுற்று நிகழ்த்தும் கூற்றுக்களைத் தேனும்பாலும் போன்ற இனிய சொல்லும் பொருளும் அமைந்த பாட்டுக்களால் நமக்கு அறிவித்து இன்புறுத்தும் ஏற்றமுடையனவாகும். காதலன் கடமை குறித்துத் தன் மனைவியின் நீங்கிச் சென்றானாக, அவன் பிரிவாற்றாத காதலி உண்டி வெறுத்து உறக்கம் அறந்து உடம்பு நனிசுருங்கி மேனி பசந்து மெலிவுறுவாளாயினள்; அன்பும் அறிவும் அறமே செய் [illegible]லும் [illegible]வும் செயலுமாக வுருக்கொண்டு பெண்வடிவில் நின்றாற்போலும் அவளுடைய தோழி, அவளை ஆற்றுவிக்க எண்ணி, அவன் சென்ற நெறியின் இயல்பை எடுத்துரைக்கின்றாள்: "தோழி, காதலர் சென்ற வழி முன்பு

யும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்வளம் இழந்து வேனில் வெம்மையால் நீர்நலம் குன்றிய பாலையாகும்; ஆயினும் மானினம் ஆணும் பெண்ணுமாய் வாழ்கின்றன. நீர்வேட்கை மிக்க வழி ஆணாகிய கலைமானும் பெண்ணாகிய பிணைமானும் நீர் குன்றிய சுனைக்குச் செல்லும்; இரண்டும் அதன்கண் நீர் சிறிதே இருப்பதைக் காண்கின்றன. உடனே, கலைமான் தானும் உடன் பருகத் தலைப்பட்டால் தன் பிணைமானுக்கு நீர் போதாது என்று எண்ணுகிறது. தான் உண்ணாவிடில் பிணைமானும் நீரைப் பருகாது என்பதை அந்த ஆண்மான் அறிகிறது. அதனால் பிணைமான் நன்கு பருகுதல் வேண்டித் தானும் தன் வாயை நீரில் வைத்துக் குடிப்பது போலப் பாசாங்கு செய்கிறது. இதனைக் காதலர் காணார், அவர் உள்ளத்தே மான்களின் காதலன்பு காட்டப்படும். உடனே அவர் உன்னை நினைந்து ஓடோடியும் வந்து சேர்வர்" என்பாளாய்,

> "சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
> பிணைமான் இனிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
> கள்ளத்தின் ஊச்சும் சுரம்என்பர் காதலர்
> உள்ளம் படர்ந்த நெறி" (ஐந்திணை ஐம்பது : ௩௮)

என்று கூறுகின்றாள்.

சங்ககாலத்தில் இல்லிருந்து நல்லறம் புரியும் மக்கள் வாழ்வில் மனைக்கிழத்திக்கு மகன் பிறந்தானாயின், குறித்த நாளொன்றில் தலைமகன் தன் மகனைக் காண்டல் ஒரு சிறப்பாக நிலவிற்று. அதியமான் நெடுமான் அஞ்சி தனக்கு மகன் பிறந்தானைக் காணப்போந்த காட்சியை ஔவையார் வியந்து பாடியது புறநானூற்றில் கோக்கப்பட்டிருக்கிறது. மகனைத் தோளிடைக் கொண்டு நிற்கும் தந்தையின் தோற்றத்துக்கு இந்திரனை உவமமாக்கி, "தடுத்தமாநிதிக் கிழவனும் போன்மென மகனொடு புகுதந்தோனே" (அகம். ௬௬) என்று அகநானூறு கூறுகின்றது,

இவ்வழக்காறு "புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதின்,......ஐயர்பாங்கினும் அமரர்ச் சுட்டியும், செய்பெருஞ்

'சிறப்பொடு சேர்தல்" (தொல். பொ. ௧௪௬) எனத் தொல்காப்பியனார்க்கு முன்பிருந்தே தொன்று தொட்டு வருவதாயினும், இக் கீழ்க்கணக்குப் பாடிய சான்றோர் காலத்தும் இருந்ததனை,

"பாட்ட ரவம்பண் ணரவம் பணியாத
கோட்ட ரவ மினனிவைதாம் குழுமக்—கோட்டரவம்
மந்திரங்கொண் டோங்க லெனன மகச்சுமந்து
இந்திரன்போல் வந்தான் இடத்து"

(திணைமாலை நூற்றைம்பது : ௧௪௫)

என்று குறிக்கின்றார். பிற்காலத்தே, இவ் வழக்காறு **புத்திரமுக தரிசனம்** என வழங்கியது. இதனை, திருமயம் பகுதியைச் சேர்ந்த நெடுங்கோணத்திலுள்ள பெருமாள் கோயில் கல்வெட்டு, (கி. பி 1483) வீரப்பிரதாப சுந்தரத் தோளுடையார் மகாபலி வாணாதராயர் தன் மகன் திருமாலிருஞ் சோலை நின்றான் பிறந்த காலத்தே "புத்திரமுக தரிசனம்" என்னும் முறைமையைச் செய்தான் என்று (P. S. No. 672) குறிக்கின்றது.

இவ்வண்ணம் பழைய வழக்காறுகள் பலவற்றிற்கு இடமாகவும், இனிய சொன்னலமும் பொருணலமும் கனிந்த அழகிய பாடல்களின் தொகை நிலையாகவும், அறம் பொருள் இன்பமென்னும் உறுதிப் பொருளைப் பெறுதற்கு வாயிலாம் நல்லொழுக்கநெறிகட்கு நிலைக்களமாகவும், இளைஞர் இளமை யுள்ளம் இனிது கற்று இன்புறுதற்கு வாய்ப்பாகவும் அமைந்த இப் பதினெண் கீழ்க்கணக்குகள் நாம் பெற்ற பேறுகளுள் சிறந்தனவாகும். இவற்றுள் திருக்குறளும் நாலடியாரும் போல ஏனையவை இன்று கல்வி கற்கும் இளைஞர்களின் கல்விச் சூழலில் விளங்கித் தோன்றாமல் ஒளி மழுங்கி நிற்கின்றன. இன்று இவண் கூடும் மாநாடு அவற்றை விளக்கிக் காட்டி அவற்றின் நலம் தேர்ந்து மக்கள் நெகிழாது போற்றிப் பேணுதற்குப் பெருந்துணை செய்கின்றது.

இன்று இம் மாநாட்டில் சீர்த்த புலமையும் தெளிந்த சொற்செல்வமும் நிறைந்த அறிஞர் பதின்மர் இப் பதினெண் கீழ்க்கணக்குகளை பலவேறு காட்சிகளில் வைத்து ஆராய்ந்து கொண்டு வந்திருக்கின்றனர். அவர்கள் நிகழ்த்தும் விரிவுரையைக் கேட்டற்கு விழைந்து நீங்கள் அனைவரும் இங்கே கூடியிருக்கின்றீர்கள். உங்களைப் போலவே நானும் அவ்வுரைகளைக் கேட்கும் வேட்கையுடையனாகின்றேன.

என்னை இம் மாநாட்டுக்குத் தலைமைதாங்குமாறு பணித்து இன்புறுத்தும் உங்கள் அனைவர்க்கும் பொதுவாகவும், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர்க்குச் சிறப்பாகவும் என் மனம்அமர்ந்த அன்போடு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். வணக்கம்.



விததுவான,
திரு. ந. சேதுரகுநாதன்



திருவாளா,
ஆ. செபரத்தினம, எம.ஏ.

திருவாளா,
ஆ. அருளப்பன், பி.ஏ.





திருவாளர்,
கு. பரமசிவன், பி.ஏ. (ஆனாசு)

திருவாளா,
ச. கணபதி முதலியார்,
எம.ஏ., எல்.டி.





டாகடா, கணியா,
[illegible]. மு. சுப்பிரமணிய பிள்ளை



திருவாளர்,
தி. அ. சொக்கலிங்கம்,
பி.ஏ. (ஆனாசு)



வித்துவான்,
திரு. அ. க. நவநீதகிருட்டிணன்

திருவாளர்,
நெ. சுப்பையா பிள்ளை, எம்.ஏ.





திருவாளர்,
தி. வ. காந்திமதிநாதன்,
பி. ஏ. (ஆனர்சு)

# I. ஒருமறை (திருக்குறள்)

## க. அறம் - - -

[வித்துவான், திரு. ந. சேதுரகுநாதனார்]

### முன்னுரை

சால்பு நிரம்பிய தமிழ்ப்பெருமக்களே! அன்பு நிரம்பிய மாணவர்களே! மாண்பு நிரம்பிய அன்னையர்களே! வணக்கம். ஈண்டு என்னாற் பேசப்படும் பொருள் ஒரு மறையாகிய திருக்குறளின்கண்ணமைந்த அறம் என்பதுவேயாகும்.

### மறை என்பதன் பொருள்

அறத்தைபற்றிக் கூறும் முன்பு 'மறை' என்பதன் பொருள் யாதென்று நோக்குவோம். பகைவரால் எய்யப் படுகின்ற அம்புகளும் எறியப்படுகின்ற ஈட்டிகளும் உடம்பிற் பாயாதவாறு, உடல்முழுதுந் தழுவிக்கிடந்து காக்கும் கவசத்தை "மெய்ம்மறை" என்று வழங்குவது தமிழ்மரபு. மெய்யாகிய உடம்பினை மறைத்துக் காப்பதனால் மெய்ம் மறை என்ற பெயர் பெற்றது. கோட்டைச் சுவர்களாகிய அரண்கள் பகைவர் எய்கின்ற படைக்கலங்கள் வந்து பாயாத வாறு தடுத்துக் காத்தலால் 'மறை' என்ற பெயர் பெறும். அரண்போல நின்று காத்து உதவும் நூல் "ஆரணம்" என்று கூறப்பெறும். மறை, வேதம் என்று பெயர்பெறும் நூல்கள் 'ஆரணம்' என்றும் பெயர்பெறும். அருமை யாகிய அரணம் என்பதே 'ஆரணம்' என்றாயிற்று, ஆருயிர்

என்பதுபோல. ஆகவே ஆரணம், மறை என்பன ஒரு பொருள் குறித்த காரணச்சொற்களாகும். தீய வினைவுகளும் தீய சொற்களும், தீய செயல்களுமாகிய படைக்கலங்கள் வந்து பாயந்துகொல்லாதவாறு தடுத்து நின்று மறைத்து உயிரைக்காக்கும உயரிய மறையே ஈண்டு "ஒரு மறை" என்று கூறப்பெற்றது. அஃது ஏனைய மெய்ம்மறையாகிய உடல் மறைகளைப்போன்றும், ஏனைய மொழிகளில் தோன்றிய பொள்ளல் மறைகளைப்போன்றும் குறைபாடின்றி ஒப்பற்றதாக ஓங்கி நிற்றலின் ஒருமறை என்று கூறப்பெற்றது. உண்மையாகவே "ஒருமறை" என்ற பெயர் பெறுதற்கு உரிய தகுதி உடைய நூல் உலகத்திலேயே ஒன்றுதான் உண்டு.

அதுதான் நமது திருக்குறள. இனி, மறை என்பதற்கு அறிவுக்கு எட்டாமல மறைந்து நிற்கும் பொருள்களாகிய மறைகளைத் தெளிவாகத தந்து உதவி நிற்கின்ற காரணத்தால் மறை என்று பெயர்பெற்ற தென்றுங் கொளளலாம். இருவர் தம்முள் கசிந்து பேசும் 'இரகசியங்களை', 'மறை' என்கின்றோம். அதுபோன்று அறம் முதலிய உண்மைப்பொருளாகிய "இரகசியங்களை"—மறைகளை உணர்த்தும நூலும் "மறை" என்ற பெயர் பெற்றது என்க. பிறர்க்குக கூறாது மறைக்கப்படுவது "மறை" என்று பொருள்கொள்ளுவது தவறு.

## திருவள்ளுவர் வரலாறு

இத்தகைய அருமைத் திருநூலை இயற்றி உலகுக்கு வழங்கிய திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். தொகைநூல்களாகிய பழைய நூல்களிலெல்லாம் திருக்குறட்பாக்கள் எடுத்தாளப் பெற்றிருக்கின்றன கலித்தொகை, நற்றிணை, புறநானூறு, மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் திருக்குறட் பாடல்கள் எடுத்தாளப்பெற்றிருக்கின்றன. புறநானூறு திருக்குறளுக்கு "அறம்" என்ற பெயர் வழங்கியதைக் குறிப்பிடுகின்றது. "அறம்பா டிற்றே ஆயிழை கணவ"

என்பதில் அறம் என்பது திருக்குறளைக் குறித்தது. இல்லறம், துறவறம், பொருளறம், காதலறம் ஆகிய அறங்களைக் கூறுவதனால் அறம் என்ற பெயரும் பொருந்துவதே யாகும். ஒரு முழுமணி மாணிக்கத்தை எப்பக்கந் திருப்பி நோக்கினும் அப்பக்கமெல்லாம் ஒளி விளங்குதல்போன்று வள்ளுவர் நூலில் முழுதும் அறம் நிரம்பிக்கிடத்தலால் "அறம்" என்ற பெயர் பெற்றது இவ்வாறு பண்டைத் தொகை நூல்களால் எடுத்தாளப்பெறுஞ் சிறப்பு நிரம்பிய திருக்குறள் அவற்றிற்கு முன்பு தோன்றியது என்பது பொருத்தமுடையதே யாகும. எனவே, திருவள்ளுவர் காலம் பண்டைத் தொகைநூல்களின் காலத்திற்குச் சிறிது முந்தியது என்றும், தொகைநூல்கள் யாத்த புலவரிற் சிறுபான்மையாளர் வள்ளுவர் காலத்தவர் என்றும் கொள்ளலாம். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைக் குறிக்கும் வெண்பாவில் பத்தொன்பது நூற்பெயர்கள் உள்ளன. "மூப்பால் கடுகம்" என்பதனை ஒரு தொடராக்கி மூன்று பகுதிப்பட்டதாகிய திரிகடுகம் என்றும் பொருள் கூறி விட்டுத் திருக்குறளைத் தனியே பிரித்துச் சிறப்பிப்பாரும உளர்.

திருவள்ளுவரின் தாய் தந்தையருடைய பெயர்கள் பண்டைக்காலத்திலேயே தமிழர்களால் மறக்கப்பெற்றுப் போயின. அவருடைய தாய் தந்தையரின் பெயரை இப்போது எவரும் அறியார். இப்பொழுது சிறந்து விளங்குகின்ற தமிழ்ப்புலவர் ஒருவர் பெயரைக் கூறி அவருடைய தாய் தந்தையரின் பெயரென்ன என்று கேட்டுப்பாருங்கள். மக்கள் அறிந்திருக்கமாட்டார்கள். அதைப்பற்றிக் கவலைப் படுகின்ற வழக்கம் பண்டுமில்லை; இன்றுமில்லை. வரலாறு எழுதும்போது தாய் தந்தையரின் பெயரைத் துருவித் தேடி எழுதுவது வரலாற்று ஆசிரியரின வழக்கம். வரலாறு எழுதும் பழக்கந்தான் இன்னும நம் நாட்டில் நன்றாய்க் காலூன்ற வில்லையே. முனகாலத்தில் யார்தாம் வரலாற்றைப்பற்றிக் கவலைப்பட்டார்கள்? ஆகவே, வரலாறு தோன்றாத நம் நாட்டில் பொய்மலிந்த கட்டுக்கதைகள்

தாம் கிரம்பத்தோன்றின. அக் கதைகளையும் அக்கதை களில் வரும் பெயர்களையும் வாயால் மொழிவதும், மனத் தால் கினைப்பதுந் தவறு என்றே உறுதியாகச் சொல்லலாம். வள்ளுவர் பிறந்தது தமிழ்க்குலத்தில் என்பதும், அவர் அரசனுக்கு அணுக்கச் செயலாளராக இருந்து அரசனோடு ஒப்பமதிக்கும தகுதியுடைய தொழில் புரிந்தவர் என்பதும் எல்லோரும் அறியவேண்டுவன.

“தமிழன் திருக்குலத்தில் தமிழ்த்தாய் திருவயிற்றில்
தமிழ்த்திரு வள்ளுவனார்—கிளியே!
தமிழாய்ப் பிறந்தாரடி”

“மற்றவர்தந் தாய்பேரும் மன்னுதந்தை தன்பேரும்
முற்றும் மறந்திடினும்—கிளியே!
முப்பால் மறந்திலரே”

என்று திருவள்ளுவர் வரலாற்றுக் கிளிக்கண்ணி குறிப் பிடுவதுங் காண்க.

## வள்ளுவர் யார்?

வள்ளுவர் என்ற பெயர் அரசனுக்கு அணுக்கச் செயலாளராக இருப்பவருக்கு வழங்கப்பெறறு வந்திருக் கின்றது. அமைச்சரைக் காட்டிலும் சிறந்தவர் வள்ளுவர். வயதாலும் அறிவாலும் முதிர்ந்தவருக்கே வள்ளுவத் தொழில் பார்க்கும உயர்ந்த வேலை கிடைக்கும். வள்ளுவர் வீதிவழி போகின்றார் என்றால் அவரைச் சூழ்ந்து சேனைகள் அணிவகுத்துச் செல்லும். மெய்க்காப்பாளர்கள் மிகப் பலர் உடன் செல்லுவர். வள்ளுவரைச் சுற்றிப் பாதுகாத் துச் செல்லும் சேனை “செலவச் சேனை” என்று சிறப்பிக் கப்படுகின்றது. மற்றப் படைகளிலிருக்கும் வீரர்களைக் காட்டிலும் வள்ளுவப் பெருந்தகையைக் காத்துநிற்கும் வீரருக்கு ஊதியமும் மிகுதி. நாம் நம் வீட்டில் நிகழ இருக்குந் திருமணத்திற்கு ஊரழைக்க நம் வேலைக்காரனைப் போகச் சொல்வோமா? அது முறையாகுமா? நாம் நேரே போய் அழைப்போம்; போக முடியாவிட்டால் நம்மோடு நெருங்கிய உறவினரைப் போகச்சொல்லுவோம். அரசன்

மகளுக்கோ அல்லது மகனுக்கோ திருமணம் நிகழ்ந்தால் அரசன்தான் ஊரழைக்கவேண்டும். ஆனால் அந்த அரச னுக்குப் பதிலாக அவனோடு ஒத்த சிறப்பு நிரம்பிய வள்ளுவர் சென்று ஊரழைப்பார். அரசன் கூறும் செய்தி களை மூன்று சிறந்த நாட்களில் குடிமக்களுக்கு அறிவிக்கும் கடமை வள்ளுவருக்கு உண்டு அரசன் நடத்துந் திருநாள், திருமணநாள், போர் தொடங்கும் படைநாள் ஆகிய மூன்று நாட்களிலும் அரசன் சார்பாக அரசனே நேரிற் கூற வேண்டிய கடமையை அரசனது நிலையில் இருந்து வள்ளுவர் அறிவிப்பார். அமைச்சரினும் மேம்பட்ட வள் ளுவர் அறிவித்தால்தான் மக்களும் ஒப்புக்கொள்வர். அவ்வாறு அறிவிக்கச் செல்லும்போது வள்ளுவர் வெண் பட்டு உடுத்தி, வெண் சந்தனம் பூசி, வெள்ளை மாலை அணிந்து கொண்டு ஆனையின்மேல் வீற்றிருந்து எழுந் தருளுவார். ஆனை வீதி வழியே செல்லும்போது அவரைச் சூழ்ந்து படைகள் அணிவகுத்துச் செல்லும். அவர் அரச னுடைய வெற்றி முரசினை முழக்கிக்கொண்டு மக்களுக்குச் செய்தியை அறிவிப்பார். அங்ஙனம் அறிவிப்பவர் வயதி னாலும் மிகவும் முதுமை எய்தியவராகவே இருப்பர். வள் ளுவர் பறையறைபவரல்லர். அரசனது அரண்மனையி லிருக்குந் தெய்வ முரசினை முழக்கி அரசனாக இருந்து அறி விப்பவர். அரச முரசத்திற்குப் பூசனை செய்து கொற் றவையை வழிபாடு செய்து பின்னர் வந்து யானையில் ஏற்றி முரசு முழக்கிச் செய்தி யறிவிப்பார். இவற்றை யெல்லாம் பெருங்கதை என்ற அருமைத் திருநூலில் கொங்கு வேளிர்,

"கோற்றொழில் வேந்தர் கொற்ற முரசம்
பெரும்பணைக் கொட்டிலுள் அரும்பலி ஓச்சி
முற்றவை காட்டிக் கொற்றவை பழிச்சி;
திருநாள் படைநாள் கடிநாள் என்றிப்
பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்
செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்
நறுவெண் சாந்தமொடு மாலை யணிந்து."

என்று கூறிய பகுதிகளால் அறிக. வள்ளுவர் முழக்கும் முரசில் வெற்றித் தெய்வம் வீற்றிருப்பதாகக் கருதப்படும்;

அது பூசனை செய்யப்பெறும். அவையோரெல்லாம் முரசினை வழிபாடு செய்வர். அத்தகைய முரசினை முழக்கி அரசனுக இருந்து செல்வச் சேனை வள்ளுவ முதுமகனுர் செய்தி யறிவிப்பார் என்பது நன்கு தெளிக.

ஓர் இனத்தவர் தங்களுக்கு ஒரு பெயரை வைத்துக் கொள்ளும்போது சிறந்த ஒரு பெயரையே எடுத்து வைத்துக்கொள்வர். அந்த இனததவர் கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவற்ருல் சிறந்து மேன்மையாக விளங்கினுல் அவர் தங்களுக்கு வைததுக்கொண்ட பெயரும் சிறப்பாக விளங்கும். அவாகளின் நிலைமை தாழ்ந்தால் அவர்கள் கொண்ட பெயரின் மதிப்புந் தாழும். "வள்ளுவர்" என்ற பெயரின் சிறப்புக் கருதிப் பிற்காலத்தில் அப் பெயரைத் தங்களுக்குக் குலப்பெயராக வைத்துக்கொண்ட வள்ளுவ மக்களின் நிலைமை இன்று தாழ்ந்துபோனமை கருதி—இற்றைஞான்று குறி சொல்லித் திரியும் இந்த வள்ளுவரின் இனத்தைச் சேர்நதவரே பண்டைத் திருவள்ளுவர் என்று கூறுவதும் பொருததமுடையதன்று. அரசனுடன் வீற்றிருந்து அரசனுக்கும், ஏனை அமைச்சர், படைத் தலைவர், ஒற்றர் முதலியவர்களுக்கும் அறிவு கூறும் மாண்பு மிகுந்தவராக விளங்குபவரே வளளுவர். அத்தகைய உயர்பதவியை—அரசன் வழங்கும் பதவிகள் எல்லாவற்றினும் உயர்ந்த வள்ளுவர் பதவியைப் பெற்றுப் பேரறிவுப் பெருஞ் செல்வராக விளங்கியவரே நமது அறிவுப் பெருந் தெய்வமாகிய திருவள்ளுவர் என்பது எல்லோரும் தெரிந்து உணர்வாராக. அத்தகைய சிறப்புவாய்ந்த நிலைமையிலிருந்த ஒரு பெருங் காரணமும் அவர் நூல் நன்கு அமைவதற்குத் துணையாயிற்று. அரசியல் முதலிய நுண் பொருள்களும் தெளிவாக அறிந்து கூற முடிந்தது.

இத்தகைய பெரியார் இயற்றிய திருக்குறளைப் பாராட்டுந் திருவள்ளுவ மாலைச் செய்யுள் யாண்டியனை விளித்து "வாளார் நெடுமாற" என்று குறிப்பிட்டுக் கூறுகின்றது. ஏனை வேந்தரைக் காட்டினுந் தமிழைப் பெரிதுஞ் சிறப்பாகப் போற்றித் "தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே,"

என்று பாராட்டப்பெறும் பாண்டியர்க்குத் துணையாக அவரது அவையின்கண் விளங்கி வள்ளுவத் தொழில் புரிந்தவரே நம் திருவள்ளுவர் என்பதும் நன்கு உணர வேண்டுவது ஒன்று. "செங்காப் போதார் புனற் கூடற்கு அச்சு" என்ற திருவள்ளுவமாலை அடி, மதுரைப் பாண்டியருடைய அரசியலாகிய பெருந்தேருக்குத் 'திருவள்ளுவனார்' அச்சு என்று சிறப்பித்துக் கூறுவதனாலும் திருவள்ளுவர் மதுரைப பாண்டிவேந்தற்குத் துணைபுரிந்து வீற்றிருந்தவர் என்பது தெளியப்படும். எனவே, திருவளளுவர் மதுரையில் வாழ்ந்தவர், அரசனுக்கு அணுக்கச் செயலாளர், இரண்டாயிரம் யாண்டுகட்கு முற்பட்டவர், இவர் தமிழ்க் குலத்தில் ஒரு தமிழ்த் தாய் திருவயிற்றில் ஒரு தமிழனின் திருமகவாக உலகெலாம் உய்யத் தமிழாகப் பிறந்தவர் என்பது தெளிக

## வள்ளுவரின் நெறி

திருவள்ளுவர் இறைவனது உணமையை மெய்யுணர்வால் உணர்ந்து தெளிந்தவர். தெளிந்த உணர்வு நலங்களையே தம் நூலில் அமைத்து வழங்கியிருக்கின்றார். மக்கள் எந்தெந்த நெறியில் நின்றாலும் மெய்யுணாவு பெறாத வழி அந்த நெறியில நின்றதனாலாகிய பயனைப் பெறமாட்டார். எனவே, மெய்யுணாவு பெறாதவா இன்ன நெறியில் நின்றவர் என்பதற்காக ஒரு பேறும, இன்ன நெறியில் நில்லாதவர் என்பதற்காக வேறு ஒரு பேறும் வாய்க்கப் பெறுவதில்லை. அருளுடையாராய் மெய்யுணர்வு பெற உதவும் நெறி எதுவாயினும் அது சான்றோர்களால் போற்றி உரைக்கப்படும். அந்த நெறியின்கட் சார்ந்தோர் எல்லோரும் மெய்யுணர்வு பெற்றுத் திகழ்கின்றனா என்று கூறுதலும் பொருந்தாது. எனவே, மக்களால் அமைக்கப்பட்ட சமயநெறிகளிற் சேர்ந்து வாழ்கின்றவர்களுள் பலரும் எமது நெறி சிறந்தது, நமது நெறி தாழ்ந்தது என்று கலாம் விளைப்பதிற் பயனில்லை. இன்ன நெறியிற் சேர்ந்தவர் என்பதற்காக எவரும் பயனடைவதில்லை. "அருளுடையவரும் அரிய மெய்யுணர்வு உடையவரும்

ஆகிய அவர்களே பயன் பெறுதற்கு உரியவர் என்னுங் கருத்தினால் ஆசிரியர் திருவள்ளுவ நாயனார் அருளுடைமை, மெய்யுணர்தல் என்பவற்றைத் தெளிவுறுத்தி யருளிப் போந்தார். எல்லாவகையாலும் நுண்ணிதாக மெய்யுணர்வுடன் ஆராயப்பெற்றுத் தத்துவ நுண்பொருள் காட்டி மேன்மை வாய்ந்து நிற்குஞ் சிவநெறி யொன்றே திருவள்ளுவர் கொண்டொழுகுந் திறன்வாய்ந்த நெறியாகவும் அவர் நூலின்கட் பொருந்திய நுட்பங்களைப் பெற்று இலங்குவதாகவும் காணப்பெறுகின்றமையின் அதனையே அவர் கொண்டொழுகிய நெறியென்று கொள்ளலாமெனினும், ஆசிரியர் தாம கொண்டொழுகிய நெறி இன்னது என்று வெளிப்படையாக இயம்பாமல் பொதுநெறியாகக் கூறிச் செல்கின்றமையின், அவரது நெறி இதுவென்று சுட்டிக் கூறுவது வேண்டற்பாலதன்று என்று விடுக்கின்றேன். திருவள்ளுவரைத் தத்தஞ் சமய நெறிப்பாற் படுத்துக் கூறும் ஏனையோரும் பொதுவாக அவரையும் அவர் நூலையும் தத்தஞ் சமயமென்ற சிறைச்சாலையில் அடைத்து வைக்க விழையாமல் உலகமெல்லாம் பரவுதற்காக விட்டு வைப்பாராக.

எனவே, திருவள்ளுவர் கொண்டொழுகிய நெறி எல்லா நெறியினுள்ளும் போற்றப்படுகின்ற அருள்நெறி— மெய்யுணர்வுப் பெருநெறி என்று கூறுதலே பொருத்தமுடையது. போக்குவரவு இல்லாமல் எப்பொருட்கண்ணும் நிரம்பி மெய்ப்பொருளாக இலங்கும் இறைமையை ஆசிரியர் முதன்மை, வாலறிவு, மாண்பு, வேண்டுதல் வேண்டாமை, வாய்மை, ஐந்தவித்த தன்மை, உவமையில்லா மேன்மை, அறத்தின் ஓட்டம் ஆகிய பண்பு நலன் நிரம்பிய தலைமையாக எடுத்துக் காட்டியுள்ளனர். தனக்கு ஒரு சார்பு வேண்டாத இறைவனது ஆற்றலை மக்கள் என்னென்ன பயன் கருதி என்னென்ன பண்பாக வழிபடுவார்களோ, அந்தந்தப் பயன்களை அவர்கள் அடைதற்கு உரியர். எனவே, அத்தகைய பண்பு வடிவமாக இறைவனைக் கூறிய பெற்றி அறிந்து உணர்வதற்கு உரியது. எனினும் பல நெறியாளர் பிணக்காமைப் பொருட்டு ஆசிரியர்,

"நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை." (உசஉ)

என்று கூறி அருளினை வற்புறுத்துதல் காண்க. எனவே கலாம் விளைக்கும் பண்பு கொண்டு நெறிப்பூசல் விளைப்பதைக் காட்டிலும் அருளினை மேற்கொள்வதே எல்லாருக்கும் ஒப்பத் துணை செய்யும் மேன்மை வாய்ந்தது என்று உணர்தலும், அருளுடையராய் அவாவறுத்து மெய்யுணர்வு பெற்றவர்கள் பேரா இயற்கை பெற்ற பெரியோராவர் என்பதும் மனங்கொளத் தகுந்த உண்மைகளாகும்.

## ஆசிரியரின் இயல்பு

ஆசிரியர் திருவள்ளுவர் ஒப்பற்ற சான்றோர் என்பதும்; அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையாகிய உயர்பண்புடன் கூடித் திகழும் சால்பு நிரம்பியவர் என்பதும்; அருள் நெறிபற்றிய ஒழுக்கமும் மெய்யுணர்வும் நிரம்பியவராய் ஏனை மொழியாளருக்கும் ஏனை மக்களுக்கும் தாமே மெய்ப்பொருளை உணர்த்துந் திறனுடையவராய் இலங்கினர் என்பதுந் தெளிந்து கொள்க.

ஆசிரியர் நக்கீரனார் தாம் இயற்றிய திருவள்ளுவமாலைச் செய்யுளில்,

"தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனு அறம்முதலா அந்நான்கும்—ஏனோருக்கு
ஊழின் உரைத்தாற்கும் ஒண்ணீர் முகிலுக்கும்
வாழியுலகு என்னாற்றும் மற்று." (திருவள்ளுவமாலை : எ.)

என்று கூறிய நுட்பம் உணர்ந்து மகிழத்தக்கது. ஆசிரியர் திருவள்ளுவர் மெய்யுணர்வு உடையவராகலின் எல்லாப் பொருள்களையுந் தாமே முழுதும் உணர்ந்து கைம்மாறு வேண்டாக் கார் முகிலையொப்ப உலகிற்கு வழங்கினாராகலின், அவர் செயலுக்கு ஈடு செய்ய உலகத்தால் இயலாது என்பதுவே நக்கீரர் கருத்து. எனவே, திருவள்ளுவர்க்குத் தான் இந்த உலகமும் உலகிலுள்ள ஏனைய நூலாசிரியரும் கடமைப்பட்டுள்ளனரேயன்றி அவர் யாருக்கும் கடமைப்

பட்டவரல்ல ரென்பது தெளிந்து கொள்ளுதற்கு உரிய உண்மையாகும். இத் திருக்குறளின்கண்ணமைந்த கருத்துக்களை வடமொழியாளர் கவர்ந்து தொகுத்து நூல் செய்து கொண்டமையும் தெளிய வேண்டிய தொன்று. இவ்வாற்றால் திருக்குறள் திருவள்ளுவரின் மெய்யறிவின் கண் அரும்பி மலர்ந்த தனித்தமிழ் முதனூல் என்பதும், அவர் தமக்கு ஒப்பார் இல்லாத "மன்புலவர்" என்பதும் நன்கு தெளிந்து கொள்ளுதல் வேண்டும். வறியவர்பால் மிகுந்த அருளிரக்கங்கொண்ட ஆசிரியர்,

"இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்." (௧0௬௯)

என்று உருகிக் கூறுவதனாலும்,

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்." (௧0௬௨)

என்று சினந்து மொழிவதாலும்,

"எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணாசெய் யாமை தலை." (௩௧௭)

"இன்னா செய்தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்." (௩௧௪)

"அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்." (௨0௩)

"இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு." (௯௮௭)

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று." (௧0௮)

"இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்." (௮௫௪)

என்று கூறுகின்ற பாக்களினாலும் ஆசிரியரின் பண்புநலன்கள் விளங்கித் தோன்றுதல் காண்க. சுருங்கக் கூறின் திருக்குறளின்கண்ணமைந்துள்ள உயரிய இயல்புகள் முழு

தம் திருவள்ளுவருடைய இயல்புகள் என்று சொல்லி விடலாம். என்றாலும் நல்லன எல்லாவற்றையுங் கடமை யாகக் கொண்டு இலங்கியவர் அவர் என்பதும், ஊழி பெயர்ந்தாலுந் தாம் பெயராத பேரா இயறகைப் பெருமை பெற்றவர் என்பதும், எல்லாப் பண்புகளாலும் நிறைந்து அப் பண்பு நலனொடுஞ் செயலொடும் விளக்கமுற நடந்து வந்தவர் என்பதும் அறிந்து கொள்ளுதல் வேண்டும். உலகம் நிலைகுலைந்து கடல் நீர் கரை கடந்து நிலை பெயர்வது போன்று திருவள்ளுவரின் பண்புக்கடல் நிலை பெயர்வது இல்லை என்க. குணக்கடலும் அவரே. அக் கடலுக்குக் கரையும் அவரே. கடல் கரையை அழித்துக் கொண்டு வந்து உலகினை அழிப்பது போன்று அவர் பண்பு நலங்கள் கரை கடந்து தீங்கு புரிவது என்றும் இல்லை. ஓவென்று அலறி ஓங்கி அலைமோதுங் கடலையே ஓவாது இமையாது நோக்கி நிற்பவன் கடலின் பெருமையையும பெருமிதத் தையுங் கண்டு வியந்து உள்ளம் அமைந்து ஒடுங்கி நிற்றல் போன்று திருவள்ளுவரை—குணக் கடலாகிய பெருங் கடலை நோக்கி—நேர்ந்து—அமைந்து காணுபவர்க்கு உள தாகும் வியப்பும்—உள்ளக் களிப்பும்—அமைதியும் எழுதிக் காட்ட இயலாது; தாந்தாமே துய்த்து உணரக் கூடிய மேன்மை அது என்க. இத்தகைய அவரது இயல்பே,

> "ஊழி பெயரினுந் தாம் பெயரார் சான்றாண்மைக்கு
> ஆழி எனப்படு வார்." (கஅக)

> "கடனென்ப நல்லவை எல்லாம் கடனறிந்து
> சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு." (கஅக)

என்ற திருக்குறளின் உருவாகக் காட்சியளிக்கின்றது என்க. இத்தகைய இவரது பண்புக் கடலில்—இவரது நீர்மையில் தோய்ந்து தோய்ந்து தூயராக வாழ்பவரே வாழ்வார் எனப்படுவார். மற்றையோர் வாழ்வு இன்ன தகையது என்று சொல்லுந் தரமுடையதன்று என்க. வாழ்நாள் முழுதுங் கற்றும் உணர்ந்தும் நடந்துந் துய்த் தும் பேரின்பங்கொண் டொழுகுதற்கு உரிய பேரியல்பு வாய்ந்த ஆசிரியரை வழிபாடு செய்யாமலும், அவரது

குறளின்படி நடவாமலும் பிறர்க்கு உரைக்கவும் ஆராய்ச்சி செய்யவும் கற்றுத் தன்னை விற்றுத் தொலைப்பானொருவன் உளனென்றால், அந்தோ அவனுக்காக இரங்குவதன்றி வேறு யாது செயற்பாலது என்க.

## நூலின் பெயர்ப்பொருத்தம்

திருவள்ளுவ மாலைச் செய்யுட்களிற் பெரும்பான்மை யானவை முப்பால் என்றே திருக்குறளுக்குப் பெயர் கூறுகின்றது. அறம், பொருள், காமம் என்ற மூன்று பாற்பட்ட பொருளைக் கூறுவதனால் முப்பால் என்ற பெயர் பொருந்துவதேயாகும். ஆலத்தூர்கிழார் பாடிய (௩௪) புறநானூற்றுப்பாடல் " அறம்பாடிற்றே ஆயிழைகணவ " என்ற அடியில் திருக்குறளுக்கு "அறம்" என்ற பெயர் வழங்கியதனைக் குறிப்பிடுகின்றது. இல்லறம், துறவறம், பொருளறம், காதலறம் ஆகிய அறங்களைக் கூறும் பேரற நூலாக மிளிர்தலின், இஃது "அறம்" என்ற சிறப்புப் பெயர் பெறுதற்கு உரியது. எனினும் கலிப்பாட்டு, பரிபாடல் என்றாற் போன்று பாவாற் பெயர் பெறுதலும் உண்மை யின் " திருக்குறள் " என்று பெயர் பெறுதலும் வழங்கு தலும் நிலைபெறுவதாயிற்று. யாவரும் வியக்குந்தன்மை யாகச் சுருங்கிய குறட்பாவால் விரிந்த பொருள் நலன்களை யெல்லாந் தெளிவுறக் கூறுந்திறன்பற்றியும் நூலமைப் பின் சிறப்புப்பற்றியும் அழகிய குறட்பாவாலாகிய நூல் என்று பொருள்தரும்படி "திருக்குறள்" என்ற பெயர் பெற்றதே சாலவும் பொருந்துவதாயிற்று என்க.

## நூலின் பாகுபாடு

இனி, திருக்குறள் நூலின் பகுப்புமுறையை நோக்கு வோம். உலகின்கண் வாழும் மக்களெல்லாம் இல்லறத்தார் துறவறத்தார் என்ற இரண்டு பிரிவின்கண்ணே அடங்குவர். ஆதலின் ஆசிரியரும் இவ்விருபிரிவினையே மேற்கொண்டு நூல்செய்தார். முதற்கண் எங்கும் நிரம்பிய அறத்தின் இயக்கமாக உள்ள இறைவணக்கம் கூறி அதனையடுத்து

இறைவனது பேரருள்வெள்ளத்தின் உருவாகப் பொழிந்து உலகினையும் உயிர்களையும் உய்விக்கும் மழையின் சிறப்பினையும் கூறினர். மூன்றுவதும் நான்காவதுமாகிய இரு திறங்களையும் நூல் முழுவதையும் பிழிந்து தந்த பிழிவாகக் கொள்ளுவது பொருந்துவதாகும். நீத்தார் பெருமை துறவறவியலின் சாரமாகக் கொள்ளத்தகுஞ் சிறப்பு நிரம்பியது. அறன் வலியுறுத்தல் இல்லறவியலின் சாரமாகக் கொள்ளக்கூடிய சுருக்கம் என்க. அவ்வாறெனின் பின்னர்த் துறவற இயலை அமைத்த முறைப்படி முன்னர் நீத்தார் பெருமையை நான்காவதாகவும அறன்வலியுறுத்தலை மூன்றுவதாகவும் ஏன் வைத்திலரெனின், துறவோரின் பெருமை நோக்கி அறன் வலியுறுத்தற்கு முன்னர் நீத்தார் பெருமையை வைத்தனர் என்க. மேலும் இல்லறவியல் துறவறவியல்களுக்குப் பின்னர் ஊழின் திறத்தை ஒரு முறையாக அமைத்தனர். அதன்பின்னர்த் துறவோராகிய பெரியாரைத் துணைக்கொண்டும கற்றோராகிய அமைச்சரைத் துணைக்கொண்டும் நடாத்துகின்ற பொருட்பாலைக் கூறுகின்றார்.

முதற்கண் இறைவணக்கமும் நூலின் சுருக்கமுமாகிய பாயிர இயலை நான்கு திறமாகவும், இல்லறவியலை இருபது திறமாகவும், துறவறவியலைப் பதின்மூன்று திறமாகவும், ஊழினை ஒரு திறமாகவுங் கூறி அறத்துப்பாலை முடித்தார். இரண்டாவதாகப் பொருட்பாலில்,

> "படை குடி கூழ் அமைச்சு நட்புஅரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு" (௩அக)

என்று தாம் வகுத்துக்கொண்ட முறைமைக்கு ஏற்பப் படைமுதலாகிய ஆறும, அரசு ஒன்றும ஆக ஏழு இயல்களாக வகுத்தார். அரசியலை இருபத்தைந்து திறங்களாகவும், அமைச்சியலைப் பத்துத் திறங்களாகவும், அரணியலை இரண்டு திறங்களாகவும், பொருளியலை ஒரு திறமாகவும், படையியலை இரண்டு திறமாகவும், நட்பியலைப் பதினேழு திறமாகவும், குடியியலைப் பதின்மூன்று திறமாகவும் அமைத்தார். இம்முறைமையைப் பரிமேலழகர் மாற்றி அரசியல்,

அங்கவியல், ஒழிபியல் என்று மூன்றியலாக அமைத்தது பொருந்துவதன்று. மணக்குடவர் நட்பினை எதிர் மறுத்துக் கூறுவதைத் துன்பவியல் என்று கொள்வதும் பொருந்தாது. மேற்கூறிய ஏழு இயல்களாகவே நூலமைக் கப்பெற்றது என்பதை,

> " அரசியல் ஐயைந்து அமைச்சியல் ஈரைந்து
> உருவல் அரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்
> திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்று
> எண்பொருள் ஏழா மிவை " (திருவள்ளுவமாலை : உக)

என்று போக்கியார் கூறுந் திருவள்ளுவமாலைப் பாடலா னுந் தெளிக. இம்முறைமையை மாற்றிக் குடியியலை ஒழி பியல் என்று ஒதுக்கியமை பெருந்தவறு என்க. காமத் துப்பால் களவியல, கற்பியல் என்ற இரு பிரிவு பெற்றது. திருக்குறளின் பெரும் பிரிவுக்குப் பால் என்பது பெயர். அதனால் அது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப் பால் என்று பெயர்பெற்றது. அந்தப்பாலின் உட்பிரிவு இயல் என்ற பெயர் பெற்றமையுஞ் சாலப் பொருந்துவதே. ஆனால், ஒவ்வோருட்பிரிவுக்கும் "அதிகாரம்" என்று பெயர் கூறுவது பொருந்துவதன்று. பத்துக்குறள் அடங் கிய ஒரு சிறு பிரிவுகு "அதிகாரம்" என்ற வடசொல்லைத் தலைபபாக அமைத்தது பெருந்தவறு என்க. "திறம்" என்ற சொல்லால் வழங்குதற்கு உரியபிரிவு அஃது என்க. திறம் அல்லது முறை எனினும இழுக்காது. திருக்குறள் நூல் 133 திறம் உடையது என்க. தொல்காப்பியம் முத லிய இலக்கண நூல்களுக்கும், திருக்குறள் முதலிய நூல் களுக்கும் உரையெழுதப் புகுந்தார் செய்த தவற்றினால் "அதிகாரம்" என்ற சொல் வந்து பொருந்தாவகையாகப் புகுந்துகொண்டு அதிகாரஞ் செய்கின்றது என்க. இனி மேல் வருந் திருக்குறட் பதிப்புக்களில் "அதிகாரம்" என் னுஞ் சொல் களையப்பெற்று "திறம்" என்ற சொல் அமைக்கப் பெறுமெனின் அது சாலவும் பொருந்துவ துடன் தமிழ் மரபு காத்ததாகவும் அமையுமென்க. தமி ழிலிருந்து படைத்துக்கொள்ளப்பட்ட வடமொழியானது

தமிழ்மொழியைப் பதின்மூன்று கூறுகப் பிரித்துச் சிதைத்துத் தொலைத்த உண்மையறிய வல்லார்க்குப் பிற மொழிச் சொற்களைக் கலந்து எழுதுந் தீங்கு புலனுகாமற் போகாது என்க.

## செய்யுள்வகை

பாக்களில் முதன்மையான வெண்பாவினுள்ளும் சீர்சால் குறள்வெண்பாவினுல் இயற்றப்பெற்றது திருக்குறள். இஃது ஆசிரியர் தாமே வகுத்துக்கொண்ட ஒரு நெறி. இவர்க்கு முன்னர் எவரும் இத்தகைய முறையைக் கையாண்டு நூல் செய்ததாகத் தெரியவரவில்லை. இவர்க்குப் பின்னர், இவரைப பினபற்றித திருவருட்பயன் முதலிய நூற்கள் தோன்றின. ஆதலால், இது திருவள்ளுவருக்கே உரிய பெருஞ் சிறப்பு என்க. ஈரடிக்குறளால் இவர் செய்த வியக்கத்தக்க மாட்சிமையான செயல் உள்ளுந் தோறும் உள்ளத்தை உருக்கவல்லது. இற்றைஞான்று சிலர் கூறுவர், ஆசிரியர் ஒரு பொருளைப்பற்றிப் பத்துப் பாக்களினுல் கூறல்வேண்டுமென்ற வரையறை வைத்துக் கொண்டுள்ளனரே! பத்துப்பாக்களில் ஒரு பொருளின் திறம் முழுதும் கூற இயலுமா என்னும் அன்னவர் நட்பினைப்பற்றி ஆசிரியர் பல திறங்களால் விரித்துக் கூறிய முறையையும், கல்வியைப்பற்றிக் கல்வி, கல்லாமை, கேள்வி அறிவுடைமை என்று நான்கு கூறுகப்பிரித்து உணர்த்தியருளிய முறைமையையுந் தெளிந்து கொண்டு அமைவாராக.

எல்லாவகை இலக்கணத்திற்கும் திருக்குறளைப் போன்று எடுத்துக்காட்டத்தக்க சிறந்த நூல் மிகுதியும் இல்லை என்க. எழுத்து, அசை, சீர், அடி, சொல், பொருள், யாப்பு, வனப்பு, அணி, வண்ணம் ஆகிய இவற்றிற்கு எடுத்துக்காட்டாகப் பல புலவர்களும் பன்னெடுங்காலங்களாகச் செய்த எல்லாவகைப் பாவின மேற்கோள்களின் திறங்களெல்லாம் இவரது திருக்குறள் வெண்பாக்களிலே சிறப்பாகவுந் தெளிவாகவும் அமைந்து விளங்குகின்றன,

"எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ணம்—இழுக்கின்றி

என்றெவர் செய்தன எல்லாம் இயம்பின
இன்றிவர் இன்குறள்வெண் பா"
(திருவள்ளுவமாலை : ௬௫)

என்று புலவர் நச்சுமனார் கூறுந் திறத்தாலே திருக்குறளின் இலக்கணச் சிறப்பினைப் பொதுவகையாக அறியலாம். சிறப்பு வகையாக எடுத்து எழுதப்புகின் விரிவுறுமென்க. இனி அறத்தை நோக்குவோம்.

## அறம்

அறம் என்பது இறைவனின் உயரிய பண்பு; அறமெனபதுவே இறைவனின் உருவம்; அறத்தினது இயக்கமே இறைவனது இயக்கம; அறததின் வடிவொடுகூடிய அழகிய தன்மையே இறைவனின் அந்தண்மையாகும். "அறவாழி அந்தணன்" என்பது காண்க. ஆழி என்பது உருளையைக் குறித்து உருளையின் ஓட்டத்திற்கு ஆகுபெயராயிற்றென்க. எனவே, இயவுளாகிய இறைவனின் இயக்கமாக இயங்குவது அறம்.

## அறம் என்பது இயல்பு

அறமென்பது இயல்பு என்க. இறைவனின் இயல்பு அறம்; உயிர்களின் இயல்பு அறம்; மனத்தின் இயல்பு அறம். அங்ஙனம் அறமென்பது இயல்பான பண்பாக இருக்கின்ற காரணத்தினாலே தான் உலகில் உள்ள எவரும் அறநெறியை விரும்பிப் பேசுதலும், அறநெறியில் நடப்போரைப் பேணி மொழிதலும், நடவாதாரை வெறுத்து மொழிதலும் செய்கின்றனர் என்க.

"இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாருள் எல்லாந் தலை" (௪௭)

என்ற இடத்தில், 'இயல்பு' என்பது 'அறம்' என்ற பொருள் பயந்து நிற்றல் காண்க. மாசற்ற இயல்புதான் அறம் என்பது தெளிக. அங்ஙனந் தெளியாது, "வரையறைகள் தானே அறம்; இன்னவாறு மக்கள் இயங்கக்கட

வர்; இன்னன செய்தற்கு உரியர்; இன்னன தவிர்தற்கு உரியர் என்று வரையறுக்கப்பட்டவைகள்தாமே அறம்; அறு + அம் என்பதுதானே அறம்." என்ற வினா எழுப்புதலும் பொருததமேயாகும். ஆம். வரையறுக்கப்பட்டவைகள்தாம் அறம்; இயல்பாகஉளள உயரிய பண்பாகிய—உயரிய செயலாகிய அவைகள்தாம அறம் உண்மையாகவும் இயல்பாகவும் நிரமபிக்கிடக்கின்ற உயரிய பண்பினையும் உயரிய செயலினையும் எல்லோருந் தெளிநது உய்வதன்பொருட்டுப் பரந்துபட்டுக் கிடக்கும் பண்பு நலன்களையுஞ் செயல் நலன்களையுந் தொகுத்து வரையறுத்து அறம் என்ற பெயரோடு உணர்ததினர் மேலோர் என்பது உணர்ந்து மகிழ்வதற்கு உரியது. உலகின்கண்ணுள்ள மண் முதலிய ஒவ்வொரு பொருளின்கண்ணும் அறம் இயல்பாக அமைந்து கிடக்கின்றது என்பது உணர்வதற்கு உரியது. அறம் என்ற சொல்லானது வரையறுக்கப்பெற்றவை—வரையறை—வரையறம்—அறம என்ற பொருள் பயந்து செயற்கைச் சொல்லாக இருப்பதுகொண்டு அச்சொல்லால் உணர்த்தப்பெறும் அறப்பண்பும, அறச்செயலுமாகிய அவைகளும் செயற்கை என்று கருதுதல் தவறு. செயற்கைபோற் காணப்படினும் அறம் என்பது இயற்கையே என்பது தெளிதற்கு உரியது. மக்கள மயக்க உணர்வினல்—இயல்பாகவே உயிருக்கும மனத்திற்கும் அமைந்து கிடக்கின்ற மருட்கை உணர்வினல் இயல்புக்கு—அறத்திற்கு மாறுபட்ட எண்ணமுஞ் சொல்லும் செயலும உடையராகக் காணப்படினும் மருட்கை உணர்வு மாறித் தெளிவு எய்திய இயல்பான வேளைகளில் அவர்களுடைய நெஞ்சம அவர்கள் செய்த தவற்றிற்காக அவர்களைச் சுடு வதை உணர்வதாலும் அறம் இயல்பு என்பது தெளியப்படும்.

> "தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
> தன்னெஞ்சே தன்னைச் சுடும்" (உகஉ)

நெஞ்சமும் அறத்தின் இயல்பு உடையது என்பதனை உணர்த்துதல் காண்க.

### அறம் செயற்கை என்பவனது உரை வெற்றுரை

இங்ஙனம் அறம் இயல்பு என்பதனை ஓராது, "மன் பதை ஒழுங்காக இயங்குதற்பொருட்டு மக்களாலே வரை யறுத்துக்கொள்ளப்பட்டதுதானே அறம். ஒழுக்கமென் பதெல்லாம் மக்கள் தாமாக அமைத்துக்கொண்டவை தாமே; ஆதலால் எங்ஙனம் நடந்தாலென்ன? எங்ஙனம் மொழிந்தாலென்ன? எங்ஙனம் நினைந்தாலென்ன?' என்று அறனழித்துப்பேசுவோர் பண்டும் இல்லாமலில்லை இங்ஙனம் இயல்பழித்துப் பேசுவோர் செயலைக் கருதி தான் ஆசிரியர்,

> "அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
> புறனழீஇப் பொய்த்து நகை" (கஅஉ

அறனழித்துப் பேசுவோரைத் தீது செய்யுங் குழுவிற் சேர்த்து அவர்க்கு அது செய்யற்க என்று அறிவுறுத்தி ஞர். அறனழித்துப் பேசுபவன் தான் குற்றஞ்செய்ய அறநெறியல்லாத பிறநெறிகளிற் சென்று மருட்கை உண விஞல் தீவினை புரிய விரும்புகின்ருன் என்பதை அவ வாய்மொழியினுல் அறியலாம். அங்ஙனம் அறனழித்து பேசுபவனும் பிறர் தமக்கு இன்னனிழைத்த இடத்த "இது அறமுகுமா? ஏனிந்தக் கொடுமை புரிகின்றீர்கள்?' என்று அலறுகின்ருன். அங்ஙனம் அறனழித்துப் பேசு வனும் தனக்கு அரணுக அறத்தினையே தேடுகிருன். அ னது மனமும் உயிரும் இயல்பாகத் தெளிவுடைய வேனை யில் அறவியல்பு உடையனவாக இருத்தலை உணரலாம் எனவே அறனழித்து மொழிவோனும் மயக்க உணர்வின் வயத்தனுக அங்ஙனம் மொழிகின்ருனேயன்றித் தெளி வுடையவனுக மொழிகின்ருனென்று கொள்ளுதல் குற்றம் அறனழித்து மொழிவோன் பிறரைப் பொறுத்தவரையி அங்ஙனம் கூறுகின்ருனேயன்றித் தனக்குப் பிறர் அறனல் லாதனசெய்வதை ஒப்புக்கொள்ளாதனின் அவன்மொழி வதும் வெற்றுரையென்றே கருதப்படும் என்க.

"இயல்பலாதன செயேல்" என்ற இடத்து இயல்பு அறம் என்பதைக் குறிப்பிடுகின்றது. இயல்புக்கு மாறு

னதே மறம். அறத்திற்கு எதிர் மொழியாகிய மறம் இயல் பல்லாதது என்று பொருள்படுதல் காண்க.

## அறவாழ்வே வாழ்வு

அறநெறியில் வாழ்கின்றவனே உண்மையாக வாழ்கின்றவன். அவன் அஞ்சி அஞ்சிச் சாகின்ற அச்சத்திற்கு ஆளாகமாட்டான். அவனுக்கு உள்ளம் தூயதாகும்; உடல் தூயதாகும்; செயல் தூயதாகும். அவனுக்கு நோய் வருவது பெரும்பாலுமில்லை. அவன் மனைவி மக்கள் முதலிய எல்லோரும் அவன்பாற் கெழுமிய அன்புடையராக இருப்பர். அவர்களுக்கும் நோய் வருதல் இல்லை. அறநெறியில் வாழ்கின்ற மாசில்லாத ஒருவனை நினைத்தாலும் உள்ளம் மகிழ்கின்றது. கண்டால் கழிபேருவகை பூக்கின்றது. இழுக்கலுடைய இடத்தில் ஊன்றுகோல் உதவுவதுபோன்று அறங்கிடந்த நெஞ்சுடையான் கூறும் மொழியும் ஊன்றுகோலாக உதவிக் காக்கின்றது. அவன் அறிவது அறிந்து அடங்கி நடக்கின்றான்; செய்தற்கு உரிய செயல்களை உலகம் உவக்கும்வண்ணம் செய்கின்றான். பழி பாவங்கள் வாராதவாறு அஞ்சவேண்டுவனவற்றிற்கு அஞ்சி ஒழுககத்துடன் நடக்கின்றான். தன் முயற்சியாற் கிடைக்கின்ற பொருளைத் துய்த்தது அதனால் இன்புற்றுவாழ்கின்றான். அத்தகைய இன்பமே இன்பம்.

## அறம் நூலுக்குள் அடங்குவதரிது

இவ்வாறு எல்லாவகையானும் தன்னை யொப்பது எதுவுமின்றித் தானே உயர்ந்ததாகிய அறத்தின் இயல்பினைக் கூறப் புகுவார்க்கு விதிகளும் விதிவிலக்கும் ஆகியவைகளை அமைக்கும்பொழுது ஏற்படும் இடர்ப்பாடுகள் பல. அறம் முதலிய பொருட்கள் கூறுபவரின் பாடலில் அல்லது உரைநடையில் ஆனமல் பரந்து விலகிக்கொண்டே ஓடிக்கொண்டிருந்தன. எவரது பாடலிலும் அமையாமல் ஒழுகி ஓடிக்கொண்டிருந்த அறம் முதலிய பொருள்கள் ஆசிரியர் திருவள்ளுவர் அமைத்த சிறிய குறள்வெண்பாக்

களின் வரம்பினைக்கடவாமல் அவற்றின்கண்ணே கட்டுற்று நின்று மிளிரத் தொடங்கின. அறநூல் செய்தவர்களில் திருவள்ளுவரைப் போன்று எல்லா அறங்களையும் எஞ்சாமல் முழுதுற விரித்துப் புகழ்பெற்ற ஆசிரியர் வேறு எவருமிலர்.

இனி அறத்தின் இலக்கணத்தை நோக்குவோம். அறத்தினை உள்ளம், உரை, செயல் என்ற மூன்று வகையானும் மேற்கொண்டொழுகுதல் வேண்டும். உள்ளத்தகுவன இவை தகாதன இவை என்றும், உரைக்கத்தக்கன இவை தகாதன இவை என்றும், செய்யத்தக்கன இவை தகாதன இவை என்றும் வரையறைசெய்து கூறுந்திறன் நுண்ணிதின் உணர்ந்து மகிழ்வதற்கு உரியது. இங்ஙனம் மூன்றுவகையாக வகுத்து அவற்றைப் பண்பு வகையாகவும் செயல்வகையாகவுங் கூறுந்திறன் வியத்தற்கு உரியது.

அறத்துப்பாலிற் கூறப்படும் அறங்களை மேற்கொண்டொழுகுபவரே ஏனைப்பாலிற் கூறப்படுபவருமாதலால் அறத்துப்பாலிற் கூறிய அளவில் அறம் அமையவில்லை. அது விரிந்து செல்கின்றது. குடிமை முதலிய பதின்மூன்று திறங்களாகப் பிரித்துக் கூறப்பெறுங் குடியியலும் அறத்துப்பாலொடு இணைத்து நோக்குதற்கு உரியது நட்பிற்கு எதிர் பண்பாகித் தள்ளத்தக்கனவாக உள்ள பன்னிரண்டு திறங்களும் அறத்துப்பாலொடு இணைத்து நோக்குதற்கு உரியன.

முழுமணி மாணிக்கத்தால் இயன்ற ஒரு மாலையின் கண் முழுதும் ஒளி ததும்பி நிற்பதுபோன்று ஆயிரத்து முந்நூற்று முப்பது தெளி மணி மாணிக்கக் குறள்கள் எல்லாவற்றின்கண்ணும் அறம் என்கின்ற தூய தெய்வ ஒளி பத்தி பாய்ந்து மிளிர்வதை நோக்குங்கால் திருக்குறளாகிய தெளிந்த ஞாயிற்றின் முழு வடிவமும் அறமே என்று கூறுதல் பொருந்தும். இதனை நோக்கியே இந்நூலுக்கு "அறம்" என்ற ஒப்பற்ற சிறப்புப் பெயரை அமைத்து முன்னோர் வழங்கியமை ஆலத்தூர் கிழார்

பாடிய (௯௪) புறநானூற்றுப் பாடலால் தெரிய வரு கின்றது.

அறமானது அறத்துப்பாலளவில் ஆனது ஏனைப் பொருட்பால் இன்பப்பாலின்கண்ணுஞ் சென்று நிரம்பி ஒளிர்ந்து முற்றுப் பெறுதல் நோக்கியே,

> "ஆனு அறம் முதலா அந்நான்கும்—ஏனோர்க்கு
> ஊழின் உரைத்தார்." (திருவள்ளுவமாலை : எ)

என்று ஆசிரியர் நக்கீரனார் சிறப்பித்தனர் என்க "ஏனை மொழி யாசிரியர்களும் ஏனைய நூலாசிரியர்களும் அறம் முதலியவற்றை முழுதும் உணராராய், முறைப்படுத்துக் கூற அறியாராய்த் திணறி மலைத்து ஆங்கொன்றும் ஈங் கொன்றுமாக எழுதிப் பார்த்துக் கைவிட்டனராக, ஆசிரி யர் திருவள்ளுவர் ஒருவரே தாமாகவே முழுதும் உணர்ந்து அதனைத் தண்ணிய தமிழின் இனிய வெள்ளைக் குறட் பாவால் ஏனோரெல்லாம் உணரும் வகையாக முறைப்படுத்தி உரைத்தார் அங்ஙனம் உரைத்த ஆசிரியர்க்கும் தெளிந்த ஒளியுள்ள மழைநீரைப் பொழிந்த முகிலுக்கும் அவராலும் அந்த மழையாலும் வாழ்கின்ற உலகம் என்ன கைம்மாறு செய்யவல்லது" என்று கூறி இந்த உலகம் முழுதும் உய்ய அருநூல் செய்த ஆசிரியருக்கு உலகம் கைம்மாறு செய்ய வும் ஆற்றலில்லாமற் கையை விரித்து உதறிவிட்டுக் கைகுவித்து (ஆசிரியர் திருவள்ளுவரை) வணங்குந் தன் மையை நக்கீரர் நன்கு அருளிச் செய்தனர் என்க.

> "தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
> ஆனு அறமுதலா அந்நான்கும்—ஏனோர்க்கு
> ஊழின் உரைத்தார்க்கும் ஒண்ணீர் முகிலுக்கும்
> வாழி உலகென்னாற்றும் மற்று." (திருவள்ளுவமாலை : எ)

என்ற வெண்பாவைக் கூறிய நக்கீரரின் கை இந்தப் பாட லைக் கூறும்போது தாமே விரிந்து குவிந்திருக்கு மென்ப திற் சிறிதும் தடையில்லை.

## அடிப்படை அறம்

எல்லா நலங்களும் மனத்தை அடிப்படையாகக் கொண்டு வளர்கின்ற காரணத்தினாலே ஆசிரியர் முதற்கண் 'மனத்தூய்மை வேண்டு' மென்கின்றார்.

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற." (௩௪)

என்று கூறி மனத்தால் அறஞ் செய்யுந் தன்மையை முதலில் வற்புறுத்துகின்றார். செயலாற் செய்யும் அறங்கள் எத்தனையோ பலவாக விரிந்து செல்லும். ஆனால் மனத்தாற் செய்யும் அறங்கள் எத்தனையோ பலவாக விரிந்து செல்லும். ஆனால் மனத்தாற் செய்யும் அறத்தை ஒன்றே ஒன்றாக முடிதது்க்கொள்ளலாம். அதுதான் மனத்தில் மாசில்லாதவனாகுதல். அவ்வாறு ஆகுதல் பின்னர்ச் செய்யப்படும் எல்லா அறத்திற்கும் அடிப்படை யாதலால் அனைத்து அறன் என்பதற்கு "எல்லா அறமுமாம்" என்று பொருள் கொள்ளுதல் மிகவும் பொருந்தும். மனம் மாசில்லாத இயல்பினை அடைதலே அதற்கு எல்லா அறமுமாகும். ஆதலின் அங்ஙனம் நோக்கும்போதும் பொருந்துவதேயாகும். மணக்குடவர் அனைத்து அறன் என்பதற்கு எல்லா அறமுமாம் என்று பொருள் கூறினார். பரிமேலழகர் "மனத்ின்கட் குற்றமுடைய னல்லனாக; அவ்வளவே அறமாவது" என்று கூறினார். "ஆகுல நீர" என்பதற்குத் தெளிவான பொருளை எவரும் வரைந்திலர். அதனைத் தெளிவுறுத்திப் பின்னர் மற்றவற்றைக் கூறுவேன். ஆகுதல் உலத்தல் என்ற இரண்டு சொற்களும் 'தல்' என்ற ஈறு கெட்டு "ஆகுல" என்று புணர்ந்தன. ஆகுதல் என்பது வளர்தல். உலத்தல் என்பது அழிதல். ஆகுல நீர என்பது வளர்ச்சியை அழிக்கின்ற தன்மையன, ஆக்கத்தை அழிக்கின்ற தன்மையன என்று பொருள் தருதல் காண்க. வேரின்கட் கெடுதலுள்ள மரத்தின் வளர்ச்சி அதனை அடியொடு சாய்ப்பது போன்று மனத்தின்கண் மாசொடு செய்யும் அறமும் அறத்தின் பயனை வழங்குதலின்றி அவனது ஆக்கத்தை அழிப்பதாகவே முடியும் என்க,

'ஆகூழ்' 'போகூழ்' என்ற இடத்து ஆகுஊழ், போகு ஊழ் என்று பிரித்துப் பொருள் கொள்வது போன்று ஈங்கும் பிரித்துக் கொள்க. "பெயலாற்று நீருலந்த" என்ற குறளில் "நீருலந்த" என்று வருதலும் ஈங்கே நினைத்தற்கு உரியது. நீருலந்த என்பது போன்று "ஆகு உல (ந்த)" என்று பிரித்துக் கொள்க. எனவே மனத்தின் கட் குற்றமில்லாதவனுதலே சிறந்த அறம்; அவ்வாறன்றி மனத்திற் குற்றம் வைத்துக்கொண்டு வெளியே கூறும் அறச் சொல்லும் செயலும் ஆக்கத்தை அழிக்குந் தன்மை யனவே என்க. மனத்திற் குற்றத்துடன் செய்யும் அறம் அறப் பயனைப் பயவாது ஆதலின் அதனுற் பொருட்கேடு அப்பொழுது விளைவதுடனன்றி மேலும் மனமும் பொரு ளும் அறமும் வளர்தலின்றி முற்றும் அழியுமாதலின், "ஆக்கம் அழிக்கின்ற தன்மையன," என்று அச்சுறுத்து கின்றார்.

## அறத்தின்கண் வேட்கை பிறப்பித்தல்

நூல் முழுதும் நிரமபிக்கிடக்கின்ற அறத்தின் சார மாக முதற்கண் அறன் வலியுறுத்தல் என்ற திறத்தில் பத்துக் குறள் கூறும் ஆசிரியர் மக்களுக்கு அறத்தின்கண் வேட்கை பிறக்கும் பொருட்டு அறந்தரும் பயனை எடுத்து முதலில் மொழியத் தொடங்கி,

"சிறப்பீனுஞ் செல்வமும் ஈனும் அறத்ினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு." (௩௧)

என்கிறார். மக்கள் பல்வேறு சிறப்பினையும் செல்வத்தையும் விரும்பிப் பல செயல்களைச் செய்கின்றனர். சிறப்புஞ் செல்வமும் பெறும் பொருட்டுப் பொருந்தாச் செயல்கள் செய்ய முனைவாரும் உளர். ஆனல் சிறப்பினையும் செல் வத்தையும் ஈன்று தரவல்ல அழகிய காதலியாக அறம் இருக்கின்றது. சிறப்பு என்னுங் குழந்தையையும், செல் வம் என்னுங் குழந்தையையும் பெற்று மகிழ்ந்து இன்புற விரும்புபவர் முதலில் அறம் என்கின்ற பேரெழில் நங்கை யைக் காதலித்து அவளொடு கூடி இன்புறுவாராயின் அங்

ரம் இன்புற்றதன் பயனாக அறம் என்ற காதலில் சிறப்பு, செல்வம் என்ற குழந்தைகளை ஈன்று மகிழச் செய்வாள். ஈனும் என்ற மரபுச் சொல்லால் இங்ஙனம் பொருள் கொள்ள வைத்த நுட்பம் உணர்ந்தின்புறற்கு உரியது என்க. "தகவு என்னும் அரிவையைத் தழுவி" என்று பட்டினத்துப் பிள்ளையார் கூறுதலுங் காண்க.

சிறப்பும் செல்வமும் ஆகிய இரண்டும் இந்த உலகிலேயே பெற்றுத் திகழ்வதற்கு யாதொரு ஐயப்பாடும் இல்லை என்பது உணர்த்துவதற்கு, "அறத்தின் ஊங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு" என்று அருளினர். அறத்தைப்போல இவ்வுலகினுள் ஆக்கம வேறு யாது உளது மக்கள் உயிர்க்கு என்பது பொருள். இம்மைச் செய்தது மறுமைக்குத்தான் உதவும் என்று கருதிச் செய்யாது விடுதல் வேண்டாம். இம்மையிலேயே ஆக்கம் தரும் என்றார். ஊங்கு—இவ்வுலகத்தில், அங்கு, இங்கு, உங்கு என்ற சுட்டுச் சொற்கள் ஆங்கு, ஈங்கு, ஊங்கு என்று நீண்டு வருதல் காண்க. உங்கு என்ற சொல்லே ஊங்கு என்று நீண்டு வந்தது. இவ்வுலகத்தினிடத்து என்று பொருள் பயந்து நிற்றல் தெளிக. அப்பக்கம் இப்பக்கம் உப்பக்கம் என்ற சொற்களில், உப்பக்கம் என்ற சொல்லை "ஊழையும் உப்பக்கங் காண்பர்" என்ற இடத்தில் ஆசிரியர் அமைத்தார். ஊழ்வினையையும் துளைத்து அதன் உள்ளிடத்தையுங் காண்பர் என்பதுவே பொருள். ஊங்கு என்பதற்கு மேற்பட, மிக்க என்று மற்றையோர் பொருள் கூறினர். அது அறப் பயனை இங்கேயே அடையலாம் என்ற கருத்தை வலியுறுத்தாது விடுவதுடன் அறத்தைப்போல என்று பொருள் விரித்தற்குப் பொருந்திய உவமையையும் மறைத்துவிட்டது காண்க.

இவ்வாறு அறமென்னும் பேரெழில் வாய்ந்த நங்கையை முதற்கண் கொண்டுவந்து நிறுத்தி இவளை மணந்து கொள்பவர்களுக்கு இவள் தன் தாயகச் செல்வமாகிய எல்லாச் செல்வங்களையும் வழங்குவாள் என்று கூறிய நயம் நோக்குக. பெருஞ் செல்வமும் பெருஞ் சிறப்

புந்தரவல்ல நங்கையை மணக்க விரும்புவார்கள். ஆனால் அறமாகிய நங்கையைப் போன்று ஆக்கந் தரவல்ல பெண் வேறு ஒருத்தியும் இல்லை என்ற குறிப்பும் உணர்க. காமத் துப்பாலின் முதற்கண்,

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு." (௧0௮௧)

என்று கூறி ஒரு பெண்ணினைக் கொண்டு வந்து நிறுத்து வது போன்று ஈங்கும் அறம் என்ற நங்கையைக் கொண்டு வந்து நிறுத்தியமை காண்க.

முதற்கண் அறத்தினகண் வேட்கையைப் பிறப்பித் தார். அது செல்வமும் சிறப்புந் தரும்; அதனைக் காட்டிலும் ஆக்கம் எதுவும் இவ் வுலகினுள் இல்லை என்றார். ஆனால் சிலர் சிறப்பும் வேண்டாம் செல்வமும் வேண்டாம் என்று சோம்பியிருந்து விடவுங்கூடும்; அவ்வாறு சோம்பியிருந்து விடுவதனால் சிறப்பும் செல்வமும் கிட்டாமற் போய்விடுவது மட்டுமல்லாமல் வேறு ஒரு கேடு காத்துக்கொண்டு நிற் கின்றது. ஆதலால் அறத்தை மறத்தலும் கூடாது. அதனை மறத்தலைப் போன்று கேடு வேறு இல்லை என்று கூறி மறவா வண்ணம் அறத்திறன் புரிக என்று நெறிப்படுத்தினார்.

## பொருந்தும் வகையாக அறஞ்செய்தல்

இவ்வாறு அறஞ்செய்யாவழிக் கேடுவருதல் நோக்கி அறஞ்செய்யத் தொடங்குபவர்களும அறத்தினைப் பொருந் தமான வகையாகச் செய்யவேண்டு மென்கின்றார்.

"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்." (௩௩)

ஒல்லும் வகையால்—பொருந்தும் வகையால் என்க. இன்ன அறத்தை இந்த வகையிற் செய்தல் பொருந்து மென அறிந்து செய்யாவழி அறச்செய்கை பயனுடைய தாகாமற் போவதுடன் தன் பொருட்குக் கேடும் அதனைப் பெற்றானுக்குச் சோம்பலும் வஞ்சமும் உண்டாக்கி விடு மாதலின், "ஒல்லும் வகையான் அறவினை" செய்க என்றார்.

" நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டு அவரவர்
பண்பறிந்து ஆற்றாக் கடை." (சசுக)

என்பதுங் காண்க. அதனையும் ஒரு காலத்திற் செய்து பின்னர்ச் செய்யாது விட்டால் அதனாற் கடமைகள் பலவுந் தவறி மெலிந்த சோம்பலிற் கொண்டு சேர்க்குமாதலின் இடைவிடாது உள்ளத்தாலும் உரையாலும் செயலாலும் அறஞ்செய்தல் வேண்டுமென்பதற்கு "ஓவாது" அறவினை செய்க என்றார். ஓவாது செய்தல் மனத்தாலும் சொல்லாலும் இடையீடின்றிப் பொருந்தும் வகையாக அறச்செயல்கள் செய்தல். தனக்குப் பொருளளவு மிக்குச் செல்வாக்கு நிரம்பவும் உளதாயிற்றெனின் தன்னால் இயன்ற அளவு (செல்லும் வாய்-தன்னால் இயன்ற அளவு) பெரிதாக அறததைச் செய்க; எல்லா அறமுஞ் செய்க என்ற திறன் பாராட்டுதற்கு உரியது. பொருந்தும் வகையாகவும் இயன்ற அளவாகவும உள்ளத்தாலும் உரையாலும் செயலாலும் அறத்தை இடையீடின்றிச் செய்க என்று தெளிவுறுத்தினார்.

## மனநலம்

இவ்வாறு பொருந்தும் வகையாக அறஞ்செய்வது எவ்வாறெறன எழுந்த வினாவிற்கு விடையாக மனத்தின்கண் மாசில்லாதவனாக ஆதல் மனத்திற்கு எல்லா அறமுமாம். மனத்தின்கண் மாசுபடிந்த இயல்புடன் செய்யும் அறம் அறமாகாது அது ஆக்கத்தை உலக்கச் செய்கின்ற கேடு கெட்ட செயல் என்பதனை விளக்கினாரென்பது முன்பே கூறப்பெற்றது. அத்தகைய மனந் தூயதாவது எவ்வாறு? மனமாசு என்பது யாது என்ற கேள்வி எழுமன்றோ? அதனால் மனத்திற்கு உளதாய மாசு இதுவென்று கூறத் தொடங்குகின்றார். மனம் ஒழுங்காக அமைய வேண்டு மென்பதற்காக ஆங்காங்கு மனவியல்புகளைக் கூறிச் செல்லுந் திறத்தை ஈங்கே தொகுத்துக்காண்பது நலம் பயப்பது ஆதலின் அதனை நோக்குவோம்.

" மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர்." (உஎஅ)

" மனத்தானும் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தானும்
இன்னானெனப் படுஞ் சொல்." (சடுங)

" மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறற்பாற் றன்று." (அஉஙு)

" பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது." (அஉங)

" இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம் போல மாறுபடும்." (அஉஉ)

" மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்துளது ஆகும் அறிவு." (சடுச)

" மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்." (சடுடு)

" மனந்தூயார்க்கு எச்சம் நன்றாகும் இனந்தூயார்க்கு
இல்லைநன் றாகா வினை." (சடுசு)

" மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும்." (சடுஎ)

" மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து." (சடுஅ)

" மனநலத்தி னாகும் மறுமை மற்றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து." (சடுகூ)

" மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை." (உகடு)

" மனமாணா உட்பகை தோன்றின் இனமாணா
ஏதம் பலவுந் தரும்." (அஅச)

" எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை." (கஎ)

என்றெல்லாம் ஆசிரியர் பல இடத்தில் வற்புறுத்திக் கூறு தற்குக் காரணம் மனத்தூய்மை அடிப்படை அறம் என்பது தெளிவாகப் புலப்படுத்துதற்கே என்க. மேற்காட்டிய வற்றுள்,

"மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்"

"மனநலத்தி னாகும் மறுமை"

என்று கூறியவற்றின் சிறப்பினையும் நோக்குக.

## மனத்தாற் செய்வன தவிர்வன

இல்லறத்தினர்க்கு மனத்தால் செய்வனவுந் தவிர்வனவு மாகிய அறங்கள் பலவகையாகக் கிளைத்துப் பிரிகின்றன. அவற்றுள் அன்புடைமை, நன்றியுணர்வு, நடுவுநிலைமை, அடக்கமுடைமை, பொறையுடைமை, தீவினையச்சம் முதலி யன மனம் தன்பால் வளர்த்துக்கொள்ளுதற்குஞ் செயற் படுத்தற்கும் உரியன. அழுக்காறு, வெஃகுதல், பேதைமை, புல்லறிவாண்மை, இகல் முதலியன மனத்தால் தவிர்தற்கு உரியன. எனினும் இவற்றுட் கொடியனவாய் அழித்துக் கெடுக்கும் பண்புகளை ஆராய்ந்து,

"அழுக்காறு அவாவெகுளி இன்னாசொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்." (௩௫)

என்கின்றார். பிறருடைமை கண்ட அந் நொடியிலேயே திகீரென்று கலக்கி அழுங்கச் செய்து அறுக்கும் பொல்லாத கொடும்பாவியாகிய அழுக்காற்றை முதற்கண் வைத்தும், அழுக்காறுற்றுப் பின்னர் அவ்வுடைமையினை அவாவுகின்ற அவாவினை இரண்டாவது வைத்தும், அவாவிய பொருள் கிட்டாதவிடத்துச் சட்டென எழுகின்ற வெகுளியை அவாவினை அடுத்து மூன்றாவதாக வைத்தும் அவ் வெகுளி காரணமாகப் பிறக்கின்ற இன்னாச் சொல்லை நான்காவதாக வைத்தும் கூறினார். இந் நான்கனுள் அழுக்காறாமை, இன்னாச்சொல் இரண்டும் இல்லறவியலில் விரிதது இரண்டு திறமாகக் கூறப்பெறும். அப்போது "இனியவை கூறல்" என்ற திறத்தினால் இன்னாச்சொல்லைக் கடிந்து விலக்கிய வாறு காண்க. அவாவும் வெகுளியுமாகிய இரண்டும் துற வறத்தாரை நோக்கிக் கூறப்பெற்றன. ஆங்கே அவா அறுத்தல், வெகுளாமை என்று இருதிறங்கள் கூறப்படுதல் காண்க.

இவ் வாற்றாலும் அறன் வலியுறுத்தல் என்ற 'திறம்' ஏனைய மூன்று பால்களின் சாரமாக இலங்குகின்றமை காண்க. இத்தகைய மனமாசு துடைத்துத் தூயனாக அறஞ் செய்க என்றார். இவ்வாறு செய்யும் அறத்தினால் விளையும் பயன் யாது என்ற வினாவிற்கு விடையாக அடுத்த குறளில்,

> " அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
> பொன்றுங்கால் பொன்றாத் துணை." (௩௬)

என்கின்றார். யாம் இதுபோது இளமைப் பருவத்தினை யுடையராக இருக்கின்றோமாதலின் முதுமை வந்த அன்றைக்குச் செய்துகொள்ளலாம் என்று கருதாது அறத்தினை நாடோறுஞ் செய்க; அவ்வாறு செய்யும் அறம் இந்த உடலம் அழியுங் காலத்துத் தானும் அழியாது உயிரொடு தொடர்ந்து துணையாகும் என்றார் பொன்றுங்கால் என்பதற்குச் சாக்காடு வருங்காலத்துப் பொன்றவிடாமல் துணையாய்க் காத்து உதவுமென்றும் பொருள் கொள்ளலாம். முதுமை வந்தெய்துமுன்பு ஏதேனும் இடையூற்றினாற் சாவுவர நேருமாயின் அதனைத் தடைசெய்யுந் திறனுடையது "அறம்" ஆதலால் விரைந்து இளமையிலேயே செய்க என்றார்.

மேலும் அவ்வாறு அறஞ்செய்தற்கு உரிய அறநெறியானது சிறந்தாருக்கும் ஏனையோருக்கும் பொதுவாகி இலங்குவது. அறநெறி ஒருவர்க்கு ஒருவாறும் மற்றவர்க்கு வேறு ஒருவாறுமாக அமைந்திலது என்கின்றார். சிவிகை சுமப்பானொருவன்; அதன் மேலிருந்து செலுத்துவானொருவன். இவ் விருவர்க்கும் செல்வநிலையில் தொழில்நிலையில் வேறுபாடு உண்டு. ஆனால் அறநெறி இருவர்க்கும் பொதுவே யாகும். சுமப்பானுக்கு நெறி இது; மேலிருப்பானுக்கு நெறி இது என்று வேறுவேறாக இயம்புதல் வேண்டாம். அறநெறியானது இருவர்க்கும் பொதுவானது; இடைப்பட்டது என்கின்றார்.

> " அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
> பொறுத்தானோ டூர்ந்தா னிடை " (௩௭)

என்பது குறள். சிவிகை பொறுத்தானோடு அறத்தாறு இது; ஊர்ந்தானொடு அறத்தாறு இது என வேண்டா; (அஃது) இடை. இருவர்க்கும் நடுவாகியது; பொது; அறப் பயனும் அங்ஙனமே என்றார். இஃது ஒருகுலத்திற்கு ஒரு நீதி, ஒருவர்க்கத்திற்கு ஒரு நீதி என்று கருதற்க. அற மென்பது எல்லோர்க்கும் ஒத்தபொது நிலையினதே என்று தெளிவுபடுத்தியது. இதற்கு உரையாசிரியர்கள் வேறு வகையாகப் பொருள்கொண்டு, "அறத்தாறு" என்பதில், "ஆறு" என்பதற்குப் பயன் என்று பொருளை வலிந்து இழுத்துக் கூறினர்.

## வழியடைக்குங் கல்

அவ்வாறு எல்லோருக்கும் பொதுவாய்ச் சிறந்து நிற்கும் அறத்தினை ஒவ்வொரு நாளுஞ்செய்தல் வேண்டும். ஒருநாள் ஒருவன் வாழ்க்கையில அறஞ்செய்யாமற் கழியு மானால் அவன் அந்த நாளை வீழ்நாளாகக் (பயனின்றிக் கழிந்த நாளாக) கழித்தவனாகின்றான். தனக்குக் கிடைத்த நாளென்னும் முழுமணி மாணிக்கத்தைக் கருங்கற் பாறை யில் வீழ்த்தி நொறுக்கியவனாகின்றான். அவ்வாறு தனக் குக் கிடைத்த நாட்களில் ஒன்றையுங்கூட வீழ்ந்துபோக விடாது ஒருவன் அறத்தினைச் செய்வானெனின் அச் செயல் அவனுடைய பிறப்புநாள் இறப்புநாளாகிய அவைகள் வர இருக்கின்ற வழியை அடைக்குங் கல்லாக நின்று பேரா இயற்கை பெறச்செய்து காத்துக்கொள் கின்றது; அதனால் அவன் வீடுபேறடைவான்.

> "வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
> வாழ்நாள் வழியடைக்குங் கல்" (௩அ)

என்ற அருமைத் திருப்பாட்டு ஒருபோதும் ஒருவராலும் மறக்கக்கூடாத சிறப்பினதாக ஓங்கி நிற்றல் காண்க. ஒரு நாளுந்தவறாமல் அறஞ்செய்வது எவ்வாறு என்று கேட்க லாம். உள்ளத்தால் உரையால் செயலால் அறஞ் செய் கின்றோம். நல்லுள்ளத்தனாக இருப்பது மனத்திற்கு

நல்லறம்; நற்சொல் மொழிவது சொல்வகையாக நல்லறம்; நற்செயலாற்றுவது செயலில் நல்லறம். இம் மூவகை யறங்களும் பண்பு நிலையறமாகிய உள்ளத்தூய்மை என்றும் எப்போதுஞ் செய்தற்கு இயலுவதேயாகும்; அங்ஙனந் தூய்மையுடையார்க்குச் சொல்லறமுஞ் செய்தற்கு எளிதே. செயலறம் என்பது வாழ்வுக்கு உரிய கடமைகளை ஒழுங்காகச் செய்வதும் பிறர்க்கு உதவுதலுமாகிய செயலாகலின் அவைகள் நாளெல்லாஞ் செய்யத்தகுந்தனவே என்க. இவ்வாறு இடையறாது நடைபெறவேண்டும் அறச்செயல்கள் எல்லாம். அங்ஙனம அறச்செயல் செய்தார்க்கு இம்மை மறுமைப் பயன்கள் தவறாமற் கிட்டுமென்பதில் யாதொரு ஐயப்பாடும் இல்லை.

"வாழ்நாள் வழியடைக்குங்கல்" என்பதற்கு இரட்டுற மொழிதலாகப் பொருள் கொள்ளுதல் சாலவும் பொருந்தும். பிறப்பொடு கூடும் நாள் வரும் வழியை அடைக்குங் கல் என்று பொருள் கூறி வீடுபேறு தரும் என்று கூறுவது ஒரு பொருள. ஒரு தோட்டத்திற்குட் புகும் வழியைத் திருடர், மாடு, விலங்கு புகாவண்ணம் அடைத்துவைப்பது இயல்பு. அதுபோன்று ஒருவனுடைய வாழ்நாளாகிய தோட்டத்திற்குள் பிற இடையூறு புகுந்து அவனுக்கு இடுக்கண் விளைக்காத வண்ணம் தோட்டததிற்கு அமைந்த புகுவாயிலை அடைக்குங் கற்கதவாக நின்று அவன் செய்த அறம் அவனைக் காக்கும் என்ற உருவகச் சிறப்பினை நன்கு உணர்தல்வேண்டும். வீடுபேறாகிய தோட்டத்திற்குள் அவன் புகுந்து வாழும் முன்பு இவ்வுலக வாழ்நாளின் கண்ணும் அவனுக்கு இடையூறு இல்லை; உண்டாகாது. அறச்செயல்களை நாடொறுந் தவறாது செய்வானொருவனுக்கு இடையூறு விளைக்கப் புகுந தீயோர்களின் நெஞ்சின்கண் அவன் செய்த அறச்செயல்கள கதுமெனத்தோன்றித் தீயோரின் எண்ணங்களை மாற்றி அவனுக்கு இடையூறு வரவிடாது காத்துத் தடைசெய்யும் என்பது பற்றி "வாழ்நாள் (களிற் புகுந்து இடையூறு செய்தற்கு வாய்ப்பாக அமைந்த தடமாகிய)

வழி(யை) அடைக்குங்கல்" என்றார். எனவே அறத்தினும் மேம்பட்ட தற்காப்பு வேறு எதுவுமில்லை என்பது தெளிவாயிற்று.

## அறத்தான் வருவதே இன்பம்

இவ்வாறு ஒய்வு ஒழிச்சல் இல்லாமல் அறஞ்செய்க என்று பெரும்பாரத்தை இந்த அறநூல் சுமக்கச் சொல்கின்றதே! இதனால் துன்பமில்லையா? நாடோறும் அறஞ் செய்க என்றால் எவ்வாறு செய்யமுடியுமென்ற கேள்வி எழுமென்பதனை நோக்கி அறத்தினைப்போல இன்பம் பயப்பது வேறு ஒன்றுமின்றாதலால் அந்த இன்பங்களை நோக்கிச்செய்க. உங்கள் உழைப்பாலுஞ் செயலாலும் இன்பமே எங்காளுந் துன்பமில்லை என்கின்றார்.

அறத்தினை நினைப்பது இன்பம்; சொல்லுவது இன்பம்; செய்வது இன்பம். அறஞ் செய்தாரை நினைத்தலும் அவர் பெயரைச் சொல்லுதலும் அவர் வரலாற்றைப் படிப்பதும் இன்பம். யான் இன்ன அறங்களைச் செய்வேன் என்று உறுதி செய்துகொண்டு இடையறாது அறச் செயல்களை நினைப்பவரது மனத்தில் பால்போன்ற அமுதூறும் பண்பு வளர்கின்றது.

"பால்போன்று ஒழுகி அமுதூறும் நல்லறம்" என்றார் திருத்தக்கதேவர். ஓர்ந்து உணர வல்லார்க்கு இத்தகைய இன்பம் பிறத்தல் தெரியாமற் போவதில்லை. அறநெறியில் வாழ்பவன் எப்போதும் மகிழ்வுடனிருக்கின்றான்; கடமைகளைச் செய்யாமல், அறஞ்செய்யாமல் இருப்பவன் அஞ்சி அஞ்சிச் சாகின்றான்; இவ்வுலகில் அவன் அஞ்சாத பொருள்கள் எதுவுமில்லை. இரவு பகலாகத் தனக்கு என்ன தீங்குவருமோ என்று நினைத்து அழுங்கிப் புழுங்கிப் புலம்புவான்; தன்னையே கொல்லவுந் துணிவான். பிழைநெறி தீங்கில் முடிவது கருதியும், அறநெறி அளவிலா இன்பம் பயப்பது நோக்கியும் ஆசிரியர், "அறத்தான் வருவதே இன்பம்" என்று அறைந்து

கூறுகின்றார். "அறத்தான் வருவதே" என்பதிலுள்ள தேற்றேகாரத்தை இயன்ற அளவு நீட்டியும் அழுத்தியுஞ் சொல்லிக் கையை ஓங்கி "இன்பம" என்பதனைச் சொல்லும்போது படீரென்று தெரிக்கும்படி சொல்லிக் கையால் அறைந்து பார்த்தாலன்றி ஆசிரியர் கூறும் அழுத்தமும் வேகமும் தெரியாது. அவ்வாறு சொல்லிப் பின்பு மெல்ல எள்ளற் குரலொடு தொடங்கி "மற்றெல்லாம்" என்று கூறிச் சிறிது நிறுத்திப் பினனர், "புறத்த" என்று சிறிது அழுத்திக்கூறி மேலும், "புகழும்" என்று ஒரு பிடி பிடித்து "இல" என்று கையை உதறிப்பார்த்து இந்தக் குறளை நவின்று நவின்று நாலாயிரம முறை நல்ல மந்திரமாக நவின்று பாருங்கள்; அப்போது தெரியும், "நவில் தொறும் நூல்நயம்" என்பது.

"அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல." (௩௯)

அறமல்லாத மறநெறியில் விளைகின்றன எல்லாம் இன்பக் கோட்டைக்குள் புகவே முடியாது கோட்டைக்கு வெளிப்புறத்திலேதான் அவைகள் நிற்கும். இந்த அருமைத் திருப்பாட்டின் பெருமை நலன் முழுதும் உணர்ந்த நம் கவியரசர் பாரதியார்,

"அறம்ஒன் றேதரும் மெய்யின்பம் என்றநல்
அறிஞர் தம்மை அனுதினம் போற்றுவேன்
பிறவி ரும்பிஉ லகினில் யான்பட்ட
பிழைகள் எத்தனை கோடி நினைக்கவும்
திறன்அ ழிந்தென்ம னம்உடை வெய்துமால்
தேசத் துள்ள இளைஞர் அறிமினோ
அறம்ஒன் றேதரும் மெய்யின்பம் ஆதலால்
அதனை யேதுணை என்று கொண்டுய் திரால்."

என்று கூறுந்திறன் கண்டு களிப்படைதற்கு உரியது. பெருவெள்ளத்தில் அமிழ்வானொருவனுக்குப் பளீரென ஆங்கு மிதந்துவருந் துணைமரம் ஒன்றைக்காட்டி அதனைப் பற்றிக் கரையேறு; விடாதே என்று அலறுபவரைப்

போன்று பாரதியார் அலறுவதை மறத்தல் கூடாது. இங்ஙனம் கூறிய அறிஞராகிய திருவள்ளுவரைப் போற்றி போற்றி என்று நாள்தோறும் போற்றுவேன் என்று பாரதியார் கூறிய வழிபாட்டுத் திறத்தினை நோக்குக. கவிஞரே காணவல்லார் போலும் கவிஞர் பெருமையை; இங்ஙனந் திருவள்ளுவர் மொழியின்கண் அழுந்தித் தோய்ந்து பேரின்பங்கண்ட காரணத்தினாலேதான்,

> "வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து
> வான்புகழ் கொண்ட தமிழ்நாடு."

என்றும் மொழிந்திருக்கின்றார்.

அறன் வலியுறுத்தல் என்ற திறத்தின் இறுதியின்கண் முடிவாக ஒருவனுக்குச் செய்தற்கு உரிய கடமை அறமேயாகும்; விடுதற்குரியது பழியேயாம் என்று முடிவு கூறுகின்றார்.

> "செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
> உயற்பால தோரும் பழி." (௪0)

என்பது திருக்குறள். இதன்கண் ஓரும் என்று வருகின்ற சொற்கள் இரண்டனையும அசைநிலை என்று கூறிவிட்டனர். அங்ஙனங் கொள்ளாது அவற்றிற்குப் பொருந்தும் வகையாகப் பொருள் கொள்ளுவதே சிறநதது என்க. ஓரும் அறனே என்பதற்கு அறிஞர்களால் ஆராயப்படுகின்ற அறமே என்று பொருள் கொள்ளுவது பொருந்தும். அறச்செயலும் ஒல்லும் வகைகள் யாவை என்று அறிஞர்களால் ஆராயபபட்டுச் செயப்பெறுவனவாகலின் அங்ஙனம் பொருள் கூறுவது சாலும். பழிச்செயலும் பிறரால் ஆராயப்பட்டுத் தூற்றப்படுவதாதலின் பிறர் அறியார் என்று கருதிச் செய்யற்க; பிறர் குற்றங்கூறுவதற்கு ஆராய்கின்றனர் என்ற தன்மை விளங்க "ஓரும் பழி" என்றார். "பிறன்பழி கூறுவான் தன் பழியுள்ளுந் திறன் தெரிந்து கூறப்படும்" என்ற விடத்துப் பழி ஆராயப்படுதல் புலப்படுத்தியவாறு காண்க. பொருள் சிறப்புக்

கொள்ளும் வாய்ப்பிருக்கும்பொழுது அசை என்று தள்ளு வதிற் பயனில்லை.

> "நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றால்
> தேரினும் அஃதே துணை" (உசஉ)

என்ற இடத்தும் அறம் பல்லாற்றானும் ஆராயப்படுதல் கூறியவாறு

இங்ஙனம் அறநூல் கூறியவற்றை யுட்கொண்டும் சான்றோபாற் கேட்ட நுண்ணறிவின் துணைகொண்டும் ஒருவன் அறநெறி தவறாது ஒழுகி வருங்கால் அவா என்பது வந்து அவனை வஞ்சித்துவிடுகின்றது. அத்தகைய வஞ்சனைக்குத் தப்பி உய்ய வேண்டுமென்ற கருத்தால்,

> "அஞ்சுவ தோரும அறனே ஒருவனை
> வஞ்சிப்ப தோரும் அவா" (உசசு)

என்று கூறினர்.

அவா வென்னும் ஆசையானது ஒருவனை வஞ்சிப்ப தற்கு வாய்ப்பான காலத்தை ஆராய்கின்றதாக இருக்கின் றது. ஆதலால் அறம தவறக்கூடாதென்பதற்காக விழிப் பாக ஆராய்நது அஞ்சிக் காத்தல்வேண்டும். இளங்குழந் தைக்குத் தீங்குவரக்கூடாது என்று அஞ்சிக் காத்தல் போன்று குறிக்கொண்டு காத்தல்வேண்டும.

ஈங்கும் "ஓரும்" என்பவற்றிற்குப் பொருள் கொள் ளுதலே பொருந்தும்.

"சிற்றில் நற்றூண்" என்று தொடங்குகின்ற புற நானூற்றுப் பாடலின்கண், "ஓரும்புலி சேர்ந்து போகிய கல்லளை போன்று" என்ற இடத்தில் வரும் "ஓரும் என் பது அசை என்பர். அதனையும், "ஆராய்கின்ற" என்று பொருள்கொள்ளலாம். ஒருமபுலி—ஏனை விலங்குகளின் வருகையை ஆராய்ந்துகொண்டிருக்கின்ற புலி என்று பொருள் கொள்ளுதல் நன்று என்க.

இவ்வாறு, பின்வரும் இயல்களில் கூறப்பெறும் எல்லாப் பகுதிக்கும் பொதுவாக ஈண்டு அறன் வலியுறுத்தலைக் கூறிப் பின்னர் இவற்றின் திறங்களை விரித்து மொழிதல் காண்க.

அங்ஙனம் விரித்து மொழியும் அறங்களுள் மனத்தால் செய்வன தவிர்வனவாகிய பண்பு நிலையறங்கள் இவை எனவும் சொல்லால் செய்வன தவிர்வனவாகிய சொல்லறங்கள் இவை எனவும் செயலால் செய்வன தவிர்வனவாகிய செயலறங்கள் இவை எனவும் நோக்கும் வகையாக அறங்கள் அமைந்துகிடக்கின்றன. மனத்திற்கு உரிய பண்பு நிலையறங்களை முன்னர் நோக்கினோம். இனி, சொல்லறங்களை நோக்குவோம். இனியவை கூறலும் அறங்கூறுதலுமாகிய இவை சொல்லறங்களிற் சிறந்தன. மக்களாய்ப் பிறந்த எல்லோரும் அறங்கிடந்த நெஞ்சத்துடன் அறஞ் சொல்லுதலுஞ் செய்தலும் வேண்டும். "அறங்கூறா னல்லவை செயினும்" என்பதனால் அறங்கூறுதலும் வேண்டுமென்பது வற்புறுத்தப்பட்டது. அறனழித்துரைத்தலும், பயனில சொல்லுதலும், பொய்ம்மை மொழிதலும், புறங்கூறுதலும் தவிரத் தகுந்தன என்பது வற்புறுத்தப் பெறுகின்றன.

## அறம்வகுத்த திறம்

செயலறங்களுள் விருந்தோம்பல், ஒப்புரவறிதல், ஈகை முதலியன சிறந்தன. இவை பெரும்பாலும் இல்லறத்தார்க்குச் சிறப்பும் ஏனையோர்க்குப் பொதுவுமாக அமைந்த அறங்கள்.

துறவறத்தார்களுக்கு அருளுடைமை, மெய்யுணர்வு, அவாவின்மை, துறவு முதலியன பண்பு நிலையறங்கள்.

கள்ளுதல், வெகுளுதல், அவாவுதல் முதலியன தவிரத் தக்க பண்பு நிலைகள்.

இன்சொற்கூறல், வாய்மை மொழிதல் முதலியன செய்யத்தக்க சொல்லறங்கள்.

தவம் முதலியனவாகிய உயர்ந்த செயல்கள் செய்யத்தக்கன. புலாலுண்ணல், கூடாவொழுக்கம், இன்னா செய்தல், கொல்லுதல் முதலியன தவிரத்தக்க

தவிரத்தக்கன தவிர்தலும் சிறந்த அறமேயாகும். ஆனால், செய்யத்தக்கன செய்யாமையானுங் கேடு வருமென்று அறிவுறுத்தி மக்களைப் பண்பு நிலையறம், சொன்னிலையறம், செயல்நிலையறம் ஆகிய மூவகை யறங்களினும் உய்த்து இன்பவாழ்வு வாழவைக்கின்றார் ஆசிரியர்.

இங்ஙனம் அறங்கூறுகின்ற ஆசிரியர் வாய்மையைத் துறவறத்திலே வைத்திருப்பதனால் இல்லறத்தார் பொய் கூறலாமென்று கருதினார்போலும் என்றும், கொல்லாமையுந் துறவறத்தின்கண் வைக்கப் பெற்றிருத்தலினால் இல்லறத்தார் கொல்லுதலும் புலாலுண்ணலுந் தகுமென்று கொள்ளவைத்தார் போலுமென்று தங்கள் மயக்க உணர்வினாற் பொருள்கொண்டு கதைப்பார்களுஞ் சிலர் உளராயினரெனின் அவர்கள் கூற்றுப் பொருந்தாது என்க.

அறங்கள் ஒன்றுள் ஒன்று முரணாமை காரணமாகவும், கூறியது கூறல் என்ற குற்றம் வராமை காரணமாகவும் ஆசிரியா அமைத்திருக்கும் முறை வியத்தற்கு உரியது. அவற்றுட் சிறிது காண்போம்.

இல்லறத்தார்க்கு அன்பே பண்பாகவும அறமே பயனாகவும் விதிக்கப்பெற்றமையின் துறவறத்தார்க்கு அவை வேண்டாவோ என்று கருதுவார்க்கு விடையாகவும் உண்மையாகவும் துறவுநிலையிலுள்ளவர்க்கு அருளே பண்பாகவும் வீடுபேறு பயனாகவும் கூறினார். அரசியல் நெறியினர் இல்லறத்தாருந் துறவறத்தாருமாகிய இரு பகுதியினரேயாகலின் அவர்கட்கு முற்கூறிய பண்புகளுடன் செங்கோன்மை, கண்ணோட்டம் முதலியன பண்புகளாயின; ஒளியும் மீக்கூறலுமே அவர்கட்குப் பயனாயின.

இனியவைகூறல் இல்லறவியலிற் கூறப்பெற்றது. துறவிகட்கு வெகுளாமை, வாய்மை இவற்றை விதித்து

இன்சொல் வேண்டும் என்பது பெறவைத்தமை நோக்குக. வாய்மை துறவிகட்கு விதிக்கப்பட்டதே இல்லறத்தார் பொய்ம்மை மொழியலாமோ என வினவுவார்க்குப் பொய் கலந்தது இன்சொல்லாகாது; "படிறில வாஞ்செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்" இன்சொல். அது ஈரமாகிய அருளொடு கூடியதாக இருத்தல் வேண்டுமென்று கூறுந்திறத்தால் "வாய்மை" வேண்டுமென்பதனை இல்லறத்தார்க்குப் பெறவைத்தமை உணர்க. "செம்பொருள் கண்டார் வாய்ச்சொல" என்றதனால் துறவறத்திற்கூறிய மெய்யுணர்வும் இல்லறத்தார்க்குப் பெறவைத்தமை மிகவும் பொருத்தம்.

அரசனுக்கு, "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லனல்லனேல், மீக்கூறும் மன்னன் நிலம்" என்றதனால் இன்சொல்லை வற்புறுத்தினார்.

பிறனில் விழையாமை இல்லறத்தார்க்குக் கூறப் பெற்றதனோடொப்பக் கூடாவொழுக்கம நீக்குதல் துறவிகட்கும், வரைவின் மகளிரை நீக்குதல் அரசியல் நெறியினர்க்குங் கூறி எலலோருக்கும் எல்லா அறங்களும் பெறவைததார். "வெஃகாமை" என்பதனை இல்லறத்தார்க்கு இயம்பிக், "கள்ளாமை" என்பதனைத் துறவறவியலில் வைத்துப்

"பற்றுள்ள மென்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று" (சஙஅ)

என்று பொருட்பாலிற் கூறி மூன்று திறத்தார்க்கும் ஒரு வகையான் ஒத்தனு சிறிது சிறிது வேறுபட்டுங் கிடக்கும் பண்பு நிலையறங்களை வற்புறுத்தியமை நோக்குக.

இன்னா செய்யாமை, கொல்லாமை, புலால்மறுத்தல் என்ற மூன்று திறங்களுந் துறவறவியலிற் கூறி அவ்வறங்கள் இல்லறத்தார்க்கும பெறப்படும் வகையாக ஆங்கே "தீவினையச்சம" என்ற ஒரு திறங்கூறி அம்மூன்று அறங்களையும் வற்புறுத்திய சிறப்பு மிகவும் இனிதேயாகும. இப்பண்பு நலன் அரசியலார்க்குப் பொருந்தும் வகையாக

வெருவந்த செய்யாமையை ஆங்கே வற்புறுத்தினார். அதனுட் சினந் தவிரும் வகையும் சிறப்பிக்கப்பட்டது.

ஈகை என்பதனை இல்லறத்தார்க்கு வற்புறுத்தி, அதற் கேற்பத் துறவோர்க்குத் துறவு என்பனைக் கூறி, அரசர்க்கு,

" அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு " (௩அ௨)

என்று இயல்பாக்கிக் குற்றங்கடிதலில்,

" பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று " (௪௩அ)

என்றும் அருளினர்.

இல்லறத்தார்க்கு ஒப்புரவறிதல் கூறித் துறவின்கண் மெய்யுணர்தலை வற்புறுத்தி அரசுக்கு அறிவுடைமை, தெரிந்து செயல் என்ற வகையாற் கூறிய மாண்பினை நோக்குதலுடன் அறிவுடைமையை அரசியலில் வைத்து ஒப்புரவறிதலில், "பேரறிவாளன் திரு" ஊருணிபோன்று உதவு மென்றதனால அறிவுடைமை முதலியவற்றை இல்ல றததார்க்கும் வறபுறுததினர். பொறையுடைமையை இல் லறவியலில் வைததுத் துறவறவியலில் வெகுளாமையை விரிதது அரசியலில் வெருவநத செய்யாமை என்ற திறத் தில்,

" கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி யாஙகே கெடும் " (௫௬௬)

என்றும்

" கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம் " (௫௬௭)

என்றும,

" இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு " (௫௬௮)

என்றும் கூறிப் பொறையுடைமையைத் தெளித்தமை காண்க.

இல்லறவியல் ஒழுக்கமுடைமை, அடக்கமுடைமை இவற்றைக்கூறித் துறவறவியலில் அவற்றிற்குஒப்பு "தவம்" வகுத்து அரசியலில் குற்றங் கடிதல், செங்கோன்மை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை, ஊக்கமுடைமை முதலிய ஒழுக்கங்களை வற்புறுத்திய மாண்பினைக் காண்க.

இவ்வாறு நூல் முழுதும் ஆராய்ந்த கருத்துக்கள் விரியுமாதலின் ஏனையவற்றையும இவ்வாறு நோக்குக.

## தமிழக வாழ்க்கை

குழந்தைகள் முதலாக முதியோர் வரை எல்லோர் தம் நிலைகளும் அறங்களும் வாழ்வுந், திறப்படுத்திக் கூறிய திருக்குறள் போன்று வேறு ஒரு நூலுங் கூறவில்லை என்பதும், எடுத்துக்கொண்ட எப்பொருளையுங் கூறுந்திறத்தின் பேரெல்லையாகக் கூறி இன்புறுத்திய முறையெல்லாம் நிரம்பியது திருக்குறளே என்பதுங் கொள்ளத்தக்க உண்மைகள்.

தமிழகத்தின்கண் வாழ்ந்த வாழ்கின்ற வாழும் வாழ்வே திருக்குறள் என்பது தெளிக. திருவள்ளுவர் நூலுக்கு அமைந்த சிறப்பெல்லாம் பண்டைத் தமிழர்களின் வாழ்வின் சிறப்பு என்பது ஓர்க. பல நூறாயிரம் ஆண்டுகள் நெறிப்பட வாழ்ந்த ஒரு பெருஞ் செப்பம் வாய்ந்த அருந் தமிழ் மக்களின் வாழ்வுதான் திருக்குறளுக்கு முதல் நூல். திருக்குறளைக் கலங்கரை விளக்கமாகக் கொண்டு அதற்கு முற்பட்ட தமிழகச் சான்றோர்களின் வாழ்வு நலங்களும், அதற்குப் பிற்பட்ட தமிழகப் பெருமக்களின் வாழ்வுத் திறங்களும் ஆராய்ந்து உணரத் தக்கன.

தமிழ்க்குடி மக்கள் மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நாணுடைமை, ஒழுக்கமுடைமை, அடக்க

முடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, ஊக்க முடைமை, பொறையுடைமை, அன்புடைமை, அருளுடைமை, கண்ணோட்டம், செங்கோன்மை முதலிய பண்புநலன்கள் நிரமபியவர்களாகவும், அறத்தின் வழி நடப்பவர்களாகவும், அறத்தின் உருவமாக, அறத்தின் இயக்கமாக, அறவழியின் ஆழியாக (கட்டளையாக) இயங்கும் இயவுளாகிய கடவுட்கொள்கையை உணர்ந்து எல்லாப் பொருளின் கண்ணும் போக்கு வரவு இன்றி நிரம்பித் தங்கிக் கிடக்கும் இறைமையை உணர்ந்து உயர்பண்பு நிரம்பப்பெற்று இலங்குந் திறத்தார்களாகவும வாழ்ந்தனர்—வாழ்கின்றனா—வாழ்வார் என்பதுந் தெளிக.

இனி, குழந்தைகள் முதலிய ஒவ்வொருவரின் பண்பு நலன்கள அறங்கள் யாவை என நோக்குவோம்.

## குழந்தை

" மனந்தூயார்க்கு எச்சம் நன்றாகும்." (சஙசு)

என்ற முறைமைப்படி நல்லுளம் உள்ளவர்க்கே நன் மக்கள் தோன்றுவர். மக்கள் தாய் தந்தையர்களின் உடல், மனம, உயிர் இவற்றின் பகுதிகளாதலின் தந்தை தாயர்களின் பண்பு நலனே பெரும்பாலும் அமைந்து கிடக்கும்.

குழந்தை மொழி மாசில்லாதது; தூயமனத்திலிருந்து பிறப்பது; அன்புடன் பிறப்பது; நம்பிக்கை கொண்டது; மழலையின் தன்மையே தனி, மழலைச் சொற்களைப் போன்று வயது முதிர்ந்தவர் நடிப்பிற்குச் சொல்லிக் காட்டுதலும் இயலாது.

ஒருவன் பெற்றிருக்கும் உடைமைகள் எல்லாவற்றுள்ளும் சிறந்த பேறு அறிவறிந்த மக்களைப் பெற்றிருத்தலே யாகும். பிறக்கும்போதே அறிவுடன் பிறத்தல் என்ற கருத்தினைக் கொள்வதனைக் காட்டிலும் பிறந்து கற்றுத் தேர்ந்து ஒழுக்கமும் சான்றாண்மையும் உடையனாக இலங்கும் ஒரு மகனை உடையவனாக இருப்பவனது பேற்றையே சிறந்தது என்று கூறியதாகக்கொள்க குழந்தை அறிவறியும்

நெறியில் வளர்க்கப்பெறல் வேண்டும். அங்ஙனம் தந்தை வளர்த்துக்கொண்ட பின்னரே அம்மகன் அறிவறிந்தவனாக மதிக்கப்பெறுவான். அங்ஙனந் தூய நன்மக்களை அறிவுடன் பண்புடையராக வளர்த்தால் அவன் தந்தைக்கு என்றும் தீது அணுகாது. துன்பம் இல்லை, இன்பந் தழைக்கும். எனவே, மக்களும் அறிவுடையராகப் பழிபாவங்களுக்கு நாணி அறத்தொழுக்கின்கண் நிலைத்தவராக உயர்பண்பு உடையவராக இலங்க வேண்டுமென்று வற்புறுத்தினர்.

உலகின்கண்ணுள்ள பொருள்களெல்லாம் பிறர் பிறராற் செய்யப்பெறுவன. யார் யாரிடம் எவ்வெப் பொருள்கள் சென்று நிற்கின்றனவோ அவ்வப்போது அவரவர் பொருள்களாக இயம்பப்பெறும். அவை சென்று கொண்டே யிருத்தற்கு உரியன. சென்றபின் ஆக்கியவரின் செல்வமாகக் கருதப்படாமல் பிறர் செல்வமாகவே ஆகும். அவரிடமிருந்தும் அப்பாற் சென்று ஒருவர்க்கும் தமதெனக் கூறப்பெற முழு உரிமையும் இல்லாததாகவே செல்லும். இத்தகைய பொருளை ஒருவர் தமக்கு உரிய பொருளென்று கருதுவது தவறு. மக்களாகிய பொருள் காதலன் காதலியாக இருக்கும் இருவர் தங்களால் தோன்றும் பொருள் தம் பொருள் என்று கூறிக்கொள்ள உரிமையுள்ள பொருள்கள் தங்களாலேயே தோன்றுதல் வேண்டும். குடத்திற்கு மண்ணும் அணிக்குப் பொன்னும் முதற் காரணமாயினாற்போல மக்களுக்குப் பிற பொருள்கள் முதற்காரணமாகாமல் காதலர் காதலியர் ஆகியவர்களின் உள்ளம, உடல், உயிர் ஆகிய இப் பொருள்களே முதற்காரணமாகின்றன. ஆதலால் தந்தம் வினையால் தோன்றிய தம் மக்களே தமக்கு உரிய பொருள்கள். ஏனைப் பொருள்கள் தமக்கு உரியன அல்ல என்று கூறி எல்லாச் செல்வத்தினும மக்கட் செல்வமே சிறந்ததென அதன் சிறப்புக் கூறினர்.

அத்தகைய மக்களின் சிறுகையால் அளாவப்பெற்ற கூழ் அமிழ்ததினுஞ் சிறந்தது என்று கூறுகின்றார் ஆசிரியர். சிறு(கை) என்ற அடைமொழி குழந்தை சோறு

உண்ணும் பருவத்திற்கு முன்னைய நிலையைக் காட்டிற்று. குழந்தையின் கையால் அளாவப் பெற்ற சோறு இனிதே. அதற்காகக் குழந்தையைத் தன்னுடன் இருத்திக்கொண்டு தான் உண்ணும் எச்சிலைக் குழந்தையுண்ணும்படியாக விடுவது தவறு; நோய்க்கு வழி வகுக்கும் குற்றமுமாகும். சிறுகை அளாவிய கூழ் இனிதென்ற அளவில் கூறியதே யன்றி அக் குழந்தை யுண்ணுங்கால் தானும் உண்ண வேண்டுமென்று கூறவில்லை. நெய்யுடை அடிசிலை அக் குழந்தை இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும் மெய்பட விதிர்த்தும் விளையாடிய பின்னர் குழந்தையை அப்பால் எடுத்துக்கொள்ளச் சொல்லியே பெற்றோன் உண்ணுதல் வேண்டும். நெய்ச் சோற்றிற்குப் பின்னர் குழம்புச்சோறு உண்ணும்போது குழந்தைக்கு அங்கு வேலையில்லை.

குழலுக்கும் யாழுக்கும் உள்ளம் அவற்றை இயக்கு வோரின் உள்ளமேயாகும. வேறு மழலை உள்ளம் இல்லை இனிய குரலொடு வரினும உள்ளம் முதிர்வுடையதே யாகும். ஆதலால் மாசறற இளங குழநதைகளின் தூய உள்ளத்திலிருநது பிறக்கும மழலையின் இன்பம் குழல், யாழ் இவற்றிற்கு இல்லை; மழலையினும தம் மக்களின் மழலையே சாலச் சிறந்தது. அது உளளத்தைக் கனியச் செய்து தாய் தந்தையரின் அன்பினை வளர்ப்பதாதலின் குழலிசையினும் சிறநததாயிற்று.

## இளைஞர் கடனும் தந்தை கடனும்

மழலை மொழிந்த குழந்தை பேசத் தொடங்குகிறது. கற்றல் தொடங்குவித்தலும் பேணுதலும தந்தை செயல், நல்ல முறையில் கற்றல் மகனின் கடன்.

“ தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச்செயல்.” (கஎ)

என்பது குறள். “நன்று பெரிதாகும்” என்பது தொல் காப்பியம். ஈங்கு “நன்றி” என்பதற்குப் பெரிதாகும் செயல் என்று பொருள் கூறுதல் வேண்டும். மகனுக்குத் தந்தை பணம் முதலிய செல்வத்தைச் சேர்த்து வைத்தா

னென்றால் அவைகள் செலவழிந்து சிறிதாகிக் கொண்டே செல்லுமாதலின் பெரிதாகிக் கொண்டு வரும் பொருள் யாதென்பதை அறிவுறுத்த மகனைக் கல்வி ஒழுக்கமுடையவனாக்கிச் சான்றோரவைக்கண் முதன்மையுடையனாக்கி வைத்தலே பெரிதாகுஞ்செயலென அறிவுறுத்தினார். அவ்வாறு கல்வியுடையனாக்கினால் உலகத்தார் அவனது கல்வி பண்பு முதலியன அறிந்து அவனைப்பெற்ற தந்தை தாயரைக் காட்டிலும் மிகுதியாகப் பாராட்டுவதுடன் அவனது கல்வித்திறமறிந்து பெற்றோரினும் மேலாக இன்புறுவர். எனவே உலகதது உயிர்களை எல்லாம் தாய் தந்தையரினுஞ் சிறந்த அன்பும் மதிப்பும் உடையராக்கவல்ல கல்வியினது பெருமையை நண்டு வற்புறுத்தினாராதலின், கல்வி முதலியன பொருட்பாலிற் கூறப்பெற்றன; நண்டு இல்லறத்தார்க்கு வேண்டாவோ என்று வினவுதல் வேண்டுவதன்று.

இவ்வாறு கற்ற, தன் மகனை, சிறந்த அறிவொழுக்கம் உடைய சான்றோன் என்று பிறரால் பாராட்டப் பெறுதலைக் கேட்ட தாய் அவனைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்வினும் பெரிதாக மகிழும் என்க. எனவே சான்றாண்மை வாய்ந்த மக்களைப் பெற்றவர் பெறும் மகிழ்வே வாழ்வில் மிகவுஞ் சிறந்தது என்க. இளைஞர்கள் "குடிசெயல் வகை" என்பதிற் கூறியவண்ணந் தாம் பிறந்த குடியைத் தாழாமற் காக்க அரிதின் முயன்று உழைத்தல் வேண்டும். உழைப்பதற்குக் கை ஓயமாட்டேன் என்பதுபோன்ற பெருமை வேறு இல்லை.

இவ்வாறு சான்றோனாக்கிய தந்தைக்கு, அவன் செய்த பெரிதாகுஞ் செயலுக்கு ஈடாக வேறொன்று செய்தலியலாது எனினும் உதவி செய்யலாம். இவன் தந்தை இவ்வளவு அறிவும் ஒழுக்கமும் உடைய இந்தச் சான்றோனை மகனாகப் பெறுவதற்கு என்ன தவஞ்செய்தானோ என்று உலகத்தாரால் பாராட்டுதற்கு உரிய தகுதியுடையனாக விளங்குதல் வேண்டும். இவைகள் தந்தைக்கும் மகனுக்கும் உரிய கடமைகள்.

## காதலர்கள்

இல்லற வாழ்க்கை நடத்துங் காதலர்கள் அன்புடைய ராய் அறச்செயல்களை நாள்தோறுஞ் செய்தல்வேண்டும். அன்பில்லாதவராய் இல்லறம் நடத்துவோர்கள் உயிரோடு பொருந்தியவராக இலங்கமாட்டார்கள். எலும்பினைத் தோலினால் போர்த்துவைத்த உருவங்களின் தன்மைய ராகத்தான் விளங்குவார்கள். அவர்கள் வாழ்வு வன்பாற் கண்ணுள்ள வற்றல்மரமனைய தாகிவிடும். ஆகவே அன்பு என்ற மரக்கலத்தில் ஏறித்தான் துன்பக்கடல்களைக் கடக்க வேண்டும்.

## புகழும் மானமும்

இத்தகைய அன்புள்ள காதலரின் வாழ்வு தமிழகத் தில் எங்ஙனம் நிகழ்ந்து வந்துளது என்பதற்குத் தொல் காப்பியம் முதலிய ஏனைய நூல்களுஞ் சான்றாகும்.

"புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும்" என் பது தொல்காப்பியம். தலைவியைப் பிரிந்து பொருளீட் டச் செல்லுந் தலைவன் பொருளின் இன்றியமையாமையை இயம்புகின்றான். பொருளினால் உண்ணல் உடுத்தல் நகை யணிதல் முதலிய தன்னலம் பெருக்குதல் பேசப்படவில்லை. புகழுடன் வாழ்தல்வேண்டும். மானத்துடன் வாழ்தல் வேண்டும் என்று வற்புறுத்துகின்றான். எனவே, அன் புடைய காதலர்க்குப் பொருள் தேடும் முயற்சியும் அறஞ் செய்தல், ஈதல் முதலிய செயல்களாற் புகழ் பெருக்குந் திறனும், மானத்துடன் வாழ்கின்ற மாண்பும் இன்றி யமையாதன. தன்னிலையிற் றாழாத தன்மையே மானம். மாண்பிறந்த மானம் என்று ஒன்று உண்டு அது மானங் கெட்ட மானம். பெரியோரைப் பணிய மறுத்தல், அற நெறியில் நடக்க மறுத்தல் இவைகள் மாண்பில்லாத மானம். அது வேண்டப்படாதது,

> "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
> ஊதியம் இல்லை உயிர்க்கு." (உ௩௧)

என்பது குறள். ஊதியமும், ஆக்கம் என்று பொருள் வருவாயைக் கருதுகின்றனர்; எந்த வகையிலாவது அதனைப் பெருக்குதல் வேண்டுமென்றும் மக்களிற் சிலர் கருதுவாருளர். ஆனால் உண்மையான ஆக்கம் எது?

"அறத்தினூஉங் காக்கம் எவனோ உயிர்க்கு."

என்பதனால் அறத்தின் மேறபட்ட ஆக்கமில்லை என்பதும், அதனை மறத்தலைபபோற் கேடு பயபபது பிறிதொன்றில்லை என்பதும் வற்புறுததிய பொருட்பாலில்,

"ஊதியம் என்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்." (எகள)

என்றும் ஆசிரியர் அருளினர்.

இங்ஙனம் புகழும் மானமும் உடையவராய் வாழ்பவர்கள் எசாச் சிறப்புடையராகவும் இலங்குதல்வேண்டும்.

"வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்." (உ௫0)

என்பதனால் வாழ்வு இன்னது என்பதனைத் தெளிய வைத்தார்.

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்." (கஅக)

என்று கூறி "மானம் உடையார் ஒளிதொழுது ஏத்தும் உலகு" என்று அதன் உயர்வினையுங் காட்டினர். குடும்பத்துத் தலைவன் பொருளீட்டுதற்குப் பிரியுங்கால் பிரிவுக்கு அஞ்சிய ஆருயிர்க் காதலியை நோக்கி,

"அறனும் ஈகையும் அன்புமகிளையும்
புகழும் இன்புந் தருதலிற் புறம்பெயர்ந்து
தருவது துணிந்தமை பெரிதே
விரிபூங் கோதை விளங்கிழை பொருளே."

என்று கூறி வற்புறுத்துகின்றதனால் தமிழகத் தலைவனின் வாழ்வின் உட்கோள் புலனாதல் காண்க.

அறன்கடைப்படா வாழ்வும் என்றும் பிறன்கடைச் செல்லாச் செல்வமும் வேண்டும் வாழ்விற்கு என்பது தமிழர் குறிக்கோள். அதற்குப் பொருள் வேண்டும். அதற்கு உழைப்பே வேண்டப்படுவது. "கருமஞ் செய ஒருவன் கைதூவேன் என்னும், பெருமையிற்பீடு உடைய தில்" என்றவாறு உழைத்தலையே வற்புறுத்தினர். இங்ஙனம் மக்களிற் பெரும்பாலார் உழைக்கவும் அறஞ்செய்ய வுந் தொடங்கின் பிறர் உதவியைப்பெற எதிர்பார்ப்பவர் தொகையுங் குறையும். குறையவே அறஞ்செய்தலும் எளிதாகும். இங்ஙனம் ஒவ்வொருவருந் தன்னிறைவு பெற்றுப பிறர்க்கு உதவுவேனென்று முனைந்தால் மக்கள் வாழ்வு மிகவும உயரும். அப்போது தாழ்வு என்பதே உலகிலிராது. இத்தகைய நிலைமையே ஆசிரியராற் கூறப் பெறுவதாயிற்று.

"இரப்பாது கொடுக்குஞ் செல்வமும் இலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையும் இலனே."

என்றும்,

"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்
ஈயே னென்றல் அதனினும் இழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்
கொள்ளே னென்றல் அதனினும் உயர்ந்தன்று."

என்றும்,

"புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்."

என்றுங் கூறிய பாடல்களினால தமிழக வாழ்வு தெளிதலுங் காண்க.

இங்ஙனம வாழுங் குடும்பத்தலைவன் தலைவியரின் பண்பு நலன்களைத் தெளிவாக ஆசிரியர் விளக்கியருளினர்.

## வாழ்க்கைத்தலைவனின் பண்பு நலன்

"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்."

"இல் வாழ்க்கை" என்ற திறத்தில் வாழ்க்கைத் தலைவனின் பண்பு நலங்கள் முதற்கண் விளக்கப் பெறு கின்றன. இல்லறத்தின்கண்ணிருந்து வாழ்வோனென்று சிறப்பித்து இயம்பப் பெறுவோன் இயல்பாகிய அறத்தை (அறமே இயல்புதான்) உடைய ஏனை மூவர்க்கும் அவர் நடக்கும் நல்ல நெறியின்கண் நிலைபெற்ற துணையாக இலங்குதல் வேண்டும். இயல்புடைய மூவராவாரெவ ரெனின், "அறவோர், அந்தணர், துறவோர் என்க." என்று இளங்கோவடிகள் புலனுக்கியமை காண்க. அறவோராவார் இல்லறத்தினர். அவர் தம்மொடு ஒத்தவ ராதலின், அவர்க்குத தமமாலியன்றவற்றை அளிதது உதவுவது பொருததம்; அதனால அளித்தல என்ற சொல் பொருந்துவதாயிறறு; அந்தணர் எவ்வுயிர்க்கும் செந் தண்மை பூண்டு ஒழுகுபவர். அவர்கள இல்லறத்தாரால் ஓம்பப்பெறுதற்கு உரியர். துறவோர் முற்றுந்துறநதவர் கள். அவர்களுக்கு உதவி மிகுதியும் வேண்டுவதில்லை; அதனால் அவர்களை எதிர்கோடல் என்ற அளவில் நிறுத்தி அந்த அளவிற்கு எதிர்கொண்டு வணக்கம் செய்து வேண்டுவன உதவுதல் குறிப்பிட்டார். விருந்து பழமை யாய் வருகின்ற சிறப்பாதலின் "தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும" என்றார். விருந்தினரை எதிர் கொண்டு தழுவிக்கொள்ளுதலும் கூடும் என்ற அளவிற்கு "விருந்தெதிர் கோடல்" என்று கூறிய நயங்காண்க. "துறவோர்க் கெதிர்தல்" என்பது போன்று "எதிர்தல்" என்ற அளவில் நிறுத்தவில்லை. எதிர்தல் என்ற அளவில் நிறுத்தியது துறவோர்க்குச் சிறப்பு, "எதிர்கோடல்" என்ற அளவுக்கு விரிததமை விருந்தினர்க்குச் சிறப்பு.

இயல்புடைய மூவர் யாவரென்பது நோக்கினோம். தாய் தந்தையர் உறவினர் முதலியவர்களை இழந்தவர்களுக் கும் (துறந்தவர்) துய்க்கப்பெறுவன இல்லாத எளியோர்க் கும், காப்பாரின்றி இறந்துபட்டவருக்கும் இல்வாழ்வான் துணையாதல் வேண்டும். மேலும் புலத்துறை முற்றிய இனிய அறிஞர்கள், தெய்வம், விருந்து, ஒக்கல், தான்

என்ற ஐந்து நிலையுள்ள ஐந்து நெறியின் கண்ணுந் தவறாது நடத்தல்வேண்டும். ஆறு என்பது நெறி. ஐம்புலத்து ஆறு என்பது ஐந்து வகையான அறிவுநெறி. தென்புலத்தார் நெறியாவது தமிழக உலகத்தார் கூறும் அறநெறி.

"தென்புலம் இன்புற" என்ற மூவடி முப்பதின் பழைய உரை, "தென்புலம்" என்பதற்குத், "தமிழகம்" என்று கூறியமை காண்க.

"மன்பதை காக்குந் தென்புலங் காவல்"

என்ற சிலப்பதிகாரத்திலும் தென்புலம் என்பது பாண்டியனின் தமிழ்நாட்டினைக் குறித்தமை தெளிவு.

"தென்புலங் காவலின் ஒரீஇப் பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே."

என்று பூதப்பாண்டியன் கூறிய பாடலிலும் தென்புலம் என்பது தமிழ் வளர்த்த பாண்டி வேந்தனின் நிலப்பரப்பினைக் குறித்தல் புலனாகும். அதுபற்றியே பாண்டியர்க்குத் தென்னவர் என்ற சிறப்புப் பெயரும் உளதாயிற்று என்பது உளங்கொளத் தக்கது.

"தென்புலம் வாழ்நர்க் கருங்கடனிறுக்கும்
பொன்போற் புதல்வர்"

என்ற இடத்திலும் "இனிய தமிழக மருங்கில் வாழும் மக்களுக்குத் தம்மாற் செய்தற்கு உரிய கடமைகளைச் செய்யும் பொன்போன்ற புதல்வர்," என்று பொருள் கொள்ளுதலே பொருந்தும்.

எனவே தென்புலத்தார் என்பதற்குத் தமிழகமக்கள், இனிய புலத்துறை முற்றிய அறிஞர் என்று பொருள் கொண்டு அவர்களின் நெறியை ஓம்புதல் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். தெய்வநெறி, விருந்துநெறி, உறவினரிடம் நடக்கும் நெறி, தான் தன்னைக்கொண்டொழுகும் நெறி என்ற ஐந்துவகை நெறியின் கண்ணுந் தவறாமல் நடத்தல் தலைமை சான்ற அறம்.

ப. கி. சொ.-

மேற்கூறியவற்றுடன் பழிக்கு அஞ்சிப் பொருள் தேடுதலும் பகுத்து உண்ணுதலும் வேண்டும் அன்புடன் அறஞ்செய்தல் சிறந்தது இவ்வாறு அறநெறியில் இல் வாழ்க்கையை நடத்தினால் புறநெறியாகிய துறவற நெறி யிற் போய்ப் பெறும பயனையும் ஈங்கேயே பெறுதல் இய லும். அங்கேபோய்ப் பெறுவதுதான் யாதுளது?

இயல்பு என்பது அறம். இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்று சிறபித்துச் சொல்லப்படுபவன் உல கில்முயல்பவர் எல்லோருள்ளுந் தலைமையானவன். முயன்று செல்வந் தொகுப்போர் முதலிய எல்லோருள்ளும் தவஞ் செய்ய முயல்வோருள்ளும் அற இயல்பு உடையவரே தலைமை சான்றவர். அவர் ஏனையோரை அறநெறியில் ஒழுகச்செய்வர். தாமும் அறநெறியில் இழுக்கார். இத் தகைய வாழ்வு தவம் செய்வோர் நிலையினுஞ் சிறந்த வலிமை யுடையது.

அறன் என்று சிறப்பாகப் பெயர்பெற்றதே இல்லற வாழ்வுதான். அவ்வில்லற வாழ்வும் பிறனால் பழிக்கப் படும் பிறனில் விழைதல் முதலிய குற்றமின்றி இருந்தால் தான் நன்று. மற்றைத் துறவறமும் பிறரால் பழிக்கப்படும் கூடாவொழுக்கமின்றியிருந்தால் நல்லதுதான்.

இவ்வாறு பெருமுயற்சியும் கடமையும் பூண்டு உலகில் வாழ்பவன் வானுலகில் உறையும் தேவரொடு ஒப்ப மதிக்கப்பெறுவான்.

இப் பேறெல்லாம் பெறுதற்கு உரிய இல்லறத்தான் அன்பின் திறன் உடையவனாகவும், விருந்து பேணும் பெருங் குணமுடையவனாகவும இலங்குதல் நன்று. இனி யவை கூறலும, செய்ந்நன்றியறிதலும், நடுவுநிலைமையும், அடக்கமுடைமையும், ஒழுக்கமுடைமையும் உடையவனாக வேண்டும். பொறையுடைமையும் அவனுக்கு அணி.

பிறனில் விழைதல், அழுக்காறு செய்தல், வெஃகு தல், புறங்கூறுதல், பயனில சொல்லுதலாகிய இக்குற்றங்

களிலிருந்து நீங்கித் தீவினைக்கு அஞ்சி ஒழுகுதல் வேண்டும்.

மறந்தும் பிறன்கேடு சூழாத உயர்ந்தவனாக வேண்டும்.

ஒப்புரவறிந்து ஈகை மேற்கொள்ளுதலும் புகழ்பெற்று வாழ்தலும் ஆகிய இவை வாழ்க்கைத்தலைவனுக்கு உரிய மாண்புகள்.

## வாழ்க்கைத்தலைவியின் மாண்புகள்

ஒரு பெண் மனைவாழ்வுக்குத்தக்க மாண்பு நிரம்பிய பண்பு நலன்களெல்லாம் பொருந்தியவளாக இருத்தல் வேண்டும். தன்னை மணந்த கணவனுடைய வளத்திற்குத் தக்க அளவறிந்து செலவு செய்பவளாகவும் இருப்பவளே வாழ்வுக்குத் துணையாவாள்.

"மனைத்தக்க மாண்பு" "மனைமாட்சி" "இல்லவள் மாண்பு" என்று கூறப்பெறும் மாண்புகளைத் தொல்காப்பியனாரும் கூறினார்.

> " கற்பும் காமமும் நற்பா லொழுக்கமும்
> மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
> விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
> பிறவு மன்ன கிழவோள் மாண்புகள் "

என்று வரும்பகுதி பண்டைத் தமிழரின் வாழ்வுப் பண்புகளைக் காட்டுகின்றது.

> " உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
> செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று எனத்
> தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு "

என்று தொல்காபபியனார் இயம்புகிறார். இவ்வாறு வரும் பண்பு நலன்கள் தொன்றுதொட்டு வருகின்றன. அவை தொல்லோர் நெறியைத் தழுவிய நெஞசத்துடன் திகழ்கின்றன. மனையறத்திற்குத் தக்க நற்பண்பும் நற்செயலும்

இல்லறத்திற்கு உரியாளிடத்தில் இல்லாது போமெனின் அவ் வில்வாழ்க்கை, செல்வம் முதலிய பிற மாட்சிமை எவ் வளவு உடையதாக இருப்பினும் அவைகள் இல்லாதவை களாகவே ஆய்விடும்.

அவள் மாண்புடையவளாக இருப்பின் அவர்களின் வாழ்வில் எதுதான் இல்லாமற் போகும்? அவள் மாண்பில ளாயின் எதுதான் உளதாகும்?

கற்பு என்கிற பெருவன்மை ஒருததியின்பால் அமை யப்பெறின், அவளுடைய பெண்மையைப் போன்ற பெருந் தகுதிவாய்ந்த உயா பண்புகள் உலகததில் வேறு எவை தாம் இருக்கின்றன? அவளது பண்புதான் பெருந்தகுதி உடையது.

பிறதெய்வதலைதயும தொழாமல் தன் தெய்வமாகிய கணவனை வணங்கி ஒழுகுபவள, "மழை பெய்யென்றால் மழை பெய்யும்" அவ்வளவு அருமையானவள். பெண்ணா வள் தன்னைக் காத்துக்கொளளுதல் முதற்கடன். தன்னைக் கொண்ட கணவனைப் பேணுதலும் தகுதியுடைய புகழ் நீங்காமல் காத்துக்கொள்ளுதலும் வேண்டும்.

தகைசான்ற சொல்லாகிய புகழைப் பேணுதல் ஒன்று. தான் பேசுஞ் சொற்களிலும் புறங்கூறுதல், பயனில சொல்லுதல், கடுமொழி மொழிதல் முதலிய சொற்கள் மொழியாமல் தகுதியுடைய சொற்களை மட்டுந் தவறுமற் பேசிக் காத்துக்கொள்ளுதலும வேண்டும்.

சிறைக் காவலினல் யாதொரு பயனுமில்லை. பெண் களின் மனநிறையால் அவாகள தம்மைக் காத்துக்கொள் ளுங் காவலே மிகவுஞ் சிறந்தது.

தன்னை மணக்கப்பெற்ற கணவனைத் தானும் தன் நற் குண நற்செயல்களால் தனக்கு உரியவனுகப் பெறுதல் வேண்டும். அவனுள்ளத்தில் தான் நீங்காமல் இடம்பெறும் வகையாகவும தன்னுளத்தில் அவன் நீங்காமல் இடம் பெறும் வகையாகவும எல்லாப் பண்புகளினும் சிறந்த

களிப்பு ஊட்டும் வகையாக நடப்பவள் வானோரும் போற்றும் சிறப்பு உடையவள்.

" யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத் தென்னெஞ்சத்
தோஒ உளரே அவர் " (கO௨௪)

என்ற பாட்டும் ஒருவரை ஒருவர் உள்ளத்தால் பெறும் வகையினை விளக்குகின்றது.

இத்தகைய புகழை விரும்பிய மனையாள் இல்லாதவருக்குத் தம்மை இகழ்வார் முன் சிங்கவேறு போன்று நடக்கும பெருமிதநடை உண்டாகாது. மனைவியின் நற்குண நற்செய்கைகளே மங்கலம் என்று சிறப்பிக்கப்பெறும். நல்ல மககட்பேறு அப பண்பிற்கு ஏற்ற நல்ல அணிகலமாகும். நற்பண்புடையார்க்கே நல்ல மக்கள தோன்றி அவாகளின் பண்பின் அழகுகளைக் காட்டி அணிகளாக இலங்குவர்.

## துறவறம்

இறைவாழ்த்தின் பின்னர் இறைவனது அருள் வெள்ளமாக இயங்கும் மழைவளங் கூறினர். பின்பு அவனை வழிபட்டு உயரிய தெய்வப் பண்பு நலன் வாய்ந்தவராகி அளவிறந்த நூல்களும் வரைந்து இந் நாட்டிற்குப் பெருந்தொண்டுபுரிந்த நீத்தாரது பெருமை கூறப்பெறுகின்றது. அகத்தியர் தொல்காப்பியர் போன்ற பெரு முனிவர்களின் சிறப்பும், முனிவர்கள் அருளிய மருத்துவ நூல்கள் முதலியவற்றின் சிறப்பும் தமிழ்நாட்டின் பெருஞ் சிறப்பாகும்.

ஒழுக்கமுடையவராகத் துறந்து வாழ்வோரின் பெருமையையே நூல்கள் சிறந்தவற்றுட் சிறந்ததாகக் கூறும். துறவோரின் பெருமையை அளக்கப்புகுதல் உலகில் இறந்தாரை எண்ணி அளவிட முயன்றதுபோல் அளவிட முடியாததாகும். உலகில் அவர் பெருமையே பெருமை. அறிவென்னும் தோட்டியினால் ஐம்புல யானைகளை அடக்கு

வோர் வீட்டுநிலத்தில் மூளைக்கும் வித்தாவர்; இந் நிலத்துப் பிறவார்.

ஐம்புலனவித்தா னாற்றலை உலகிற்குக் காட்டுதற்கு இந்திரனே பொருந்திய சான்றாவான். செயற்கரிய அருந்தவம் புரியும் அவர்களே பெரியர். அவர்களின் அறிவின் கண்ணதே இந்த உலகம் அவர்களின் பெருமையை அவர்கள் கூறிய நுட்ப மொழிகளும், மறையாகிய நூலும் உலகிற்குக் காட்டும. குணமென்னும மலையில் ஏறி நிற்கும் அவர்கள் கணப்பொழுதும வெகுளியை உடையராதல் இல்லை. அவர்க்கு வெகுளி உளதாயின் அது காத்தலரிதாதலின் அவர் வெகுளுவதில்லை. அவர்களே அந்தணர் என்ற சிறப்புச்சொல்லால் வழங்கப்பெறுதற்கு உரியவர்கள். அவர்களே அறவோர். அவர்களே எல்லா உயிர்க்குஞ் செந்தண்மைபூண்டு ஒழுகுபவர்.

அவ்வாறு செந்தண்மை பூண்டொழுகுந் துறவோர்கள் எல்லாவகையாலும் நன்கு ஆராய்ந்து எல்லா நெறிகளுக்கும் பொதுவாகி எல்லோராலும் போற்றப்பெறுகின்ற அருள் உடையவராக வேண்டும். அருளே உயர்ந்த செல்வம்; ஏனைப் பொருட்செல்வம் இழிந்தோரிடத்திலும் சென்று நிற்கும். அருளாளர்கள் இருள்செறிந்த இன்னா உலகமாகிய நரகிற்குச் செல்லுவதில்லை. அவர்கட்குத் தம் உயிரஞ்சும்படியான தீவினைகள் உண்டாவதில்லை பொருளில்லாதவர்க்கு இவ்வுலகப் பயனில்லாமற் போவது போன்று அருளில்லாதார்க்கு அவ்வுலகப் பயனாகிய சிறப்பும் இல்லாமற்போகும். பொருளை இழந்தவர் பின்பு ஒருகால் ஆக்கிக் கொள்ளலாம்; ஆனால் அருளை இழந்தவர் இழந்தவரே யாவர்; பின்னர் அதனை ஆக்கிக்கொள்ளுதல் இயலாது. உள்ளத்தில் அருள் இல்லாதவன் தான் செய்த அறத்தைத் தானே அழித்துவிடுவான். மெய்யறிவில்லாதவன் மெய்ப்பொருளை ஒருகால் அறிந்தாலும் அதனை நன்கு உணராமல் அழித்துவிடுவான். அதுபோன்றே அருளில்லாதவன் செய்யும் அறமும் அழிக்கப்படும். தன்னின் வலியார் தன்னை நலிய வரும்போதுதான் அவர் முன்பு

அஞ்சி நடுங்கி நிற்கும் நிலையை நினைத்துப் பிறர் நிலையும அத்தகையதென்று உணர்ந்து அருள் மேற்கொள்ளுதல் சிறந்தது என்று அருளை வற்புறுத்தினர்.

அருள்நெறியை மேற்கொண்டொழுகுவோர் எங்ஙனம் ஒழுகுதல வேண்டும் என்பது உணர்த்துவதற்கு முதற்படியாகப் புலால் மறுத்தல் கூறபபெறுகிறது. தன் ஊனைப் பெருக்கப் பிறிதொரு உயிரின் ஊனை உண்ணுபவன் எவ்வாறு அருளை நடதத வல்லவனுவான்? அவனால் அருள் நெறியில் நிற்றல் இயலாது. ஆதலால் ஊனைத துறததல் வேண்டும. காவாதவர்க்குப் பொருட் பயனில்லாமற் போவது போன்று ஊன் தின்பவருக்கு அருட்பயனில்லை. ஒன்றன் உடலைச் சுவைத்து உண்டவரின் மனம், படைக்கலக் கருவியை உடையவர் மனம கொல்லுதலையே குறிக்கொண்டு நோக்குவதுபோல அவ் வூனையே நோக்குவதன்றி அருளை நோக்காது. அருள் என்பதே கொல்லாமைதான். அருள் அல்லாதது எதுவெனின் அதுவே கொல்லுதல். அங்ஙனம் கொன்ற ஊனைத் தின்பது தீவினை. ஊனை உண்டாரை நரகந்தானும விழுங்கிவிடும்; பின்னர் வெளியில் உமிழ்தலும் செய்யாது. விலையூன் தின்பதுங் கொலைக்குக் காரணமாதலால் அதுவுங் குறறம். புலால் பிறிதோருடம்பின் புண்தானே. அதனை உணர்பவர் உண்ணுதல் கூடாது. மயக்கமாகிய குற்றத்தில் நீஙகியவர் ஊனுண்ண மாட்டார். ஓர் உயிரை நீக்கி ஊனுண்ணுத அறம் ஆயிரம் வேள்வி செய்தலினும் சிறந்தது. இங்ஙனம் புலால் மறுத்து அருளுடையவனுயினனை உலகம் கைகூப்பி வணஙகும். அவரே வணங்கத்தக்கவர் என்பது.

புலால் மறுத்து அருளை மேற்கொண்டவர்களே தவம் புரிவதற்கு உரியர்; அவர்கள் தமக்கு வந்த நோயைப் பொறுத்தலும் பிற உயிர்க்குத் தீங்கு புரிதலும் கூடாது. அத்தகைய பொறையும் உறுகண் செய்யாமையுமே தவத்தின் முளை. தவமும் தவத்தை மேன்மேலும் செய்யும் முயற்சியுடையார்க்கே ஆகும். அங்ஙனம் வளர்க்காதவர் தவக்கொள்கைகளை மேற்கொள்வது வீண். மற்றையோர்

தவத்தை எதனால் மறந்தாரோ? அது மறக்கத்தக்கதன்றே? தவத்தால் பகைவரை அழித்தலும் தம்மை வழிபடுவாரை ஆக்கலும் உண்டாகும். தவத்தால் வேண்டியவற்றை வேண்டியவாறே பெறலாம் தவஞ்செய்வோரே தம் காரியத்தைச் செய்வார் ; மற்றையோர் அவாவினால் அவம் செய்வோரே யாவார். தவ வலிமையால் கூற்றுவனை வெல்லு தலும் கூடும்.

தவத்தினர் கூடாவொழுக்கத்தைக் கனவிலுங் கருதுத லாகாது. கருதினால் அவரது வான்போன்ற தோற்றம் பயனற்றுப் போகும். கூடாவொழுக்கம் என்ன கொடிது செய்தோமென்று தாமே இரங்கும்படி பல துன்பங்களை விளைவிக்கும். ஆதலால் அது நீக்குக.

மேலும் துறவோர் பிறர் பொருளைக் கவரக் கருதுதல் கூடாது. அது அருளுக்கு முரண். அங்ஙனம் பிறர் பொருளைக் களவிற்கொள்வோர் கெடுவர். அவர்களுடைய உயிர் வீடுபெறுதலும் தவறும்.

தவத்தோர் தாம் தவத்திற்கண்ட பொருளையே ஒழுங்காக உரைத்தல் வேண்டும்; பொய் கூடாது; யாதொன் றுந் தீமையில்லாததையே மொழிதல் வேண்டும்.

மனத்தோடு பொருந்திய வாய்மை மொழிவோனே தவமுந் தானமுஞ் செய்வோரினும் தலைமை வாய்ந்தவன். பொய்யாமையே புகழ். வாய்மையே தூய்மை ; அதுவே விளக்கு ; வாய்மையைப் போன்ற சிறந்தது வேறு எதுவு மில்லை.

வாய்மை மொழிவதும் வெகுளாமல் மொழிய வேண் டும். சினம் தவத்தைக் கெடுக்கும். உள்ளத்தாலும் வெகுளியை நினைத்தல் கூடாது. அவ்வாறு நினையாம லிருந்தால் அவன் நினைத்தவெல்லாம் பெறுவான்.

"எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணாசெய் யாமை தலை" (கூள)

என்றவாறு இன்னு செய்தலை முற்றுந் தவிர்தல் நன்று. தனக்கு இன்னு செய்தாரை நன்னயஞ் செய்து வெல்ல வேண்டும்.

துறவோர் ஒருயிரையுங் கொல்லுதலாகாது. கொல்லாமை மேற்கொண்டொழுகுவோன் வாழ்நாளைக் கவரக் கூற்றுவன் அணுகமாட்டான். கொல்லாமை சூழும் நெறியே நல்ல நெறி. கொல்லாதவனே தலைமை வாய்ந்தவன்.

துறவோர் உறக்கம் வருவதுபோற் சாக்காடும் விழிப்பு வருவதுபோற் பிறப்பும் வருமென்று உணர்ந்து எல்லாப் பொருளின்கண்ணும் பற்றுதலை விடல்வேண்டும் அவ்வாறு பற்றற்ற விடத்தேதான் பிறப்பு அறும். பற்றற்றான் பற்றினைப்பற்றித் தன் பற்றினை அறுத்தல்வேண்டும். பற்றறுத்து மெய்யுணர்தல் வேண்டும். மெய்ப்பொருள் காண்பதே அறிவு. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ் செம்பொருளைக் காணல்வேண்டும்.

தமக்கு உரிய சார்பு உணர்ந்து வேறு சார்பினை அறுத்தால் பழைய துன்பங்கள் சாரா.

காமம், வெகுளி, மயக்கம் இவற்றைப் பெயரளவினுங் கூட இல்லையாம்படி கெடுத்தல்வேண்டும். வஞ்சிக்கின்ற அவாவினை வஞ்சித்து வெல்வோனே வீடுபேற்றுக்கு உரியவன்.

அவாவெனுந் துன்பம் நீங்கினல் அத் துறவிக்கு இன்பம்—பேரின்பம் இடையறாது வளரும். அத் துறவி பேரா இயற்கையாகிய வீடுபேறடைவான்.

## முடிப்பு மொழி

இதுவரை கூறியவற்றால் அழுத்தமாக உணரத் தக்கது விடாமுயற்சியே. ஓய்வு நாள் வேண்டும்; வாளா விருத்தல் நன்று என்று கருதுதல் தவறு. அறநெறியில் நடப்போர் இடையீடின்றி முயலுதல் வேண்டும். வீழ்

நாள் படாஅமை நன்றாற்றவேண்டும். நன்று என்பது அறம். அதனை உள்ளத்தாலும் உரையாலும் செயலா லும் புரிதல்வேண்டும்.

இல்லறத்தினர் இயல்புடைய மூவருக்கும் துறந்தார்க் குந் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் உதவுதல்வேண் டும். தென்புலத்தார்நெறி முதலிய ஐவகைநெறிகளையும் ஓம்புதல் வேண்டும். ஒழுக்கம் நிரம்பியவராய்ப் பழிக்கு அஞ்சிப் பொருள் ஈட்டி ஈதல் என்னும் பேரறஞ் செய்து புகழுடன் வாழ்தல்வேண்டும்.

துறவோர் அருள்மேற்கொண்டு அவாவறுத்துப் பேராஇயற்கை பெறல்வேண்டும். இருதிறத்தார் வாழ் வும் செருக்கின்றிச் சினமின்றிச் சிறுமையின்றித் திகழ்ந் தால் பெருக்கமுடையதாகும்.

> "செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
> பெருக்கம் பெருமித நீர்த்து." (சஉக)

இத்தகைய குற்றமற்ற பெருமித வாழ்வு வாழ வழி வகுத்த ஆசிரியர் திருவள்ளுவர் திருவடிகள் போற்றி.

# உ. பொருள்

[பேராசிரியர், ஆ. சேபரத்தினம், எம்.ஏ.,]

## முன்னுரை

அறவாழ்வினை இல்லறம் துறவறம் என வகுத்துக் கூறப் புக்க நாயனார், அவ் விருவகை வாழ்வுக்கும் உயிராகிய அறத்தினை அறததுப்பாலின் முதல் அதிகாரமாகக் கூருது, நான்காம் அதிகாரமாகக் கூறியுள்ளார். முதல் மூன்று அதிகாரங்களினும, அறம் வாழ்தற்குக் காரணமாயுள்ள கடவுள், மழை, நீத்தார் பெருமை ஆகிய மூன்றனையும் கூறுகின்றார். கடவுள் நம்பிக்கையும் வழிபாடுமின்றி அறப்பற்று இல்லை; வான் பெய்தலின்றி அறப்பயிர் தழைத்தல் இல்லை; நீத்தாரிலாது அறத்தினை உள்ளவாறு உணர்த்துவாருமிலராவார். எனவே, இம் மூன்றும் அறத்துக்கு உயிரும் உறுதுணையுமாதலின், இவற்றுக்கு முதலிடம் கொடுக்கின்றார் ஆசிரியர்.

வீடு எய்துதலே உயிர்களின் விழுமிய நோக்கமாய் இருப்ப, நாற்பொருளும் கூறவந்த நாயனார் அறம் பொருள் இன்பம் ஆகிய முப்பொருளுமே யுரைத்து, நான்காவதாகிய வீட்டினைப்பற்றி ஓர் அதிகாரம் தானும் கூருது விடுத்தார். என்னை? 'வீடென்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாதலின், துறவறமாகிய காரணவகையாற் கூறினல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின்' என்பர் பரிமேலழகர்.

காரணம் உரைத்தலால், காரியத்தைப் பெறவைத்தல் நூலுரைக்கும் மேலோர் கையாளும் ஓர் உத்தி. முப்பானெட்டு அதிகாரங்களால் அறததினை விளக்கிப் போந்த

தேவர், எழுபானதிகாரங்களில் பொருளின் திறத்தினைப் புகலுகின்றார். இவற்றுள் 'பொருள் செயல்வகை' என்னும் அதிகாரம் ஒன்றே பொருள்பற்றி நேர்முகமாகக் கூறுவது. ஏனை அதிகாரங்கள் பொருள் ஆதற்கும் போதற்கும், பொருளால் வாழ்தற்கும் வீழ்தற்கும் புறக்காரணமாயுள்ள ஆட்சி இயல்பையும், அகக்காரணமாயுள்ள குடிமை முதலிய பண்புகளையும் பகர்கின்றன.

நல்மன்னனது நல்லாட்சியில் மக்கள் பொருட்பேறு எய்திப் பெருவாழ்வு வாழ்வர். தீயமன்னனது தீய ஆட்சியில் நாடு நாடாகாது, கடும்புலி வாழும் காடாகிவிடும். மக்கள் வாழ்வு குலைந்து வறுமையால் வாடுவர். இவ்வுண்மையை இக்காலத்து வாழும் நமக்கு யாரும் எடுத்துரைக்கவேண்டுவதில்லை. மக்கள் நலம் கருதாது தம் நலமே கருதிய ஆங்கிலரது ஆட்சிக் காலத்து, அறம் பொருள் இன்பமெல்லாம் இழந்து, நம் நாடு தாழ்வுற்றுக் கிடந்தமையும், மக்கள் ஆட்சி நிலவும் இக்காலத்தில் எல்லாத் துறைகளிலும் மக்கள் ஏற்றமுறுதற் பொருட்டு இமயப் பெருமுயற்சிகள் செய்யப்படுகின்றமையும் நாம் அறிந்தவை.

நமது முன்னோரும் இப் பேருண்மையை நன்குணர்ந்திருந்தனர். பசியால் வாடும் ஒருவனுக்கு உணவு கொடுப்பவன், நீரும் சோறுமாகிய உணவினைக் கொடுப்பவனுகான், உயிரினையே கொடுத்தவனுவான் என்று, பெற்ற தந்தை கைவிட்ட பெண்குழந்தைக்கு உற்ற தந்தையாய் வந்து காப்பியச் சிறப்பளித்த உத்தமர் சாத்தனுர் உரைக்கின்றார். நெல்லும் உயிரே, நீரும் உயிரே என்பதில் நம்மவர்க்கு ஐயமில்லை. ஆயினும் மக்களுக்கு உணவாய், உயிராய் இருக்கும் அந் நெல்லுக்கும் நீருக்குமே உயிராய் மற்றொன்று உளது என்பதனையும் அஃகா அறிவின் எஃகுடையாராகிய நம் முன்னோர் கண்டிருந்தனர்.

> "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
> மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்." (புறம் : ௧௮௬)

இவ் வுலகத்து உயிர்கட்கு மன்னனே உயிர், வேறு உயிர் இல்லை.

உயிர் மன்னர் வாழ்தற்குரிய நல் உடலாக இருந்தான் தசரதன் என்று கவியரசர் கம்பர் குறிக்கின்றார். உயிருக்கு இன்ப துன்பங்கள் இயல்பில் இல்லை. உடல் நலமாய் இருந்தால் உயிரும் நலமாக இருக்கின்றது. உடல் நோயுற்றிருந்தால் உயிரும் நோயுற்றுத் துன்புறுகின்றது. நாட்டின் மக்களும் தாமாக நல்லோரே யாவர்; முயற்சியால் பொருள் ஈட்டி அறமும இன்பமும் புரிந்து நல்வாழ்வு வாழ அறிந்தோரே யாவர். அரசன் நல்லவனாயின் நல்ல உடலில் உறையும் உயிர்போல அவரும நலமுறுவர்; அரசன் தீயோனாயின் நோயுற்ற உடலில் உறையும் உயிர்போல அவரும் துன்புற்றுத் தவிப்பர்.

மக்கள் உடலாவர், மன்னன் அவர்க்கு உயிராவான். அன்றி, மன்னன் உடலாவன், மக்கள் அவ் வுடலில் உறையும் உயிராவார். இவ் விரண்டு உவமைப் பொருத்தங்களாலும் பெறப்படும் உண்மை ஒன்றே. நல் ஆட்சி நிலவும் நாட்டிலேதான் மக்கள் நல்வாழ்வு வாழமுடியும். இதனைச் சாத்தனார் ஆதிய புலவர் பெருமக்கள் தாம் அறிந்திருந்தனர், ஏனைமக்கள் அறிந்திலர் என்று கூறுதற்கில்லை.

கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணமாகி, முதல் நாளிரவிலே பொற்கொடிமாதர்கள் அவர்களை மங்கல நல் அமளியில் ஏற்றுகிறார்கள். 'இன்று கூடும் நீவிர் என்றும் பிரியாது கூடி வாழ்வீராக' என்று மலர்தூவி அவர்களை வாழ்த்துகின்றனர் அம் மங்கைநல்லார். அவர்கள் வாழ்த்து அதனோடு அமையவில்லை. 'இமயம் வென்ற வெற்றி என்றும் சோழனுக்கே உரியதாக நிலைக்குமாக' என்றும் வாழ்த்துகின்றனர். தம் மன்னனது ஆட்சிச் சிறப்பே தமது வாழ்க்கைச் சிறப்பு என்பதைக் காவிரிப்பூம் பட்டினத்து மக்கள் அறிந்திருந்தனர். கானல்வரியில் காதல் கோவலனை இழந்த மாதவி தமியளாய் வந்து வீட்டை அடைகின்றாள். 'இமயம் என்ன, சக்கரவாளமும் எங்கள் மன்னன் செம்பியனது குடையின் கீழதாகுக' என்று வாழ்த்திக்கொண்டே அவள் படுக்கைக்குச் செல்கின்றாள். வாழ்க்கையில் இன்பமே வரினும், துன்பமே உறினும்.

இங்ஙனம் மன்னனது ஆட்சியில் நம்பிக்கை வைத்து மக்கள் வாழ்ந்து வந்தனர்.

வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவது பொருள். பொருள் படைத்தவர்க்கே இவ்வுலகத்து இன்பங்கள் உளவாம் என்று நாயனாரே நவின்றுள்ளார். அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றனுள், நடுவண் நிற்பதாகிய பொருள் ஒன்றனை அடைந்துவிட்டாலே, மறுமைக்கு உதவுவதாகிய அறத்தினையும் இம்மைப் பேறாகிய இன்பத்தினையும் ஒருவன் எய்திவிடலாம்.

> " அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
> தீதுஇன்றி வந்த பொருள்." (எஙச)

> " ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
> ஏனை இரண்டும் ஒருங்கு." (எசு0)

'நடுவணது எய்த இருதலையும் எய்தும்' என்று மற்றொரு அறிஞரும் கூறுகின்றார்.

அருளில்லாதவர்க்கு வீட்டுலகத்து இன்பம் இல்லை. இம்மை இன்பத்துக்குப் பொருள் உதவுகின்றது எனின், அம்மை இன்பததுக்கு அருள் உதவுகின்றது. அந்த அருள்தானும் எங்ஙனம பிறந்து வளர்கின்றது? உறவினர் நண்பராகிய அறிந்தாரைக் கண்டு நெகிழ்ச்சியுறுகின்றது மனம். அம் மனநெகிழ்ச்சியே அன்பு. இவ் அன்புத்தாய் வளர்ந்து, முன்னர் அறியாதாராகிய மக்களிடத்தும் அயலவாகிய உயிர்களிடத்தும் பரிவுகூர்கின்றாள். அப் பரிவே வீட்டுலக இன்பத்துக்கேதுவாகிய அருள். அன்புத்தாய் ஈன்ற அருமைக் குழவியே அருள். இனி, இவ் வருட்குழவி, யாரால் வளர்ந்து முதிர்ச்சி எய்துகின்றது? செல்வம் என்னும் செவிலித்தாயே அருளாம் குழவியைப் பேணி வளர்க்கின்றாள்.

> " அருள்என்னும் அன்புஈன் குழவி, பொருள்என்னும்
> செல்வச் செவிலியால் உண்டு." (எஙஎ)

அம்மமம, பொருளின் சிறப்பு எத்தகைத்து! இம்மை வாழ்வுக்கும் அது எத்துணை இன்றியமையாதது! இத்தகு பொருளின் பெருமையினை,

“பணமே யெனைப்படைத்த பாக்கியவா னேவங்
கணமேயென் னுருயிரே கண்ணே—குணநிதியே
சாம்புநதி தீரத்துஞ் சாளக் கிராமத்தும்
மேம்படுசித் தாதிகள்செய் வித்தையிலும்—தேம்பொழியும்
பன்றி மலையினுநீ பண்டுபிறந் தாயங்கு
நின்றுலக மெங்கும் நிறைந்திட்டாய்—ஒன்றுகேள்
ஈசனுக் கொப்பென்பா ரீசனையுண் டாக்கியவன்
பூசனைநீ செய்விப்பாய் புண்ணியா—பேசுங்கால்
மூவர் கடவுளர்கண் மூவரிலொன் றானதனித்
தேவன் மகிமைதனைச் சென்றேத்தற்—காவதுபோல்
சின்மயமா மூன்றுடனே செம்புவெள்ளி சேர்ந்தாலும்
உன்மயமே யெங்கு முயாசகிகாண்—பொன்மகளை
மார்புதனின் மாயோன் வரிசையா வைத்ததுநின்
பேர்மகிமை கண்டாய் பெரியோனே—பாருலகில்
ஆன்ற பலகோடி யாத்மவர்க்க மத்தனையும்
ஈன்ற பிரமனுநீ யீன்றமகன்—தோன்றுமொரு
நற்பொருளுண் டாங்கவன்ற னுமை யிரணிய
கெற்பனென்று சொல்வதுநான் கேட்டிலனோ—கற்பனையால்
ஆங்கவனுண் டாக்குமகி லாண்டகோடி யெல்லாம்
தாங்குமக மேருவுநீ தானன்றோ” (பணவிடுதூது)

என்று பலவாறு போற்றி யுரைக்கின்றார் பிற்காலப் புலவர் பெருமான் ஒருவர்.

உடலுக்குச் சிறந்தது உயிர். உயிர்க்குச் சிறந்தது அறம். அறத்தை விளைப்பது பொருள். மக்கள் அப் பொருளை ஈட்டித் தாம் நுகர்ந்தும், பிறரை நுகர்வித்தும் வாழ்தற்கு வாய்ப்பு அளிப்பவன் மன்னன். அவன் மனிதப் பிறப்பினனே யாயினும் கண்கண்ட கடவுளாவன். அவன் நல்லவனாக இருத்தலினாலேயே மழை பெய்கிறது; தொழில்கள் நடக்கின்றன; எட்டுத் திசைகளும் விளைகின்றன;

உணவுக் கவலையின்றி மக்கள் தத்தம் நெறியில் நிற்கின்றனர்.

> " முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
> இறைஎன்று வைக்கப் படும்." (௩அஅ)

மன்னவன் என்பது அவன் ஒருவனை மட்டும் குறிப்பதன்று. அவனையும் அவனது ஆட்சிக்கு உறுப்பான அமைச்சர் முதலியோரையும், அரண் முதலியவற்றையும் குறிக்கு மென்பது கூறல் வேண்டா. அரசன் ஆட்சித் தலைவன். அவனைப் போன்றே, பிற உறுப்புக்களும ஆட்சிக்குச் சிறந்தனவே ஆதலின் ஆசிரியர் பொருட்பாலில், ஆட்சித் தலைவனாகிய அரசனது இயல்கள்பற்றி இருநூற்றைம்பது குறள்கள் எழுதியுள்ளார். அதன்பின், முந்நூற்றிருபது குறள்களால் அமைச்சன் முதலிய ஆட்சி அங்கங்கள் பலவற்றின் இயல்களையும் தெரிக்கின்றார். பின்னர், நூற்றுமுப்பது குறள்களில் நாட்டு மக்களின் இயல்கள் உரைக்கப்படுகின்றன. அரசனும் அவனின் அங்கங்களும் சிறக்கவமைந்து, அவற்றால் ஆட்சியுமசிறக்குமாயின், நாட்டில் உழவும் தொழிலும் மேம்பட்டுப் பொருள் மிகுந்து மக்கள் நலமுற வாழ்வா.

ஆட்சிக்கு உறுப்பாவன ஆறு அவை படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்பன

> " படை குடி கூழ் அமைசசு நட்பு அரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு." (௩அக)

இவற்றையன்றி, தூது, ஒற்று ஆகிய உள்ளுறுப்புக்களும் ஆட்சிக்கு உள. பேருறுப்புக்களும் சிற்றுறுப்புக்களும் அடங்கிய எந்திரம் போன்றது ஆட்சி. அந்த எந்திரத்தினை முறையறிந்து இயக்கும் பொறிவல்லானைப் போன்றவன் அரசன். எந்திரத்தின் இயக்கத்தால் விளையும் பயன் போன்றது நல்லாட்சியில் மக்கள் எய்தும் பொருளும், அப் பொருளால் விளையும அறனும் இன்பமும். ஆகவே, அரசனையும் அவனுக்கு உறுப்பாய் அமைவனவற்றையும் பற்றி அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்னும் மூன்று

இயல்களில், எழுபான் அதிகாரங்களில், ஏழு நூறு குறள் களில் நாயனுர் கூறும் திறத்தை இனிக் காண்பாம்.

## 1. அரசியல்

ஆட்சித் தலைவன் அரசன். ஆட்சி மாட்சியுடையதாக அமைதற்கு ஆறு புறக் கருவிகள் வேண்டும். அவற்றுள் ஒன்று குறையினும் ஆட்சி செவ்வன் நடைபெறுது. அவற்றினையே முன்னர் ஆறு அங்கங்கள் என்று குறித்தோம். அவை, படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்பன. ஒருவன் கையகததுக் கூரிய ஒளவாள் இருக்கின்றது. ஆனல் அதனை வாய்ப்ப எறியும ஆண்மை அவனுக்கு இலலையேல், அவன் ஏநதிய வாளால் யாது பயன்? அங்ஙனமே, புறக கருவிகள் செமமையாக அமைந்திருந்தும், அவற்றைக கொணடு ஆட்சி செலுததும் அகக் கருவிகள் அரசன மாட்டு இலவாயின் ஆட்சி மாட்சியுறுது. எனவே, நாயனுர் அரசியலில் முதலதிகாரமாகிய இறைமாட்சியின் முதற் குறளில் புறக் கருவிகள் ஆறும் இன்னின்னவெனக் குறித்துவிட்டுப், பின்னர் அவவதிகாரத்தின் ஒன்பது குறளகளிலும, அவற்றின் பின்வரும இருநூற்று நாற்பது குறள்களிலும் ஆட்சிப் பாரததை வகிககும அரசனுக்கு இருக்க வேண்டிய அகக் கருவியாகிய இன்றியமையாத பண்புகளைத் தெள்ளிதின் விளக்குகிறுர.

வேந்தனுக்கு என்றும் இடைவிடாது இயல்பாகவே அமைந்திருக்க வேண்டிய பண்புகள் நான்கு. அவை, அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம். இவற்றை அடுத்து உள்ள பண்புகள் மூன்று. அவை, காரியங்களைச் செய்வதில் விரைவுடைமை, கல்வி, துணிவுடைமை. இத்தகைய பண்புகளையுடையவன் எந்நிலையிற் பிறப்பினும் நாடாளும் தலைமை எய்துவன் என்றும், இப பண்புகள் இல்லாதவன் அரசன் மகனுய் அரண்மனையிற் பிறப்பினும் நாடாளும் உரிமை இழந்து தாழ்வன் என்றும் நாம் கொள்ளலாம்.

இவ் ஏழு தாய்ப் பண்புகளோடு அரசனுக்கு இருக்க வேண்டிய கிளைப் பண்புகள் இன்னும் பலப்பல. அரசனுக்கு

மட்டுமன்றி, அரசனைப் போன்று தான் தான் இருக்கு மிடத்தில் தலைமை எய்தி வாழ்க்கை செய்ய விரும்பும் ஒவ்வொருவற்கும் இருக்கவேண்டிய நற்பண்புகளே அவை. ஆயினும், அவை அரசற்கு இன்றியமையாமை நோக்கி ஆசிரியர் தம் மறை நூலில் அவற்றை அரசியலில் பெய்துள்ளார்.

அறத்துக்குக் கேடில்லாதவாறு, நாட்டின்கண் தீயன நிகழாமற் கடிந்து, வீரத்தினின்றும் வழுவாத மானமுடையனாக அரசன் இருத்தல் வேண்டும்.

> "அறனிழுக்காது அல்லவை நீக்கி, மறன்இழுக்கா
> மானம் உடையது அரசு." (௩அ௪)

அரசனுக்குரிய உள்நாட்டுக் கொள்கையும், வெளி நாட்டுக் கொளகையும் பற்றி இக்குறள் கூறுவதாகக் கொள்ளலாம். நாட்டின் வளத்தைப பெருக்குதல், மக்கள் பகை நீஙகி நலமாக இன்புற்று வாழ்தல்—இவ்விரண்டனையுமே கரிகால் வளவன போன்ற நலல அரசன் ஒருவன் கருதியிருப்பான். வள்ளுவர் காணும் இலட்சிய மன்னனும் அத்தகையோனே. அந்த இலட்சிய மன்னன் தனது குறிக்கோளை அடைதற்கு என்ன முறையினைக் கையாளுதல் வேண்டும் என்று அவர் அறிவுறுத்துகின்றார்.

நாட்டிலே களவுக்கு இடமின்றி அதனை ஒழித்தல் வேண்டுமென்று விருமபினான் பாண்டிய மன்னன். ஆனால் கள்வனை நேரிற் கண்டு, சான்றுகள் கொண்டு ஆய்ந்து தீர்ப்பளிக்கத் தவறிவிட்டான். பாண்டியர் மரபுக்கே அதனால் இழுக்கு நேர்ந்ததும, கோவலன் மாண்டதும், மதுரை எரிந்ததும், பாண்டியனுடு மழைவறங்கூர்ந்து வறுமை எய்தி வெப்பு நோயும் குருவும் தொடர்ந்து துன்புற்றதும், பிறவும் நாம் அறியாதனவல்ல. நாட்டிலே நீதி நிலவ வேண்டும், அமைதி உலவ வேண்டும், வளம் செறிந்து மக்கள் வாழ்க்கை நலமுறல் வேண்டுமெனின், அரசன் நாட்டின்கண் தீமைகள் நேராமற் காத்தலும், அங்ஙனம் காத்தற்கு அறநெறியிற் பிறழாது நிற்றலும் வேண்டும்.

வள்ளுவர் கூறும் உள்நாட்டுக் கொள்கை இதுவே. "அறன் இழுக்காது அல்லவை நீக்குக."

இனி, அவர் கூறும் வெளிநாட்டுக் கொள்கை: வெளி நாடுகளில் நட்பு நாடுகளும் உள, பகை நாடுகளும் உள. தன் வலி கொண்டும், நட்பு நாடுகளின் துணை கொண்டும், மன்னன் தன் நாட்டைப் பகை நாடுகளினின்று பாதுகாத்தல் அவன் கடமையாகும். நெடுங்கிள்ளியைப் போன்று பகைவர்க்கஞ்சி மதிலை அடைத்துக்கொண்டிருப்பவன் மக்களைப் புறந்தரும புரவலன் ஆகான். அஞ்சாமையே அரசர்க்கு வேண்டும் முதல் இலக்கணம் என்று நாயனார் கூறியிருப்பது இவண் நோக்கத் தக்கது. ஆம், வீரருட் சிறந்த வீரனே மன்னருட் சிறந்த மன்னன் ஆவான். வீரத்தின் வழுவாத மானமுடையோனாக அரசன் இருத்தல்வேண்டும். மானமாவது, தாழாமை—பகைவாக்குப பணியாமை. பகையரசர்க்குப் பணிந்து ஒழுகாமல, நேர் நின்று பொருது அவரை மெலிவித்துத் தனக்குப் பணிவிதது, தன் நாட்டை அரசன் காத்தல் வேண்டும்.

பகையரசோடு பொருது அதனை அழித்தலே ஓர் அரசனது அயல்நாட்டுக் கொள்கையாக இருத்தல் வேண்டுமென்று கூறுவதனோடு அமையவில்லை நமது அறநூலாசிரியர். உள்நாட்டுக் காவலைப்பற்றிக் கூறுமிடத்தும், "அறநெறி பிறழாது தீச் செயல்களை ஒழிக்க," என்பதுபோல, இவ்விடத்தும், "வீரத்தின் வழுவாத மானத்துடன் ஒழுகுக," என்கின்றார். மானம் வேண்டும் அரசற்கு; ஆனால் அம் மானம் வீரத்துக்குக் குற்றம் இழைக்காத மானமாக இருத்தல் வேண்டும். பகைவன்மீது சிற்றத்துடன் செல்லுங் காலத்து அரசன் இவ்விதியினை மறந்துவிட நேரும்; அங்ஙனம் மறத்தல் அவனுக்கு அழகன்று என்பதே நாயனார் காட்டும் அறநெறி.

வீரத்துக்குக் குற்றம் நேராத மானம் யாது? ஒப்பில் உரையாசிரியர் பரிமேலழகர் அதனை இன்னதென்று தம் உரைவிளக்கத்தில் சுட்டியுள்ளார். அதனை அவர் எழுதிய

வாறே ஈண்டு எடுத்துக் காட்டுவோம்." குற்றமாய மானத்தின் நீக்குதற்கு மறனிழுக்கா மான மென்றார்; அஃதாவது,

"வீறின்மையின் விலங்காமென மதவேழமும் எறியான்
எறுண்டவர் நிகராயினும் பிறர்மிசையிலென் றெறியான்
மாறன்மையின் மறம்வா டுமென் றிளையாரையும் எறியான்
ஆறன்மையின் முதியாரையும் எறியான் அயில்உழவன்."

எனவும்,

"அழியுநர் புறக்கொடை அயில்வேல் ஓச்சான்."

எனவும் சொல்லப்படுவது, பகைவராயினோர் தோல்வியுற்று உயிர்க்கஞ்சிப் பணியுங்கால், மேலும அவா மேற் செல்லற்க, அது வீரமாகாது என்பதே முடிநத பொருளாகும. கலப்பற்ற அறம், கலப்பற்ற வீரம் ஆகிய இரண்டன் அடிப்படையிலும் அரசன் தன் உள்நாட்டுக் கொள்கை, அயல்நாட்டுக் கொளகை ஆகிய இரண்டனையும் அமைததுககொண்டு காவற் சாகாடுய்ததலை வற்புறுத்துகினறா வள்ளுவா.

அரசனுக்குரிய இயல்புகள் அமைந்து, கொள்கைகளையும தெரிந்துகொண்ட பின், ஓர் அரசனுக்கு வேண்டும் அடுத்த திறம் பொருள் நிருவாகததிறமே.

"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு!" (௩௮௫)

நிதி நிருவாகததில் நாயனார் நான்கு நிலைகளைக் குறிக்கின்றார். முதலாவது, அரசன் தனக்குப் பொருள்வரும வழிகளை மேன்மேலும் உளவாக்குதல். இரண்டாவது, அவ்வழிகள் பலவற்றானும் வரும் பொருள்களை ஒருவழி தொகுத்தல். மூன்றாவது, அங்ஙனம் தொகுத்தவற்றைப் பகைவரும், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலிய பிறரும் கொண்டு செல்லாதபடி காத்தல், நான்காவது, காத்துவைத்த பொருட்களை அறம, பொருள், இன்பம் வினையுமாறு செலவிடுதல்.

"பொருள்களாவன மணி, பொன், நெல் முதலியன. அவை வரும் வழிகளாவன பகைவரை

திறைகோடலும், தன்னுடு தலையளித்தலும் முதலாயின.”

சமயத்துறையிலும், கல்விததுறையிலும், மக்களின் வறுமையை ஒழிக்கும் ஆக்கத்துறைகளிலும் செலவிடுதல் அறத்தின் பொருட்டுக் கொடுத்தலாகும். படைகட்கும் படைக்கலங்கட்கும், நாட்டுக்கும், அரண் அமைப்புக்கும் செலவிடுதல் பொருளின் பொருட்டுக கொடுத்தலாகும். மண்டபம், வாவி, செய்குன்று, இளமரக்கா, பூங்கா முதலியவற்றுக்குச் செலவிடுதல இன்பததின் பொருட்டுக் கொடுததலாகும. இவ்வாறு இஙகுக் கூறிய நான்கு நிலையிலும பொருளை ஆளவல்லானே மக்களை ஆளவல்ல அரசனுவன்.

இனி, அரசற்கு வேண்டிய மற்ருெரு இலக்கணததை வகுக்கின்ருர் நாயனுர். முற்கூறிய பண்புகளும, பொருளை ஆக்கி அளிககும் திறமும உடையோனுக இருப்பினும், முறை செய்ய அறியானுயின் அவன் அரசனுகான. முறை யாவது அறநூலும, நீதிநூலும் சொல்லும் நெறியில் ஆட்சி புரிதலாம.

வலியரால் நலிவெய்தியவர் அரசன்பால் முறை வேண்டி வருவர். பொருளும பிறவும் இன்மையால் துயர் உழப்போர தம் குறை தீர வேண்டி அவன்பால செல்வர். இதனை இக்காலத்து வழக்குடைய மக்கள், நீதிமன்றத்தை நாடுவதுபோன்றும, அமைச்சர்களிடம தமக்குக் குளம் வேண்டும், வாய்ககால் வேண்டும், குடிதண்ணீர் வேண்டும், மின் ஆற்றல் வேண்டும், ஆலைகள வேண்டும், சாலைகள் வேண்டும என்று விண்ணபபம் செய்துகொள்வது போன்றும கருதலாம். எண்ணற்ற மக்களின் எண்ணற்ற குறைகளையும் முறைகளையும் கேட்டுக் கேட்டு மன்னன் அலுத்துப்போகலாம, சலித்துப்போகலாம் ஆயினும், அவனே சேய்மாட்டு அன்புடைய தாய் போன்று பொறுமையுடன் கேட்டு முடிபபித்தல்வேண்டும்.

ஆட்சிமுறையில் இத்தகைய நிலை நேர்தல் கூடாதென்பது நாயனுர் கூறும் அறிவுரை. அரசன், முறைவேண்டினும் குறைவேண்டினும் தன்னைக் காண்பதற்கு எளிய

னாய் இருத்தல் வேண்டும். பின்னைத் தன்னைக் கண்ட மக்கள்பால் அவன் கடுஞ்சொற் கூறுதல் கூடாது. இனிய சொற்களைப் பேசி, அவர்கட்கு வேண்டுவன நல்கி அவர்கள் பால் அளிகூர்தலும் வேண்டும். மக்கள் தான் பெற்ற மக்களேயாகத் தான் அவர்கட்குத் தந்தையே ஆதல் வேண்டும். இத்தகைய மன்னன் ஆளும் நாட்டையும், அந்நாட்டில் வாழும் மக்களையும் பிறநாட்டு மக்கள் உயர்த்துக் கூறுவர். அவர்தாமும அவ்வரசனது குடிகளாக வாழ விழைவர். ஏனெனின், அவன் பிறப்பால மகனேயாயினும செயலால் கடவுளேயாவன்.

இதுவரை இறைமாட்சி என்னும் முதல் அதிகாரத்தின் எட்டுக் குறள்களில், நம் அறிவின் மன்னர் அறத்தில் வல்லராகிய வள்ளுவர், வகுக்கும் இலட்சியமன்னனது இலக்கண நுட்பங்களைக் கண்டோம. இனியும் அவனுக்கு இன்றியமையாது வேண்டும் பண்பு ஒன்று உளது. அதனையும் நாயனார் மறந்தாரல்லர். அரசன் நல்லனாதலின், அவன் உழையிருக்கும் அமைச்சர் முதலிய பிறரும் நல்லோரேயாவர். அவர்கள தம் அரசன் ஏதேனும் ஒரு வாற்றான் மயங்கித் தவறாயின செய்யப்புகுங்கால், மக்கள் நலம் கருதி அவர்கள் அவனைக் கடிவர். அரசன் அவர்கள் கூறுவதனை நன்குணர்ந்து உடன்படானாயின் அவர்கள் அவ்வளவோடு அமையார். ஒருகால் அரசன் வெகுள்வானாயின் தமக்கு ஏதம வருங்கொல் என்று அஞசார். மீண்டும அரசனை இடித்து உரைப்பர். அரசனது செவி கைக்குமாறு கடுஞ்சொற் கூறியேனும் அவனைத் திருத்த முற்படுவர். அப்போது அரசன் அவர்கள் அறிவுரையினை ஏற்று நெறிநிற்றல் வேண்டும். இஃது அரசற்கு ஓர் உயரிய பண்பு. தன்னைத் துன்புறுக்கும் சொற்களை எண்ணாது, தன் மக்களின் துன்பம் துடைக்கும்வகையினையே எண்ணும் அன்புடைய மன்னன் ஒரு நாட்டுக்கு மட்டுமல்ல, இவ்வுலகனைத்துக்கும் உரிய மன்னனாவான். இன்றைய உலக அரசியலில் நம் முதலமைச்சர் நேரு அவர்கள் எய்திவரும் நிலை இதுவேயன்றோ? அணுப்படை வாயுப்

படைகளின் கொடுமைக்குத் தப்பி உய்தற்கு உலகம் நேருவை எதிர்நோக்கியிருக்கின்றது.

இறைமாட்சியின் இறுதிக்குறள் இதுவரை வள்ளுவர் வகுத்த அரச உருவுக்கு உயிர் அளிக்கின்றது. மன்னனாக இருப்பவன் மன்னனாக உடை அணிந்து, முறை செய்து வாழ்வதுமட்டும் போதாது. மன்னன் மன்னனுக்குரிய ஆன்ம ஒளி படைத்த மன்னனாகவே இருத்தல் வேண்டும் மன்னனுக்குரிய ஆன்ம ஒளி யாது? வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும், யாவர்க்கும் தலையளி செய்தலும், முறைசெய்தலும், தளர்ந்த குடிகளைப் பேணுதலுமாகிய நான்குமாம. அந்நான்கினையுமுடைய வேந்தன் வேந்தனாக விளங்குவான். அவன் ஒளி ஏனை ஏந்தல்களின் ஒளியை வென்றுவிடுகின்றது.

> "கொடையளி செஙகோல் குடியோம்பல் நான்கும்
> உடையானும் வேந்தர்க்கு ஒளி" (நகo)

இஙஙனம புறககருவிகளும அகககருவிகளும அமைநது மாட்சியுற்று விளஙகும ஓர் அரசனைப பத்துக் குறள்களில் நாயனார் படைத்துவிட்டார். ஆனால் மிக எளிதாக அவர் அவனைப படைத்துவிடவிலலை. அஃதாவது மாட்சியுள்ள ஓர் இறை தோனறுவது எளிதன்று. பொன்னால் அழகிய ஓர் உருவினைச் சமைததற்குச் சமைப்போனது தொழில் திறம் மட்டும் போதாது போதிய அளவு விலைமிக்க ஆடகப்பொன்னும் வேண்டும் வள்ளுவர் காணும் இலட்சிய மன்னனும பொன்திரள் போனறு, கலவி, கேள்வி, அறிவுடைமை, குற்றஙகடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ்சேராமை, தெரிந்து செயல்வகை, வலியறிதல், காலமறிதல், இடனறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றந்தழால், பொச்சாவாமை, செங்கோன்மை, வெருவந்த செய்யாமை, கண்ணோட்டம், ஒற்றாடல், ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கணழியாமை ஆகிய இருபத்திரண்டு பண்புகளின் சேர்க்கையால் அமைந்து மிளிரல் வேண்டும்.

இப்பண்புகளில் ஒற்றுடல் முதலியன சில, அரசனுக்கே பெரும்பாலும் உரியவை. ஏனைய பண்புகள், மக்கள் நடுவே தலைமை எய்தி வாழ விழையும் நமபோலியார்க்கும் உரிய பொதுப்பண்புகளே. இவையாவும் அரசியலில் கூறப்பட்டுள்ளமையால், அரசனுக்கே உரியவை என்று கருதி, அவற்றை நமது வாழ்க்கையினும் போற்றாது ஒழுகுதல் தந்தை தந்த பெருஞ் செல்வத்தைத் தனயன தனக்கு வேண்டாவென்று தள்ளுவதை ஒக்கும். 'எல்லாரும் இந்நாட்டு மன்னா' என்று, புதுமைக் கவி பாரதி அரசியல் அடிமையுற்றுத் தாழ்ந்த தமிழர்க்குச் சாற்றி, அரசியல் விழிப்பூட்டினார். ஆனால் காலமும் தூரமும் கடந்த அமரகவி வள்ளுவர், அறியாமை, மடியுடைமை, ஊக்கமின்மை, இடுக்கணழிதல முதலியவற்றுக்கு அடிமைப்பட்டு, மன்னா எனச் செம்மாந்து வாழும் தகுதியிழந்து சிறுமையுற்று மடிவாரை உயிர்ப்பிக்கும் அமுதமாகத் தமிழர்க்குக் குறள் மந்திரத்தை அருளிச்செய்தார். தமிழ் மகன் ஒவ்வொருவனும் கல்வி கேள்வி முதலிய தலைமைக் குணங்கள் வாய்ந்து தரணியாளும் தகுதியுடையோனாய் அமையும் தனிச்சிறப்புடைய தமிழ் இனத்தைப் படைக்கவே நம் தெய்வப்புலவா விரும்பினார். இதனை இன்னமும் சிறிது விளக்கமுறச் சொன்னால், அரசனும் குடிகளும் தத்தம் கடமையும் உரிமையும் உணர்ந்து ஒழுகும் பெருமைப்பாலோராக நாடு விளங்குதல் வேண்டும் என்பதே நம் அரசியல் சாணக்கியா முடித்துரைக்கும் அரசியலாம்.

அரசனை ஆக்குவனவாக இருபானிரண்டு பண்புகளைக் கூறிய ஆசிரியா, ஒருவன் அரசமரபிற் பிறந்து ஆட்சிக்கு உரிமையுடையோனாய் இருப்பினும், அவனை உண்மை அரசனாகவொட்டாது அழித்துவிடும் இயல்கள் இரண்டனையும் உடன் கூறியுள்ளார். பொன்னால் உருவமைப்போன் அப்பொன்னின் புரைகளையும் புடமிட்டுக் கழித்துப் பொன்னைத் தூய்மை செய்தல் வேண்டுமன்றோ? பொற்கிண்ணத்து வார்த்த பாலில் இரண்டே துளிக் கடுச்சேரின்

அப் பால் பருகுதற்குரிய தகுதியிழந்து விடுகின்றது. அவ்வாறே அரச மரபில் வந்தோனாயினும ஒருவன் கல்லாமை, கொடுங்கோன்மை ஆகிய இரண்டு இயல்களும் உடையோனாயின அவன் மன்னன ஆகான், மகனும் ஆகான், விலங்கே யாவன் என்றுரைக்கினறார் நாயனார்.

அரசர் இல்லத்தில், ஏன் செல்வர் இல்லத்திலும் பிறந்து வளர்வோரிற பெரும்பாலோர், பொருள்படைத் திருக்கும் போகிக்காரணததால், அடஙகியிருந்து கல்வி கறறற்கு இணஙகாராய், விடரொடும் தூர்ததரொடும கூடி, நகைபயின்று, மனம்போகும் போக்கில் தீநெறிச் செல்லு தல் நாம காண்பதொன்று. கல்லாக் களிகருணமும், பிறப் பால் தாம் பெற்றுளள வலிசசெருககால மெலியாரை நலிவிக்கும் நயககேடும உளளார, பயிரை மேயும் வேலி போலக் கொலைஞரினும கொடியா ஆவர். அவர் ஆளும் நாட்டில் பருவமழை பெய்யாது, பசுககள பால் குன்றும், மேன்மக்களும தாம பயின்ற நூல் நெறிகளை மறந்து விடுவர். இறுதியில் அததகைய மன்னன் ஆளும நாடு பகைமன்னர் உடைமையாகிவிடும. ஆங்கிலர் ஆட்சிக்கு முன்னா நம் நாட்டினைப் பகுதது ஆண்ட இந்திய மன்னர் பலரும் கல்லாக் கீழ்மககளாயக் கொடுங்கோனமை புரிந்து இருநதமையும், அதனால் நாடு உற்ற சிறுமையும் நாம் நன்கறிந்தவையே.

மன்னனாக இருத்தல் மாண்பு உடையது. மக்களைக் காக்கும் அவன் கடவுட் பிறப்பாவான்.

> "திலக நீண்முடித் தேவரும் வேந்தரும்
> உலக மாந்தாகள் ஒப்பவென் றோதுப."

> "உறங்கு மாயினும் மன்னவன் தன்னொளி
> கறஙகு தெண்டிரை வையகங காக்குமால்."

யாவரும் அவனைத் தொழுவர். ஏனெனின், கல்வியறி வாலும், புலனடங்கிய ஒழுக்கத்தாலும், செங்கோன்மைத் திறத்தாலும் அத்தகைய தகுதிகள் அவனுக்கு இருக்கின் றன. ஆனால் இத் தகுதிகள் எளிதில் அமைவனவல்ல;

அரசனாக இருப்பதும் விரும்பத்தக்கதல்ல. பிறர்நலம் கருதும் வீரத் தியாகிகளே மன்னர் பதவியை வகித்திருக்க முடியும். இவ் வுண்மையையும் பொறுப்பினையும் பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே நம் தமிழ் மன்னர்கள் உணர்ந்

" மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழைஉயிர் எய்தின் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்"

எனக் கூறிச், சேர மன்னனொருவன் வாய்விட்டுப் புலம்பி இருக்கின்றான். கலதோன்றி மணதோன்றாக் காலந் தொட்டுத் தோன்றிய பழைய மன்னர் மரபிலே, மன்னர் மகனாய்ப பிறந்து மன்னர் மன்னனாய் விளங்கிய ஒருவன் ஆட்சிப் பொறுப்பைக் கண்டு, 'ஏன் இம் மரபில் பிறந்தேனோ, கடவுளே' என்று வருந்தும்போது, இக் காலத்திலே நாட்டில் பலர் ஆட்சித்துறையில இடம பெறுமபடி ஒருவரோடொருவா இகலி, மக்களிடம் பல்இளித்து வாக்குக் கேட்டு வாடும் விந்தையை எண்ணுங்கால், அவர்கள் பேதைமையை எண்ணிச் சிரிபபதோ, அன்றி நமது ஊழுக்கு இரங்கி அழுவதோ என்பது புலப்படவில்லை.

வள்ளுவர் வாழ்ந்த நாட்டிலே, திருக்குறள் வாழும் நாட்டிலே போலி ஆட்சிக்கு இடமளித்தல் கூடாது. தமிழ் அறிந்த தமிழ்மககள கடமை இது. நமது நாட்டிலே குன்றாத விளையுளைச் செய்வோரும, அறவோரும், கேடில்லாத செல்வரும தழைக்க வேண்டும்; உறுபசியும ஓவாப் பிணியும், பலகுழுவும் பாழ்செய்யும் உட்பகையும் இல்லாதிருத்தல் வேண்டும ; இருபுனலும் வருபுனலும் வாய்ந்து, பிணியின்மை செல்வம விளைவு இன்பம ஏமம் மேவுதல் வேண்டும். இவற்றினைச செய்ய வல்லாரிடம் ஆட்சிப் பொறுப்பு இருக்கும்படி நாம் கவனமாயிருத்தல் வேண்டும். பதவிப் பித்தர்களான கயவர் என்ன சாதிப்பர்? பேதங்

களும் வாதங்களும் நிகழ்த்தித் தாம் பதவியில் ஒட்டிக் கொண்டிருப்பதனையே சூழ்ந்து நாளும் பொழுதும் போக்கு வர். தமமையும் மறவா ஆக்கி, நாட்டினை அழிப்பர். அரசியல் கூறுமுகததான், ஆசிரியர் திருவள்ளுவர் அரசர்க்கே நீதி யுரைததார் என்று கோடல் ஒரு சார்பான முடிபாகும்; அரசனது ஆட்சியின கீழிருக்கும மக்களும் அரசனுக்குரிய இலக்கணங்களைத தெள்ளிதின் ஆய்ந் தறிந்து, அவ் விலக்கணஙகள் இல்லாதவனை அரசனாக ஏற்றல் கூடாது என்று கூறியதாகவும கோடலே நூல் பயில் பயனாகும.

இலட்சிய மன்னனை ஆக்குதற்கு அமைந்த துணைக் குணஙகள் கல்வி முதலிய இருபததிரண்டாம். அவை யனைத்தையும் பற்றி நூலாசிரியரும் உரையாசிரியரும் தததம இயற்கை நுண்ணறிவாலும செயற்கை நூலறிவா லும் எடுத்துரைக்கும நுட்பதிட்பங்களை இஙகுக் கூறுதல் மிக விரிவாகும். ஆதலின் அன்பா அவறறை மூலமும் உரையும் கணடு தெளிக. நான ஒருவாற்றான அவற்றின் சுருக்கத்தை மட்டும் குறிக்கின்றேன.

கல்வி: கல்வியின் நோக்கம் பொருளீட்டுதலன்று, அறிவுடையராதலே. அறிவு இருவழியால் நிரமபுவது: நூல்களைக் கற்றலும், கற்றறிந்தோர கூறுவனவறறைக் கேட்டலும. மணலின்கண தோண்டிய அளவுக்கு நீர் சுரபபதுபோல, நூலினை ஆழ்ந்து ஆழ்ந்து கற்குமளவுக்கு அறிவு பெருகுவதாகும ஒருவன் இலக்கியம விஞ்ஞான மாகிய இருவகை நூறகளைக் கறகவேண்டும. ஒரு பிறப்பில் ஒருவன் கற்பது, வரும்வரும் பின்னைப் பிறப்புக்களிலும் அவனுக்குப பயன்படும.

விளைநிலமும் நிலமெனப்படும், விளையாக் களர் நிலமும் நிலமெனப்படும். அதுபோன்றே கற்றவனும் மனிதன், கல்லாதவனும் மனிதனே! கலலாதவன் மனிதனோ? அல்லன். அவன் விலங்கு. பேச அறியான் அவன். ஒருகால் அவன் பேசினும் அதனைப் பிறர் ஏற்கமாட்டார்.

கல்லாதவனும் அறிவுடைய வழி ஒன்று இல்லாமல் இல்லை; கற்றவர்பால் கேட்டு, அக் கேள்வி ஞானத்தால் அவன அறிவுடையவனாகலாம். கல்லா ஒருவன கேள்வி யறிவும இல்லாச் சடமாயிருப்பானாயின் அவன் சார்தலால் அவனுக்கும் பிறர்க்கும் சிறிது இழப்பும் இல்லை.

கல்வி கேள்விகளால் வரும அறிவால் ஒருவன் தனக்கும் தன்னைச் சேர்நதார்க்கும இறுதிவாராமல காததுக் கொள்ளலாம. புலனகள் செலலும் தீநெறிக்கு விலகி ஒழுக்கமுடைய உயர்நதோனாகலாம

புடையாரா எலலாம உடையார் அறிவிலாா
என்னுடைய ரேனும் இலர்.'' (சஙஅ0)

பெரியாரைத் துணைகோடல்: கல்வி அறிவும் நல்லொழுக்கமுமுடைய அரசன், தன்னைப்போன்று அத்தகைய கல்வியும் ஒழுக்கமுமுடைய பெரியாரையே தனக்கு ஆட்சித் துணைவராகக கொள்ளவேண்டும அவர்கள் அரசனைக் காட்டினும ஆண்டினும் அறிவினும் முதிர்ந்தோராக இருப்பின் மிகநன்று. செலவம் படைததவரைச் சேர்ந்து வாழ்தலால் தாம் எய்தும் ஆக்கம கருதித தீக்குணமுடைய சிறியோர் அவரை விரும்பி அடுப்பர்; பெரியோர்களைச் செல்வமுடையோர் தாமாக விருமபி அடுத்தாலன்றி, அவர்கள் விலகியே நிற்பர். ஆதலின் அரசன் தன்னை வலியவந்து அடுக்கும சிறியோரை விலக்கி, தானே வலிந்து சென்று பெரியோரை நட்பாக்கிக்கொள்ளுதல்வேண்டும் வாணிகத் திறம இருப்பினும முதல் இல்லாதவனுக்கு ஊதியம் இன்மை போன்று, ஆட்சித்திறம் அமைந்தோனாயினும் பெரியோர் சாரபின்றி ஓா அரசன் மாட்சியுறுதல் இல்லை.

தெரிந்து செயல்வகை: சிறியோர் தன்னைச் சேரவொட்டாது தடுத்துப் பெரியோரைத் துணைக்கொண்ட மன்னன், பின்னர், தான் செய்யும் வினைகளை நன்கு ஆராய்ந்து அதன்பின் செய்தல்வேண்டும்.

"தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்." (சசுஉ)

அரசனுக்குப் போர் ஒன்றே வெற்றி எய்தும் வழியன்று. பொருள் கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல் என்னும் வேறு மூன்று வழிகளும் உள. இந் நான்கனுள் எவ் வழியைப் பின்பற்றி வினைமுற்றுதல் நன்று என்று அரசன் ஆராய்ந்து துணிதல் வேண்டும். துணிந்த பின்,

"வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்,
துணைவலியும் தூக்கிச் செயல்." (சஎக)

வினைசெய்யும் வழியினைத் தேர்ந்தறிதல் போன்று, வினை செய்யும் காலமும், இடமும் அறிதல் வேண்டும். காக்கையும் கூகையும் பகற்கண் பொருதால் காக்கை கூகையை வென்றுவிடும்; இரவின்கண் பொருதால் கூகை காக்கையை வென்றுவிடும். இவ்வாறு காலத்தால் வலி வேறுபடுகின்றது. நீருட் கிடக்கும் முதலையை யானையும் வெல்ல முடியாது. ஆனால் அம் முதலை நீரைவிட்டுத் தரைக்கு வந்தால், அதனை ஒரு சிறுவிலங்கும் வென்றுவிடும். இஃது இடத்தால் பெறப்படும் வலிமை. நடுங்குபனி நாடாகிய இரசியாவை வீரன் நெபபோலியன் படைகள் வெல்லத் தவறின. அண்மையில், இட்லர் படைகளும் அங்கேயே மடிந்து, அவன் தோல்விக்கு வித்திட்டன.

தெரிந்து தெளிதல்: படித்துப் பட்டம்பெற்றவரெல்லாரும் பதவிக்கு உரியர் ஆகார் அறிவுத் திறத்தால் மட்டும் ஒருவனுக்குத் தகுதி வந்துவிடாது. ஆதலின், அரசன் தன் அமைச்சர் முதலாயினாரை, அவரது பிறப்பு, குணம், அறிவு, செயல் ஆகியவற்றைக் காட்சி, கருத்து, ஆகமம் என்னும் மூவகை அளவைகளால் ஆராய்ந்து தெளிந்து அமர்த்துதல் வேண்டும். ஒருவனைத் தேர்ந்தெடுத்து அமர்த்தியபின், அவன் தகுதியின்மையால் தவறு செய்வனோ, கைக்கூலி வாங்கிக் கடமையிற் பழுதுபடுவனோ என்பது முதலிய ஐயங்கள் கொள்தற்கு இட

னின்றி முன்னரே நன்கு ஆய்ந்து கொள்ளல் வேண்டும். அரசனால் தேறப்பட்ட யாவரும் எல்லாச் செயற்கும் தகுதியுடையராகார். ஆதலின் அவரவர் செய்யத்தகும் வினையறிந்து அது அதனை அவரவர்க்கு அளித்தல் வேண்டும். அவர் செய்யும் வினைகளின் முடிவு மக்கட்கு இன்ப துன்பங்கள் விளைக்குமாதலின், மக்கட்குத் தனிப் பொறுப்புடைய மன்னன், அவர்கள் செயலினை நாடோறும கண்காணித்து வருக. ஏன் எனின், "வினை செய்வான் கோடாமை கோடாது உலகு."

பற்றுக் காரணமாகத் தகுதியில்லாத தன் சுற்றத்தாரை அரசன் பதவியில் வைததல கேடுதரும். அங்ஙனம செய்யும் அரசன் பேதைகளிற் பெரிய பேதையாவன் ஆகலின், ஓர் அரசன் தன் சுற்றத்தவரை யெலலாம் விலக்கிவிடுதல் நன்றென்ப தன்று.

"பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்
சுறறததார் கண்ணே உள" (௫உ௧)

எனவே, அரசன் தன்பால் விருப்பு அறாச் சுறறத்தவர்க்கு வேண்டுவன கொடுத்தும், இன்சொல் சொலலியும் அவரைத் தழுவிக் கொள்ளுதல் வேண்டும். அரசனும் மனிதன் தான். சுற்றத்தோடு நெஞ்சு கலந்து வாழும் வாழ்க்கை அவனுக்கு விலக்கல்ல.

"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள." (௫உ௭)

தான் பெற்ற செல்வத்தின் பயனைத் தன் சுற்றத்தோடும் கூடித் துய்க்கும் அரசன், தன்னையும் தன் குடிகளையும் காத்துக்கொள்ளலாகிய கடமையினை மறந்துவிடுதல் கூடாது.

"இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியில் மைந்துறும் போழ்து." (௫௩அ)

**செங்கோன்மை :** உலகத்து உயிர்கள்யாவும் வானத்து மழையைக் கொண்டு வாழ்கின்றன. அது போன்று

நாட்டின் மக்கள் அந் நாட்டு மன்னனைக் கொண்டு வாழ்கின்றனர். காட்டில் வாழும் உயிர்கட்கு வலிமையே ஆட்சிச்சட்டம். ஆதலின், வலியது மெலியதைக் கொல்லுதல் குற்றமாகாது. ஆனல், நாட்டிலே ஆட்சிச் சட்டம் வேறு.

"கொலையிற் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்." (௫௫0)

வலியார்க்கும் மெலியார்க்கும் வாழ்தற்கு உரிமை உண்டு. அவ்வுரிமையை நடுவு நிலைமையில் பொருந்தி நின்று காத்தல் கொடுப்பதே செங்கோல் ஆட்சி. ஆட்சி புரிவோர், குற்றம் செய்வோர் யாரமாட்டும் கண்ணோடுதல் செய்யின் அது கொடுங்கோலாம். ஏனெனின், அரசன் கொலைமேற்கொண்டாரை ஆதரிக்கும் கொடியனாகிவிடுவான். காலப்போக்கில அரசனதானும் கூழும் குடியும் ஒருங்கே இழப்பன். நாடு காடாகி விடும்.

"மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்று."

என்பர் தண்தமிழ்ச் சாத்தனார்.

மன்னனது நல்லாட்சியினாலேயே மனித இனம் தழைக்கிறது. பருவ மழையும் குன்றாத விளைவும் அதன் பயனாய் மக்கள் பெறுபவையே அறத்துறைகளும் கலைத் துறைகளும் அதனாலேயே வளமுறுகின்றன.

"அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்." (௫௪௩)

அன்பின் வழியது உயிர்நிலை என்று உண்மையுரைத்த நாயனார், குற்றம் களைந்து குடியோம்பும் ஆட்சித் துறையிலும் அன்புக்கு இடம் அளிக்கிறார். குற்றம் செய்தாரை ஒறுக்கும் மன்னவன், குற்றத்துக்கு ஏற்ற தண்டனையே கொடுத்தல் வேண்டும். நீதிக்கண் தனக்குள்ள பற்றால் கடுந்தண்டனை அளித்தல் கூடாது.

"கடிது ஓச்சி மெல்ல எறிக."

குற்றம் செய்தாரிடத்தும் அரசன் விலக்க வேண்டுவன ஐந்து. செவ்வியின்மை, இன்னாமுகமுடைமை, கண்ணோட்டமின்மை, கடுஞ்சொல், கையிகந்த தண்டம்.

"கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்துஇவ் வுலகு" (குறள்)

இனி, ஒருவன் அரசன்மாட்டுக் குற்றம் செய்வானாயின் அவனுக்கு அவ்வரசன் என் செய்தல் வேண்டும் என்ற வினாவினை எழுப்பி, அதற்கும் ஆசிரியர் விடை கூறுகின்றார். அரசன் தன்னை ஒறுக்கும் இயல்புடைய தீயரிடத்தும் கண்ணோட்டமுடையவனாய் அவனைப் பொறுத்தலே தலையாய இயல்பு. அத் தீயோர் தனக்குப் பாலில் நஞ்சு கலந்து கொடுப்பினும் அதனை உண்டு, அவரோடு மேவுதலே அரசனுக்கு நாகரிகம் ஆகும். தனக்குப் பிறர் எப்பிழை செய்யினும் பொறுத்துக் கொள்ளுதலும், தன் குடிகட்குப் பிறர் பிழை செய்யின், செய்தாரை ஒறுத்துக் குடிகளைக் காத்தலுமாகிய ஆண்மையுடையவனே அரசன்.

ஆளவினையுடைமை: தனக்கு இன்பத்தை விரும்பானாய்த் தன் குடிகளின் துன்பத்தைத் துடைக்கும் மெய்ம் முயற்சியுடையோனாய் அரசன் இருத்தல் வேண்டும். முயற்சியுடையவனே எல்லார்க்கும் உபகாரம் செய்தல் கூடும். ஆட்சியாளரின் முயற்சியாலேயே நாட்டின் செல்வ நிலை உயரும். அவர் முயலாதிருப்பின் நாட்டு மக்களும் மடிப்பாலாராய் வறுமையுறுவர். செய்யும் முயற்சிகட்கு இடையூறுவரின் அதற்குப் பணியாது மேற்செலுதலே ஆண்மை இடும்பைகள் வெள்ளம்போற் புரண்டுவரினும், முயற்சியினிடத்துத் தோன்றும் அவ் இடும்பைகளே இன்பம் என ஓர் அரசன் கொண்டால், பகையரசர்களும் அவனை நன்கு மதிப்பர். இன்று நாட்டகத்தே நிலவும் வறுமையை ஒழிக்க நமது அரசாங்கத்தார் திட்டங்கள் பல தீட்டியுள்ளனர். அவற்றுக்குக் கோடி கோடியாக முதலீடு வேண்டும். பிறநாட்டார் உதவியை முன்னர்ப் போன்று

எதிர்பாராததல் கூடாது. ஆயினும் அத் திட்டங்களை நிறைவேற்றியே தீரவேண்டும் என்று நாட்டின் நல்லமைச்சர் நேரு முழங்குகின்றார்!

நாட்டின் குடிகள் விளக்குப் போல்வர். அவ் விளக்கினை மடி என்னும் இருள் அவித்துவிடும். மடியின்றி ஆளும் அரசனே தன் குடிகளை நற்குடிகளாக உயரச் செய்வான். ஓரடியால் திருமால் அளந்த உலகை மடியிலா மன்னன் ஒருங்கே எய்திவிடலாம் நம்பிக்கையிழந்து மடிந்திருத்தற்கு மறுதலையாய பண்பு ஊக்கமுடைமை; அஃதாவது, மனம் மெலிதலின்றி, வினைசெய்தற்கண் கிளர்ச்சியுடைத்தாதல். உருவத்தால் பெரிய யானையை உருவத்தில் சிறிய புலி தன் ஊக்கத்தால் தாக்கி வென்று விடுகின்றது. ஆம், அரசனும் அவன் குடிகளும் ஊக்கமுடையோராக இருப்பின் உயர்ச்சி எய்துவர்.

ஒற்றாடல்: பகைவரை வென்று குடிகளைப் பேணி நாட்டின் செல்வ நிலையைப் பெருக்கும் தனிப் பணியுடைய மன்னன் தனக்குப் பகைவர், நண்பர், நொதுமலர் யார் யார் என்பதை நன்கறிந்திருந்தாலன்றி வினை செய்தலில் பழுதுண்டாம். அவனது ஆள்வினையுடைமை, மடியின்மை, ஊக்கமுடைமை, இடுக்கணழியாமையாகிய சால்புகள் முழுப் பயன் தரவேண்டுமாயின் அவன் தன் பகைவர் நண்பர் இன்னின்னார் என அறிந்திருத்தல் வேண்டும். நாடு காவலில் தனக்கு உதவுவாரும் ஊறுவாரும் தெரிந்து வைத்தல் இன்றியமையாததன்றோ? இந்நிலையை அறிதற்கு அரசனுக்கு உதவுவோரே ஒற்றர். அரசியல் நூலறிவும் ஒற்றரும் அரசற்கு இரு கண்போல்வர் என உரைக்கின்றார் நாயனார்:

> "எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
> வல்லறிதல் வேந்தன் தொழில்." (இஅ௨)

அமைச்சர் முதலாய் அரச காரியம் செய்யும் அனைவரையும், தன் சுற்றத்தாரையும் பகைவரையும் ஒற்றுடல் வேண்டும். ஓர் ஒற்றன் ஒற்றறிந்து கூறியதை மற்றோர்

ஒற்றனால், அதன் பின் மற்றுமோர் ஒற்றனால் ஒற்றி யறிந்து துணிதல் வேண்டும். ஒருவன் ஒற்றன் என்பது மற்றோர் ஒற்றனுக்கும் தெரிதல்கூடாது. இவ்வாறு, ஒற்றரைக் கொண்டு பிறர் நிலை அறிந்து, நூலறிவு கொண்டு செய்வன தெளிந்து காவல் தொழில் புரியும் அரசனுக்கு உழை இருந்து உற்றதுணை செய்வோர் அமைச்சர். அவரது இயல்பு அடுத்த இயலில் உரைக்கப்படும்.

## 2. அங்கவியல்

அமைச்சு: பொருட்பாலின் இரண்டாம் இயல் அங்கவியல். ஆட்சி என்னும் இயந்திரம் படை குடி முதலிய ஆறு உறுப்புக்களால் ஆகியது என்று முன்னர்க் கூறப்பட்டது. அவ்வுறுப்புக்கள் ஒவ்வொன்றன் இலக்கணங்களும் இவ்வங்கவியலுள் விளக்கப்படுகின்றன. ஆட்சித்தொழிலில் அரசனுக்கு அடுத்த முதன்மையுடையவன் அமைச்சன். அரசன் மனம் என்றால், அமைச்சன் அந்த மனத்தின் பகுத்தறிவுத் தத்துவமாக இருக்கின்றான். அரசன் இல்லாத இடைக் காலத்தில் அமைச்சர்களே அரசு பூண்டு நடாத்தியதாக எண்ணற்ற வரலாற்றுச் சான்றுகள் உள. சச்சந்த மன்னன் விசையையுடன் இன்ப வாழ்வில் திளைத்த காலத்தில், அவன் அமைச்சன் கட்டியங்காரன் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றிருந்ததாக இலக்கிய மரபும் காண்கின்றோம். இத்துணைச் சிறப்பிடம் பெறும் அமைச்சனின் இலக்கணங்களை, அங்கவியலின் முதற்கண் பத்து அதிகாரங்களில், அமைச்சு முதல் அவையஞ்சாமை ஈறாக, நாயனார் எடுத்துரைப்பது சாலப் பொருந்துவதாகும்.

அமைச்சன்: தானையும் பொருளுமாகிய கருவிகளைக் கொண்டு காலமும் செய்ம்முறையும் அறிந்து வாய்ப்பது கூற வல்லவன் அமைச்சன். வினைக்கண் தளராமை, குடிகாக்கும் அருளுடைமை, நீதி நூலறிவு, முயற்சி ஆகிய இவை அவன் பண்புகளாகும். போர் வருங் காலத்துப் பகைவரொடு சேர்ந்தாரைப் பிரித்தலும், தம்மொடு சேர்ந்தாரைத் தம்மினின்றும் பிரியாது பேணிக் கொளலும், முன்னர்ப்

பிரிந்து சென்றுரையும் மீண்டும் பொருத்திக் கொள்ளு மாகிய செயல்களில் வல்லோன் ஒரு நல்லமைச்சன். அற முறை யறிந்து வினைசெய்யுந் திறம உரைப்பவன் அமைச் சன். இயற்கையான நுண்ணறிவும் செயற்கையான நூலறி வும் வாய்ந்த அறிஞனே அமைச்சனுதற்குத் தகுதியுடை யவன். அரசன் தான் கூறியவற்றை எளளித்தள்ளும் காலத்தும மீண்டும அவ வரசனுக்கு உறுதிகூறும் ஆண்மையும அவனுக்கு வேண்டும். வினையாற்றும் முறை களை அறிந்துரைப்பது எளிது; அம்முறைகளின்படி செய லாற்றும் அருந்திறலும் அமைச்சனுக்கு அமைதல் வேண்டும்.

அமைச்சனின் இயல்களை வகுத்துக் கூறுமிடத்து, ஆசிரியர், அவன் சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத் திட்பம், வினைசெய்திறம், தூது ஆள்தல், மன்னரைச் சேர்ந்தொழுகல், குறிப்பறிதல, அவையறிதல், அவையஞ் சாமை ஆகிய குணஞ்செயல்களில் சிறநதோனுதல் வேண் டும் என்பர். இவ் வொன்பது இயல்களையும் நாம் இரண்டு தலைப்புக்களில் தொகுத்து அடக்கலாம அவை சொல் வன்மை, வினைசெய்திறம், என்பன

சொல்வன்மை: அரசனோடு இருக்கும் அவையினது இயல்பு அறிந்து, அதற்கு ஏற்பப் பேசுதல் அமைச்சனுக்கு ஒரு கலை. அவையிலிருப்போர் தெள்ளியராயின் பேசு வோனும் ஒள்ளியனுகப் பேசுதலும், அவர்கள் வெள்ளைய ராயின் தானும் அவர்போல் நடிததலும் வேண்டும். அறி விலார் முன் அரும்பொருள உரைத்தல் அங்கணத்துள் அமுதினைச் சிந்துவதற்கு ஒப்பாகும். சபைமுன் சென்று பேசுதல் எளிதன்று. போர்க்களத்திற் புக்குப் படைக் கஞ்சாது சாகததுணிவோர் பலர்; ஆனல் அவையிற் புகுந்து பேசத்துணிவோா சிலரே. அதறகுக காரணம, கற்றோர் மனம் கொளளுமாறு பேசுதற்கு ஒருவனுக்கு மிகுந்த கல்வியறிவும், பேச்சுத்திறமும் வேண்டும்.

“ ஆர்த்தசபை நூற்ருெருவர் ஆயிரத்தொன் ருெம்புலவர்
வார்த்தை பதினு யிரத்தொருவர்—பூத்தமலர்த்

தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயின் உண்டென் றறு"

சொல்வன்மையைப் பற்றி ஔவையார் கொண்டிருந்த கருத்து இது. நண்பர் மட்டுமன்றிப் பகைவரும் உவக்கு மாறு பேசுதலே பேச்சுவன்மை. சொல்வல்லான் ஒருவனை யாரும வெல்லமுடியாது; உலகத்து மக்கள் யாவரும் அவன் சொல்லைக் கேட்டு நடக்கும் தலைமை அவனுக்கு உண்டாகிவிடும்.

"நாநல மென்னும் நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று." (௬௪௧)

வினைசெய்திறம். சொல்வன்மையோடு செயல்வன்மை யும் உடையோனே அமைச்சனுவான். வன்மையான செயல் களையும் தளராது செய்யும் மனத்திட்பம் இருந்தாலன்றி ஒருவன் செயல்வீரனுக விளங்குதல் முடியாது. ஒரு வினை யினைத் தொடங்குதற்கு முன்,

"பொருள்கருவி காலம் வினையிடனொடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்." (௬௭௫)

"முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்." (௬௭௬)

என்று அறிவுறுத்துகின்றார் நாயனார்.

ஒரு செயலை வெற்றியுறச் செய்து முடிப்பதுமட்டும் பெருமையாகாது. அச் செயல் அறமும் புகழும் பயக்கும் தூய்மையுடையதாகவும் இருத்தல் வேண்டும். பெற்றதாய் வறுமையாற் பசியோடு வாடினும் சான்றோர் பழிக்கும் வினையினைச் செய்தல் கூடாது. பழி நிற்கவரும் ஆக்கத் தைக் காட்டினும் புகழ் நிற்கவரும் வறுமையே உயர் வுடையது. தீநெறிகளில் பொருள் தேடிக் குவித்தல், சுடாத பசிய மண்குடத்தில் தண்ணீர் நிரப்பிவைப்பதற்கு ஒப் பாகும். குடமும் உடைந்து தண்ணீரும் சிந்திப்போவது போல, செல்வமும் அதனை உடையோனும் ஒருங்கே அழிவர்.

தூது: நட்புச் சேர்த்தல், பகை பிரித்தலாகிய கருமங்களைச் செய்தற்கு வேற்று வேந்தரிடம் செல்வோரே தூது ஆவர். இவர் தான வகுததுக் கூறும் தூது, கூறியது கூறும் தூது என இருவகைப்படுவா. இவர் இருவரும் ஒருசார் அமைச்சரோடு ஒப்பர். தன் சுற்றத்தாரிடத்து அன்பு, அமைச்சுப் பூணற்கு அமைநத குடியிற் பிறத்தல், அரசர் விரும்பும் பண்புடைமை, அரசனிடத்து அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மை, கண்டோர் விரும்பும் தோற்றப்பொலிவு முதலிய பல இலக்கணங்கள் அமைந் தவனே தூது ஆதற்கு உரியவன்.

"தொகசசொல்லித தூவாத நீக்கி நகசசொல்லி
நன்றி பயப்பதாந் தூது." (கூஅரு)

"இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாந் தூது." (கூகo)

நாடு: அரசனும் அமைச்சனும் காக்கப்படுவது நாடு. ஒரு நாட்டுக்கு இன்றியமையாச் சிறப்புடையவை மூன்றும்: குன்றாத விளையுள், அறநெறி ஒழுகும் பெரியோர், கேடில்லாத செலவம படைதத மக்கள். இம் மூன்றனுள் எது ஒன்று குன்றினும் நாடு பெருமை குன்றி

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு." (எகூச)

ஓர் அரசனுக்கு ஆறு உறுப்புக்களைக் கூறிய நாயனார் ஒரு நாட்டுக்கு மூன்று உறுப்புக்களையும், ஐந்து அழகு களையும் வகுக்கிறார். தூரவு கேணி ஏரி ஆறு ஆகிய இரு புனலும், மாரிக்காலதது உண்ட நீரைக் கோடைக்காலத்து உமிழும் இயல்புடைய மலையும், அதனினின்றும் வருவதாய நீரும் ஆகிய மூன்றும் வானம வறப்பினும் நாடு வளங் குன்றாது காத்தலின் நாட்டுக்கு மூன்று உறுப்புக்களாகின் றன. பிணியின்மை, செல்வம, விளைவு, இன்பம், காவல் ஆகிய ஐந்தும் நாட்டிற்கு அழகாகும். இம் மூன்று உறுப் புக்களும், ஐவகை எழில் நலங்களும் சிறந்து விளங்கும்

நாடாகிய நங்கை நல்லாளுக்கு நாடாளும் மன்னனே தலைவனாவான்.

"ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
வேந்து அமைவுஇல்லாத நாடு." (எசo)

அரண்: அரசன் பகைவன் மீது படையெடுத்துச் செல்லுங் காலத்துத் தனது உரிமை மகளிரையும், பொருள் முதலியவற்றையும் பிறனொருவன் வௌவாமல் வைத்துச் செல்லப் பயன்படுவது அரண். மேலும், தன் மீது படை எடுத்து வரும் பகைவனுக்கு அஞ்சித் தன் உரிமை முதலியவற்றுடன் ஏமம் காண்பதற்கு உதவுவதும் அரணே. வானளாவ வளர்ந்த மதில்மட்டும் அரணாகாது. மதில் ஓர் அரண். அதனைச் சூழ்ந்து கிடக்கும் மணிநீர்க் கிடங்கு ஓர் அரண். அது நீர் அரண் எனப்படும். அந் நீர் அரணைச் சூழ்ந்து நீரும் நிழலுமின்றி வறிதே கிடக்கும் நிலம் ஓர் அரண். அது நில வரண். அதனைச் சூழ்ந்து இருக்கும் இயற்கை அல்லது செயற்கை மலை ஓர் அரண். அம் மலையரணைச் சூழ்ந்து மரஞ் செடி செறிந்து நிழலுடன் விளங்கும் காடு ஓர் அரண். இவ்வாறு ஐவகை அரணும் சூழ்ந்து அமைவதுதான் ஓர் அரண் ஆகும்.

"உயர்வு அகலம்திண்மை அருமைஇந் நான்கின்
அமைவுஅரண் என்றுஉரைக்கும் நூல்." (எசரு)

அரணுக்கு வெளியே நிற்கும் பகைவர் அதனைக் கைப்பற்றுதற்கு அரிதாகவும், உளளிருப்போர் வெளியிருப்பாரோடு போராற்றித் துரத்தி யடிப்பதற்கு வாய்ப்புடையதாகவும் அது அமைதல் வேண்டும். அகத்திருப்போர்க்கு வேண்டிய உணவு முதலிய எல்லாப் பொருள்களும் அதன்கண் இருத்தல் வேண்டும் இத்துணைச் சிறப்புக்களும் அமைந்திருக்கும் அரணுள் போர்வல்ல மறவர் இல்லையேல் அதன் வலி யாதாம்?

"எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்லது அரண்." (எஙo)

கூழ்: கூழ் என்பது பயிர். அஃது ஆகுபெயராய்ப் பொருளைக் குறிக்கும். பொருட்கள் பல வகைய. அவற்றுள் உணவுப்பொருள் தலையாயது. உணவுப்பொருள் இல்லையாயின் ஏனைப் பல பொருட்களாலும் யாது பயன்? மேலும், உணவுப்பொருள் வகை எல்லாம் படைத்து உண்டு உறங்கி இன்பம் எய்துதற்கன்றே மக்கள் ஏனைய பொருட்களை யெல்லாம் தேடுகின்றனர்! பொருள் இல்லார்க்கு நுகர்ச்சி இல்லை நுகர்ச்சி இன்றேல் உயிர் வாழ்தல் இல்லை.

> பொருளுடையார் எல்லாம் உடையார் பொருளிலார்
> ஆருயிர் தானும் இலர்.

என்று அதன் பெருமையைக் குறித்து நாம் புதுக் குறள் ஒன்றுகூடப் புனைந்து விடலாம்.

இவ் வுலகத்து ஒருவரை மதிப்பது அவர் படைத்துள்ள பொருளின் அளவைக் கொண்டே யாகும். அறிவில்லாரும் இழிந்த பிறப்பினரும் பொருளுடையோராயின், அறிவுடையாரும் உயர் பிறப்பினரும் அவர்பாற் சென்று நிற்பர். பொருள் என்னும் அணையா விளக்கு ஒருவனது பகைவராகிய இருள் எவ்விடத்திருப்பினும் அவர்களை அவ்விடத்துச் சென்று அழிக்கும். பகைவரது செருக்கினை அறுப்பதற்குப் பொருள்போல் கூரிய படை வேறு இல்லை. கையில் பொருளுடையான் ஒரு கருமம் செய்வது, மலைமேல் ஏறிநின்று யானைப்போர் காண்பது போல விளையாட்டாகவும் இன்பமாகவும் இருக்கும்.

பொருள் இத்துணைச் சிறப்புடையதாயினும் அதனை ஒருவன் அருளுக்கும் அன்புக்கும் பொருந்தும் வகையில் ஈட்டுதல் வேண்டும். வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளைத் தேடும் முயற்சியில் அதன் அருமை நோக்கிப் பலர் தம்மையே பலிகொடுத்து விடுகின்றனர். இம்மையில் புகழையும் மறுமைக்கு வேண்டும் அறத்தையும் தருவனவாகிய அன்பு நெறியையும் அருள் நெறியையும் விலக்கி விட்டு மறநெறியிற் செல்கின்றனர். மறநெறியினும் பொருள்

குவிக்கலாம். ஆனால் அறிவுடையோர் அத்தகைய ஆக்கத்தை வேண்டார்.

"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்." (எ௫௫)

'பொருள் தேடும் முயற்சியில் ஒருவன் உலகம் முழுவதையும் அடைந்து விட்டாலும், அவன் அம் முயற்சியில் தன் ஆன்மாவை இழப்பின், அவன் பெற்ற பயன் யாது?' உயிர்க்கு உதவும் பொருளை உயிரினும் பெரிதாகப் போற்றி அதன்பொருட்டே வாழ்ந்து மடியும் இக் கால மக்களினத்துக்கு இவ்வாறு நம நாயனாரும ஏசுநாதரும உரைத்துள்ள ஞானவழி இவை.

படை: கூழ் முதலியன செல்வமாயினும், ஓர் அரசனுக்குச் செல்வங்களுள் தலையாய செல்வமானது அவனின் பகை வெல்லும படையேயாகும். படைவீரரின் பெருக்கம் ஒரு படைக்குச் சிறப்பன்று. எலிகள் பல கூடி ஆர்ப்பினும் நாகம ஒன்று மூச்சுவிட்ட அளவில் அவை இல்லா தொழியும. வீரர் என்பார் பலர் ஆர்த்தெழுங்கால் ஒருவனைக் கிளர்ந்தெழுந்து அவரைத் தொலைப்பவனே வீரன். அத்தகைய வீரர் அடங்கிய படையே படை எனப்படுவது. கூற்றுவனே வெகுண்டு மேல் வந்தாலும அப்படை எதிர் நின்று தாங்கும் ஆற்றலுடையது. வீரர் தம மனதின்கண் வெறுப்பும், வறுமையால் வாட்டமும் உடையோராயின் பகையினை வெல்லார். அக்குற்றம் நேராவாறு அரசன் அவர்க்கு,

"வெல்பொறியும் நாடும் விழுப்பொருளும் தண்ணடையும்
கொல்களிறும் மாவும் கொடுத்தளிக்க."

வேண்டும்.

அரசனால் சிறப்புப்பெற்று ஏமுறும் வீரர் கல்வீரராதலை விரும்பிப் போர்புரிவர். முயல் எய்த அம்பினும் யானை பிழைத்த வேலேந்தல் இனிதென்று பெருஞ்செயலில் துணிந்திறங்குவர். கையில வேல் இல்லையெனின் தம்

மெய்யின் வேலைப் பறித்து யானைப் படையைத் தாக்குவர். பகைவர் வேல்கொண்டு எறியுங்கால் அவரை வெகுண்டு நோக்கிய கண்ணை அழித்து இமைப்பதும் புறங்கொடுத்த லாம் எனக் கருதுவர். தாம் போரில் மாண்டமைக்காகத் தம்மைப் பொருள் முதலியன கொடுத்துப் புரந்த மன்னன் விழிநீர் பெருக்குமாறு விழுப்புண் ஏற்று வீரர் உலகு புகுவர்.

நட்பு: அரசனின் அங்கங்கள் ஆறனுள் நட்பு பின் னிடத்துக் கூறப்பட்டதாயினும் ஏனை உறுப்புக்களைப் போன்று அதுவும் அரசனுக்கு உறுதி மிகப்பயப்பது ஆதலின், அதனை நன்கு விளக்கி நூற்று எழுபது குறள் கள கூறுகின்றார் ஆசிரியர். நட்பாவது, நட்பாம் அரசர் களும், நட்பாம் நற்குணங்களும், அரசனும் அமைச்சனும் தம நட்பரசர்களைப் பேணுதல் வேண்டும. நட்பை விரும் பித் தீக்குணமுடையோரையும், அகததில நட்பின்றிப் புறத்து நட்புடையாரபோல நடிப்பாரையும் நண்பராகக் கோடல் கூடாது. அவ்வாறே அரசனும அமைச்சனும் தத்தம் மனததில் வெகுளி காமம் ஆகிய தீக்குணங்களைத் தமக்குதவும் நட்புக் குணஙகளாகக கருதி அவற்றைப் பேணாது ஒழித்தல் வேண்டும்.

வெகுளியும் காமமும் பேதைமை புல்லறிவாண்மை ஆகிய மயக்கத்தால் விளைவன. வெகுளியால், இகல் —போரினை வலிந்து விரும்பும மாறுபாடு, பகைமாட்சி— பகைவனை மிகுத்தெண்ணிய போர்க்கெழுதல், பகைவன் திறம் தெரியாமை, உட்பகை விளைத்துக்கொள்ளுதல், பெரியாரை அவமதித்தொழுகுதல் ஆகிய ஐவகைக் குற் றங்கள் நேரும். அவை நேராமல் காத்தல் வேண்டும். காமத்தால், பெண்வழிச்சேறல், பொதுமகளிற் கூட்டம், கள்ளுண்ணல், சூது, நோய் ஆகிய ஐவகைக் குற்றங்கள் நேரும். அவை முன்னர்க் கூறிய ஐவகைக் குற்றங் களைப்போலவே அரசனையும் அமைச்சனையும் அழித்து ஆட்சியைக் கெடுத்து நாட்டைச் சீர்குலைக்கும் குற்றங்க ளாம். பேதைமைக்கும் புல்லறிவாண்மைக்கும் இடம்

கொடுத்து, அவற்றால் விளையும் இப்பத்துவகைத் தீநட்புக்கும் நாடாள்வோர் இடமளித்தல் கூடாது.

அரசர்க்கு நண்பராய் அமையும் நல்லோரின் இலக்கணங்களை ஆசிரியர் நட்பு, நட்பு ஆராய்தல், பழைமை என்னும் மூன்று அதிகாரங்களில் ஆராய்கின்றார். நல்ல நண்பர்களைப்போலச் சிறந்த செல்வம் பிறிது இல்லை. பகைவர் புகமுடியாத காவலாக நின்று காப்பார்கள் அவர்கள். அவர்கள் நட்பு பிறை வளர்வதுபோல நாடோறும் வளர்வது; உயரிய நூற்கருத்துப்போல இன்பம் பயப்பது. கேடு விளைக்கும் நெறியிற் செல்லுங்கால் விலக்கி நன்னெறிப்படுத்தி, தெய்வத்தால் கேடுவந்துழித் தாமும் உடன்சேர்ந்து அத்துன்பத்தை அனுபவிப்பர்.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு." (எஅஅ)

நட்பின் உயர்நிலை யாதெனின், நண்பனுக்குத் தளர்ச்சி வருங்கால் தான் எஞ்ஞான்றும் தளராது அவனைத் தாங்குதலாம். இத்தகைய நண்பன் ஒருவனுக்கு எளிதிற் கிடைத்துவிடமாட்டான். உயர்குடியிற் பிறந்து, உலகம் சொல்லும் பழிக்கஞ்சி, தீயனவற்றை எண்ணுதற்கும் செய்தற்கும் நாணும் இயல்புடைய மேன்மகனே நண்பனாகக் கொள்ளத்தக்கான்.

"அழிவந்த செய்யினும் அன்புஅறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்." (அ0எ)

## 3. குடி இயல்

நாட்டின் தலைவன் அரசன் பொருட்பாலை மூன்று இயலாக வகுத்துக் கூறிய நாயனார் அரசனுக்கு ஒரு தனி இயல் கொடுத்து அவனைச் சிறப்பித்தார். பின்னர், ஆட்சிக்கு உறுப்பாகிய ஆறனுள், அமைச்சு முதலிய ஐந்தனுக்கும் அங்கவியல் என்னும் ஒரு தனி இயல் கொடுத்து அவற்றையெல்லாம் அதனுள் அடக்கினார். இனி ஆறு உறுப்புக்களிலும் எஞ்சியிருப்பது குடி என்னும் ஒன்றுமே.

ஆட்சித் தலைவனாகிய அரசனுக்கு ஓர் இயல் கொடுத்தது போல, 'குடி'க்கும் ஒரு தனி இயல் கொடுத்துக் குடியின் சிறப்பினை விளக்கியுள்ளார். குடியின் பொருட்டுத்தானே ஆட்சி நடக்கின்றது? அரசனை நோக்க, குடியும் அவனுக்கு ஓர் உறுப்பேயாயினும் குடியினை நோக்க; அரசன் ஆட்சியின் ஓர் உறுப்பேயாகின்றான். காவற் கடவுளரும திக்குப்பாலரும் மன்னர் உருவாய் வந்து உலகு புரக்கின்றார் என்று கொள்ளப்பட்ட முடியாட்சிக் காலம் அது. நம் வள்ளுவர் பெருமான அந்தக் காலத்தைக் கடந்து, மன்னரிற் சிறப்புடையோர் மக்கள் எனக் கண்டுரைத்த மாண்பு வியத்தற்குரியது.

மக்கள் தொண்டனாக மன்னன் இருந்தான். அத் தொண்டில் பிழை நேர்ந்தபோது அவன் உயிர் வாழவும் விரும்பவில்லை அத்தகைய இலட்சியத்துடன் தம் நலமே கருதி வாழ்ந்த தம் மன்னவனை மக்கள் தம் தலைவனாக மதித்தனர். அம்மரபினைத் தழுவி வள்ளுவர் பெருமான், மன்னனுக்கு முதலிடம் கொடுத்து, அவனுக்கு உறுப்பாயினவற்றைப்பற்றி அதன்பின் பகர்ந்து, அவனால் ஆக்கவும் காக்கவும்படும் மக்கள் இனத்துக்கு அவன் ஒப்பச் சிறப்பிடம் அளித்துள்ளார்! இவ்வளவு வெளிப்படையாக நமக்குத் தெரியும் இச்சிறிய உண்மையைக் கூறாது, உரையேறாகிய பரிமேலழகர் இம்மூன்றும் இயலுக்கு ஒழிபியல் எனத் தலைப்பு இட்டது எதன்பொருட்டென்பது நமக்கு விளங்கவில்லை.

முன்னைய இயல்களில் வள்ளுவர் கண்ட வளமிகு நாட்டினைக் கண்டோம். அந்நாடாளும் மாட்சிமிகு மன்னனைக் கண்டோம் சொல்வன்மையும் செயல்வன்மையுமுடைய அவன் அமைச்சனையும், தூதனையும், நண்பனையும் கண்டோம். அவன்தன் அரண் கண்டோம், படை கண்டோம், செங்கோன்மைத் திறம் கண்டோம் இனி நாம் அவருடன் சென்று, அவன் காவலில் தழைக்கும் பேறுவாய்த்த குடிகளைக் காண்போம். தலைமுறை தலைமுறையான நல்லாட்சியில் வாழ்ந்த அந்நன்மக்களின் ஏற்

றம்தான் என்னே! அவர்களுடைய பெருமைகளைக் குறள் தோறும் கண்டு செல்லுங்கால், அவர்கள் இந்நிலவுலகத்து மனிதர்தாமோ என்று ஐயுறுகின்றோம். வள்ளுவர் தாமும் அவர்கள் இம்மண்வாழ் மானிடரேயாயினும் அவர்கள் விண்வாழ் தேவரேயாவர் எனக் கூறி மகிழ்கிறார்.

"வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."

கற்றோர் கடவுளை வாழ்த்துக என்று தொடங்கி, திருக்குறளாம் செல்வப்பேழையை மக்கட்கு விரித்தளிக்கிறார் நாயனார். ஆனால் மக்களது வறுமைக்கும் செம்மைக்கும் கடவுளே காரணன் என்று அவர் எவ்விடத்தும் கூறுவதில்லை. உயிர்கள் இரந்து ஏற்று வாழும்படி அவற்றைப் படைத்தானாயின் அப்படைத்தோன் தானும் அவ்வுயிர்களைப்போல அலமந்து கெடுக என்கிறார். வள்ளுவர் கருத்தில் ஊழ் வேறு கடவுள் வேறு என்பதனை நாம் மறத்தல்கூடாது. நிரம்பக் கற்றவர்களாலன்றி, ஏனையோரால் கடவுட்பொருளை அறிந்து வாழ்த்துதல் இயலாததொன்று. அறிவிலார் கடவுள் என்பதும், தம் வறுமைதீர அவனை நாடுவதும், அதற்குப் போலிச் சமய நூல்களும் சமயத் தலைவர்களும் தூண்டுவதும் பேதைமைச் செயல்களாம். உணவுக்கும் உடைக்கும் விதியைப் பொறுப்பாக்கியது எத்துணை மடமை என்பது இவ்விஞ்ஞான காலத்துப் புலனாகி வருகின்றது. அமெரிக்க நாட்டில் ஓர் ஏழைக் கணக்கன் பெறும் மாத ஊதியம் ஆயிரம் வெண்பொன். அவன் மனைவியும் ஓர் ஆயிரம் கொண்டு வருவாள். அவனுடைய நண்பன் இங்கு நம்நாட்டில் பெறுவது ஐம்பதுகூட இல்லை. இருவரும் கணக்கராய் இருப்பது விதியாகலாம், ஆனால் இருவர்க்குமிடையே நிலவும் பொருள் வேறுபாட்டுக்குக் காரணம் விதியா? விதி வேர் அறுந்து வருகிறது. விதியின் ஆதரவில் வாழும் மூடச் சமயங்களின் வேரும் அதனோடு அறும் காலம் சேய்மையில் இல்லை.

நம் நாயனார் மக்களது பொருட்பேற்றுக்கும் இன்ப வாழ்வுக்கும் ஆட்சியே பொறுப்பு என்று அக்காலத்

திலேயே அறைந்துள்ளார். மனித வாழ்க்கையின் பல பிரச்சினைகள் பொருளாதாரப்பிரச்சினை ஒன்றிலே அடங்கி விடும். அவற்றைச சமயப் பிரச்சினையாகத் திரித்துக்கூறி மக்களைக் கெடுக்கும் பிற்போக்குச் சூழ்ச்சிகட்கு வள்ளுவர் வகுதத அரசியல் கூரிய படையாகும. இனவேற்றுமை, வாழ்கவைகத தரத்தில் வேற்றுமை முதலிய சமூகக் குற்றங் களுக்கு விதியே பொறுப்பென்று வள்ளுவர் இனமாகிய தமிழா இந்நாளவரை நம்பி ஏமாந்தது பெரும் விநதை! எக் குறைவுமின்றி எல்லா நலங்களுமு ஓங்கி மக்கள் வாழும் விண்ணரசு இந்நிலவுலகிலேயே உள்ளது என்று ஏசுநாதர் கண்டார். அந்த விண்ணரசை இப்போது இரண்டாயிரம் ஆண்டுகளாக மக்கள் இனம் சாவுக்குபபின் விண்ணில் எய்தக்கிடப்பதாக எண்ணி வானை வானைப் பார்த்து வறிது வாழ்கிறது! அன்று நம் தெய்வ வள்ளுவர் வகுத்த புகுந்து, அமமக்களின் குடிச்சிறப்பையும், மனச்சிறப்பையும், செல்வச்சிறப்பையும் காண்போம்.

குடிச்சிறப்பும் குணச்சிறப்பும்: வள்ளுவர் கூறும் விண் ணரசுக குடிகள் யாவரும் இம்மண்ணில் வாழும் மக்களே யாவர். தலைமுறை தலைமுறையாக வரும் பழங்குடி மக்கள் அவர்கள். அக்குடியிலே பிறப்பவன் செப்பமும் நாணமும் உடையவனுக இருக்கின்றான். செப்பமாவது கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாமை நாணமாவது பழிபாவங்களுக்கு அஞ்சுதல். இஙஙனம் அவர்கள் செப்ப மும் நாணமுமுடையோராக நிலைத்து வாழ்தற்குக் காரணம் உண்மையில அவர்களுக்கிருக்கும் தளராமை.

> "ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
> இழுக்கார குடிப்பிறந் தார்." (கூ௫௨)

வாய்மையில் தழைக்கும் அக்குடியினை நாயனர் வாய்மைக் குடி என்றே குறிக்கிறார். வாய்மைக் குடிமக்கள் தம் மிடம் வறியவர் வருஙகால் முகமலர்நது அவர்களை வர வேற்பர்; தம்மிடம் உள்ளனவறறைக் கரவாது அவருக்குக் கொடுப்பர்; இன்சொற் பேசி அவர்களை மகிழ்விப்பர்;

அவர் வழியராதல் நோக்கி அவரைத் தம் உள்ளத்தும் எள்ளார்.

மேலும், அவர்கள் கோடிகோடியாய்ப் பொருள் பெறினும் தம் ஒழுககம் குன்றும தொழில் செய்யார். தம் குலச் சிறப்புத தம்மால் வடுப்பட இடம் கொடார். மதியிடத்து மாசு விளங்குதல்போல் குடிப்பிறந்தார் குற்றம் உலகின கண்ணுக்கு விளக்கமாகத் தோன்றிவிடும் என்று அஞ்சுவர். ஒருவன் உயாகுடி மகன் என்பது அவனது அன்புடைமையால் அளக்கபபடும்; மேலும், அவன் யாவரிடத்தும் பணிந்து ஒழுகுவான.

" பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருககதது வேண்டும் உயர்வு." (௯௬௩)

உயர்குடிப் பிறந்தார்க்கு மானம் உயிர் போன்றது. தாம் மலைபோற் பெரியராயினும குன்றியளவு குற்றம்செய்தால் அது தமக்குத் தாழ்வெனக் கருதுவர். அதனோடும் அமையார், பெருந்தகைமை பீடழிய வந்தவிடத்து, இவ்வுடல் விலைஇழந்த ஊன்பொதி என மதிததுத் தம உயிரை நீப்பர். இவ்வாறு இளிவரின் வாழாத மானமுடையோரை உலகத்து மக்கள் கடவுள்கல்லில் வைத்து வணங்குவர். அவரே மனிதவாழ்க்கைக்குக் குறிக்கோள்கொடுதத பெரியாராதலின் சிலபபு கவர்நத களவர் என்ற சொற்பொருது, மானததை நிறுவிப் பின் மரணத்தைதத தழுவிக்கொண்ட தமிழ்ப் பெண்ணுக்குத தமிழ் மன்னன் கற்கோவில் அமைததது‌ம, கவிமன்னன் காப்பியக்கோவில் எடுத்ததும் நாம் அறிவோம்.

நல்ல வளம்பொருந்திய நாட்டிலே நல் அரசனுடைய ஆட்சியிலே வாழும அமமக்களை நாயனார் சான்றோர் என மற்றொரு சிறபபுப பெயராலும சுட்டுகிறார். பல குணங்களும நிரம்பி, அக்குணஙகளை ஆளும் மேலோர் அவர்கள். இவை இவை நற்குணஙகள, இவற்றை நாம் பூணுதல் வேண்டும் என்று கருதி முயலும காரணத்தால் அவர்கள் நற்குணங்கள் உடையோராக இருக்கவில்லை. நற்குணங்கள்

யாவும் அவர்கட்கு இயல்பின் அமைந்தவை! பிறவிப் பண்பு! நற்குணப் பெட்டகமாகிய அச்சான்றோரை அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்து அசையாத் தூண்கள் தாங்குகின்றன. பிறர் குற்றங்களை அவர் தம் வாயாற் சொல்லார். தம்மின் இழிந்தாரும், மெலிந்தாரும் தமக்குத் தோல்வி தருவன செய்யினும் அவற்றை அவர்பாலும் ஏற்று அமைவர். தமக்கு இன்னா செய்தார்க்கும் தாம் இனியவே செய்வர்.

> "ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
> ஆழி எனப்படு வார்." (கூஅக)

தாம் தாம் பிறந்த குடியினை உயரச் செய்யுமாறு பற்பல கருமங்களையும் அவா அயராது செய்வர். குடியினை உயர்த்தும் ஆர்வத்தோடு, அதற்குரிய ஆள்வினையும் அறிவும் வாய்ந்தவர்கள் வெயில், மழை, பனி, இரவு, பகல் என்று காலம் கருதாமலும், 'பிறர் வாழ நான் ஒருவனோ உழைத்து வருந்துதல்' என்று மானங் கொள்ளாமலும் உழைப்பார்கள். குடும்பத்துக்குத் துன்பம் வராமற் காப்பதனால் தம் உடம்பு துன்பத்துக்கே உறைவிடமாவதை அவர்கள் பொருட்படுத்துவதில்லை. அதனால் அவர்கள் பிறந்த குடி வாழ்கிறது, வளர்கிறது. அவர்கள் வாழும் வீடும் நாடும் மானமும் நாணமும் சால்பும் அன்பும் முயற்சியுமுடைய பெருமக்களின் நிலையங்களாக விளங்கு

செல்வச் சிறப்பு: வணிகத் தொழில் தமிழர்க்குரிய தாய்த்தொழில்களில் ஒன்று. தமிழர் கலங்கள் கடவாத கடல்கள் இல்லை. அதனால் பிறநாட்டுப் பொருட்கள் புகார் முதலிய தமிழர் நகர்களில் மலைமலையாகக் குவிந்து கிடந்தன. ஆயினும் தமிழமக்கள் எத்தொழிலுக்கும் மூலமாகிய உழவுத்தொழிலையே பெருந் தொழிலாக மதித்து நடத்தி வந்தனர் ஏனைத்தொழில்கள் செய்வாரையெல்லாம் உணவூட்டித்தாங்கும் தொழில் உழவே. உழவு சுருங்கினால் துறவு முதலிய அறங்களும் சுருங்கிவிடும். நிலத்தைப் பண்

படுத்திப் பயிரிட்டால் நாட்டில் வறுமை தலைகாட்ட இடமே இல்லை என்பதை அவர்கள் நன்கறிந்திருந்தனர். ஆதலின், ஏரிட்டு எருவிட்டுக் களைகட்டு நீரிட்டு, நாடோறும் சென்று பார்த்து நல்முறையில் பயிர்செய்து வந்தனர். இம்மை மறுமை ஆகிய இருமை இன்பங்களையும் கெடுப்பது வறுமை எனபதை அறிந்து, அதனைப் போரிட்டு ஒழித்தனர். மேல் உலகம் இல் எனினும் ஈவாரேயன்றிப் பசுவுக்கு நீர் எனினும் பிறரிடம் கேளார்.

பிறர் துயர் துடைப்பதற்குப் பயன்படாத செல்வம் ஊர் நடுவே பழுத்திருக்கும் நச்சுமரமாகும் எனக்கொண்டனர். ஊரகத்தே ஒரு மணிநீர் ஊருணி. அது ஊரவர் அனைவர்க்கும் பொது. யாரும் யாரிடமும கேளாமல் தாமே சென்று தமக்கு வேண்டும் நீரை மொண்டு கொள்ளலாம். குடம் சிறிதாயினும் பெரிதாயினும், எத்துணை முறை வேண்டுமாயினும் அங்குச் சென்று மொண்டு கொள்ளலாம். வள்ளுவர்காட்டும் நாட்டு மக்கள் பேரறிவாளர்கள், அவர்கள் தத்தம்முயற்சியால் தொகுத்துக்குவித்த பெருஞ் செல்வத்தை ஊருணி நீர்போலப் பிறர்க்குப் பயன் படக்கொடுக்கின்றனர். செல்வத்தைத் தேடும் உரிமை ஒருவனுக்கு; அதனை நுகரும் உரிமை வேண்டுவார்க்கெல்லாம். பசுவுக்குத் தண்ணீர் வேண்டுமென்று கேட்டாலும் நாவுக்கு இழிவு என்று கருதும் மானத் தமிழன் பிறர் பொருளை விரும்பமாட்டான். நோயால், சூழ்நிலையால், ஊழால் வறியராயினோர்க்குப் பேரறிஞர் படைத்த திரு ஊருணி நீராகப் பயன்பட்டது. வளளுவர்கண்ட தனி உடைமையும், அதனோடு கலந்த பொதுவுடைமையும் இவை.

## முடிவுரை

பொருளல்லவரையும் பொருளாகச் செய்வது பொருளேயன்றி வேறு பொருள் இல்லை என்று செல்வத்தின் தனிப்பெருமையை நன்கறிந்தவன் தமிழன்.

உலைவின்றித் தாழாது உஞற்றினுல் ஊழையும் புறங் கண்டு வெற்றி பெறலாமென்று உழைத்தவன் தமிழன்.

உழைததுத தேடும பொருட் செல்வத்தைக் காட்டி லும சிறநதவொரு மனச்செலவமும உண்டு எனபதையும் தமிழன மறந்தவன அல்லன. எழுநிலை மாடங்களில வாழ்தல, விரைநதோடும் ஊர்திகளில செல்லுதல், அரசர் களாற பாராட்டுப பெறுதல் முதலிய இவை செல்வமாகா. பிறர் துயர் கணடு வருந்தும மனபபண்பே செல்வததுட் செல்வமாவது

"செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புநபலவே." (புறம். கஅக)

என்று அறிந்தொழுகினர் தமிழர் அவர்கள் வாழ்க்கைக குறிக்கோள் இதுவே:

"ஈதல் இசைபட வாழதல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்ககு" (உஙக)

வள்ளுவர் வகுதத அரசியலின் பயன் இது அங்கே மண்நாடு விண்நாடாகிறது மனனன இறைவன ஆகிறான். மன்னனுக்கும மக்களுக்கும் அறம ஒன்றே சட்டமாக அமைகிறது. அம்மககள் செலவாகளாய்ச் சான்றோர்க ளாயப புவியில் தேவர்களாயப புகழ் படைதது வாழ் கிறாகள.

வீடொனறு பாயிரம நான்கு விளஙகறம்
நாடிய முப்பதது மூன்றொன்றூழ - கூடுபொருள்
எள்ளில் எழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவா சொன்ன வகை. (திருவள்ளுவமாலை : ௨௦)

அறநான கறிபொருள் எழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து - பெறலரிய
நாலும் மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலும் ஒழிந்த பொருள் (௨௨)

அரசியல் ஐயைந் தமைசசியல் ஈரைந்
தருவல் அரணிரண்டொன் றொண்கூழ் - இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொருள் எழாம் இவை. (௨௬)

## ௩. இன்பம் - - -

[திரு. ஆ. அருளப்பன் பி. ஏ.]

உலகெலாம் இன்பம் நிலவவேண்டும் என்பதே அன்பு உருவும் அற வடிவுங்கொண்ட இறைவனது திருவருட் செயல். அவ்விறைவனை உணர்ந்து உலகுக்கு உணர்த்திய சான்றோர் எந்நாட்டவராயினும் எம்மொழியாராயினும் எச்சமயத்தவராயினும் எக்காலத்தவராயினும் உலக முழுவதும் இன்பம் பெறுதலையே குறிக்கோளாகக் கொண்டு, தம் ஆன்ற கருத்துக்களை விளங்க உரைத்தும் திருந்த எழுதியும் தம் புகழை நிறுவித் தாம் மறைந்தனர். அத்தகைய பெரியாருள் நிகரற்ற ஒருவராந் திருவள்ளுவர் இயற்றியருளியதே, மக்கள் யாவரும் கற்று உணர்ந்து போற்றுதற்குரிய ஒரு நூலாம் திருக்குறள். இன்பமானது பல்வேறுவகைத் துன்பங்களால் தளர்வடையாது உறுதியுடன் நின்று வளர்வதற்கு இன்றியமையாது வேண்டற்பாலவாய அறம் பொருளைத் திருவள்ளுவர் முதற்கண்

மக்கள் வாழ்க்கையின் விதியாகிய அன்பே இன்பத்திற்கு மூலம், அவ்வன்பின் கருவே காதல், அவ்வன்பின் மலர்ச்சியுங் காதல், அவ்வன்பின் முதிர்ச்சியுங் காதல். காதல் என்னுஞ் சொல்லுக்குப் பொதுப்பொருள் அன்பு என்பதே. அச்சொல், தலைவன் ஒருவனுக்கும் தலைவி ஒருத்திக்கும் உண்டாம் உள்ளக் கலப்பில்தோன்றி அக் கலப்புறுதியால் வளர்ந்து ஓங்கி மலர்ந்து நிற்கும் தனி அன்பைச் சிறப்பாக உணர்த்தும். இக்காதல் அக்காலத் தமிழ் நூல்களில் காமம் எனப்படும். இச்சொல்லுக்குப் பொதுப்பொருள் விருப்பம் என்பது.

“தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.” (௨௬௬)

“கல்லாதான் சொற்கா முறுதல்;” (௪0௨)

“கெடுநீரார் காமக் கலன்;” (௬0௫)

“பலசொல்லக் காமுறுவா;” (௬௪௬)

என்ற இடங்களில் ஆசிரியா அப்பொருளில் அச்சொல்லை ஆளுதல் காணலாம. அதன் சிறப்புப்பொருள், நம்பி ஒருவனுக்கும் நங்கை ஒருத்திக்குமிடையே தனி அன்பாகிய காதல்தோன்றி மலாவதற்குக் காரணமாகும் தனிவிருப்பம என்பதாம. எனவே, அது காதலையும, காதல் நுகாச்சியையும் காதல் இன்பத்தையும ஆகுபெயராய் உணாத்தும் என்னலாம். இக்காலத்தில வரையிறந்த காதலையே காமம என்பர்.

காதல் ஒழுக்கமானது கூடல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்ற பாகுபாட்டால் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலையென ஐந்து வகையில் கூறப்படுதல் பண்டைத் தமிழ இலக்கிய இலக்கண நூன மரபு. இவ்வகப் பொருள் ஒழுக்கம, ஊரவா அறியாது மறைந்து ஒழுகுவது, யாவரும அறிய வரைந்து ஒழுகுவது என்ற கூறுபாட்டால களவியல், கற்பியல் என இருவகைப்படும இவ்விருதிறப் பாகுபாடும் தமிழ் மக்கள வாழ்க்கை முறைகளை விளக்குஞ் செந்தமிழ் நூல்களின் மரபாய் அமைந்தனவே. தொல்காப்பியா, உரிப்பொருளுக்கு நிலைக்களனாகும் முதற்பொருளையுங் கருப்பொருளையும குறிஞ்சி, முல்லை, மருதம, நெய்தல், பாலை என்ற திணைக்கண முறைப்படுத்தி அகப்பொருட்குப் பொதுவிலக்கணம் கூறுதற்கு அகத்திணையியலையும, உரிப்பொருள் விளங்க அகப்பொருட்குச் சிறப்பிலக்கணம் உரைத்தற்கென களவியல் கற்பியலகளையும் வகுத்துக்கொண்டமை காண்க.

திருவள்ளுவ நாயனுர் காமத்துப்பாலைக் களவியல், கற்பியல் என இருபகுதியாக அமைத்தாரென்பது ஐயுறத

தக்கது : திருவள்ளுவமாலையில் தொடித்தலை விழுத்தண்டினார் பெயரால் அமைந்துள்ள,

> " அறம்நான் கறிபொருள் ஏழ்ஒன்று காமத்
> திறம்மூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
> நாலும் மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
> போலும் ஒழிந்த பொருள்." (திருவள்ளுவமாலை. உஉ)

என்ற வெண்பாவில் "காமத்திறம் மூன்று" என வருவதனால் காமத்துப்பால் மூன்று இயல்களைக்கொண்டது என்பது பெறப்படும். எறிச்சலூர் மலாடனார், போக்கியார், மோசிகீரனார் இம்மூவர் பெயரால் அமைந்துள்ள பாக்கள் அறம், பொருள், காமம் என்ற முப்பாற்கும் முறையே இயலும் அதிகாரத் தொகையுங் கூறுகின்றன

> " ஆண்பாலேழ் ஆறிரண்டு பெண்பால் அடுத்தன்பு
> பூண்பால் இருபால்ஓ ராறாக—மாண்பாய
> காமத்தின் பக்கம் ஒரு மூன்றாகக் கட்டுரைத்தார்
> நாமத்தின் வள்ளுவனார் நன்கு" (திருவள்ளுவமாலை உஎ)

என வரும் வெண்பாவால் காமத்துப்பாலானது ஏழு அதிகாரங்கொண்ட ஆண்பால் இயல் ஒன்றும், பன்னிரண் அதிகாரங்கொண்ட பெண்பால் இயல் ஒன்றும், ஆறு அதிகாரங்கொண்ட இருபால இயல் ஒன்றும் ஆக மூன்று இயல்களாக வகுக்கப்பட்டிருந்ததென்பது புலனும். காளிங்கர் (காலிங்கர் என்பதும் பாடம்) என்னும் உரையாசிரியர் தமது காமத்துப்பால் உரைத்தொடக்கமாக, "இவ்வாறு பொருட்பகுதி உணர்த்தி மற்று இதன்பின்னரே காமப் பகுதி உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்" என மொழிந்து, ஏழாம் அதிகாரமாகிய அலரறிவுறுத்தல் முடிவில், "தலைமகன் கூற்று முடிந்தது இனித் தலைமகள் கூற்றுக்கிளவி வருமாறு" எனப் பகர்ந்து, பத்தொன்பதாம அதிகாரமாகிய அவர்வயின் விதும்பல் முடிவில், "இனி இவ்வாறு ஒதற் பிரிதல் முதலாகிய பலவகைப் பிரிவுகளையும் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்" என வரைந்து, "இருபாற்கிளவி வருமாறு" எனவும் செப்பிச் செல்கிறார்.

இங்கு அம்முறையே மேற்கொள்ளப்பட்டு, அக்காளிங்கருரையையே பெருமபாலுங் தழுவியுரைக்கப்படும். அகப்பொருட் கிழவனுங் கிழத்தியும முறையே தலைவன், தலைவி எனப்படுதல் ஆசிரியர் மரபு.

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோ
டுருவு நிறுதத காம வாயில்
நிறையே அருளே உணாவொடு திருவென
முறையுறக கிளாநத ஒப்பினது வகையே" (தொ. பொ. 273)

பிறபபு நிலையாலும, குடிமைப் பண்பாலும, வினையாண்மையாலும், ஆணுக்குப் பதினாறும பெண்ணுக்குப் பன்னிரண்டுமாகிய ஆண்டமைதியாலும, உடல வடிவாலும், அதன்வழித்தோன்றி விழைவுககு வழியாகும அன்பாலும், ஒழுக்கததாலும், அருட்குணததாலும, நல்லுணர்வாலும் ஒதத நமபி யொருவனும நஙகை யொருத்தியுங் காதலராய் வாழ்ந்து நுகரும தலைமையான இன்பததையே திருவள்ளுவரது காமததுப்பால் அறிவிககின்றது

தலைவன ஒருவன தோழரோடு வேட்டையாடச் சென்றான் மலையும அருவியும பொழிலுஞ் சிறந்தோர் சூழல் மருஙகில் களிறொன்றைக் கண்டு, தோழரைப் பிரிநது தனித்ததை உணராதவனாய் அதனைப பினபற்றிச் சென்றான். களிறு குன்றிடை மறையவும் தெய்வச செயலாகப பொழிலகததுப் புகுநது ஓா அணங்கைக் கண்டான தோழியரோடு தினைபபுனங காவற்கோ சுனையாடுதற்கோ சென்ற தலைவியொருததி, பல்வகைப பூபபறிக்கும் விருபபத்தால் தோழியா பல்வேறிடமாக நீங்கிச் சென்றுவிட, அப்பொழிலினுள் தற்செயலாய்த தனித்து நின்றாள்.

## தலைமகன் கூற்றுக் கிளவி

தலைவி தலைவன் நோக்கிற்கு எதிநோக்கிப் பின் நாணி நிலத்தை நோக்கினாள் எழில் சிறந்து தனக்குக் கலக்கந் தந்தமையால் தேவமகளோ என்றும, சாயலின் இயல்பாலும் பொழிலின்கண் நின்றமையாலும் மயிலோ என்றும்

ஐயுற்ற தலைவன், தன் நெஞ்சத்துக் காதல்நோய் தோன்றிய மையாலும், அவள் எதிர்நோக்கியமையாலும் மங்கையே எனத் துணிந்தான். அச்சம, மடம, நாணம், பயிர்பபு என்ற அவளின் பெண்மைக் குணங்களின் நிறைவை உணாந்தான் அவளது அருளுடைய கண், ஒளியுடைய நெற்றி, எழிலுடைய பிறவுறுப்புகள், வேண்டாதனவாய பொன்னணிகள் இவற்றால அமைநதகிடந்த அழகு எனுந் தகைமையால் தலைவன உளளங கலஙகப்பெற்றுன இவ் வனுபவத்தால் அவன் தெளிவாய் உணாநத கருததுக்கள் இரண்டு: போர்க்களத்துப பகைவரும அஞசுதற் கேது வாகிய தனது நெஞசுரததின் தனிபபெருமையானது மெல்லியலாளது ஒள்ளிய நுதலுக்கு எதிர்நிற்கலாற்றுது குலைநதுபோயிற்று என்பது ஒன்று, உண்டவரைக களிப்பு மயக்கத்தில் ஆழ்ததும் கள்ளைப்போலல்லாமல், காதலானது அஃதுடையார் ஒருவர் ஒருவரைக் கண்டாலே களிப்புறச் செய்யுமென்பது மற்றென்று.

தன் தலைவியைக் கண்டு மகிழ்ந்த தலைவன் கூடி மகிழ்தறகுத் தலைவியும் ஒதத காதல் உடையளாயிருத்தலை உணரவேணடும்.

"பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின்." (எ0க)

எனவே, தலைவன் தலைவியது கண்ணின் தன்மையைக கருதுகிறான். தனக்குக் காதல் நோய செய்த நோக்கின் வேறுக இன்னெருநோக்கு அவண் காணப்படுகிறது. அஃது அந்நோய்க்கு மருநதாவது. மற்றும, தான் நோக்காதிருக் கையில் நோக்குதலும, தான நோக்கின் நாணெடு தலை சாய்த்து நிலததை நோக்கி நிற்றலும், ஏதிலாரபோலப் பொதுநோக்கு நோக்குதலும, நோக்கினிடையே பசையின ளாய்ப் பையநோக்குதலும் சாலும.

"கண்ணெடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்சசொற்கள்
[1]என்ன பயனு மில. (கக00)

---

1. காளிஙகர் பாடம்.

என்று தலைவன் தேறினான். அன்றியும், தலைவி பரிவு இல்லாதவள்போல் சிறுசொற் கூறினும் அச்சொல்லில் வெறுப்பின்றி விருப்புக்குறிப்பு அடங்கியுள்ளமையையுந் தலைவன் உணர்ந்துகொண்டான்

பின்னர், தன் தலைவியைக்கண்டு அளவளாவி இன்புற்றுவருந் தலைவன் தனதுள்ளத்தில் நிறைந்துள்ள அன்பைத் தலைவிக்கு உணர்த்துதற்குத் தன் நெஞ்சிற்கு உரைப்பானபோன்று தலைவி கேட்பச் சொல்லுதலாக அமைந்துள்ளது புணர்ச்சி மகிழ்தல் என்ற அதிகாரம்.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள." (ககOக)

இத்தகைய அகப்பொருட் பாக்களைக் கண்டாலும் கேட்டாலும் உடனே கீழுணர்ச்சியால் உந்தப்படுவோர் அவை உணர்த்தும் இன்பத்தின் தன்மையை உணராது மயங்குவர். (அந்தோ! புணர்ச்சி, முயக்குப்போன்ற சொற்களைக்கேட்டே மாலகொள்வார் உளரே!) இவ்வித மயக்கம் தெளிவதற்கு இன்பவகைகளை ஆசிரியர் உணர்த்துதலை அறிதல் இன்றியமையாதது.

"...ம் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்." (சுச)

ஒரு சுவையுமில்லாத கூழும் தங்காதற்குரிய மக்கள் அளாவியதால் அமிழ்தினும் மிகுந்த இனியதாய்ப் பெற்றோர்க்கு இன்பந் தரும். பணிமொழி பேசும் தலைவியினது வாலெயிறூறிய நீர் காதல் மிகுந்த தலைவனுக்குப் பாலொடு தேன் கலந்ததுபோன்ற இன்பந் தந்தது

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைசொற் கேளா தவர்." (சுசு)

புல்லாங்குழல் இசைக் கருவிகளுள் மிகச் சிறந்த தொன்று, வீணையும் அங்ஙனமே மிக இனிமை வாய்ந்தது. இவை நிறைந்த இன்பந் தருவது தம்மக்கள் மழலைச் சொற்களைக் கேளாதவர்க்கே என்கிறார் திருவள்ளுவர்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச
சான்றோன் எனக்கேட்ட தாய்." (கக)

குழந்தை பிறக்கும்போது உண்டாம நோயெலலாம் பறநதுபோய் விடுமாம தாயகருத தன்குழந்தை முகங் கண்டதும இனபங்கொணடு. அதனினும மேலாக அததாய் அம்மகனது ஒழுகக நிறைவைப பிறா பாராட்டக் கேட்டதும இனபுறுவாள

". .. . ..முதியோள் சிறுவன்
களிறெறிநது பட்டன னென்னும் உவகை
ஈன்ற ஞானறினும பெரிதே" (புறம். உஎஎ)

எனப பூங்கணுத்திரையாரும,

"செங்களந துழவுவோள சிதைநதுவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந தனளே" (புறம் உஎஅ)

என நசசெள்ளையாரும பாராட்டும்வீரத தாய்மாாகொண்ட இன்பம வியததறகுரியதே

ஈததுவககும இனபம அறியாது தமது உடைமையைச் சேர்தது வைதது இழககும இரககம இலலாதவர்க்காக இரஙகும திருவள்ளுவா, தாந் தீதினறி ஈட்டிய பொருளைத் தமது இலலினகணிருநது பகிாந்து உண்ணுதலால் பெறும இனபததைச சிறந்ததெனை மதித்து,

"தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு." (கக0எ)

எனத தலைவியைத் தழுவித தலைவன பெறும இன்பததுககு உவமையாக அமைககிறார்.

"தாம்வீழ்வார் மெனறோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு." (கக0ங)

எனத் தான் விரும்புந் தலைவியொடு கூடுதலினும் வானுலகில் இறைவனை அடைதல் இனிதாகா தென்று தலைவன் கருதுவதாகத் திருவள்ளுவர் கூறுகிறார். ஆனால்,

"தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்
தும்பா உறைவார் பதி."

என அறிவுடையார் தம்முட் கூடி மகிழ்தலினும் வானுலக இன்பம் சிறந்த தாகாதென நாலடியார் நவில்கின்றது. அப்பரோவெனின இவ்வுலகத்து இனிய பொருள்களி லேயே இறையருள கண்டு, அவ்வுலக இன்பம நுகர்ந்து,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கின வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே."

என்றிசைக்கிறார்.

இத்தகைய தலைமையான இன்பத்தை உயிரும் உடம்பும் அன்ன காதல்கொண்ட இருவர் எவ்வித நற்பண்பு கொண்டு எங்ஙனம நுகரலாம என்று தெளிவிப்பனவே திருவளளுவரது காமத்துப்பாலும, குறுந்தொகையும், நற்றிணையும, நெடுந்தொகையும், கலித்தொகையும் போன்ற அகப்பொருள இலக்கியப பெருஞ்செல்வங்கள் எல்லாமும. இங்கு,

"மலரினும் மெல்லிது காமம் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்." (கஉஅக)

என்ற அருங்குறளின் நுண்பொருள் முழுவதும ஆழ்ந்து ஆராய்ந்து உணாந்து உவகையுறத் தகும்.

பலவகையான இன்பமும் தலைமிமாட்டுச் செறிந்து இருப்பதை உணர்ந்து துய்த்தலே தலைவன் பெறும் புணர்ச்சி இன்பமாகும். இஃது இடையறுதலின்றி நுகரத் தக்கது என்றும, விரும்பியது எப்பொருளாயினும அப பொருளை விரும்பியபடியே பெற்றின்புறுவார் எய்துங் களிப்பெல்லாந் தனக்குத் தலைவியரது தோள் தரும் என்றும், அத்தோளைத தொடுதலால் அமுதுண்டாற்

போன்று தன்னுயிர் உறுதிபெறும் என்றும் தலைவன் தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்துவான்.

காதலர் இன்பத்துக்கு ஏதுவாகும் கூற்றுக்களில் நலம்புனைந்துரைத்தல் சிறந்ததொன்று. தலைவியினுடைய கண், முகம், இடை, அடி முதலிய உறுப்புக்களின் அழகைத் தலைவன் பாராட்டிக் கூறுதலே முறையாவது. அன்றித் தலைவன் தன்னைப் புகழும் ஒவ்வொரு மொழிக்கும் மாற்றமாக ஒரு மொழி கூறித் தலைவியுந் தலைவனைப் புகழ்தல் மரபன்று. இப்புனைந்துரை நயமிக்க முறையிலேயே திருக்குறளில் அமைந்துள்ளது. தலைவன் முழு மதியைப் பார்த்து, "மதியே! என் தலைவியாகிய மாதராள் முகம்போல மறுவொன்றுமின்றித் தண்ணொளி தரும் வன்மை உனக்கில்லையே; இருந்தாலன்றோ நீ என் காதலுக்கு உரிமை ஆவாய், தலைவி முகத்துக்கு ஒப்பாக நீ விரும்பினால் பலரும் ஒரே வகையாக மகிழ்ந்து காணுமாறு தோன்றலாகாது" எனச் சொல்வதனால் முறையே தலைவியது முக அழகையும், அம்முகம் தனக்குத் தருதல் போன்ற தனி இன்பம் பிறர்க்குத் தருதல் இல்லையென அவளது ஒருமைப் பண்பையும் பாராட்டிய நயம் வியத்தற்குரியது. விசும்பூருந் தண்மதியோடு விண்மீன்கள் அடுத்தலையும் அதனின்று விலகுதலையும் கொண்டு, கலைமதிக்கும் தலைவி முகத்துக்கும் முறையே மறுவுடைமையும் இன்மையுமாகிய வேறுபாடிருந்தும் அம்மீன்கள் தம் மதி யாது, பிற முகம் யாது என அறியாது தநிலைநின்றும் பெயர்ந்ததாக,

"மதியும் மடந்தை முகமும் அறியா
பதியிற் கலங்கிய மீன்." (கககசு)

எனக் கற்பனை செய்வது புதுமையே. மாதர் கண்ணுக்குக் குவளை மலர் உவமை கூறப்படும். இக்குவளை மலரைக் கண்டதும் தலைவன் நெஞ்சு மயக்கங் கொண்டதாம். காரணமென்ன? தலைவியது கண் தன் தலைவனுக்கே உரியனவாயிருக்கப் பலருங் காணத்தகும் குவளை மலரை ஒத்தனவே என்பதாம். அந்நிலையினின்று தன் நெஞ்சைத் தலைவன் திறமையாகத் தேற்றுகின்றான்: குவளை மலர்கள்

தலைவி கண்கட்கு முன் தலைகவிழ்ந்து நிற்றலால் தாமே தம் ஒவ்வாமையை உணர்த்துகின்றனவே.

அனிச்ச மலர் புதுமையானதோர் பூ. மோப்பக் குழையுமத்தனை மென்மையானது. இவ்வனிச்சப் பூவின் பண்பை உளங்கொண்டு, "தலைவி அனிச்சமலரே சூட்டப் பெற்றாள்; ஆனால் அதன் காம்பை ஒடித்துக் களையத் தவறிவிட்டமையால் அவள் இடை ஒடிந்துபோமோ" என இடையின் நுண்மையையும், "அனிச்சமே! நீ மிக மென்மைத் தன்மையுடையாய் எனப் பெருமை கொள்ளாதே; என் தலைவி உன்னைவிட நன்னயமுடையாள்" என அவளது நற்பண்பையும்,

> "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
> அடிக்கு நெருஞ்சிப் பழம்" (கக௨0)

என அடியின் பசுமையையும் தலைவன் புகழ்வான். தலைவி மேனியானது நிறத்தால் மாந்தளிரை ஒக்கும், பல்லானது வண்ணத்தாலும் வடிவாலும் முத்தை ஒக்கும்; உடல் கமழும் மணமானது தன்மையால் நறுமணமாகும்; கண்ணானது வடிவாலும் வினையாலும் வேலாயுதத்தை ஒக்கும்; தோளானது வடிவாலும் அளவாலும் வேயை ஒக்கும் என்று எல்லாங் கொண்டாடித் தலைவன் இன்புறுவான். இதற்குச் சிலம்புத் தலைவன், "மாசறு பொன்னே, வலம்புரி முத்தே, காசறு விரையே, கரும்பே, தேனே, ஆருயிர் மருந்தே, மலையிடைப் பிறவா மணியே, அலையிடைப் பிறவா அமிழ்தே, யாழிடைப் பிறவா இசையே," எனப் பாராட்டி மகிழ்ந்து தருக்கி வாழ்ந்தமையை இளங்கோ காட்டுதல் நினைவுகூர்ந்து இன்புறத் தக்கது.

இக்காதலர் தங் காதலின் மாண்பென்ன? உயிரும் உடம்பும் எங்ஙனம் ஒன்றனோடு ஒன்று இயைந்து, பிறப்பு முதல் நல்லுறவுகொண்டு, வேற்றுமையின்றிக் கலந்து இன்பதுன்பங்களை ஒருசேர நின்று துய்த்து ஒன்றுக்கொன்று இன்றியமையாது வாழ்கின்றனவோ அங்ஙனமே தலைவனுந் தலைவியும் அவ்விருவரிடைக் காதல் பிறந்த

கணந்தொட்டு என்றும், இம்மை மாறி மறுமை வந்தாலும் பிரிந்து வேறாகி வாழ்தற்கு இயலாத நிலையினர் ஆவர். எனவே, அவர்கள் கூடுதல் உயிர் உடம்பொடு கூடிவாழ்தல் போன்றதாய், பிரிதல் உயிர் உடம்பினின்று நீங்கிச் சாதல் போன்றதாம் இவ்வரிய ஆழ்ந்த உண்மையைத் தெளி விக்கும்,

> "உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
> மடந்தையொ டெம்மிடை நட்பு." (ககஉஉ)

என்ற திருக்குறளின் பொருளானது,

> "யாக்கைக்
> குயிரியைந் தன்ன நட்பின் அவ்வுயிர்
> வாழ்தல் அன்ன காதல்
> சாதல் அன்ன பிரிவரி யோளே."

என்னும் நரைமுடி நெட்டையாரது நெடுந் தொகைப் பாடற் பகுதியில் கண்டு இன்புறுக[1] விழையத் தக்க முக வழகோடு மகிழத்தக்க அகவழகுங்கொண்டு உளங்குழை யும்படி இனிய பணிவான மொழி இயம்பும் தலைவியது வாயெயிறூறிய நீரைத் தேன்கலந்த பாலெனப் பருகித் துய்த்துவரும் தலைவன் அவளைத் தன் கண்ணின் கருவிழிப் பாவையாக வைத்துப் போற்றுவதன்றி எஞ்ஞான்றேனும் மறத்தல் அறிவானோ?

தலைவியானவள் எங்ஙனம் தலைவனைக் கருத்தில் கொள்வாள் என்பதை அறிவிக்கும் குறள் வெண்பாக்கள் அவளது வெள்ளை உள்ளத்தின் தூய காதலுணர்ச்சியின் ஆழத்தைத் திருந்திய முறையிற் காண்பித்தலில் வியத்தற் குரிய நயஞ் சிறந்தன. கண்ணின் நிற்கும் காதலன், கண ணுக்கு மைதீட்டுதற்குத் தலைவி கண்ணை மூடும் அந்நேரத் தில் மறைதலை உணர்ந்து, தன் கண்ணுக்கு மைதீட்டுதலை நிறுத்திவிட்டாளாம். அக்காதலன் எத்துணை நுண்ணியனா யிருக்கின்றானெனின், இயல்பாகக் கண் இமைக்கும்போது

1. நெட்டையர் என்ற பெயர் 'லாங் பெலோ '(Long fellow) என்ற ஆங்கிலப் பெயரை நினைவூட்டுகிறது.

தானும் ஊறு கொள்ளாது தலைவியது கண்ணையும் உறுத்தாது நிற்கின்றாளும்; என்ன வியப்பு! கண்ணுக்கு மை யெழுதுதலை விட்டதுபோலவே சூடாக உணவுண்ணுதலையும் கைவிட்டாள் தலைவி. ஏனெனின், தன்னெஞ்சுள்ளும் இருக்கும் தலைவனைச் சூடான உணவின் வெம்மை தாக்குமே என்பது அவள் எண்ணம். கண்ணின் நீங்கிய தலைவன், தலைவியது உள்ளில் தங்கியது உள்ளுவார்க்கெல்லாம் உவகை தருவது.

காதல் களவியலாக நிகழ்ந்ததையும் அதனைப் பெற்றோரும் அறியார், ஊரவரும் அறியார். தலைவி தெருண்டமை உணர்ந்த தாய்தந்தையர் இக்காலத்துப் போல் அக்காலத்தும் திருமணத்துக்கு ஏற்பாடு செய்ய முற்படுதல் வழக்கமே. பெற்றோரது கருத்துணர்ந்து தலைவியும் தலைவனும் கலங்குவர்; ஆனால், செயவதறியாது மயங்கார் தலைவி தான் இதுகாறும் தன்னுயிர்த் தோழிக்கும் கூறாது அகத்தது அடக்கியுள்ள காதற் பகுதியையும் அவளிடம் வெளியிடுவாள். அக்காதலின் சிறப்பையும் உறுதியையும் உணர்ந்து தோழி அச்செய்தியைச் செவிலித் தாய்க்குரைப்பாள். அதுகேட்ட செவிலித்தாய் அந் நிகழ்ச்சியை முறையாக நற்றாய்க்குப் பகர்வாள். நற்றாய் திறம்பட தந்தைக்கும் தமையன்மார்க்குங் கூறுவாள். இஃது அறத்தொடு நிற்றல் என்னும் அகப்பொருள் துறையாம்.

தலைவனுந் தனது காதற் சிறப்பையும் அதன் ஆழத்தையும் ஊரறியச் செய்வதற்குத் துணிந்து முன்வருவான். இதற்கு அக்காலத் தமிழ்நாட்டு இளநம்பியர் கொள்ளுதற்குரிய வழி மடன்மா ஊர்தலாகும். பனைமடலால் குதிரை போலொன்று கட்டி, அதன் கழுத்தில் மணியுங்கட்டி, எருக்கலை மாலையைத் தனது தலையிற் சூடித் தம்மிருவர் படத்தையும் கிழியில் வரைந்து பேரும் ஊரும் எழுதிக் கொண்டு தலைவியின் ஊர்த்தெருவில் தலைவன் செல்வான். இதனால், தலைவனது காதலின் உண்மையையும் உறுதியையும் அவள் பெற்றோர் உணர்ந்து மனமுவந்து இருவர்க்குந்

திருமண முடித்து வாழ்த்தி அவர்களைத் தனிக்குடித்தனத் திருத்தி மகிழ்வர். தலைவன் நாண்துறந்து மடலேறுதல் சிறுபான்மை நிகழ்தல்போலன்றித் தலைவி நாணணி துறவாது தனது மாண்பு பெருந்தகைமை இவற்றைப் போற்றியது பாராட்டற்குரியது:

"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்." (கககஎ)

என்பது இலக்கியம்;

"எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்
பொற்புடை நெறிமை யின்மை யான." (தொ. அகத். 35)

என்பது இலக்கணம இக்குறிப்புக்கள் நாணுத்துறவுரைத் தல் என்னும அதிகாரததால பெறப்படுவன.

பொதுவாக காதலரது நடபபு வேறுபாடுகளாலும, சிறப்பாகத தலைவியது மெலிவு முதலியவற்றாலும இவர தம் நட்பு ஊரவரால் ஐயுறபபெற்றுச் சிறிது பேசப்படுவது அமபல் என்றும, பெரிதும பேசப்படுவது அலர் என்றுஞ் சொலலப்படும ஊா வாயைமூட உலைமூடி யேது? இத் தகைய நிகழ்சசிபறறி ஒனறை ஒன்பதாக வமபுபேசுதல் ஊரியல்பு.

"கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று." (கககசு)

எனத் திருவள்ளுவர் இக்கருத்தை எளிதான உவமை அமைத்து விளக்குகிறார். மதிமறைப்பு (சந்திர கிரகணம்) எங்கும் யாவராலும் எவ்வளவு பேசபபடுகிறது! இவ்வலர் ஏதுவாகவும் அதனால் பெற்றோா சொல்லும தடைக் கூற்றுக்களாலும் தலைவன தலைவியரது காதல்நோய் வளர் தலேயன்றிக் குறைதலின்று.

"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்." (கககஎ)

என உருவகவணி அமைத்து இப்பொருள் விளக்கப் பெறுதல் உள்ளத்துக்குக் களிப்பூட்டுவது. காதலர் ஒருவர்

ஒருவரைக் காணுதிருக்குங்கால் இவ்வலர் காதில்விழுதல் உயிர்க்கு ஊக்கந் தருவதாகவும், காதலுக்கு ஆக்கந்தருவ தாகவும் கண்டதுபோலும இன்பந்தருவதாகவும், கள் ளுண்டு களித்தவா மேலும மேலும அதனைப் பருக விரும் புதல்போன்ற விழைவை வளர்ப்பதாகவும் அலரறிவுறுதத லில் திருக்குறள் அறிவிக்கும் நயம் கண்டு களிகூரததக்கது.

## தலைமகள் கூற்றுக் கிளவி

இலக்கிய இலக்கண நூல்களில் களவியலாகப் புணர் வும, கற்பியலாகப பிரிவும சிறநது நிற்றல் ஊன்றிக் கருதுதற்குரியது. காதலா தமமுட் கண்டு அளவளாவி மகிழ்தற்கு விழைவுறுதல இயல்பே தம உள்ளதது வளாநதுவருங காதலை ஒருவர் ஒருவர்ககு உணர்தகி உறுதிப்படுததி இன்புறுவது கருதிக களவுக்கூட்டம் நிகழ்த்துவதேயன்றி மற்றென்றும இல்லையாம ஆரியக் கருததுக்கள் தமிழ இலக்கிய இலக்கணங்களுள் கலககப் பெற்ற காலததுககு முன்னுள்ள செந்தமிழ் நூலகளை முறையாக ஆழ்நது அடஙகி ஆராய்நது கற்றால் இவ் வுண்மை தெளிவிற் புலனாகும வரைவுக்குமுன களவிற் கூடலும, வரைந்து இலவாழவைத தொடங்கியபின் கற்பிற பிரிதலும ஊடலும சிறநது அமைய நூல் இயறறும் மரபே இதனை விளங்க வைக்கும.

தலைவனை விட்டுப் பிரிந்து தான் வாழ்தலினும், உயிரை விட்டுபபிரிந்து உடல் சாதலை எளிதெனத தலைவி கருது வாள், தொட்டால் சுடுவதல்லது, விட்டால் சுடாத தீயி னுக்கு நேர்முரணைக், காதலானது, கூடியிருக்குங்கால் தண்ணெனக் குளிர்தலையும், பிரிந்து நீஙகுங்கால் வெம் மென வெதுமபுதலையும உணர்ந்து வியந்து வருந்துவாள்; பிரிவுக்காலதது உயிர்தரித்தல் யாங்ஙனம் என அயர்வாள; பிரியேன என்றவா பிரிந்தாா ஆதலின், விரைந்து வருவேன் என்றவா வராதிருததலுங் கூடுமன்றோ என ஐயுற்று நைவாள; இனி இவ்வுலகில் யாரை நமபுவது எனத் தளர் வாள்; அவளது உள்ளததைப்போல உடலுஞ் சோர்ந்து

மெலிந்தமையின் கையினின்றும் வளைகளெல்லாம் கழன்று விழுந்தன.

பிறரறியாதவாறு இப்பிரிவுத் துயரை மறைத்தற்குக் கருதின் அது இறைக்க இறைக்க ஊறும் ஊற்றைப்போல் பெருகுவதாயிற்று. கண்கள தலைவனைக் காணும் வேட்கை மிகப பெற்றமையால் துயிலின்றிக் கண்ணீர் மல்கின.

இரவில் தலைவி தவிர யாவரும் உறங்குவார்கள். தான் மட்டுமே இரவுக்குத துணை ஆனால், இரவோ கொடியது; தனது துயர்மிகுதல் கண்டும் விரைவில் கழியாது நிற்கின்றது. கூடிய அன்று பெறற இன்பம் கடல்போன்று பெரிதே; பிரிந்த இன்று அவளுறற துன்பம அதனிற் பெரிதே காதல ஒருபுறமும, பிரிவாற்றாமையை எண்ணி நாண் ஒருபுறமும தன்னுயிரைக காத் தண்டாகக்கொண்டு தன் வாடிய உடலினகததுத் தொஙகின. இக்கடலன்ன துயரைக் கடத்தற்குப் புணையனன துணை இல்லையே என எண்ணித் தலைவி வருந்துவாள்.

தலைவனைக் காணும் வேட்கை மிகுந்த தலைவி தன்னுள்ளத துறுதுயா கண்ணிற் காணப்படுதலை வாயாற் கூறுமமுறை களிகூரச்செய்வது. இத்துன்பமாகிய காரியம் நேர்நததற்குக் காரணமாய் நின்றன கண்களே. தலைவி காதல்நோய் கொள்ளுமாறு கண்கள் தலைவனைக் காண்பித்தன. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பதறகிணஙக இன்று அவை தாமே விதுப்பால் துன் புறுகின்றன; அன்று எண்ணாது நோக்கின; இன்று காணாது கலங்குகின்றன. இது நகைப்புக்கிடமன்றோ! மறறு, நம்மைக்காண விரும்பாதவரை நாம் காண விழைவது எதற்கு? அந்நாள் கண்டினபுற்றதை எண்ணி இந்நாள் காண்டலை விழைந்து அழுதால் கண்ணீரற்றுப் போதலைத் தவிர வேறொரு பயனும் விளையாது என்றெல்லாம் தலைவி கவன்றுகொண்டிருப்பாள். இதோ! நெடுநல்வாடையென்னுங் கிழியில் நக்கீரர் என்னும் புலவர்பெருமான் பிரிந்து வருந்தும் தலைவியின் ஓவியத்தை வரைந்துளளமை கண்டு வியப்பும் உவப்பும் பெறுக.

"ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்துப்
பின்னமை நெடுவீழ் தாழத் துணைதுறந்து
நன்னுதல் உலறிய சின்மெல் லோதி
நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண்
வாயுறை அழுத்திய வறிதுவீழ் காதின்
பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
...... ..................
அம்மா சூர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு
................ ........
உரோகிணி நினைவனள் நோக்கி நெடிதுயிரா
மாயிதழ் ஏந்திய மலிந்துவீழ் அரிப்பனி
செவவிரல் கடைக்கண சேர்த்திச சிலதெறியாப்
புலம்பொடு வதியும் நலங்கிளர் அரிவை."

பிரிந்த தலைவி பெறுவது உள்நோயுங் கண்ணோயும் அன்றி உடல் நோயுமாம். தலைவன் அண்மையிடததுச் சிறுபொழுது நீங்கினும தலைவியின் உடம்பில் பசலை படரும் என்னும் பொருளைத தரும்.

"உவக்காண் எங்காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்பூர் வது." (ககஅ௬)

என்ற குறள் வெண்பா சொல் நயமும செறிந்தது.

"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயககற்றம் பார்ககும் பசப்பு" (ககஅக)

என அப்பொருளையே விளக்கும் குறள் வெண்பா உவமை நயஞ் செறிந்தது. "எனது சாயலையும் நாணையும் தாம் கொண்டு கைம்மாறாகக் காதல் நோயும் பசலை நோயும் தந்தார். எனவே, அவர் பிரிந்தமையே பசப்புக்குக் காரணம் என்றது 'இவள் பசந்தாள்' என்றே பேசப்படுகிறது. முன் கூடியிருந்தபோது என் மேனியைப் பொலிவுறச் செய்த தலைவர், இன்றும் நற்பண்புடையராய் விரைந்து வருவாரெனின் இப்போது எவ்வளவு பசலை படர்ந்தாலும் குற்றமில்லை. அதன் மிகுதியால் பசப்பு என்பதே என்

பெயராகிவிட்டாலுங் குற்றமில்லை. ஆனல், 'அவர் பிரிந்து உறையும் கல் நெஞ்சர்', எனத் தூற்றப்படா திருந்தால் போதும் என்றெல்லாம் எண்ணித் தலைவி மயங்குவாள்.

அறத்தின் பொருட்டுப் பிரிந்த தலைவன் அவ்வினை தீர்தல்வரையுந் தலைவியை மறந்திருப்பான். அத் தலைவனை நினைத்து நினைதததுத் தான்மட்டும் விழைவுறு வதாகவும் அவனிடம் அன்பில்லை எனவும எண்ணித் தலைவி தனித்துயர் மிகுதலும் உண்டு. காத்தண்டுக்கு இருபுற மும ஒதத பாரம இருப்பின் வினை நன்கு முடியும. அங்ஙனமே தலைவனுந தலைவிபோல ஒதத அனபு கொண் டால் நல்லின்பம் விளையும; அவவினபம் காழில்லாத கனியைச சுவைப்பது போனறு நிறைவளிக்கும்; உலகில் மககள வாழ்வு வளம்பெற வானம் பொழிவதை ஒக்கும். காதல் வாழ்வு நலமபெறுதற்குத தலைவியின் விழைவுக் கிசைய தலைவன் தலையளி செயயவேணடும. அதனலேயே "வாழ்கிறோம," என்னுந் தனிப பெருமையாகிய செருக்குத் தலைவிக்கு உண்டாகும. இததகைத தனிப்படர் மிகுந்து தாங்குதற்கு அரிதாயிற்று எனத் தலைவர்க்குத தூது விடுக் கலாம் எனின் பயனின்றாம. அறததின பொருட்டுப் பிரிந்த தலைவனை வினைமுடியுமுன் திருமபிவரச் செய்தலினும் கடலைத தூர்த்தல் எளிதாம என்பன எண்ணித் தலைவி சோர்வாள்.

தலைவி பிரிந்திருக்கையில் தனது நினைவின் ஆற்றலால் தலைவனைத் தன் உளளத்து இருத்தித் தன் தனிமைபற்றி வருந்துதலும் உண்டு. முன்னை இன்பத்தை எண்ணித் துய்ப்பதல்லது வேறு இன்பம் இன்றில்லை எனவும், எவ் வகையில் நினைத்தாலும் தலைவர் சினங் கொள்ளார் என்ற அவ்வளவன்றிக் காதலர் செய்யும் அளி பிறிதில்லை எனவும், அவரை நினைந்தே உள்ளம வெம்பிச் சாம்புகின்றதே நினை யாது இருந்தால் என்னும்? எனவும், தும்மல் வருதல் போன்று வாராதொழிகின்றதே; காதலரும் என்னை நினைப்பவர்போன்று நினையாரோ? எனவும், என் நெஞ்சி னுள் ஓயாது உறைகின்றார்; அவர் நெஞ்சினுள் யான்

உறைகின்றேனோ? எனவும், தம் நெஞ்சினின்று என்னை அகற்றிவிட்டால் என் நெஞ்சினுள் ஓயாது புகுதற்கு நாண மடையாரோ! எனவும் நினைந்து புலம்புந் தலைவிக்கு ஒரே உறுதி என்னவெனின், பருகும் அளவானன்றிக் களிப்புத் தராத கள்ளினும் கருதும் அளவில் இன்பந்தருங் காதல் சிறந்தது என்பதாம்.

நனவில் காணாத தலைவனைக் கனவில் காண்பதற்குத் தலைவி விரும்புவாள். ஆனால் கண்ணிற்கு உறக்கமில்லையே! எத்தனை நாளைக்கு உறங்காதிருக்க முடியும? சோர்வாலும கனவு விருப்பாலுந் தலைவி துயின்றால் நெஞ்சத்திருந்த தலைவன் மஞ்சத்தாவன். கனவில் தலைவன் இங்ஙனம் கண்டு இனபுறுதல் உயிர் தாங்குதற்குத துணை செய்யும் என்பது உண்மையே. எனினும அது போதுமோ? கனவில் வந்து ஏமாற்றிவிட்டு நனவில் வாராது துன்பஞ் செய்தல் எதறகோ? ஆனால் ஒன்று; அவ்வளவேனும் ஆறுதல் கிடைக்கின்றதே! ஆதலின் இவ்வுதவியைச் செய்யுங் கனவிறகுச் செய்ந்நனறி யறிதலாக நலலதோர் விருந்து என்ன வகையில் செய்வது? மற்று, இன்னும் தலைவன் வாராதிருத்தல்பற்றி ஊரவர் தூறறுதல் அவள் கனவில் வநதின்பம தருதலை அறியா மடமையாலேயே. தலைவி மனநிலையின் புதுமைதான என்னே! நனவென்ப தொன்று இல்லையெனின் எவ்வளவு நல்லதாம்! "கனவில் வநதிருநது அளி செய்யும் காதலர் நீங்காரே!" எனத் தலைவி ஏங்கு

"நனவுஎன ஒன்றில்லை யாயின் கனவினான்
காதலர் நீங்கலர் மன்." (கஉகசு)

கார்ப் பொழுதும் மாலைப் பொழுதும் பிரிந்து சென்ற தலைவன் திருமபி வந்துவிடத் தகுங்காலம். தனிததிருக்கும் தலைவியர்க்கு மாலைநேரம் மிகத் துன்பந் தருவது. பூவானது காலையில் அரும்பிப் பகற்கால முழுவதும் போதாகி மாலையில் மலர்வதுபோல் காதல்நோய் காலையில் தோன்றிப் பகலில் நன்கு பெருகி மாலை நேரத்தில் நிரம்பி விடும். இக்கருத்தை,

"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்." (கஉஉஎ)

எனத் தொழில் உருவகவணி அமைத்துக் கூறிய நயம் மிக இனிமை தருவது. தலைவன் கூடியிருந்த காலத்து மாலைப் பொழுதின் இயல்பும், பிரிந்திருந்த காலத்து மாலைப்பொழுதின் இயல்பும முரண்படுவதை அறிந்து தலைவி வருந்துவாள். "என் காதலருள்ளபோது உயிர்தளிர்ப்ப அளி செய்துவந்த மாலைநேரம் அவரில்லாதபோது கொலைக்களத்துப் பகைவர்போல் என்னுயிரை அழிக்க வருதல ஏனோ? தலைவா பிரிவாரே, என அன்று நடுக்கந்தந்த காலைநேரம் இன்று இனிமை தருவதாகிவிட்டது:

"காலைக்குச செய்தநன் றென்கொல் எவன்கொல்யாம்
மாலைக்குச செய்த பகை." (கஉஉ௯)

எனத தலைவி வினவுவாள்.

மாலைப் பொழுதும் தன்னைப்போலவே புன்கண்மை உடையதா யிருததலைத தலைவி கண்டு இரக்கங்கொண்டு, தனககுக கொடுமை செய்த தன் கொழுநன்போல மாலையின் துணையுங கொடுமை செய்ததோ என ஐயுறுவாள். வெப்பம மிகும் அழலாகிவிட்டது மாலைப்பொழுதும்; அன்றியும், அதற்குத தூதாகி வரும் ஆயனது இனிய புல்லாங்குழலும் இனறு தலைவியைக் கொலலுங கருவியாகிவிட்டது. பொருளீட்ட முற்பட்டார் பிறவற்றையெல்லாம் மறந்து அபபொருளை ஈட்டுதலிலேயே ஆழ்நதுவிடும இயல்பைத தலைவன கொண்டான்போலும. அவனை உளளி உருகுந் தலைவியின் உயிரும இம்மாலைப் பொழுதோடு மாயும போலும!

தலைவியது உயிர் மாய்ந்துவிடவில்லை; எனினும், உயிர் உடல் இரண்டுமே சோநது தேய்நது வருகின்றன. ஆதலின், அநநாளில குவளையும நாணித் தலைகவிழ்தற்கு ஏதுவாகிய கவின்கொண்ட கண்கள், இன்று கவின் இழந்து அமமலர் கண்டு தாம் நாணுகின்றன; தலைவனது கொடுமையைக் கூறுவனபோல் அழுகின்றன; நுதல் பசப்பு

எய்தியது கண்டு துன்புறுகின்றன. மணந்த நாள் வீங்கிய தோள்களும் அன்றிருந்த கவின் வாடித் தொடி கழன்று கணவரது பிரிவுக் கொடுமையை உணர்த்துவன ஆயின. தலைவன் இயல்பு பழிக்கப்படுதற்குத் தான் இங்ஙனம் காரணமாயிருந்தது தன் பெண்மைக்குத் தக்கதன்று என்பதைத் தன் நெஞ்சமானது உறுத்தத் தலைவி உணர்ந்தாள். இக் கருத்தை, இலக்கிய முறையோடு உலகியல் முறையுஞ் சிறக்க ஆசிரியர் செப்புந்திறம் ஆய்ந்துணர்ந்து மகிழத் தக்கது.

"பாடு பெறுதியோ நெஞ்சே! கொடியார்க்கென்
வாடுதோட் பூசல் உரைத்து." (கஉருஎ)

இக்குறளுக்கு, (க) நெஞ்சே! எனது தோள் வாடுதல் கண்டாரெல்லாம் கொடியவர் எனத் தலைவரைப் பழிக்குஞ் சொல்லை, நீ சென்று அவர்க்குக் கூறி, அதனால், உற்றவிடத்து உதவும் நண்பனாக உன்னை அவர் மதிக்கும் பெருமை பெறுவாயோ? என்பது காளிங்கர் உரைக் கருத்து. (உ) நெஞ்சே! எனது தோள் வாடுதல் கண்டு தலைவரைத் தோழி இயற்பழிக்கின்றாள் நீ அதைத் தலைவர்க்குச் சொல்; நின்னுரை கேட்டதும் அவர் வந்துவிடுவார்; எனது மெலிவும இப்பூசலும் ஒழியும்; அது, நீ எனக்குத் தக்ககாலத்தில் செய்த நன்றாகும்; அதன் பயனாகிய பெருமையைப் பெறுவாயோ? என்பது பரிமேலழகர் உரைக் கருத்து.

தலைவி தன் தோழியர்க்கும் உணர்த்தாத உணர்ச்சி பற்றிய தனிமொழி நெஞ்சொடு கிளத்தல் எனப்படும். "நம்மைத் துறந்தவராகிய தலைவரை மறவாது கருத்தில் கொண்டிருத்தல் உடல்நலம் அழிந்ததற்கும் மேலாக உள்ளத்தின் நலன் அழிந்துபோதற்கும ஏதுவாகாதோ? காதல் இல்லாதவரை நாம விழைந்து வருந்துதல் மடமையாம். எனவே, வேறுவழி

"நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே! எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து?" (கஉசக)

நாம் அவர்மேல் விருப்பம்வைத்து வருந்திக்கொண் டிருக்க, அவர் நமமேல் விருப்பங்கொள்ளாதிருப்பினும் அவரைக் கைவிடலாகாது என்பது நின் கருததாயின், "நெஞ்சே! நீ அவரிடம் செல்வாயாக; கண்களையும் உன்னோடு கூட்டிச் செல, அல்லது, அவரைக்காண வேட்கை கொண்டு இவை என்னைத் தின்றுவிடும்," என்று தலைவி எண்ணுதன வெண்ணிப் புண்ணுகின்றாள்

தலைவி தன் பிரிவுத்துயரைத் தாஙகியிருத்தற்கு எத் துணை முயன்றும் ஏலாது வருநதுகின்றாள். ஒருவர் குறிப் பின்றித தானே தோன்றுந துமமல்போல் அவளது காதல் விருப்புமு வெளிபபட்டுவிடுகிறது. 'நின்மாட்டு அன்பு பெரிதுடையேன் : அருளும நீஙகேன் ; நின்னிற் பிரியேன்; பிரியினும் ஆற்றேன் , புறதது உடம்பு இரண்டே அன்றி, அகததது உயிர ஒன்றே" என வஞ்சனை பலவும் வருத் துரைத்து என்னை உடன்படுததி என நலமெலலாங் கவர்ந்த கள்வனுகிய தலைவன் பணபுறபபகாந்த பணிவான மொழியன்றோ எனது பெண்மைப பண்பாகிய நிறையுடை மையைத் தகாக்குமு படையாயது ?" என வாடுகின்றாள்.

"ஒட்டாரபின் சென்றொருவன் வாழுதலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று." (கஎஎ)

என்னும் பொருண்மொழிப்படி, இன்பத்தோடு கழியுங் காலததைதத துனபததோடு கழியுமாறு செய்த தலைவரை நினையாதிருக்குமு பெருநதகைமை காதல நோயுறுத மானம் உடையாாககனறி அநநோயுற்றார்க்கிலலை எனபது தலைவி கருதது. காதலனை நினைததால காதலி நெஞசம் தீயிலிட்ட நிணமபோன்று உருகிபபோமேயன்றித திட்பமுடையதாகாது.

அங்ஙனம் நெகிழ்ந்த நெஞ்சமுடைய தலைவி தன் தலைவன் திரும்பிவருதலை மிகமிக விருமபுதல் இயல்பே. அவன் பிரிநததுமுதல் தான் தனிததுறையும் நாட்களை அவள் நகத்தால் சுவரில் குறித்துவருவாள். முன்பு ஏழு நாள் ஒருநாளென விரைந்து கழிந்தன; இன்று தலைவன்

வரவுகாத்து ஏங்கியிருக்குந் தலைவிக்கு ஒருநாள் ஏழுநாளென நின்று கழிகின்றது. நாள் குறித்த நகங்கள் தேய்ந்தன ; வரவு எதிர்பார்த்துக் கண்கள ஒய்ந்தன. உள்ளமும் உடைந்துபோயபின் அவன் வருதலாலும் அவனை அடைதலாலும் பெறும்பயன் உண்டோ? உண்டாம் : அவனைக் கண்ணாரக் கண்டவுடன் பசப்பும் மெலிவும் நீங்கித் தலைவியது உடல்நலந் தெளியும். அவன் வினை முடித்துவரும் நாள் மாலைநேரம் நல்லதோர் விருந்து செய்ய வேண்டுமெனத் தலைவி விரும்பியிருக்கின்றாள். தனது கண்போன்ற கணவர் வந்தால்,

> "புலப்பேன்கொல்? புல்லுவேன் கொல்லோ?
> கலப்பேன்கொல்?" (௧௨௬௭)

எனவும் எண்ணி ஏங்கி நிற்கின்றாள்.

## இருபாற் கிளவி வருமாறு

பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? ஒருநாட் கால அளவுக்குள் ஏழுநாட்கள் அவர்களை அறியாது கழிந்திருக்கும். மறுபடியும் பிரிந்து வினைமேற் செல்லுங் காலம் நெருங்கியது. தலைவன காட்டுஞ் சிறந்த தலையளி தலைவிக்குச் சில குறிப்புக்களை உணர்த்தின. தலைவனிடம் பிரிவு எண்ணந் தோன்றியபின் அவன் செய்யும் அன்பு அது தோன்றாத முன்செய்த அன்பினும் அளவால் இயல்பால் வேறுபட்டுள்ளதைத் தலைவி உணர்ந்து, "அன்பின்மை சூழ்வதொன் றுண்டு" எனப் பிரிவச்சங் கொள்கின்றாள். அதனைத் தலைவனும் அவளது புன்முறுவல் வகையால் உணர்கின்றான். அக்கருத்தை ஆசிரியர் அறிவிக்கும் நயங் காண்க :

> "முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
> நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு." (௧௨௭௪)

பூ அரும்பி முகையாகின்றது ; அம்முகை கண்டு அதன் உள்ளிருக்கும் நறுமணம எண்ணி உணரப்படுதல் போலவே தலைவி முகத்துத் தோன்றும் புன்னகை கண்டு அவளது உள்ளத்துப் பிரிவச்சம் உண்டு என்ற குறிப்பு

தலைவனால் உணரத்தகும். தலைவி அவ்வுணர்வைத் தன்னகத்து மறைக்க முயல்வாள். ஆனால் அவள் கண்கள் மறைக்கல் ஆற்றாதனவாய் உரைக்குமே! மேலும், தனது தோள்வளையை நோக்கியும் அதனை அணிந்த தோளினை நோக்கியும் பின் தனது காலடிகளை நோக்கியும் நின்றமை என்ன உணர்த்தும்? தலைவன் பிரிவான்; உடனே வளைகளும் கழன்று நீங்கும்; தோள்களும் பசந்து மெலியும்; ஆதலின் அடிகள் தலைவனோடு செல்வதற்குத் துணிதலை செய்யத்தக்கது என்பதையே உணர்த்தும்.

தலைவன் தலைவியரிடைக் காதல் இன்பம் சிறப்பதற்கு வேண்டிய மனநிலையைத் திருவள்ளுவர் புணர்ச்சி விதும்பல் என்ற அதிகாரத்தில் நயம்பட உரைக்கின்றார். அவ்வின்பம் தலைவியது தலைமையான பண்புகளாலேயே நிரம்புவதாம். தலைவன் தன் காதலிக்கு இளிவு தரத்தக்கவற்றைச் செய்தல் கூடும்; அவளது விருப்பத்தைப் பேணாது தன் விருப்பப்படியே நடத்தல் கூடும். தலைவியும் இத்தகைய தவறுகளை எல்லாம் தலைவனைக் காணாதிருக்கும்போது நினைத்தல் கூடும். ஆனால், அவனைக் கண்டதும் 'எழுதுங்கால் கோல் காணாக் கண்ணேபோல', அத்தவறுகள் எல்லாம் நினைவினின்று மறையத் தவறு அல்லாதனவே அவளது நினைவில் இருக்கும். தினைத்துணையும் பிணங்காது அனைத்தினும் இருவரும் இணங்குவதே பனைத்துணை இன்பம் பெறுதற்கு வழியாவது. இன்பந் துய்த்தற்கு இன்றியமையாததாகிய அத்தகைய பண்புடையார் எத்தனை பேர்? மிகச் சிலரே எனத் திருவள்ளுவராகிய பெருந்தகையார் மொழிந்து, அதற்குக் காரணம் 'மலரினும் மெல்லிது காமம்' என்றியம்புகின்றார். மலர் மிகமென்மையானது; அதனினுங் காதல் மென்மையானதாம். நறுமலரின் அழகையும் மணத்தையும் நுகர்தற்கு வேண்டிய புலத்தினும் மேலானதோர் நுண்மாண் புலம் வேண்டுமென்பது திருவள்ளுவர் கருத்தாம் எனின், அவர் நமக்குணர்த்துங்காமம் எத்தகையதோ?

"ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன." (௧௧0௯)

என்றதனால் ஊடலின்பம், உணர்தலின்பம், புணர்தலின்பம் என நிரல்பட நடந்துகொண்டிருப்பதே காதலின்பம் என்பது பெறப்படும். ஊடலுணர்வானது உள்ளத்து நிலவுந் தன்மையைக் கூறுதல் நெஞ்சொடு புலத்தல் எனவும், காதலரைச் சுட்டி நிகழ்தலைக் கூறுதல் புலவி எனவும், நுட்பமாகத் தவறுகாண விரைதலைக் கூறுதல் புலவி நுணுக்கம் எனவும இவ்வகைகளில எல்லாம் பெறும் இன்பத்தைக் கூறுதல் ஊடலுவகை எனவும் திருக்குறள் உரைக்கும.

தலைவி புலவி கொள்கின்றாள்; அஃதாவது, பிணங்கி நிற்கின்றாள். ஆனால அவளது நெஞ்சமோ, தலைவனது நெஞ்சம அவன் பககமே சார்ந்திருததலை அறிந்தும் அவனையே நாடிச் செல்கின்றதாம். தலைவி தன்நிலை தவறி நிற்பதனால், 'கெட்டார்க்கு நட்டார் இல்லை', என்ற பழமொழிககிசைய அவளது நெஞ்சம் நடக்கின்றமையால் அது தன்னொடு கொண்டது 'ஒல்கிடத் துலப்பிலா வுணர்விலார் தொடர்பு' (பாலைக்கலி-24) ஆயிற்று, எனவும், தனது நெஞ்சமே இங்ஙனம தனக்குத் துணையாகாதபோது அயலார் துணையாகாமை எளிதே எனவும, தலைவி நொந்து கொள்கின்றாள். 'உப்பில்லாப பண்டம் குப்பையிலே' உப்புமிக்க பண்டமுங் குப்பையிலே காதலின்பமாகிய பண்டத்துக்குச் சுவை மிகப் புலததலாகிய உப்பு வேண்டியதே; அப்புலவியை வளர விடல் உப்பு மிகுந்தது போன்றதாம். இதை மறந்து ஊடியவரை, என்ன காரணமாயினுஞ் சரி, தெளியும்படி உணர்த்தாது ஏற்கனவே வாடிய கொடியை அடியில் அரிந்தது போன்றதாம்.

தலைவி புலத்தல் மனப்பான்மையோடு தன் தலைவனிடம் தவறு காண்பது வியத்தகு உவகை தருவது. எந்தக் கணவன் மனைவியரது காதலினும் தமது காதல் சிறந்தது என்ற பொருள் கருதி, "யாரினும் காதலம்" என்றான தலைவன் உடனே, தலைவி, "யாரினும? யாரினும்" என்று கேட்டு ஊடினாள். தலைவனுக்கு வேறு காதலர்

உண்டென்றும், "யாரினும் காதலம்" என அவன் கூறியது, அவர் யாவரினும் மேலாகத் தன்னிடங் காதலுடையான் எனக் குறித்ததாகவும் தலைவி பொருட்படுத்தி விட்டாள். "இப்பிறப்பில் பிரியேன்" என்றான் தலைவன். அதுகேட்ட தலைவி அதில் மறுபிறப்பில் பிரிய எண்ணியதாகப் பொருள்கண்டு அழுதாளாம். தலைவன் தும்மவும், "இறைகாக்க" என வாழ்த்தி, வேறு ஒருத்தி அவனை விரும்பி நினைத்ததனாலேயே அவனுக்குத் தும்மல் வந்ததாகக் கருதி அழுதாளாம். அடுத்தமுறை தலைவன் தும்மலை அடக்கினான்; உடனே தலைவி, மற்றொருத்தி தன்னை நினைத்ததைத் தனது தும்மல் காட்டிவிடும் எனக் கருதித் தும்மலை அடக்கியதாகச் சொல்லி அழுதாள். தலைவன் அன்போடு தலைவியை உற்றுப்பார்த்திருந்தான். உடனே, யாரோடோ ஒப்பிட்டுப் பார்ப்பதாகக் கருதிச் சினங் கொண்டாளாம். அவளது ஊடலை உணர்த்தும் வகையில் அன்பு காண்பித்தான், உடனே தலைவி "இப்படித்தானே மற்றவரிடமும்," எனக் கூறி முனிவு கொண்டாளாம். இவ்வாறெல்லாம் இல்லாத தவற்றையும் படைத்துக் கொண்டு தலைவி பிணங்கினாலன்றி இணங்க வைத்தற் கென்று தலைவன் செய்யுஞ் சிறந்த தலையளிபெற்று இன்பந் துய்த்தல் அமையாதன்றோ? அவ்வின்பச் சிறப்பைப்

"புலத்தலின் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னார் அகத்து." (௧௩௨௩)

என்ற குறட்பா காட்டும். 'செம்புலப் பெயல்நீர்போல அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே' எனப் புலவர் கூறும் தகைமைகொண்ட காதலர் தம்முள் ஊடிப்பெறும் உவகையினும் மிக்கதான இன்பத்தைத்தரும் வானுலகம் உண்டோ? இல்லை, என்பது அதன் கருத்து. அறுசுவை உண்டி அமர்ந்து இல்லாள் ஊட்ட உண்பது இன்பமே. ஆனால், அவ்வளவும் நன்றாகச் செரித்து வயிற்றில் பசி தோன்றினால்தானே மறுபடியும் அப்படி உண்ணலாம். கூடலாகிய எழுசுவை உணவுக்கு ஊடலே பசியாவது. எனவே தலைவன் இறைவனை வேண்டுதல் என்னெனின்,

"ஊடுக மன்னோ ஒளியிழை; யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா." (கங௨க)

என்பதே. இவ்வூடலின் பயன் கூடுதல் என்றும மிலைத் துள்ளதாவதன்றி, அது உப்புமிகுந்த பண்டம் போன்ற தாய் மணவிடுதலை என்ற கெடுதலைத் தரலாகாது. கண்ணிரண்டும் ஒன்றையே காண்பதுபோல் கருத்து ஒருமித்த காதலிருவர் தம்முள் தோன்றும் ஊடல் ஒடிடக் கூடிப் பெறும் இன்பமானது, ஆன்மா வாலறிவனது நல்லடியைக் கூடிப்பெறும் பேரின்பத்தின் சாயல் காட்டும் இன்பமே.

## உரைவளம்

"தருமர் மணக்குடவா தாமதத்தர் நச்சர்
பரிமே லழகர் பரிதி—திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவன்நூற்
கெல்லை உரைஎழுதி னார்."

என்ற வெண்பாவால்,வேறெந்நூலுக்கும் இல்லாத வகையில் திருக்குறளுக்குப் பத்து உரைகள் எழுதப்பட்டமை விளங்கும். இவற்றுள் பரிமேலழகருரை, மணக்குடவருரை, பரிதியாருரை, பரிப்பொருமாளுரை, காளிங்கருரை இவை நல்ல முறையில் வெளிவருதற்கு அ. மகாதேவச் செட்டியாரவர்கள், கா. பொன்னுசாமி நாட்டாரவர்கள், T. P. பழனியப்ப பிள்ளை அவர்கள், ச. தண்டபாணி தேசிகரவர்கள் போன்ற அறிஞர்கள செய்த தொண்டு என்றுந் தமிழ் மக்களால் மறக்கற்பாலனவல்ல.

தற்காலம் புதிய புதிய உரைகள் தோன்றி மக்களை மயங்கவைப்பது மிக வருந்தத்தக்கது:

"விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி." (கஉகO)

இக்குறட்பாவுக்கு (க) பரிமேலழகருரை: மதியே! என் நெஞ்சின் இடைவிடாதிருந்தே விட்டுப் போயினாரை யான் என் கண்ணளவாயினும் எதிர்ப்படும் வகை நீ படாதொழிவாயாக.—கண்ணளவான் எதிர்ப்படுதலாவது மதி

இருவரானும் நோக்கப்படுதலின் இருவர் கண்ணும் அதன் கண்ணே சேர்தல்....(உ) மணக்குடவருரை: என் நெஞ்சை விடாது போனவரைக் கண்ணினால் காணுமாறு படுகின்ற தில்லை இம்மதி. ('படாஅதி'—என்பதற்குப் 'படாஅது' எனப் பாடங்கொண்டார்) (ங) பரிதியாருரை: விடாமற் சென்றாரைக் கண்ணினாற் காணுமளவு அஸ்தமனமாகாமல் விளங்கியிருப்பாய் மதியே (ச) காளிங்கருரை: அகத்து ஒருகாலும விட்டுப பிரியாது புறததுப் பிரிந்த எங் காதலா இன்று இவவிடததில சேய்ததின்கணின்று வருவா ராயின் என கண்ணினால அவரைக்கணடு இனபுறுவேனாக நீ இன்று ஒளிவிட்டு விளஙகுவாய்; மறைவாய் அல்லை மதியமே. (ரு) பரிப்பெருமாளுரை: என் நெஞசைவிடாதே போனவரைக் கண்ணினால காணுமாறு படுகின்றது இல்லை இமமதி இவ் வுரையாசிரியா ஐவரும் 'மதி'—திஙகள், என்று கொண்டனா; 'படாதி'—மறையா (அஸதமியா) திருப்பாய், என்றுங் கொண்டனர் 'கணணினால் காண'— என்பதற்குக் 'கணணளவாயினும் எதிாப்படும் வகை' என்று பரிமேலழகர் உரைகூறிப பின் அதற்கு 'மதி இரு வரானும் நோககப்படுதலின் இருவர் கண்ணும் அதன் கண்ணே சோதல்' என விளக்கம் சொல்கின்றார்.

புதிய உரையொன்று இதை மறுப்பது காண்க: "இந்தக குறளுக்கு, "மதியே என் நெஞசின் இடைவிடா திருநதே விடடுப போயினாரை யான் என் கண்ணளவா யினும் எதிர்ப்படுமவகை நீ படாதொழிவாயாக" என்ற பொருள அர்ததமில்லாதது. மேலுமு, "கண்ணளவான் எதிாபபடுதலாவது மதி இருவரானும் நோக்கப்படுதலின் இருவர் கண்ணும அதன்கண்ணே சேர்தல்" என்று விளக் கம சொல்வது மேலும் குழப்பம். இது கற்பனைக்கும் கூடப் பொருந்தாது. அததுடன் 'மதி' என்பதற்கு 'சந்திரன்' என்ற பொருள் கொண்டுவர இங்கு இடமே யில்லை. விடாது சென்றார் - விடாப்பிடியாகச் சென்றவர். அஃதாவது "செல்லாமை யுண்டேல் எனக்குறை(ரை என் றிருக்கவேண்டியது. அச்சுப்பிழை போலும்) மற்றுநின்

வல்வரவு வாழ்வார்க்குரை" என்று நான் தடுத்ததைக் கேளாமல் தான் கொண்டதை விடாமல் சென்றவர். கண்ணினாற் காண - கண்ணிற் கண்டால் - கண்ட உடனே. பாடாஅதி - படமாட்டாய் - துன்பப்படமாட்டாய். மதி - அறிவு. ஆதலால் - அறிவே உன்னை வாழ்த்துகிறேன். நீ நல்லறிவாகி பொறுததுக்கொள். பிடிவாதமாகச் சென்று பிரிந்து இததுணைத துன்பமும் உண்டாக்கிய காதலர் வருவார. அவரைக் கண்ட உடன் துன்பமெல் லாம நீங்கிவிடும—எனபது கருதது."

பிரிந்துறையுந் தலைவி தலைவனை நினைந்து புலம்பி யிருக்கின்றாள். திங்களைக் காண்கிறாள். தான் தண்மதி யைப் பாரபபதுபோல தலைவனும பாரப்பான் என்ற எண்ணம் தோன்றுகிறது. உடனே தனது கண் பார்வை யும தலைவனது கண் பாரவையும அததிஙகளில் சேர்வதை உணாந்து மகிழ்கின்றாள் இமமகிழச்சி நீடிக்கவேண்டும் என விருமபுகினறாள. அதறகுத திஙகள மறையாது நிற்கவேண்டும. எனவே அதைப பாரத்து வாழததிப் 'படாஅதி' என வேண்டுகினறாள. பரிமேலழகர் தரும் இக்கருதது 'கறபனைக்கும்கூடப பொருந்தாது' என்பது யாஙஙனமோ?

பெருந்தகையோரே! அறிஞர்களே! அன்பர்களே! இத்தகைய புது உரைகள் பெருகாது அத்தகைய பழைய உரைகள் வெளிவந்து நிலவுதலே திருவள்ளுவர் காட்டும் அறத்தின்பமும் பொருளின்பமும காமததினபமும் பெரு குவதற்கு வழியாம. ஆதலின்,

"நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு."

என்ற கருத்தோங்க எல்லாம் வல்லவனும் நல்லவனும் ஆகிய இறைவனை இறைஞ்சுவோம்.

# II. இருநானூறு

## க. நாலடியார்

[திரு. கு பரமசிவன், பி. ஏ. (ஆனர்சு)]

முன்னுரை

உலகப் பொதுமறையாகிய திருக்குறளுக்கு அடுத்த படியாகத் தமிழில் உயர்தனி அறநூலாகத் திகழ்வது நாலடியாராகும். நாலடி நானூறு என்பதே இந்நூலின் பழங்காலப் பெயராதல் வேண்டும். பண்டை உரைகாரர் பலர் இப் பெயரையே பெரிதும் எடுத்து வழங்கியிருக்கின்றனர். நாலடி நானூறு என்பது நாளடைவில் நாலடி எனக் குறுகி, திருக்கோவையார், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான சித்தியார் என்பனபோலச் சிறப்புடைய நூல்கள் 'ஆர்' விகுதி சேர்த்து வழங்கப் பட்டபோது, நாலடியும் நாலடியார் எனப் பெயர்பெற்றிருத்தல் வேண்டும்.

அறநூல்களுள் திருக்குறளோடு ஒப்ப மதிக்கப்படும் அருமைப்பாடு உடையது இந்நூல். இதனை,

"ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி"

எனவும்,

"பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்"

எனவும் முன்னைப் பெரும்புலவர் போற்றி மொழிதலால் உணரலாம். பின்னும் இந்நூலின் பெருமையை,

"வெள்ளாண் மரபுக்கு வேதம்எனச் சான்றோர்
எல்லாரும் கூடி எடுத்துரைத்த - சொல்லாய்ந்த
நாலடி நானூறு நன்குஇனிதா என்மனத்தே
சீலமுடன் நிற்க தெளிந்து."

"நானூறும் வேதமாம் நானூறும் நன்னூலாம்
நானூறும் கற்றற்கு நற்றுணையாம் - நானூறும்
பண்மொழியாள் பாகம் பகிர்ந்து சடைக்கரந்த
கண்ணுதலான் பெற்ற களிறு"

என்றும், "பழுதில்லா நாலடி" என்றும் பாவலர் பாட்டிசைத்துப பாராட்டினர். 'ஒல்காப் பெருமைத் தொல்காப்பிய' உரையாசிரியர்களாலும, 'பன்னுதமிழ் சேர் பரிமேலழகரா'லும் பிறராலும எடுத்தாளப்பட்ட பெருஞ் சிறப்பினைப் பெற்றது, இந்நூல். எஙகிருநதோ வந்து, இன்பத தமிழ்க்கடலில திளைத்து, இறக்குமபோது தமிழ் மாணவராகவே இறந்த போப்பையர் அவர்களால் ஆஙகிலத்தில் மொழிபெயாததது இயற்றப்பட்டது எனின் இந்நூற் சிறப்பினை மேலுமா கூறுதல் வேணடுமோ ?

## ஆசிரியர்

நிலவுக்குக் களங்கமுண்டு; கடலுக்குத் திரையுண்டு; கன்னித்தமிழுக்கும் ஒரு குறையுண்டு. வளமான இலக்கியங்கள் பல தமிழிலே உள்ளன வென்றாலும், அவற்றை வடித்துக்கொடுததவர்ப் பற்றிய வரலாறு இல்லை. வையம் போற்றும் குறளையியற்றியவர் ஒரு வள்ளுவா என்று அறிவோமே யன்றி, அவா பெயரையுமா அறியமாட்டோம். ஈடு இணையற்ற இராமாயணததை எழுதியவர் ஒரு கம்பர் என்று அறிவோமேயன்றி அவர் பெயரையும் அறியமாட்டோம். நாலடியாரைப் பொறுத்தவரை இக்குறைபாடு நனி மிகுதி. பாடியவர் தொகை பற்றியே பலதிறக் கருத்துக்கள் உலவுகின்றன. ஒவ்வொரு பாடலையும் ஒவ்வொருவர் பாடினர் என்பர் ஒரு சாரார். ஒருவரே நானூறு பாடல்களையும் பாடினர் என்பர் மற்றொரு சாரார்.

நானூறு புலவரா?

நானூறும் நானூறு புலவராற் பாடப்பெற்றன என்பதற்குஅடிப்படையாக விளங்குவது, நாலடியாரின் தோற்றம்பற்றி வழங்கும் ஒரு கதையே ஆகும். எண்ணாயிரம் சமணமுனிவர்கள் பாடிய பாடல்கள், பாண்டியன் ஆணையால் வைகை யாற்றில் இடப்பட்டபொழுது நானூறு மட்டும் கரையெதிரேறின[1] என்ற இக்கதைக்கு அடிப்படையாக,

"எண்பெரும் குன்றத்து எணாஅ யிரம்இருடி
பண்பொருந்தப் பாடியபா நானூறும் - திண்பொருந்தி
நீர்எதிரகொண்டு ஓடுதலால் நேரிசைப்பா என்றுஅதனைப்
பார் எதிர்கொண் டாாபயனைப் பார்த்து"

"மன்னன் வழுதியர்கோன் வையைப்பேர் ஆற்றினிடை
எண்ணி இருநான்கோடு ஆயிரவர் - நண்ணி
எழுதியிடும் ஏட்டுக்குள் [2]ஏடெதிரில் ஏறும்
பழுதில்லா நாலடியைப் பார்"

என்னும் பழைய வெண்பாக்களும்,

"வளம்கெழு திருவொடு வையகம் முழுதும்
உளம்குளிர் இன்பத்து இன்பம் உவப்ப
வண்பெரும் சிறப்பின் மாதவம் புரிந்தாஅங்கு
எண்பெரும் குன்றத்து இரும்தவ முனிவர்
அறம்பொருள் இன்பம் வீடுஎனும் இவற்றின்
திறம்பிறர் அறியும் திறததை நாடிப்
பண்புற எடுத்துப் பாஙகுறப் பகர்ந்த
வெண்பா இயல்எண் ணாயிரம் அவற்றுள்
பார்எதிர் கொண்டு பரவி ஏத்த
நீர்எதிர் வந்து நிறைஅணி பெற்ற

1 இச்செய்தி திருஞானசம்பந்தப் பெருமான் மதுரையம் பதியில் நிகழ்ததிய புனல்வாததததை நினைவூட்டுகிறது.

2. "ஏடெதிரே ஏறும்" எனவும் பாடம்.

எனவரும் ஆசிரியப்பாவும்[1] ஆகும். இப்பாடல்களிலும் பதுமனார் விருத்தி கடவுள் வாழ்த்துரையிலும் முனிவர்கள் எண்பெருங் குன்றத்தில்[2] வாழ்ந்தனர் என்பது கூறப்பட்டுள்ளது. ஆயின் பஞ்சம் காரணமாகப் பாண்டிநாடு அடைந்து பாண்டியன் அவையில் இருந்தனர் என்றும் கூறுவர் [3]

எண்ணாயிரவர் என்பதனை 8000 பேர் என்று கொண்டார் பலர். தில்லை மூவாயிரவர்போல மிகுதிபற்றி வந்த பெயராகக் கொண்டு, எண்ணாயிரவர் என்ற கூட்டத்தார் என்பாரும் உளர்.[4]

வையையாற்றில் நானூறு ஏடுகள் மட்டும் எதிர்த்துச் சென்றன என்னும் செய்தியோ, எண்ணாயிரவர் என்பதுவோ, பதுமனாரைப்பற்றி வழங்கும் பழைய வெண்பாக்களில்[5] சாணப்படடிலது. வையததில் வழங்கிவந்த வண்டமிழ்ப் பாடல்களைப் பதுமனார் தொகுதது வகுததார் என்றும், நல்லோா அருள்செயத நாலடி நானூறு என்றும் தாம் அப்பாக்கள் கூறுகின்றன. பால் இயல் வகுத்த அந்தப் பதுமனாரே, நூலுக்கு விருத்தியுரையும் எழுதியுள்ளார். கடவுள வாழததுரையில, "எட்டு மலைச்சாரலில்

1. இது பழைய ஏட்டுப்பிரதி ஒன்றிற் கிடைதத யப்பா ("நாலடியாா" வை மு. சடகோப ராமாநுஜாசசாரியார், சே. கிருஷ்ணமாசசாரியார் - ஐந்தாம்பதிப்பு - பக். 2)

2. "சமண முனிவர்கள் வசித்த மலைகள் எட்டாவன: நீலகிரி, கிரௌஞ்சம், கோவர்த்தனம, திரிகூடம், காஞ்சி, யானைமலை, ஏமகூடம், விந்தம் என்பன" (வே. இராசகோபாலையஙகார்; "நாலடியாா" - குரோதன : சிததிரை-குறிப்புரை-பக் 73. அடிக்.) இஃது ஆராய்தற்குரியது.

3. "பதினெண் கீழ்க்கணக்கு" - மூலம் - கழகப்பதிப்பு - நாலடியார் முகவுரை பக். vi; "நாலடியாா" (மூன்றாம் பதிப்பு, வை. புஷ்பரதச செட்டி அண்டு கம்பெனி. முகவுரை. பக். 1.)

4 வே. இராசகோபாலையஙகார் : "நாலடியார்"-குறிப்புரை பக். 73 அடிக்.

5 இவ்வெண்பாக்கள் இக் கட்டுரையில் பதுமனார் பற்றிய பகுதியில் தரப்பட்டிருக்கின்றன.

சமணமுனிவர்கள் எண்ணாயிரவர்கள் வசித்து வந்தார்கள். அவர்கள் தனித்தனி ஒவ்வொரு வெண்பாப் பாட அவை பற்பலவாயின ; அவற்றைச் சேர்த்துப் பார்க்கும்பொழுது அவைகளில் ஒரே விஷயத்தினை ஒரே கருத்தால் விரித்துக் காட்டுகிற பல பாடல்கள் காணப்பட்டன ; அவற்றுள் ஒரே விஷயத்தினை ஒவ்வொரு கருத்தால் தனித்தனி கூறும் நானூறு பாடல்களைப் பொறுக்கிச் சேர்த்து நாற்பது அதிகாரமாக முடித்ததாம" என்றே கூறினரேயன்றி[1] வேறுவகையாகக் கூறினரல்லர். இவற்றால் நாலடியார் பற்றிய கதையை ஏற்றுக்கொள்ளுதலில் தடைகள் பல உளவென்பது பெறப்படும்.

நானூறு பாக்களும் நானூறு புலவராற் பாடப்பெற்றன என்ற கொள்கையும மேற்சுட்டிய கதையினடியாகவே பிறந்ததெனக் கண்டோம. அடிப்படைக் கதையே ஐயுறவிற்கு இடநதருதலால் அதன்மீது எழுந்த கொளகையின் கண்ணும் ஐயம பிறக்கிறது. அன்றியும நூல் முழுதும் நோககுவார், ஒரே கருததை ஒரே முறையில் கூறும செய்யுட்கள பலவாயிருத்தலைக் காணலாம ; சான்றாகச் சிலவற்றைக் காண்போம்.

ஒருவன் செய்த நல்வினையே யன்றி அவன் உயிர் போகும் காலத்து உடன்செல்வது வேறொன்றுமில்லை என்னும் கருத்து,

"தாம்செய் வினைஅல்லால் தம்மொடு செல்வதுமற்று
யாங்கணும் தேரின் பிறிதுஇல்லை-ஆங்குத்தாம்
போற்றிப் புனைநத உடம்பும் பயம்இன்றே
கூற்றம்கொண்டு ஓடும் பொழுது" (௧௨0)

" ..... .. ..... ..... .. ..............—எனைத்தும்
சிறுவரையே ஆயினும் செயதநன்று அல்லால்
உறுபயனே இல்லை உயிர்கரு" (௧௩0 : ௨-௪)

என ஈரிடங்களில் கூறப்படுகிறது.

1. வே. இராசகோபாலையங்கார் : "நாலடியார்" : குறிப்புரை. பக். 73-74.

'சான்றோருடைய நட்பு நாளும் பெருகும்; கீழோருடைய நட்புத்தேயும்' என்னும் கருத்தினைப் பலபாடல்கள் வெவ்வேறு உவமைகளோடு கூறுகின்றன.

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும் - வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு" (கஉரு)

"ளிகடல் தண்சேர்ப்ப நாள்நிழல் போல
விளியும் சிறியவர் கேண்மை - விளிவின்றி
அல்கு நிழல்போல் அகன்றுஅகன்று ஓடுமே
தொல்புக ழாளர் தொடர்பு" (கசுசு)

எனபன காணக.

உலகியல் அறிவைத்தரும் நூல்களைக் மெய்யறிவூட்டும் நூல் கற்றலே அறிவுடைமையென்னுங் கொள்கை,

"நிலையாமை நோய்மூப்புச சாக்காடு என்று எண்ணித்
தலையாயார் தமகருமம் செய்வார - தொலைவுஇன்றிச
சத்தமும் சோதிடமும் என்றாங்கு இவைபிதற்றும்
பித்தரின் பேதையார் இல்" (ருஉ)

"அலகுசால்...... .....இல்" (கசO)

எனவருஞ் செய்யுட்களால் வற்புறுத்தப்படுகிறது.

"செல்லா விடத்தும் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடததும் செய்யார் சிறியவா - புல்வாய்
பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோல்
பொருமுரண் ஆற்றுதல் இன்று" (கசக)

"எற்றுஒன்றும் இல்லாஇடத்தும் குடிப்பிறந்தார்
அற்றுததன் சேர்ந்தாரக்கு அசைவிடத்து ஊற்றாவர்
அற்றக் கடைததும் அகல்யாறு அகழ்ந்தக்கால்
தெற்றெனத் தெண்ணீர் படும்" (க

"உறைப்புஅரும் காலத்தும் ஊற்றுநீர்க் கேணி
இறைத்துணினும் ஊராற்றும் என்பா-கொடைக்கடனும்
சாஅஅயக் கண்ணும் பெரியாரபோல் மற்றையார்
ஆஅஅயக் கண்ணும் அரிது" (கஅ௪)

"எட்டைப் பருவததும் இறபிறந்தார் செய்வன
மோட்டிடததும் செயயாா முழுமக்கள் - கோட்டை
வயிரம் செறிப்பினும் வாட்கணாய் பன்றி
செயிர்வேழம் ஆகுதல் இன்று" (கூ௫அ)

இப் பாடல்களுள் உவமைகள் வேறுபடுகின்றனவே யன்றி, உரைக்கப்படும கருத்து, 'கெட்டாலும மேன மக்கள் தம் கடமையில் தவறார' என்னும ஒன்றேயாகும்.

இவ்வாறே தன்னைத்தானே சான்றோனைப் புகழ்தல் புகழ் ஆகாது என்னும் கருத்து,

"எம்மை அறிந்திலிா எம்போல்வாா இல்லென்று
தம்மைத்தாம் கொள்வது கோள் அன்று—தம்மை
அரியரா நோக்கி அறன்அறியும் சான்றோா
பெரியராக் கொள்வது கோள்" (ககூ௫)

"கற்றனவும் கண்அகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும் தானுரைப்பின்
மைததுனா பலகி மருநதின் தணியாத
பித்தன்என்று எள்ளப் படும்" (கூ௪0)

என்னுமிடங்களிற் கூறப்பட்டது.

விருப்பில்லாதவர் தரும நல் விருந்தைவிட, விரும் சுற்றத்தார் கொடுககும் கூழும சிறநதது என்னும் ய,

"பொன்கலத்துப் பெய்த புலிஉகிா வான்புழுக்கல்
அக்காரம் பாலோடு அமராாகைத்து உண்டலின்
உப்பிலிப் புற்கை உயிர்போல் கிளைஞர்மாட்டு
எக்கலத் தானும் இனிது" (உ0கூ)

"நாள்வாய்ப் பெறினும் நள்ளாதார் இல்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்—கேளாய்
அபரானப் போழ்தின் அடகுஇடுவ ரேனும்
தமராயார் மாட்டே இனிது" (உ0எ)

"விருப்பிலார் இல்லத்து வேறுஇருந்து உண்ணும்
வெருகுக்கண் வெங்கருனை வேம்பாம்—விருப்புடைத்
தன்போல்வார் இல்லுள் தயங்குநீர்த் தண்புற்கை
என்போடு இயைந்த அமிழ்து" (உக0)

"கழுநீருள் காரட கேனும் ஒருவன்
விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம்—விழுமிய
குயத்துவைஆர் வெண்சோறே ஆயினும் மேவாதார்
கைத்துண்டல் காஞ்சிரங் காய்" (உகஎ)

எனவரும் செய்யுட்கள் கூறுகின்றன. இவ்வாறே ஒரே கருத்துடைய செய்யுட்கள் பலவற்றை எடுத்துக்காட்டுதல் இயலும். இவற்றையெல்லாம் காணுங்கால் ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொருவரால் இயற்றப்பட்டன என்னும் கொள்கையின்கண் ஐயந்தோன்றுகிறது. கருத்து ஒன்றே என்ற காரணத்தால், கவிஞரும் ஒருவரே எனக் கூற முடியுமா என்று வினவலாம் பாடியவர் பலரேயாயினும் பாடப்பட்ட கருத்து ஒன்றேயாதலைப் பண்டை இலக்கியங்கள் பலவற்றுள் காணலாம். ஆயினும் உவமைகள் கூட ஒத்திருத்தலை மேற்காட்டியவற்றுள்ளேயே காணலாம். அன்றியும் சில பாடல்களில் சொற்களும் சொற்றொடர் களும்கூட ஒன்றுபட்டிருத்தலையும் காண்கிறோம்.

"கல்லோங்கு உயர்வரைமேல் காந்தள் மலராக்கால்
செல்லாவாம் செம்பொறி வண்டினம்—கொல்லைக்
கலாஅல் கிளிகடியும் கானக நாட!
இலாஅஅர்க்கு இல்லை தமர்" (உஅங)

"ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேல் செல்லாவாம்—நீர்த்துஅருவி
தாழா உயர்சிறப்பின் தண்குன்ற நல்நாட!
வாழாதார்க்கு இல்லை தமர்" (உகூ0)

இப்பாடல்களில் செல்வமுடையாரையே சுற்றத்தார் நச்சுவர் என்னும் கருத்து, வண்டினம் பூங்கொம்பையே நாடுதலை உவமையாகக்கொண்டு விளக்கப்படுகிறது. முதல் இரண்டடிகளிலும் உவமையும, தனிச்சொல்லிலும் மூன்று மடியிலும் ஆடூஉ முன்னிலையும ஈற்றடியில் கருத்தும் ஆகிய இவ்வமைப்பினையே இரு செய்யுளும் கொண்டுள்ளன இவ்வாறு உவமையேயன்றிச் செய்யுளமைப்பினும் ஒற்றுமை காணப்படுதலால இவை ஒருவராற் பாடப் பெற்றனவோ எனக் கருதுகிறேம.

இம்முறையிலேயே,

"துன்பம் பலநாள் உழந்தும் ஒருநாளை
இன்பமே காமுறுவர் ஏழையார்—இன்பம்
இடைதெரிந்து இன்னாமை நோக்கி மனையாறு
அடைவு ஒழிந்தார் ஆன்று அமைந் தார்" (டுச)

"துன்பமே மீதூரக் கண்டும் துறவுள்ளார்
இன்பமே காமுறுவர் ஏழையார்—இன்பம்
இசைதொறும் மற்றதன் இன்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதாம மேல்" (௬0)

எனவரும் செய்புட்களும ஆராயற்பாலன. இவ்வாறே,

"தெண்ணீர்க் குவளை பொருகயல வேல்என்று
கண்ணிலபுன் மாக்கள் கவற்ற விடுவேனே
உண்ணீர் களைந்தக்கால் நுங்குசூன் றிட்டன்ன
கண்ணீர்மை கண்டொழுக வேன்" (சச)

"முல்லை முகைமுறுவல் முததென்று இவைபிதற்றும்
கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவேனோ
எல்லாரும் காணப் புறங்காட்டு உதிர்ந்துகக
பல்லென்பு கண்டொழுக வேன்" (சடு)

என்பனவும் ஒப்பிட்டுக் காணத் தக்கன.

"குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல்—நட்டான்

மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
அறைகடல்சூழ் வையம் நக" (உ௯0)

"முட்டுற்ற போழ்தின் முடுகிஎன் ஆருயிரை
நட்டான் ஒருவன்கை நீட்டேனேல்—நட்டான்
கடிமனை கட்டழித்தான செல்வுழிச் செல்க
நெடுமொழி வையம் நக" (உ௯அ)

எனவரும் இரண்டும்,

"கொடியவை கூறாதி பாணநீ கூறின்
அடிபைய இட்டொதுங்கிச் சென்று—துடியின்
இடக்கண் அனையம்யாம் ஊரற்கு அதனால்
வலக்கண் அனையார்க்கு உரை" (௯அஅ)

"அரும்புஅவிழ் தாரினான் எம்அருளும் என்று
பெரும்பொய் உரையாதி பாண—கரும்பின்
கடைக்கண் அனையம்நாம் ஊரற்கு அதனால்
இடைக்கண் அனையார்க்கு உரை" (௯௧0)

எனவரும இரண்டும தத்தமமுள ஒப்புநோக்கத் தகுந்தன வாகும. மேற்காட்டியவை யன்றி வேறிரு செய்யுட்களில் இறுதி யிரண்டடிகள் முழுதும் ஒத்திருக்கின்றன.

"மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணிஅழுத்திச்
செய்தது எனினும் செருப்புதன் காற்கேயாம
எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்" (௯சஎ)

"கொய்புல் கொடுத்துக் குறைத்தென்றும் தீற்றினும்
வையம்பூண் கல்லா சிறுகுணடை—ஐயகேள்!
எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்" (௯௫0)

இவ்வாறு கருத்துக்களேயன்றிச் சொற்களும் ஒத்திருத்தலைக் காணும்பொழுதுதான் ஒவ்வொரு பாடலும் ஒவ்வொருவரால் இயற்றப்பட்டது என்னும் கொள்கையின்மீது ஐயம பிறக்கிறது தமமுடைய கருத்தினை வற்புறுத்துதற்காகப பல இடங்களில் ஒரே தொடரால்

அதனைக் கூறுதலும் தமிழ்நூலார் மரபேயாகும். சான்றாக நல்லாதனார் என்னும் புலவர் ஒருவரால் இயற்றப் ‘திரிகடுக’த்தில,

“கணக்காயர் இல்லாத ஊரும் பிணக்கறுக்கும்
மூத்தோரை இல்லா அவைக்களனும்—பாத்துண்ணும்
தன்மை யிலாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்தல் இல” (திரிகடுகம் : ௧௦)

“நோவஞ்சா தாரொடு நட்பும் விருந்தஞ்சும்
ஈவிலா யை இல்லத்து இருத்தலும்—சீர்பயவாத்
தன்மை யிலாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்தல் இல” (திரிகடுகம் : ௬௩)

எனவரும் செய்யுட்களிரண்டிலும் இறுதி யிரண்டடிகள் ஒத்திருத்தலைக் காண்கிறோம்.

கருத்தொற்றுமை புலவர்களிடையே காணப்படும் ஒன்றுதான். ஒருபொருள் பற்றி எண்ணும் பலர் ஒரே கருத்தினராதல் கூடும் ஆயின் சொல்லொற்றுமை காணப்படுதல் மிகமிக அரிது பத்துப்பாட்டிலும் எட்டுத் தொகையிலும் சில பாடல்களில் பொருளோடு சொல்லும் ஒற்றுமைப்பட்டிருக்கவில்லையா எனக் கேட்டல் கூடும். அவ்வாறு வருவது சிறுபான்மை. ஆயின் நாலடியாரிலோ பல பாடல்களில் இவ்வாறு வருதலையும், செய்யுளமைப்புக் கூட ஒத்திருத்தலையும் காட்டலாம். முன்னரே சிலவற்றைக் கண்டோம்; மேலும் சில காண்போம்.

“நீரப் பிறந்துஒருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை ஆம்பல்ஒக் கல்லா
பெருநீரார் கேண்மை கொளினும்நீ ரல்லார்
கருமங்கள் வேறு படும்” (உ௩௧)

“பொற்கலத்து ஊட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
எச்சிற்கு இமையாது பார்த்திருக்கும்—அச்சீர்
பெருமை யுடைத்தாக் கொளினும்கீழ் செய்யும்
கருமங்கள் வேறு படும்” (௩௪௫)

இவ்விரு செய்யுளும் "கருமங்கள் வேறுபடும்" என முடிகின்றன. முன்னிரண்டு அடிகளில் உவமையும் மூன்றும் அடியின் மூன்றும சீரில் 'கொளினும' என்னும சொல்லும, அதனையடுத்துக் கீழமக்கள் என்பதன் பரியாயச் சொல்லொன்றும் அமைந்துள்ளன. "கருமங்கள் வேறுபடும்" என்பது பழமொழியாக இருந்து, அதனை இருவர் எடுத்தாண்டிருக்கக் கூடாதா எனலாம. இன்னுருடைய கருமங்கள வேறுபடும என்பது பழமொழியாதல பொருந்துமே யன்றிக், கருமஙகள் வேறுபடும என்பது மட்டுமே பழமொழியாகுமா? கீழோர் கருமங்கள் வேறு படும் என்பது பழமொழியெனின் ஒரு செய்யுளில 'நீரல்லார்' எனவும மறறொனறில் 'கீழ செய்யும' எனவும் வருவானேன்? 'கொளினும' என்ற சொல்லை மூன்றுமடியின் மூன்றுஞ் சீரில அமைததல்வேண்டும என்பதும கட்டுப் பாடா? அல்லது, இக்காலததுத "தென்றல்" இதழில் நடைபெறும் வெண்பாப்போட்டியிற்போலக் குறிப்பு (சமஸ்யை) கொடுக்கப்பட்டுப பூரததிசெய்யபபட்டன என்று கொள்ளமுடியும? இம்முறையில எண்ணும பொழுதுதான் இவையிரண்டும இரு புலவராற் பாடப் பட்டன என்பதனை ஏற்றுக்கொள்ளக் கூடவில்லை. இவ்வாறே,

> "இன்ன செயினும விடற்பாலா அல்லாரைப்
> பொன்னாகப் போற்றிக கொளல்வேண்டும் - பொன்னொடு
> நல்லில் சிதைததீ நாள்தொறும் நாடிததம்
> இல்லததில் ஆககுத லால்" (உஉ௫)

> "இன்ன செயினும் விடுதற்கு அரியாரைத்
> தன்னைத் துறததல் தகுவதோ—துன்னருஞ்சீர்
> விண்குதது நீள்வரை வெற்ப! களைபவோ
> கண்குததிற்று என்றுதம் கை" (உஉ௬)

என்பன இரண்டும் ஒருவராற் செய்யப்பட்டன என்று கருதற்கு இடமுண்டு.

> "புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
> விதுப்பற நாடின்வேறு அல்ல—புதுப்புனலும்

மாரி அறவே அறுமே அவர்அன்பும்
வாரி அறவே அறும்" (௧௭0)

"விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின்வேறு அல்ல—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே அறுமே அவர்அன்பும்
கையற்ற கண்ணே அறும" (௧௭௧)

எனவரும் செய்யுள்கள்கூட இருவேறு புலவரால் இயற்றப் பட்டனதாமா ?

இதுகாறும் கூறியவற்றால் ஒவ்வொரு பாடலும் ஒவ் வோர் ஆசிரியரால் மொழியப்பட்டது எனல் பொருந்தாது என்பது பெறப்படும் இனி, ஒருவரே நானூறு பாடல் களையும் பாடினார் என்று சொல்லப்படுதலை ஆராய்வோம்.

ஒருவரா ?

ஒருவரே நானூறு பாடல்களையும் பாடினர் என உரைப்போர் கூறும் காரணங்களுள் மேற்பகுதியில் காட்டப்பட்டனபோல ஒன்றுபட்ட கருத்துக்கள் பல காணப்படுதலும் ஒன்றாகும். அவ்வாறாயின முரண்பட்ட கருத்துடைய செய்யுட்கள் பல நூலிலிருத்தல் அவர் கூற்றை ஒப்புக்கொள்ளுதலில் பெருந்தடையை விளைவிக் கும். ஆசிரியர் ஒருவரே ஒருபொருளபற்றி இருவேறு கருத்தினராய் இருந்தனா எனல ஒவ்வாது. இல்லறமும் துறவறமும பற்றிக்கூறும செய்யுள்களை நோக்கின் பல வகைக் கருத்துக்களைக் காணலாம. இல்லறத்தை அறவே விலக்கி, இளமையிலேயே துறத்தல வேண்டும என்பது சமணா கொள்கை இக்கொள்கை நாலடியாரில் பல இடங்களில் வற்புறுத்தப்படுகிறது.

அடுத்தடுத்துத் துன்பம் நேர்ந்தாலும் அறிவில்லாத வர்கள் ஒருநாளை இன்பத்தையே விரும்புவர்; ஆன்றமைந்த பண்புடையார இல்லறத்தில ஈடுபடமாட்டார்.

" துன்பம் பலநாள் உழந்தும் ஒருநாளை
இன்பமே காமுறுவர் ஏழையார் - இன்பம்

இடைதெரிந்து இன்னாமை நோக்கி மனையாறு
அடைவொழிந்தார் ஆன்றமைந் தார்." (௫௪)

'மாண்புமிக்க குணமும், மக்கட்பேறும் இல்லையென்றாலும், மனைவியைக் கணவன் கைவிடுதல் அரிது. எனவே மனைவாழ்க்கையால் வரும் வறுமையையும் மனத்துக் கொண்டு, மாசற்ற தவநெறியில் நிற்றல் வேண்டும் என்றும் மணவினையை நீக்கவேண்டுமென்றும் மதிநலம் சிறந்த சான்றோர் கூறினர்' என ஒரு பாடல் இயம்புகிறது.

"மாண்ட குணத்தொடு மக்கட்பேறு இலவெனினும்
பூண்டான் கழித்தற்கு அருமையால் - பூண்ட
மிடிஎன்னும் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடிஎன்றார் கற்றறிந் தார்" (௫௬)

'நீக்கு' எனனும் பொருளையும் உடைய 'கடி'யென்ற பெயர் மணவினைக்கு இருத்தலைகொண்டு அமைக்கப்பட்ட சொல்விளையாட்டே இப்பாடல். இதனை மற்றொரு பாடலிலும் காண்கிறோம். நீக்கு என நெறி நின்றார் கூறக் கேட்டும் மணவினையை நீக்காமல், நெஞ்சு வெடிப்ப எழும் சாப்பறை முழக்கத்தைக் கேட்டும் தெளியாமல், மீண்டும் மீண்டும் மணந்து இன்பமயக்கம் எய்துதலே, தன்மீது தானே கல்லெறிந்துகொள்ளும் தவறென உயர்ந்தோர் உரைப்பர்.

"கடிஎனக் கேட்டும் கடியான் வெடிபட
ஆர்ப்பது கேட்டும் அதுதெளியான் - பேர்த்துமோர்
இல்கொண்டு இனிதுஇருக்கும் ஏழறுதல் என்பவே
கல்கொண்டு எறியும் தவறு." (௩௫௪)

இச்செய்யுட்களில் எல்லாம் இல்லறத்தை அறவே நீக்குதல் வேண்டும் என்னும் கொள்கை வற்புறுத்தப்படுதலைக்காண்கிறோம். ஆயின் 'பேதைமை'பற்றிக் கூறுங் காலத்தில், நல்லோர் அவையிடத்து நாள்தோறும் சென்று கேள்விப்பயன் பெறாமலும், நற்செயல்கள் செய்யாமலும், நல்கூர்ந்தார்க்கு ஒன்றேனும் கொடாமலும், அனைத்து வகையாலும் இனிமையுடையோராகிய மனைவியரைக்கூடா

மனும், அறிவு முதலியவற்றால் புகழ்படவாழாமனும் இருப்பவர்கள் தம வாணுள் வீணுள் என வெறுக்கமாட்டார்களா என வியப்புடன் வினவுகிறார் பாடலாசிரியர்.

“நல்அவை நாள்தொறும் எய்தார் அறம்செய்யார்
இல்லாதார்க்கு யாதொன்றும் ஈகலார் - எல்லாம்
இனியார்தோள் சேரார் இசைபட வாழார்
முனியாரகொல் தாம்வாழும் நாள்.” (௩௩௮)

இங்கு இல்லக்கிழத்தியரை எவ்வகையானும் இனியவர் என்றும் அவர் தோளைச் சேராமல் வாழும் நாள் வெறுக்கத்தகுந்த வீணுள் என்றும கூறுதல் குறிப்பிடத்தகுந்தது. இவவாறே ‘பன்னெறி’கூறும் அதிகாரப் பாடலொன்று தவவொழுக்கம தலையாயது என்றும் இல்லறம் இடையாயது என்றும் கூறுகிறது.

“தலையே தவம்முயன்று வாழ்தல்; ஒருவர்க்கு
இடையே இனியார்கண் தஙகல்.” .. (௩௬௫ : ௧-௨)

இல்லறம் அறமே கடியப்படவேண்டிய ஒன்றெனவும் இளமையிலேயே அதைத துறததல் வேண்டும் எனவும் கொளளுகின்ற கொளகையுடைய ஒருவரே இல்லறத்தை இடையறம் எனககூற மனமொபபுவரா?

இல்லறம் துறவறம் பற்றிய பாடல்களில் மட்டுமன்றிப் பிறைபொறுததலைக்கூறும பாடல்களுள்ளும் முரண்பாடு காணப்படுகிறது. தமமை இகழ்ந்தவர்களைத் தாம் பொறுப்பதோடு அல்லாமல், இகழ்நததன் பயனுக ஒரு வேளை இகழந்தவா, நரகததில் அழுந்துவரோ என்று இரங்குதலும வேண்டும என ஒரு பாடல சொல்லுகிறது.

“தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்பது அன்றிமற்று
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால் - உம்மை
எரிவாய நிரயதது வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்.” (௫௮)

மற்றொரு பாடலோ, 'தம்மை இகழ்ந்தவர்களை அவர்களினும் முன்னாகத் தாம் இகழ்க; அவரோடு என்ன தொடர்பு?' எனக்கேட்கிறது.

> " தம்மை இகழ்வாரைத் தாம்அவரின் முன்இகழ்க
> என்னை அவரொடு பட்டது - புன்னை
> விறல்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
> உறற்பால யார்க்கும் உறும் " (கசஎ)

இவ்விரு கருத்துக்களையும் ஒருவரே கூறியிருப்பர் எனல் பொருந்துமா?

இவ்வாறே நேர்முரணான கருத்துடைய பாடல்கள் பலவற்றை எடுத்துக்காட்டுதல் கூடும். இவற்றையெல்லாம் நோக்க இயல்பாக எவரும் கொள்ளத்தக்க முடிவு, நாலடியார் ஒருவரால் பாடப்பட்ட நூலன்று என்பதேயாம்.

ஒருவரே இயற்றினர் எனவுரைப்பவர் கூறும் மற்றொரு காரணம், பதினெண்கீழ்க் கணக்கினுள் எஞ்சிய வெல்லாம் ஒவ்வொன்றும் ஒவ்வொருவரால் பாடப்பெற்றனவாயிருத்தலின் நாலடியாரையும் ஒருவரே இயற்றினராதல் வேண்டும் என்பதாம். ஆயின் தற்காலத்து வழங்கும் 'நாலடியார்' நூலின் எல்லாப் பாடல்களையும் ஒருவரே பாடினர் எனக் கொள்ளுதற்கில்லை என்று மேலே கண்டோம். ஆதலின் இக்கூற்று ஆராய்தற்குரியதேயாம். அன்றியும், பதினெண்கீழ்க்கணக்கு இவையெனக் கூறும் பழையவெண்பாவில், 'நாலடி' முதலாவதாக வைக்கப் பட்டதன் காரணம், இந்நூல் ஒருவகையில் தொகைநூல்களோடும் மற்றொரு வகையில் பிற கீழ்க்கணக்கு நூல்களோடும் ஒற்றுமையுடையதாய் இருத்தலே என்பாரும் உளர். அஃதாவது; சங்கத் தொகைநூற்களைப் போன்று அகப்பொருளையும் புறப்பொருளையும் கூறுதலும், பலராற் பாடப்பட்டிருத்தலும் இந்நூலுக்கும் தொகைநூல்களுக்கும் உள்ள ஒற்றுமையெனவும் அறம் பொருளின்பம் என்னும் பிரிவினைப் பெற்றிருத்தல் பிற கீழ்க்கணக்கோடுள்ள

ஒற்றுமையெனவும் கூறுவர். இவ்வாறன்றி "நாலடி நான்மணி" எனவரும் அவ்வெண்பாவிற் குறிக்கப்பெற்ற நாலடி வேறு; இந்த நாலடியார் வேறு என்பாரும் உளர்.[1]

ஆசிரியரைப்பற்றி இதுகாறும் கூறியவற்றால், நானூறு பாடல்களையும ஒருவரே பாடினா என்றோ, ஒவ்வொன்றனையும ஒவவொருவா பாடினர் எனறோ கொள்ளுதற்கு இடமின்றாதல் புலப்படும். பலா பாடிய பாககளின தொகுப்புததான் நாலடியார் எனினும் ஒவ்வொருவர் பாடிய ஒவ்வொன்றுக்கு மேற்பட்ட பாக்களும் அதனில் இடம் பெற்றுள்ளன என்று கொள்ளுதலே பொருநதுவதாக லாம்.

---

1. நாலடி நாற்பது, நககீரர் நாலடி நானூறு என இரு நூல்கள் நாலடி எனற பெயரோடு வழஙகின எனததெரிகிறது. யாப்பருஙகலவிருததியுரையில் நாலடிநாற்பது குறிக்கப்படுகிறது. "காரிகையில் இந்நூல் அவிநயரது யாப்பதிகாரததுககு அஙக மாக அமைநதது எனக் குறிக்கப்படுகிறது. இது வெண்பாவி னால் இயன்ற நூல் எனபது விருத்தியுரை மேற்கோள்களால் விளஙகும இதனை நககீரா இயறறியதாககொணடு நற்றிணைப் பதிப்பாசிரியா அதன முனனுரையிற குறிததனா. டாக்டர் சாமிநாதையரவாகளும் தமது பததுப்பாட்டுப் பதிப்பிற் பாடி னோர் வரலாறு கூறமிடததில 'நககீரா நாலடி நாற்பது' எனவே எழுதியுள்ளாாகள் இஙஙனம கூறுவதற்கு ஆதாரம் காணககூடவிலலை......யாப்பருஙகலவிருததியில 'நககீரா நாலடி நானூற்றுவணணததால் வருவனவுமெலலாம தூஙகிசைச செப்ப லோசை முதசொள்ளாயிரதது வணணததால வருவனவுமெல் லாம் 'ஒழுகிசை செபபலோசை' என்று காணப்படுகிறது. திருநெல்வேலி ஸ்ரீ நெல்லையப்பக கவிராயரவாகளது வீட்டி லிருந்து கிடைத்த யாப்பருஙகலப் பிரதியில் 'நககீரா' எனபது காணப்படவில்லை.. 'நககீரா நாலடி நானூறு என்பது, இறை யனாா களவியல என்பதுபோல நககீரா இயற்றிய நாலடிநானூறு எனப் பொருள்படுதல் வேண்டும். இதனை ஒப்புக்கொள்வதிற் பல தடைகள் உள்ளன. ஆனால் நக்கீரா நாலடி நானூறு என்ப தற்கு வேறு பொருள்கூறுதல ஏலாது யாப்பருஙகலவுரைக்குத் திருந்திய பதிப்பு வெளிவரின் இதனைத தெள்ளிதின் அறியக் கூடும்." (திரு. வையாபுரிப் பிள்ளை: "இலக்கிய தீபம்" முதற் பதிப்பு: பக. 27-29.)

சமயம்

அயிராணி, இந்திரன், திருமால், திருமகள், சிவபெருமான் ஆகியோர்[1] இந்நூலுட் குறிக்கப்படுகின்றனர். இதுகொண்டு "இந்நூலுள் ஒருசமயமும் விதந்தோதப் படவில்லை" என்றாரும் உளர். ஆயின் மேற்குறித்த தேவர்களைச் சமணரும் ஏற்றுக்கொண்டனர் என்பர். சமண நூலாகிய அறநெறிச்சாரத்துள் "சிவன் கண்ணே செய்ம்மின்கள் சிந்தை" என்புழி அருகன் சிவனென அழைக்கப்படுதலும், நாலடியார் உரையாசிரியர்களுள் ஒரு சாரார், "இமயமலையில் மரகதப் பாறையில் பதுமை யென்னும் கயத்தில் தோன்றிய பொற்றாமரை மலரில் திருமகள் வீற்றிருக்கின்றனள் என்பது ஜைன நூற் கொள்கை'[2] எனக்கூறுதலும் காண்க. அன்றியும் நூலுட் சமணசமயத்துக்குரிய ஒழுகலாறுகள் பல குறிக்கப்பட்டுள்ளன; கொள்கைகள் பல வலியுறுத்தப்படுகின்றன. மேலும் சமணப் பெருங்காவியமான சீவகசிந்தாமணியுள் "வேந்தொடு மாறுகோடல்" (௧0அ௩) என்னும் செய்யுளின் உரையில், 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர், "பிறரும் இச்சமயத்தார், சிறுகா பெருகா முறை பிறழ்ந்துவாரா' (நாலடி. பழவினை. ௧0) என்றதனாலும் உணர்க" என எழுதியுள்ளார். இவற்றால் நாலடியாரை இயற்றியவர்கள் சமண சமயத்தவர்களாதல் வேண்டும் என்பது பெறப்படும்.

பதுமனார் பணி

நாலடியார் என்னும் பெயரால் இப்பொழுது வழங்கும் நானூறு பாக்களையும் தொகுத்தவர் பதுமனார் என்ப

---

1. அயிராணி (௩அ௧); இந்திரன் (௩௪௬); செங்கண்மால் (௩எ௩); திரு-திருமகள் (௩0௪); பொற்பாவாய் - திருமகளே (உ௬௬); பூம்பாவை - திருமகள் போன்றவள் (௩௬௧); பூவின் கிழத்தி (உ௫உ); கண்மூன்றுடையான்-சிவபெருமான் (௪00)

2. "நாலடியார்" - வை. மு. சடகோபராமானுஜாசாரியார்; சே. கிருஷ்ணமாசசாரியார் - ஐந்தாம் பதிப்பு. பக். உ0௧.

வர்.[1] இவரே பால், இயல், அதிகாரம் ஆகியவற்றைப் பகுததவர். இவற்றைக் கடவுள் வாழ்த்துரையில், "அவற்றுள் ஒரே விஷயத்தினை ஒவ்வொரு கருததால தனித்தனிகூறும் நானூறுபாடல்களைப் பொறுக்கிச்சேர்த்து நாற்பது அதிகாரமாக முடிததததாம" என அவரே கூறுதலால் அறியலாம. இச்செய்தி,

> "ஞாலத்து உழிதரும் நற்பாட்டே கொண்டடக்கி
> நாலடி நானூறு எனப்பெயரால்—வாலிதின்
> ஈட்டித் தொகுத்தான் இசைசால் பதுமனே
> கூட்டமைந்த மூன்றுபால் கொண்டு"

என, அவரைப்பற்றி வழஙகும வெண்பாக்களுள் ஒன்றானும் உறுதியடைகிறது. இனி இப் பதுமனாரே இந் நூலுக்கு விருத்தியுரை ஒன்றும் எழுதியிருத்தல் வேண்டும்.[2]

> "நல்லோா அருள்செய்த நாலடி நானூற்றின்
> சொல்லோர் பொருளனைத்தும் தோன்றியதே—கல்வி
> வரும்பத நூல்கொண்ட மதிவரன்தன் வாக்கால்
> அரும்பதம் இட்ட அழகு."

எனப் பதுமனார் பற்றிய வெண்பா வொன்று இயம்பும். இனி நாலடியார் பால் முதலியவாகப பகுக்கப்பட்டிருக்கும் முறையை நோக்குவோம்.

## நூற் பாகுபாடு

**பால் பாகுபாடு**

நாலடியாரும் திருக்குறளைப் போன்றே அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பெரும் பகுதிக

---

1. குறுந்தொகை ஆறுஞ்செய்யுளைப் பாடியவராகப் பதுமனார் எனப்பெயரிய புலவா ஒருவர் காணப்படுகிறார். அவரின் இவர், வேறாதல் வேண்டும்.

2. நற்றிணைப் பதிப்பாசிரியராகிய பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயரவாகளிடமிருந்து திரு வே. இராசகோபாலையங்கார் பெற்ற நாலடியார் ஏட்டுப்பிரதிகள் இரண்டனுள் ஒன்றில் "பதுமனார் விருத்தி" என எழுதப்பட்டிருந்ததென்பர். ("நாலடியார்"—வே. இரா. முகவுரை. பக். 15.)

ளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அறத்துப்பால் 13 அதிகாரங் களையும், பொருட்பால் 24 அதிகாரங்களையும், காமத்துப் பால் 3 அதிகாரங்களையும் கொண்டது.

இயல் பாகுபாடு

அறத்துப்பால் இல்லறவியல், துறவறவியல் என ஈரியல்களாகப் பிரிக்கப்பட்டதேனும், துறவறவியலை முதலியலாகக் கொண்டுள்ளது பொருட்பால் அரசியல், நட்பியல், இன்பவியல, துன்பவியல, பொதுவியல், பகை யியல், பன்னெறியியல என ஏழியல்களை யுடையது. காமத்துபபால் இனபதுன்பவியல், இன்பவியல[1] என இரண்டியல்களாகப்[2] பகுக்கப்பட்டுள்ளது.

இயல் பாகுபாட்டில் குறளுக்கும நாலடியாருக்கும் இடையே வேறுபாடுகள் மிகுதியாகத் தோன்றுகின்றன. குறளில், பாயிரத்துள் அமைந்த "அறன்வலியுறுத்தல்" இந் நூலில் துறவறவியலில் சேர்க்கப்பட்டுள்ளது; இல்லற வியலில் அமைந்த "வாழ்க்கைத் துணை நலம்," இங்குக் "கற்புடை மகளிர்" எனும் பெயருடன் காமத்துப்பாலில்[3] இடம் பெற்றுள்ளது. திருவள்ளுவர் 'ஊழ்' என்பதனை அறத்துப்பாலின் இறுதியில் கூறினர்; நாலடியாரில் 'பழவினை' இல்லறவியலில் காணப்படுகிறது இவ்வாறே பல வேறுபாடுகளைச் சுட்டலாம்.

அதிகாரப் பாகுபாடு

குறளில் அதிகாரப் பொருளோடு தொடர்புடைய கருத்து ஒவ்வொன்றை ஒவ்வொரு குறளும் கூறும். ஆயின் நாலடியாரில் பல அதிகாரங்களுள் ஒரே கருத்தை

1. பொருட்பாலில் வரும இன்பவியலைத் தலையின்பவிய லென்றும் காமததுப்பாலில் வருவதனைக் கடையின்பவியல் என்றும் வழஙகுவா.

2. இறுதி யதிகாரமாகிய காமநுதலியல் ஒன்றனையே காமத்துப்பால் என்பாரும் உளர்.

3. இரண்டாம் அடிக் குறிப்பில் கூறப்பட்டாருடைய கருத்துப்படி இவ் வதிகாரம் பொருட்பாலில் இடம்பெறும்.

வெவ்வேறு உவமைகளோடு கூறும் பாடல்கள் உள்ளன. அன்றியும் சில பாடல்கள் அவ்வவ் அதிகாரங்களோடு நன்கு பொருந்தாதனவாகத் தோன்றுகின்றன. இதனை, அப் பாடல்களை அதிகாரத்தோடு உரைகாரர்கள் வருந்திப் பொருத்திக் காட்டுதலாலேயே உணரலாம். இன்னும், ஒரே கருத்துடைய செய்யுட்கள் பல வெவ்வேறு அதிகாரங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு." (கஉரு)

இது 'தீவினையச்ச'த்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

"கனைகடல் தண்சேர்ப்ப! கற்றறிந்தார் கேண்மை
நுனியின் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரின்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈர மிலாளர் தொடர்பு." (கநஅ)

இது 'கலவி'யுள் இடம்பெற்றிருக்கிறது.

"நளிகடல் தண்சேர்ப்ப! நாணிழல் போல
விளியும் சிறியவர் கேண்மை—விளிவின்றி
அல்கு நிழல்போல் அகன்றகன்று ஓடுமே
தொல்புக ழாளர் தொடர்பு." (கசுக)

இது 'பெரியாரைப் பிழையாமை'யில் காணப்படுகிறது.

"உலகுஅறியத் தீரக் கலப்பினும் நில்லா
சிலபகலாம் சிற்றினத்தார் கேண்மை—நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறிஅடைய நின்றனைத்தால்
ஒற்க மிலாளர் தொடர்பு." (உ0௪)

இது சுற்றந்தழாலில உள்ளது. ஆயினும் இச் செய்யுள்களெல்லாம் நட்புப்பற்றிய அதிகாரம் ஒன்றில் வைக்கப்படத் தக்கன. இவ்வாறே 'இளமை நிலையாமை'யில் உள்ள,

“எனக்குத்தாய் ஆகியாள் என்னைஈங்கு இட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றாள்—தனக்குத்தாய்
ஆகி யவளும் அதுவானால் தாய்தாய்க்கொண்டு
ஏகும் அளித்துஇவ் வுலகு.” (கஉ)

என்ற செய்யுள் ‘யாக்கை நிலையாமை’க்கு உரியது. இவ்வாறே ஏறத்தாழ ஐம்பது வெண்பாக்கள் இயைபில்லா அதிகாரங்களில் தொடுக்கப்பட்டிருக்கின்றன.

மேலும், பத்துக்கு மேற்பட்ட பாடல்கள் ஒரு பொருளைப் பற்றியன எனின் அதிகாரத்தொகையும் அதிகரித்துள்ளது. சான்றாகப் பொருட்பாலிலேயே, ‘கீழ்மை’ என்னும் அதிகாரத்துள் அடங்கியவை போக எஞ்சியுள்ள பத்து வெண்பாக்கள், ‘கயமை’ என்ற மற்றோர் அதிகாரப் பெயருடன் கீழ்மையை யடுத்து வைக்கப்பட்டிருத்தலைக் கூறலாம். இவையெல்லாம் அதிகாரத்துக்குப் பத்து வெண்பா என்னும் வரையறை காரணமாக வந்த பொருந்தாமைகளே யாகும்.

இதுகாறும் நூலின் ஆசிரியரைப் பற்றியும், அமைப்பைப் பற்றியும் கண்டோம். இனி இந் நூலின் சிறப்பினைக் காண்போம்.

## நூற்சிறப்பு

சிறந்த உவமைகளாலும் சீரிய கூரிய தீஞ்சொற்களாலும் உலக நடைமுறையைக் காட்டுதலாலும், பழமொழிகளாலும், பண்டைக் கதைகளாலும் உறுதிப் பொருள்களை எடுத்து வற்புறுத்துதலில நாலடியார் ஈடும் எடுப்பு மற்றது. அறத்தை உரைக்குங்காலத்தும் அழகும் சுவையும் தோன்றக் கூறுதலும் இந் நூலின் சிறந்த பண்பாகும் முந்துநூற் கருத்துக்கள் ஏற்புடையன எனின் எடுத்தாளுதலும் அல்லவெனின் மறுத்துரைத்தலும் இந் நூலிற் காணப்படும் இயல்பாம். முதலாவதாக உவமைகளால் கருத்துக்கள் விளக்கப்படும் முறையினைக் காண்போம்.

**உவமைகள்**

நூலில், உவமைகளால் நன்கு வலியுறுத்தப்படும் உறுதிப் பொருள்கள் பல. நிலையாமை, நட்பு ஆகிய இரண்டினையும் மட்டும் பார்ப்போம்.

பிறப்பு உண்டென்றால் இறப்பும் உண்டு. பிறந்தவர் எவரும இறவாதிருநதாரலலர். ஒருநாள் கழிந்தது என்றால் வாழநாளின் ஒரு பகுதி குறைநதது எனபது பொருள.

"நாஎென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாளது உணர்வார்ப் பெறின்." (௩௩௪)

என்றா வள்ளுவரும் உடமபினின்று உயிரைக் கூறு படுத்துவோனைக் கூற்றுவன எனபது நூல் வழக்கு. கூற்றுவன் ஒவவொரு நாளாக அளநது மனிதனின வாழ்நாளை உண்கிறான். ஒருவனின் ஒருநாளை யுணவு நாழியளவென்ப. "நாழியரிசிக்கே நாம" என்றார், பிறரும். நாளை யளந் துண்ணும கூறறுவனும் நாழியொன்றைக கொண்டிருக்கிறான். ஞாயிற்றை நாழியாகக கொண்டு மனிதனின் வாழ் நாளை அளந்து உண்கிறான். நாள்தோறும் உண்கிறான். அவனிடம் பஞ்சமேது? பட்டினியேது? உண்ண உண்ண, மனிதனின் வாழநாள குறைந்துகொண்டே வருகிறது; ஒருநாள ஒன்றுமே யில்லாது போய்விடுகிறது; கூற்றுவன் ஒரு மனிதனை உண்டு ஏபபமிட்டு விடுகிறான்!

"தோற்றம்சால் ஞாயிறு நாழியா வைகலும்
கூற்றம் அளந்துநும் நாளுண்ணும்." (எ: க - உ)

இவ்வளவு அருமையாக நிலையாமையை எடுததுரைக்கிறது, நாலடியார். மறறொரு பாடலும் உலக இனபங்களின் நிலையாமையை அரிய உவமையால் அழகுபடக் கூறுகிறது.

வாழ்க்கை நிலையில்லாதது என உணர்வோர் சிலர்; அவரே அறிவுடையாா. ஆயின் பலர் இறப்பு என ஒன்று உண்டென்பதை மறந்துவிடுகிறார்கள். 'வாழ்க்கையே எல்லாம்; வாழ்க்கை அழிவற்றது' என்றெல்லாம் எண்ணுகிறார்கள். நேரவிருக்கும் மரணததைப்பற்றி நினையாது,

நிலையற்ற இன்பத்தை நிலையாகக் கருதி அறிவிழக்கிறார்கள். அவர்கள் அறியாமையை என்னென்பது! பலியிட நிறுத்தப்பட்டிருக்கும் ஆடு, வெறியாடுவோன் கையிலுள்ள மாலையில் இருக்கும் தளிரைக் கண்டு, உணவாகக் கொண்டு, மகிழ்கிறது. எல்லாம் சிறிதுநேரம் வரையே. நேரம் ஆகி விட்டால் உணவுகண்டு மகிழ்ந்த ஆடு, உயிரையே பறி கொடுக்கிறது. அந்த ஆட்டினைப் போன்றவர்கள்தாம், நிலையாத இன்பததை நிலையெனக் கருதி மயங்குகிற அறியாமையுடைய மக்கள்.

தளிரைக் கண்டு ஆசைப்படாவிட்டால், தப்பவேண்டுமென்ற எண்ணமும முயறசியும பிறக்கலாம. சிற்றின்பத்தை வெறுததவர் நிலையான பேரின்பமடைதற்காக முயலுதல் கூடும்.

> "வெறிஅயா வெலகளததது வேல்மகன் பாணி
> முறிஆர் நறும்கண்ணி முன்னாத் தயங்க
> மறிகுளகு உண்டன்ன மன்னு மகிழ்ச்சி
> அறிவுடை யாளர்கண் இல்." (கசு)

நிலையில்லாதவற்றை நிலையென்றுணரும பேதையர்க்கு இதனினும் பொருத்தமான உவமை கூறுதல் அரிது

வேறொரு பாடலும நிலையாமைபற்றிக் கூறுதலில் சிறப்புடையதாகக் காணப்படுகிறது. உவமை யொன்றுமின்றியே. உணர்ச்சிகளை எழுப்பக்கூடிய ஆற்றல் பெற்றிருக்கிறது, அப் பாடல். யானைமீதேறி உலாவரும் அரசரே யாயினும இறந்துவிட்டால் பிணம் என்றுதான் இகழ்ந்து பேசப்படுவா "மன்னா பெருமகனைத் தூக்கிச் செல்" எனக் கூறமாட்டார்கள. "பிணத்தைத் தூக்கு" என்றுதான் பேசுவர். ஒருவேளை மதிப்புக் கொடுததாலும், மனையில் இருத்தற்கு இடம்கொடார் "ஒருநாள் ஒருபொழுதாயினும் உம்மைவிட்டுப் பிரிந்திரேன்" என்பதெல்லாம் உயிருளள வரையில்தான் "புணர்பிரியா அன்றில்" எனக் கூறிக்கொள்வதெல்லாம் பிணமாகும் வரையே. பிணமாகிவிட்டால் கணப்பொழுதில் வீட்டை

விட்டு அப்புறப்படுத்தவே துடிப்பார்கள். பறைகொட்டு வோர் இறந்தவருடைய வீட்டுமுன் நின்று முதலில் ஒரு முறை கொட்டுவர்; சற்று நிறுத்தி மீண்டும் கொட்டுவர்; மூன்றாம் முறை கொட்டுமுன், இறந்தவரைத் துணியால் மூடிச் சுமந்து, எரிநெருப்பையும் கையில்கொண்டு, இடுகாட்டுக்குப் புறப்பட்டுவிடுவார்கள். சுமந்து செல்பவர்கள் தாங்களும் ஒருநாள் இறப்போமே என நினைக்கிறார்களா! பிணத்தைப் பிணங்கள் சுமந்து செல்கின்றன! நல்ல மனிதர்கள்!

"சென்றே எறிப ஒருகால்; சிறுவரை
நின்றே எறிப பறையினை—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுள் மூடிதீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து." (உச)

இகழ்ச்சிக்குறிப்புத் தேங்கி நிற்கும் ஈற்றடி என்றென்றும் கற்போர் நினைவைவிட்டு நீங்காது.

இனி, நண்பனாகக் கொள்ளத்தக்கார் இவரென்பதனையும் கொள்ளத்தகாதவர் இவரென்பதனையும் கூறும் பாடலொன்று நட்பாராய்தல் என்ற அதிகாரத்தில் உள்ளது. பிழைபாடுடையவனே மனிதன். எவ்வளவு உயர்ந்தவனும் ஏதேனும் ஒருபொழுதில் தவறுசெய்வான். ஆதலின் ஒருவன், தான் ஒருகால் செய்த சிறு உதவியினையும் உள்ளத்திற் கொண்டு, தான் தீங்கு செய்தாலும் பாராட்டாத ஒருவனையே, தன் நண்பனாகக் கொள்ளுதல் வேண்டும். உதவிகள் பல செய்தாலும் மறந்துவிட்டு, ஒருபோது செய்யப்பட்ட தீங்கினையே உளங்கொண்டு, காலம் பார்த்து அழிக்கும் தன்மையுடையவர் யானை போன்றவர்; அவர் நட்பினை ஒதுக்குதல் வேண்டும். முன்னர்ச் செய்யப்பட்ட சிறு நன்மையையும் மறவாமல், பின்னர் வேல் கொண்டெறிந்தாலும் வாலைக் குழைத்துவரும் நாய் போன்ற நன்றி மறவாதவரையே நண்பராகத் தழுவுதல் வேண்டும்.

"யானை அனையவர் நண்புஒரீஇ நாய்அனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும நாய்." (உகக)

"குற்றம பாாககில் சுறறம் இல்லை" பிழைபொறுத்தல் இல்லையேல நட்பு இல்லை ஆயினும் அயலவர் செய்யும் பிழையையேனும் அறியாமையென மன்னித்தல் கூடும். நண்பன் செய்யும பிழையை எதனை எண்ணிப் பொறுப்பது? எநதபபொருளும குறைபாடுடையதே என்பதனை எண்ணிததான பொறுததல் இயலும். எல்லா வகையினும நிறைவுடையது என்று கூறுதற்கேற்ற பொருள் உலகில் எதுவுமில்லை உணவைத் தருகிற நெல்லுக்கு உமியிருக்கிறது; உணவுகளை உண்டாக்கித் தானும் உணவாகிற நீருககு நுரையிருக்கிறது;[1] மென்மையும் மணமும் உடைய பூவிற்கும் புறவிதழ் இருக்கிறது. இவ்வாறே எந்தப் பொருளும் குறைபாடுடையதே. நண்பனும மனிதனே; அவனும குறைகளுக்கு அப்பாற்பட்டவன் அல்லன் என்றெண்ணிததான் அவன் செய்யும் பிழைகளைப் பொறுததல் வேண்டும்.

"நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிககொளல் வேண்டும
நெல்லுக்கு உமியுண்டு நீர்ககு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கும் உண்டு."[2] (உஉக)

---

1. விருத்திராசுரனைக கொன்றமையால் இந்திரனைப் பற்றிக் கொண்ட பிரமகததியில் நான்கில் ஒருகூறு நீரில் நுரையாயிற்று எனக் கூறப்படும் வரலாறு பற்றி நீருககு நுரை குற்றம் என்பர். வேட்கை தணித்தற்கு நீர்போல் உதவாமையால் நுரை குற்றமாயிற்று எனினும் அமையும்.

2. "The Sun has his Spots, The Moon has her shadows,
The Sea has his winkles, the Land has her warts,
Sweet Faith has her doubts, and lovers their quarrels
And Nothing is perfect in all its parts."
("Love Poems" The Little Devil : W H. Davis)

என்னும் ஆங்கிலச் செய்யுளை இறுதியிரண்டடிகளோடு ஒப்பிடுக.

உலக நடைமுறை

இனி, உலக நடைமுறையினை ஒட்டிக் கருத்துக்களை யும் உவமைகளையும் பொருத்திக் கூறுதலிலும் நாலடியார் தலைசிறந்து நிற்கிறது. ஒரு கொள்கையின் சிறப்புக்களை யும் இயல்புகளையும், கொள்ளுதலால் விளையும் பயன்களை யும், தள்ளுதலால் நேரும் தீமைகளையும் கூறி அப்பொருளை விதிமுறையால் வற்புறுத்துதல் ஒருமுறை. அக் கொள் கையினை உலக மக்களின் போக்கினைக் கொண்டு வலியுறுத் துதல் மற்றொரு முறை. முந்தியதனை இலட்சியக் கண் ணோடு ஆராய்தல் எனவும் பிந்தியதனை நடைமுறைக் கண் ணோடு ஆராய்தல் எனவும் கூறலாம் ஏறத்தாழ நாலடி யாரில் பிற்கூறிய முறையே பின்பற்றப்பட்டுள்ளது.

பன்னெடுங்காலமாக உலகில் பணம் சிறப்பிடத்தைப் பெற்று வந்திருக்கிறது அன்பும் காதலும் அருளும் எல் லாம் வாய்ச்சொற்களாகவே திகழ்ந்திருக்கின்றன. செல்வ மொன்றே மெய்ப்பொருளாக விளங்கி வந்திருக்கிறது. இஃது உலக நடைமுறை. பணத்தாசையினாலேயே பந்த மும் பாசமும் ஏற்படுகின்றன என்பதனைச் சுட்டிக்காட்டிப் பற்றுக்களைத் துறக்க வேண்டுமென்னும் கொள்கையை வற்புறுத்துகிறது நாலடியார்.

> "காலாடு போழ்தின் கழிகிளைஞர் வானத்து
> மேலாடும் மீனின் பலராவர்—ஏலா
> இடர்ஒருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட
> தொடர்புடையேம் என்பார் சிலர்." (கக௩)

> "உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போல்
> தொண்டா யிரவர் தொகுபவே—வண்டாய்த்
> திரிதரும் காலத்துத் தீதுஇலிரோ என்பார்
> ஒருவரும் இவ்வுலகத்து இல்." (உஅச)

காவியுடுத்த துறவிகளாயினும் கைப்பொருள் உடை யாரையே உலகம் கைகூப்பிப் போற்றுகிறது; ஒருகுடிப் பிறந்தவரேனும் பணமில்லாதவரைப் பிணத்தினும் கீழாகக் கருதுகிறது. இவ்வுலகியலால் 'இன்மை'யினது கொடுமை ஒரு பாடலில் கூறப்படுகிறது.

"அத்துஇட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்துஎட்டு உடைமை பலருள்ளும் பாடுஎய்தும்
ஒத்த குடிப்பிறந்தக் கண்ணும்ஒன்று இல்லாதார்
செத்த பிணத்தின் கடை." (உஅக)

உட்புகுந்து நெய்யை உண்ணமுடியாதாயினும், நெய்புடைய கலத்தை எறும்புகள் சுற்றுதல்போல், ஒரு சிறிதும் கொடாதவர்களேனும் செல்வமுடையாரை உலக மக்கள் விட்டு நீங்கமாட்டார்கள், அவ்வாறிருத்தலே பேதைமையாகும்

இதனை,

"ஆகாது எனினும் அகத்துநெய் உண்டாகில
போகாது எறும்பு புறம்சுற்றும்—யாதும்
கொடாஅர எனினும உடையாரைப் பற்றி
விடாஅர உலகத் தவா." (௩௩௭)

என்னும், 'பேதைமை' அதிகாரச் செய்யுள் அறிவிக்கிறது.

இவ்வாறே கயவர் பற்றிவரும் கருத்துக்களும் நடைமுறைக் கண்ணோடு ஆராய்ந்ததன் விளைவாகத் தோன்றியனவே. அறியாமையினால் ஏற்படும் கேடுகளை உலகியலை யொட்டி விளக்குகிறது, ஒருபாடல். இளமைப் பருவத்தில் தந்தை 'படி'யென்று இடித்துரைத்தாலும், அதனை ஒருபொருட்டாகக் கொள்ளாது இகழ்ந்தவன், பிற்காலத்தில பெரியோர் அவையில் ஓர் ஓலையைப் படிக்குமாறு அவனைப் பிறர்வேண்ட, அவர்கள் மீது சினந்து அடிக்கப் புறப்பட்டு விடுவான; அலறுவான். இத்தகையார் பலர் இன்றும வாழ்தலையறிவோம. இளமையில் ஒருவன் தானாகவே கற்றிருத்தல் வேண்டும; இன்றேல் தந்தை எடுத்துரைத்த போதேனும் மேற்கொள்ளுதல் வேண்டும். கல்லாதிருந்து பின் பிறர்மீது காய்தல் இழிசெயலாகும். இக்கருத்தினை,

"கல்என்று தந்தை கழற அதனைஓர்
சொல்என்று கொள்ளாது இகழ்ந்தவன்—மெல்ல

எழுத்தோலை பல்லார்முன் நீட்ட விளியா
வழுக்கோலைக் கொண்டு விடும்." (உ௫௩)

என்னும் பாடல் எழிலுற இயம்புகிறது.

அரிய கருத்தாயினும அவையறிந்தே கூறவேண்டும் என்பதும நடைமுறையைக் காட்டி வலியுறுத்தப்படுகிறது. ஆன்றோா கூடிய அவையாயின, சொலலபபட்ட கருததுக்களின் அருமை பெருமைகளை அறிந்து பாராட்டும். கயவர் கூட்டம் எனின் கருததின் சிறப்புணராமல், காய்ந்தெழுந்து, சொல்பவன் 'பல்லை உதிர்த்துக் கையில் கொடுத்துவிடும.' எழுததுரிமை, பேச்சுரிமை என்றெல்லாம் விண்ணதிரப் பேசும இக்காலததிலும, மாற்றார் கருத்துக்கு மதிப்புக்கொடாத மக்கள் பலரைக் காண்கிறோம், பேச்சாளன் கூறும் கருததில் உடன்பாடு இல்லையென்றால், கூடியிருப்பவர் குழப்பம் விளைத்தலையும, கூறுவோனைத் தாக்க முயலுதலையும் பார்க்கிறோம். இததகைய நிலையை எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் ஒரு புலவர் அறிந்திருந்தார்; ஆதலின அரிய கருததுககளைக கயவரிடம் உரைத்தல் கூடாது என அறிவுரை கூறினர்.

"வென்றிப் பொருட்டால் விலங்குஒதது மெய்கொள்ளா
கன்றிக கறுத்துஎழுந்து காய்வாரோடு—ஒன்றி
உரைவித் தகம் எழுவார் காண்பவே கையுள்
சுரைவித்துப் போலும்தம் பல்" (௩௪௫)

இதனுள் பல்லுக்கு உவமையாகச சுரைவிதை கூறப்பட்டது போன்றே, மணிமேகலையிலும் "சுரைவித்து ஏய்ப்பப் பிறழ்ந்துவேறாயின" என வந்தது

நூலியலோடு உலகியலை ஒப்பிட்டு ஆராயும காலத்தில் ஒரு பெரிய முரண்பாடு தோன்றுகிறது. நன்மை செய்வார் மேன்மையும தீமை செய்வாா கேடும அடைவர் என அறநூல் பலவும முழங்குகின்றன. ஆயினும், உலகில், நல்லோர் பலருடைய வாழ்க்கை நசித்துப் போதலையும், தீயோர் வாழ்க்கை செழித்தோங்குதலையும் காண்கிறோம். அறநூலார அனைவரும் இமமுரண்பாட்டை அறிநதிருக்-

கின்றனர். இதற்குக் காரணங் கூறும் முறையிலேயே அவாகள வேறுபடுகின்றனர். ஊழ்வினையின் மீதும் சூழ்நிலையின் மீதும் பழியைச் சுமத்தித் தப்பிவிடுகிறார்கள்.

வள்ளுவர் காலத்திலும் இம்முரண்பாடு காணப்பட்டிருக்கிறது. அழுக்காறு உடையவனிடத்து ஆக்கம் இல்லை எனறு கூறிய அவரே அழுக்காறுடையார் ஆக்கம் பெற்று வாழுதலையும், அஃதிலலார் கேடு எய்துதலையும கண்டிருக்கிறார். அவற்றின் காரணம் ஆராயப்படற்குரியது எனக் கூறியும் இருக்கிறார்.

"அவவிய நெஞ்சத்தான் ஆககமும் செவ்வியான்
கேடும் நினைககப் படும்."

(திருக்குறள் : ககக)

நாலடியாரும இம் முரண்பாட்டைக் குறிப்பிட்டுள்ளது, இதன் காரணமாகச் சிலவற்றைக் கூறியுமுள்ளது. அறிஞர் பெரும்பாலும் வறிஞராகவும், அறிவிலிகள் பெருஞ் செல்வராகவும் வாழ்தலைக் கண்ட புலவருள்ளம் சிந்தித்திருக்கிறது. ஒரு பெண்ணோடு கூடிவாழும் ஒருவனை மற்றொரு பெண் இணங்கிச் சேரமாட்டாள்; பிணங்கிப் பிரிவாள். இது பெண்ணியற்கை. இவ்வாறே கல்விமகளும் செல்வமகளும் உடனுக ஒருவனிடத் துறையார். ஆதலினுல் தான் அறிவுடையாா வறியவராயும் அறிவில்லார் செல்வராகவும் திகழ்கின்றனா எனகிறாா புலவர்.

"பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்து
அல்லல் உழப்பது அறிதிரேல்—தொல்சிறப்பின்
நாவின் கிழத்தி உறைதலால் சேராளே
பூவின் கிழத்தி புலந்து" (உ௬உ)

இதனை வேறுவகையாக விளக்குவாரும் உளர். மருமகள் மாமியார் பகை மண்தோன்றிய நாள் முதல் வருவது; திருமகளின் மருமகள கலைமகள்; ஆதலின் இருவரும் ஓரிடத்தில் சேர்ந்திரார் என்பர்.

இனி, அறிவொளியால் உலகத்தை அறநெறிப்படுத்தும் பெரியோர் விரைவில் இறந்துபடுகின்றனர்; அறிவிலி

களோ நெடுங்காலம் வாழ்கின்றனர். இம் 'முரண்பாட்'டின் காரணம் யாதெனை எண்ணிய புலவர் ஒன்றினைக் கூறுகிறார். சாற்றை விரைவில் இழுத்துக்கொண்டு, சக்கையை விட்டு விடுதல் எவர்க்கும இயலபு. கூற்றுவனும் கற்றோரை இளமையிலேயே எடுத்துக்கொண்டு, மற்றோரை விட்டுவிடு கிறான். இதுவே காரணமெனப் பாடுகிறார், புலவர்.

"பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்
கல்லாதார் வாழ்வது அறிதிரேல்—கல்லாதார்
சேதனம் என்னும்அச சேறுஅகத்து இன்மையால்
கோதுஎன்று கொள்ளாதாம் கூற்று" (௧0௬)

மேலோர வாழ்க்கை தேய்தறகும், தீயோர் வாழ்க்கை பெருகுதற்கும் காரணம, ஒரு சாரார கூறுதலைப்போல் ஊழ்வினையாகவோ, மற்றொரு சாரார் கூறுதலைப்போல் சூழ்நிலையாகவோ இருத்தல கூடும. ஆயின் நாலடியார் கூறும் காரணம் சரியோ தவறோ, கவிதைகள் அழகாக அமைந்திருக்கின்றன, புலவரின் கற்பனைத்திறனை உணர்த்துகின்றன.

மற்றொரு பாடலும் இத்தகைய முரண்பாடு ஒன் றினைக் குறித்துள்ளது அப்பாடலைப பாடியவர் வளளுவர் வழிவந்தவா. எளிதில் உணர்ச்சி வயப்படாதவராய வள்ளுவரே,

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகுஇயற்றி யான்" (குறள் : ௧0௬௨)

எனச் சொல்லிவிட்டார் அத்தெள்ளுதமிழ்ப் புலவரோ சினத்தில் வள்ளுவரையும மிஞசிவிட்டார். நற்பண்புடை யோர் நல்குரவு அடைதலையும, இழிகுணமுடையார் செல்வச் செழிப்புறுதலையும் கண்ட அவர் கோபங் கொண்டு பேசுகிறார்: "திருமகளே நீ பூவின் புறவிதழ் போன்றாய்!" என்கிறார்.

"நாறாத் தகடே போல்"

'பூவிலிருந்தும் பூவின் நறுமணம் இல்லாத புறவிதழ் போலத் தாமரையில் வீற்றிருந்தும் அதற்குரிய மெல்

வியல்பு உன்னிடத்தில் இல்லையே! அழகுதான் உன்னிடத்தில் இருக்கிறது! அதற்கேற்ற குணஞ்செயல்கள் இல்லை!" என்கிறார்

"நாறுத் தகடேபோல் நன்மலர்மேல் பொன்பாவாய்"

'இடர்உற்ற காலத்தில் கடவுளைத் திட்டுதல் இயற்கைதானே! திட்டிவிட்டுப்போகிறார்' என்று எண்ணிவிடாதீர்கள், என்பாரைபபோல் கோபமொழியைத் தொடர்ந்து சாபமொழியும தருகிறார். கொடியதாகவே சாபமிடுகிறார்; "சாம்பலாய்ப் போகக் கடவது" என்கிறார்.

"நாறுத் தகடேபோல் நன்மலர்மேல் பொன்பாவாய்
நீறாய் நிலத்து விளியரோ"

இவருடைய கோப சாபஙகளின் காரணத்தை நாம் அறிவோம். மேன்மக்களை விட்டுப் பிரிந்து, புன்மக்களைத் திருமகள் சேர்கிறாள் என்பதுதான் காரணம். அதனையும் புலவரே சொல்லிவிடுகிறார்

"நாறுத் தகடேபோல் நன்மலாமேல் பொன்பாவாய்
நீறாய் நிலத்து விளியரோ[1]—வேறாய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ பொன்போலும்
நன்மக்கள் பக்கம் துறந்து" (உகக)

உலகியலையொட்டி, அழகாக, அமைந்த பாடல்களுள் இதுவும் ஒன்றாகும். இவறறால் நடைமுறை காட்டிப் பொருளைக் கூறினா என்பது பெறப்படும்.

பழமொழிகள்

பொருள் விளக்கத்துக்காகப் பல பழமொழிகளும் ஆங்காங்கு எடுத்தாளப்பட்டுள்ளன. கீழ்மக்கள் இழி சொற்கள கூறிய காலத்தும் சான்றோர் அப்படிப்பட்டவற்றை மீட்டும் சொல்லார் என்னும் கருத்தை விளக்க,

1. "இஙஙனிருக்க, தெய்வத்தைத திட்டுதல் அபசாரமெனக்கொண்டு, விளியர் என்ற முற்றுக்கு நன்மக்களும் புன்மக்களும் நசிகக் கடவர் என்று பொருந்தாப் பொருளுரைத் தாருமுளர்."

"நாய்கௌவின் பேர்த்துநாய் கௌவினார் இல்லை" என்ற பழமொழி பயன்படுத்தப்பட்டுள்ளது (எ0). மேன்மக்கள் என்றும் மேன்மக்களே, கயவர் எக்காலத்தும் கயவரே என்பதனைப் புலப்படுத்தக் "கைக்குமாம் தேவரே தின்னினும் வேம்பு" என்ற பழமொழி வந்துள்ளது (கக௨). இவ்வாறே உறற்பால யார்க்கும் உறும் (ககஎ) உறற்பால தீண்டா விடுதல் அரிது (க0௬) அரிமா கொடிப்புல் கறிக்குமோ (க௪௧) ஒருவர் பொறை இருவர் நட்பு (௨௨௩) பெருங்கடல் ஆடிய சென்றார் ஒருங்குடன் ஓசை அவிந்த பின் ஆடுதும் என்றற்றால் (௩௩௨) கறங்கிளனிக் கையிழந்தற்று (௩௩௬) மகனறிவு தந்தையறிவு(௩௬எ) தளிர்மேலே நிற்பினும் தட்டாமற் செல்லா வுளி (௩௫) கூற்றம் குதித்துய்ந்தார் இல்லை (௬) என்னும் பழமொழிகளும் எடுத்தாளப்பட்டுள்ளன. இவையெல்லாம் பழமொழி நானூற்றுள்ளும் காணப்படுவன.[1] இவையன்றிக் காணப்படும், செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல் (கக௫) கைபபறா பேய்ச் சுரையின் காய் (கக௬) இல்லையே தன்காய் பொறுக்கலாக் கொம்பு (௨0௩) பாற்கூழை மூழை சுவையுணராது (௨௩க) என்பனவும் பழமொழிகளின் வேற்றுருவங்களேயாகும்.

### பண்டைக் கதைகள்

இனி அக்காலத்து வழங்கிய கதைகள் சிலவும் கருத்து விளக்கத்தின் பொருட்டுக் கையாளப்பெற்றிருக்கின்றன. "அந்திய காலத்திலே ஒருவன் வாயெழாமல் இருக்கிறபோது, பெண்டு பிள்ளைகளைப் பார்த்துத், தான் தேடின பொருள்களைத் தருமம் பண்ணச் சொல்லிக் கையால் குறிப்புக் காட்டினால், அதனைப் பார்த்து, அவர்கள் அவன் சொல்கிறதை அறிந்தும் அறியாதார் போல, 'ஐயா! விளாம்பழமா கேட்கிறீர்? அது கொடுக்கும் பருவ தசையில் இல்லையே! என்செய்வோம்?' என்று மெய்யான உறவுபோல் அழுவார்கள்" என்பது போன்ற

---

1. முறையே 49, 95, 229, 230, 70, 132, 318, 48, 145, 169, 391 ஆகிய எண்ணுள்ள பழமொழி நானூற்றுச் செய்யுட்களைக் காண்க.

தொரு கதை, நூலெழுந்த காலத்தில் பயின்றிருத்தல் வேண்டும். இக்கதை,

"சிறுகாலை யேதமக்குச் செல்வழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்—இறுகிறுகிப்
பின்அறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம்" (௩௨௮)

என்னும் செய்யுளின் ஈற்றடியில் குறிப்பிடப்படுகிறது இக்கதையினைக்,

"கையால் பொதித்துணையே காட்டக்
கயற்கண்ணாள் அதனைக் காட்டாள்
ஐயா விளாம்பழமே என்கின்றீர்
ஆங்கதற்குப் பருவ மன்றென்
செய்கோ எனச் சிறந்தாள்போல்
சிறவாக் கட்டுரையாற் குறித்தவெல்லாம்
பொய்யே பொருளுரையா முன்னே
கொடுத்துடைல் புரியின் கண்டீர்"
(சீவகசிந் : ௧௫௫௧)

என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளும் கையாண்டிருக்

"இன்றாதும் இந்நிலையே ஆதும் இனிச்சிறிது
நின்றாதும் என்று நினைத்திருந்து—ஒன்றி
உரையின் மகிழ்ந்துதம் உள்ளம்வே றாகி
மரையிலையின் மாய்ந்தார் பலர்" (௩௩௧)

என்னும் செய்யுளும் கிருபண சர்மன் மனம் வேறுகியது[1] போன்றதொரு கதையை உட்கொண்டெழுந்தது என்பர்.[2]

இதுகாறும் கூறியவற்றால் உவமைகளாலும் உலக நடைமுறை கூறலாலும், பழமொழிகளாலும் கதைகளா

1. அல்னாஷ்கர் (Alnaschar) கதை போன்றது.
2. திரு. வே. இராசகோபாலையங்கார்: "நாலடியார்": குறிப்புரை. பக். 196-197.

னும் உறுதிப்பொருள் உணர்த்துதலில் நாலடியார் தனிச் சிறப்புப் பெற்றதென்பது புலனாகும். இனி இவ்வுறுதிப் பொருளுரைக்கும் பாக்களினும நகைச்சுவை முதலிய பல வகைச் சுவையும் தோன்றுதல் சிறப்பாகும்.

சுவைகள

'என்னுடையது என்னுடையது' என்று மிகுந்த பற்றுக்கொண்டு, அறிவில்லாதவன் செலவிடாது சேர்த்து வைத்திருக்கும் செல்வத்தைத் தாமும் தம்முடைய எனக் கூறிக்களிப்பரெனப் பாடலாசிரியர் கூறுகிறார். ஒருவர் செல்வத்தின்மீது மற்றொருவர் உரிமை கொண்டாடுதல் இயலுமா என்பர். உரிமையுடைமைக்கு அறிகுறி யாது? தான் துய்த்தலும, பிறர்க்கு வழங்குதலுமே ஒருபொரு ளிடத்து ஒருவனுக்கு உரிமையுண்டென்பதனை அறிவிக் கும். அறிவில்லாதவன் தானும் பயன் துவ்வான்; பிறர்க் கும் வழங்கான். ஆதலின் அவனுக்கு உரியதாயினும் உரியதில்லை; பிறர்க்கு உரியதன்றேனும் உரியதுதான். அதனாலேயே,

> "எனது எனது என்றிருக்கும் ஏழை பொருளை
> என துஎனது என்றிருப்பன் யானும்—தனதாயின்
> தானும் அதனை வழங்கான் பயன்துவ்வான்
> யானும் அதனை அது. (உஎசு)

என நகைச்சுவை தோன்றப் பாடுகிறார், புலவர்.

கொடுத்தலன்றி விடாத இரவலர் பற்றி வழங்கப்படும் பாடல்களும கதைகளும தமிழில் மிகப் பலவாம். "ஆவீன மழை பொழிய" எனவரும பாடலையும் 'கொடாக் கண்ட னும விடா முண்டனும' என்பது போன்ற கதைகளையும் பலரும் அறிவர். இவை பிற்காலத்தெழுந்தன. நாலடி யார்ப் பாடலாசிரியர் ஒருவரும் இத்தகைய இரவலரைக் கண்டார். அதுகாலை அவருக்கு எழுந்த வியப்பு ஓர் அழகிய பாடலாக உருவெடுத்தது.

பொருள்கள் பலவற்றுள்ளும் நீரே நுட்பமானது. அதனைவிட நுட்பமானது நெய. நெய்யைவிட நுணுக்க

முடையது புகை. நீர் நுழைய முடியாத புழையிலும் நெய் நுழையும். நெய் நுழைய முடியாத புழையிலும் புகை நுழையும். ஆயின் இரப்பவன் புகை நுழையமுடியாத புழையிலும் புகுந்து செல்வான் என்கிறார், புலவர்.

"நீரினும் நுண்ணிது நெய்என்பார்; நெய்யினும்
யாரும் அறிவர் புகைநுட்பம்[1]—தேரி
னிரப்பிடும்பை[2] யாளன் புகுமே புகையும்
புகற்குஅரிய பூழை நுழைந்து" (உஅஉ)

"புகுமே, புகையும் புகற்கரிய பூழை நுழைந்து" என்னும் பகுதியில் புலவரது வியப்பு வெளிப்படுகிறது.

பேதைமை பற்றிய பாடல்களிரண்டில் இழிப்புச் சுவை மிளிர்கிறது. கல்லாத பேர்களினும் கல்லே மிக நல்லது என்கிறது ஒரு பாடல்; காரணமும் சொல்கிறது. பிறர் சொல்வனவற்றை அறியமாட்டாத தன்மையினுல் பேதையரைப் போன்றது கல் ஆயின் பேதையரோ ஒன்றுக்கும் உதவார்; கல்லோ, தன்னையடைந்தவர் நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் என்னும தொழில்களுக்குப் பயன்படுகிறது. ஆதலின் கல், பேதையரைவிட மிகச் சிறந்தது எனக் கூறுதல் வாயிலாகப் பேதையரை எள்ளுகிறது ஒரு பாடல்.

"கல்லனி நல்ல கடையாய மாக்களின்
சொல்லனி தாம் உணரா ஆயினும்—இன்னினியே
நிற்றல் இருத்தல் கிடத்தல் இயங்குதல் என்று
உற்றவர்க்குத் தாம் உதவ லான்," (ருஙச)

---

1. இக்கால அறிவியலாரும் பொருள்களின் ஒப்பு அடர்த்தி (Relative Density) யினை நீரை அடிப்படையாகக்கொண்டே கணக்கிடுதலும், நீரைவிட நெய்யும், நெய்யைவிடப் புகையும் அடர்த்தி குறைந்தனவெனக் கூறுதலும் ஒப்புநோக்கி மகிழ்தற்குரியன. நெய்—Oil புகை—Gas எனவும் கொள்ளலாம்.

2. 'தேரின் இரப்பு இடும்பை' எனவும் 'தேரின் நிரப்பு இடும்பை' எனவும் பிரித்தற்கு இடந்தரும். இரப்பு=இரத்தல்; நிரப்பு—வறுமை; இடும்பை=துன்பம்.

பயன் ஒன்றும் இல்லாவிட்டாலும் எவர்மீதும் பகைமை பாராட்டிப் பழிச்சொற்களைப் படைத்துச் சொல்கிறார்கள், பேதையர். "சொல்லாவிட்டால் என்ன? குடியா முழுகிவிடும்?" என நாம எண்ணுவோம். ஆசிரியர் 'ஆமாம்' என்கிறார்; திகைக்கிறோம. காரணம் காட்டுகிறார்; நகைக்கிறோம. காரணம் யாது? அவ்வாறு பழி சொல்லிக் கொண்டிராவிட்டால் பேதையர் நாக்கினை நல்ல தினவானது வருததும் என்பதுதான்!

"பெறுவதுஒன்று இன்றியும் பெற்றானே போலக்
கறுவுகொண்டு ஏலாதார் மாட்டும்—கறுவினால்
கோத்து இன்னாகூறி உரையாக்கால் பேதைக்கு
நாத்தின்னும் நல்ல சுனைத்து." (௩௩௬)

இவ்விரு பாடல்களிலும் பேதையர் எள்ளி நகையாடப்படுதலைக் காண்கிறோம. இவ்வாறே, சொல்லும் பொருளைச் சுவைபல தோன்றக் கூறும் பண்பை நூலெங்கும் பரக்கக் காணலாம்.

முந்துநூல் உடன்படல்

முந்துநூற் கருத்தொடு தொடர்புடைய பாடல்களும் நாலடியாரில் இடமபெற்றிருக்கின்றன; குறிப்பாகக் குறளோடு பிணைந்த செய்யுட்கள் பலவுள்ளன. அவற்றுள் சில குறட் கருத்துக்களை அவ்வாறே கூறுகின்றன. சில

ஒரு செய்யுளில் ஒரு குறளின் கருத்தை மொழிவனவும், இருகுறட் கருததுககளை மொழிவனவும் ஆக நாலடியார்ச் செய்யுட்கள சில காணப்படுகின்றன.

"வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீரது உடைத்து." (குறள்: ௨௨௧)

என்னும் குறளின் கருததே.

"ஏற்றகை மாற்றாமை என்னானும் தாம் வரையார்
ஆற்றாதார்க்கு ஈவதாம் ஆண் கடன்—ஆற்றின்

மலிகடல் தண்சேர்ப்ப மாறீவார்க்கு ஈதல்
பொலிஇடன் என்னும் பெயர்த்து." (கூஅ)

என்பதனிற் கூறப்பட்டது.

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு." (குறள் : எஅஉ)

என வள்ளுவர் கூறியதனையே,

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்." (கஉரு)

எனவரும் நாலடிச் செய்யுளும் கூறிற்று.

"அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட்கு எல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்." (உ0உ)

என்னும் செய்யுள்,

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்." (குறள் : உகசு)

"மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்." (குறள் : உகஎ)

என்ற இரு குறட் கருத்துக்களையும் உள்ளடக்கியதாகும். இவ்வாறே,

"கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும்." (குறள் : க0சுக)

"இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்." (குறள் : க0சுக)

எனவரும் குறளிரண்டின் கருத்துக்களே,

"கரவாத திண்ணன்பின் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை—இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ
கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு." (ந0ரு)

என்னும் நாலடியார்ச் செய்யுளில் காணப்படுகின்றன.

இனிக் குறட்பாக்களின் கருத்துக்கள் விரித்துரைக்கப் படுதலும் உண்டென்கிறோம். சான்றாகத்,

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்." (குறள்: ௧0௪)

என்பது குறள். இதன் கருத்தே நாலடியாரில்

"தினையனைத்தே ஆயினும் செய்தநன்று உண்டால்
பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்—பனையனைத்து
என்றும் செயினும் இலங்கு அருவி நன்னாட
நன்றுஇல நன்றுஅறியா மாட்டு." (௩௪௪)

என விரித்துரைக்கப்படுகிறது. குறட் கருத்தே கூறும் இடங்களையன்றி வேறு பொருளுரைக்கும் இடத்தும் திருக் குறள் தொடர்கள் இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

"பெருவரை நாட பெரியார்கண் தீமை
கருநரைமேல் சூடேபோல் தோன்றும்—கருநரையைக்
கொன்றன்ன இன்னா செயினும்[1] சிறியார்மேல்
ஒன்றானும் தோன்றாக் கெடும்." (௧அ௬)

"எறிநீர்ப் பெருங்கடல் எய்தி இருந்தும்
அறுநீர் சிறுகிணற்று ஊறல் பார்த்து உண்பா
மறுமை அறியாதார் ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை."[2] (உ௭௫)

என்பன காண்க.

முந்துநூல் மறுத்தல்

அறம் பொருளின்பங்களை வலியுறுத்துங்கால் முந்து நூற் கருத்துக்கள் சிலவற்றை உடன்படலும் சிலவற்றை மறுத்தலும இயற்கையே அம் முறையில் ஆங்காங்கே வடநூற் கருத்துக்கள் சில மறுக்கப்படுகின்றன. அக் காலத்திலே வடநாட்டார் சிலர் தென்னாட்டை மிலேச்ச தேசமென்றும் அங்கு வாழ்வார் வீடு பெறார் என்றும்

1. குறள்: ௧0௬. 2. குறள்: ௬௫௭.

னா. அக் கருததை மறுபபதாக நாலடிப பாட லொன்று எழுந்தது.

எட்டிவிதை எந்நிலத்தில் இடப்பட்டாலும் தென்னை மரமாகத் தோன்ருது. ஒருவகை மரம் தோன்றுகிறது என்ருல் நிலததினியற்கையனறு, வித்தின்வகையே காரண மாகும். அவவாறே வீடுபேறறை ஒருவன் எய்துகிருன் என்ருல் அவன் வாழும திசையன்று, அவனே காரணம். வடதிசைதான் உயாநத திசை, வீடு நல்கும திசை யென் ருல் வட நாட்டிலும அவததமே வாணுளைப போக்கும புல் லறிவிஞா இலரா? அனறி, வேறறு நாட்டவா ஒருவரேனும் வீடுபேறு அடைந்தனரலலரா? அவனவன் செய்த வினை யின் பயனுகததான மறுமை அமையும என்பதே அறி வொடு முரணுத கொளகையாகும.

" எந்நிலத்து வித்திடினும் காஞ்சிரஙகாழ தெஙகாகா
எந்நாட் டவரும் சுவர்ககம் புகுதலால்
தன்ஞல்தான் ஆகும் மறுமை வடதிசையும்
கொன்ஞர் சாலப் பலர்." (உசஙு)

இவ்வாறு பொருநதாப் பிறநூற்கொள்கைகளை மறுக் கும் வழியிலும் "நாலடியாா" நற்கருததுக்களை வற்புறுததி யுள்ளது. இதுகாறும் இநநூல, கருத்துக்களை எவ்வெம் முறையில் வலியுறுததுகிறது எனக கண்டோம். இனி நூலால் அறியப்படும அககால வழகக ஒழுக்கங்களையும் செய்திகளையும் காண்போம்.

## நூற்செய்திகள்

திருமணம் நாள் பார்த்துச் செய்யப்படும (அசு). பலர்க்கும் திருமணச் செய்தியைப் பறையறைந்து தெரி விப்பர். (அசு)

செலவச் செழுமையுடையவாகள் வகைவகையான உணவு, ஒவவொனறிலும ஒவ்வொரு கவளமே யுண்டனர். (க) வறியோா கூழையுணவைப பனையோலைக் குடையில் உண்டனா (உஅகூ). செல்வா தம இல்லின் புறங்கடையில்

வைத்தே ஏழைகட்குச் சோறு ஈந்தனர்; இல்லத்துள் அவர்களை விடுதல் இலர், பிறர் தம் இல்லததுள் வர வேற்று உணவளிததனர் (௨௯௩).

பாற் சோற்றில் நெய் சோததுண்டல் (௩௩௩). நண்டினைக் கால் முரித்துத் தின்றல் (௧௨௩) முதலியன குறிக்கப்படுகின்றன.

உழவுத் தொழில், கருமபாட்டுதல, செக்காட்டுதல், கம்மத தொழில் முதலியன கூறப்பட்டுளளன. எருமைக் கடாவினைப்பூட்டி ஏருழும் வழக்கம இருந்தது (௨). கரும் பாட்டிக் கட்டி கொளளுதல அதிகாலையில் நிகழ்ந்தது; கரும்புச் சக்கையினைத் தீயில் எரிததனா (௩௫). செக காட்டி எண்ணெய் கொளளுதல இழிதொழிலாகக்[1] கருதப் பட்டது (௩௭௪). முட்டிகை, குறடு, சுட்டுககோல் முதலிய கருவிகளைக் கம்மாளர் பயனபடுததினா (௨௦௮).

மண்பானைத் தண்ணீரில் நறுமணததின் பொருட்டுப் பாதிரிபபூ இட்டனா (௧௩௯) பனறிகளுக்குத தொட்டியில் கூழவாாததனா (௨௫௭). ஓலையில 'கணக்கு'[2] எழுதினர் (௩௯௭). கணக்காயா, வாயபபாடமாகவும் நூற் பாடமாகவும கல்வியறிவூட்டினர் (௩௧௨, ௩௧௪, ௩௧௬). தவசிகள் கடிஞை எனனும் பாத்திரம் ஏநதிச் சென்று பிச்சை ஏற்றனர் (௯௯). இறைவனுக்கு ஆடுகளைப் பலியாகக் கொடுத்தனர் (௧௬). நாழி (௭) தூணி, பதக்கு (௩௮௭) முதலிய அளவு கருவிகளும, காணி, முநதிரி (௩௪௬) முதலிய சில அளவைகளும, காதம, யோசனை (௧௦௦) முதலிய தொலைவு அளவைகளும பயனபடுததப்பட்டன.

அரசர்கள் போருக்கு எழுங்காலததும், உலாப் போகும் போதும யானை மீதேறிச் செலவர் (௩, ௨௧).

---

1. "விலஙகினை வதை செயது ஊனை விற்கும் இடத்தினும் பதின்மடஙகு அசுததியானது செககாட்டும் இடம, அதனினும் பதின்மடங்கு அசுததமானது கள விறகும இடம, அதனினும் பதின்மடஙகு அசுததமானது விலைமாதா உடம்பு என்பது அறநூற்றுணிபு."

2. நெடுங்கணக்கையும் இலக்கியததையும் குறிக்கும்.

பிறன்மனை விழைந்தார்க்குக் கொலைத் தண்டனை விதித்தனர் (அக) அன்னாருடைய கால்களை ஒடித்து விடுதலும் உண்டு (அச). தோற்ற பகையரசர் மனைவியரை வென்ற அரசர் கைக்கொண்டனர் (ங) போரில் அடிமைப்பட்டவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர் (கஉஉ). அவர்கள் வயல் வெளிகளில் வேலைசெய்யுமாறு ஏவப்படுதலும் உண்டு (கஉஉ).

ஒருவன் இறந்தானாயின் சுற்றததார் கூடியிருந்து அழுவர் (உ௫, உசு). சுடுகாட்டுககு எடுததுச் செல்லுமுனை மும்முறை பறையறைவா; பினனாப் பிணத்தைதத துணியால் மூடித தூக்கிச செல்வர்; சுடுதற்கான நெருப்பையும் கொண்டுபோவா (உச). பிணத்தை அடக்கம் செய்யும் முறைகளாகப பல வழக்கிலிருந்தன. சுடுதல், நாரினால் கட்டி இழுத்தல், தாயமை செய்து புதைத்தல், கண்டவிடத்து எறிதல் முதலிய முறைகள் கூறப்பட்டுள்ளன (உசா).

இம்மை (சு௫, கஙஉ). மறுமை (அ, சு௫) கள் உண்டு இவை இருமை (கஉசு) எனவும் வழஙகபபடும மேலுலகம் (ஙசு) அல்லது விண்ணுலகம (உஙங) ஒன்றிருக்கிறது. சுவர்க்கம் (உசங). நரகம (௫அ) ஆகியவையும் பேசப்படும. நரகத்தை நிரயம (உஙங) எனவும கூறுதலுண்டு. மூவுலகமும் (க00) காணப்படுகிறது. கூற்றுவன் பாசத்தால் உயிர்களைப் பிணித்துக் கொண்டு செல்வான் (௫) என்னும் நம்பிக்கையும் இருந்தது. காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றும் முக்குற்றம் (கசு0). எனக கருதப்பட்டன.

## நூலின் காலம்

நாலடியார் உருவாகிய காலம்பற்றி நனிபல கொள்கைகள் உலவுகின்றன. கடைச்சங்க காலததில் தோன்றிய நூலெனக் கருதினோரும் உளா. அக் கருத்தினருள் ஒருவர், அதறகு முரணான எநதக கோட்பாட்டினையும் அறிவுடைய பெருமக்கள் தம செவியில ஏற்றுக்கொள்ள

மாட்டார்கள் எனத் துணிந்து எழுதினர். உள்ளபடியே இந் நூல் கடைச்சங்க நூலாதல் பொருந்துமா என நோக்குவோம்.

கடைச்சங்க காலமா ?

சங்கநூல்கள் பற்றிக் கூறும் ஏடுகளுள் பழைமை வாய்ந்தது, இறையனார் களவியலாகும. கடைச்சங்க காலத்தில் தோன்றியதாயின் நாலடியாரைச் சங்க நூல்களுடன் சேர்த்துக் களவியல் ஏன் குறிப்பிடவில்லை? "என்றித் தொடக்கத்தன" என்பதனுள் அடங்குமெனின் பொருந்தாக் கூற்றாகும. நாலடியார போன்றதொரு சிறந்த நூலை அவ்வாறு பெயா குறியாது விடுதல், எளிதில் ஒப்புக் கொள்ள தகக்க தன்று.

பத்துப்பாட்டினையும் எட்டுத்தொகையினையும் பாடியவர்களை யன்றிப பதினெண்கீழ்க்கணக்கு முதலிய பிற நூல்களின் ஆசிரியர்களைக் கூறவேண்டிய இடத்தெல்லாம், பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் போன்ற தொல்காப்பிய உரைகாரர்கள், "கடைச்சங்கத்தாரும் பிற சான்றோரும" என்னும தொடரையே கையாள்கின்றனர். அவர்களால் குறிககப்பட்ட பிற சான்றோர் கடைச் சங்கத்தினரல்லர் எனபது தெளிவு.

மேலும், நாலடியாரில் பிற்காலச் சொல்வடிவங்களும் தொடர்களும் பலவாக வுள்ளன. பெயர் என்னும் சொல் பேர் எனத திரிநதது பிற்பட்ட காலத்திலேயாம். இந் நூலில் பேர் (ருகூ) பேர்த்து (கூஎ) பேர்க்குதல் (கசுக) பேரும் (உ00) பேர்த்தும் (ரு௲ச) முதலிய வடிவங்கள் காணப்படுகின்றன இவ்வாறே வியர்த்து என்பதன் பிற்கால வடிவமாகிய வேர்த்து (சுச) என்பதும் வந்துள்ளது.

கூறியுரையாக்கால் (ருருரு) நெருப்பழல் (கஉச) இல்லகம் (ரு அக) முதலிய ஒருபொருட் பன்மொழிகளும இந் நூலின் காலம் பிற்பட்டது என்பதனை உணர்த்தும்.

இந் நூலில் வடசொற்கள் மிகப்பலவாய்க் காணப் படுகின்றன.[1] இவற்றுள் பல சங்கவிலக்கியஙகளுள் காணப் படாதன. சான்றாக அருத்தம் (செல்வம்), அபகாரம், உபகாரம், கல்யாணம், கோத்திரம, சுவர்க்கம், ஞானம் தீர்த்தம், புததகம, மார்க்கம், விரதஙகள் முதலியவற்றைச் சுட்டலாம்.

மேற்கூறிய காரணங்களால் நாலடியார் கடைச் சங்க கால நூலன்று எனக் கொள்ளுதலே பொருததமாகும். ஆகவே நாலடியார் ஏறத்தாழக் கி. பி. 300-க்குப பிற்பட்ட தென்பது பெறப்படும.

உரையாசிரியர்கள் துணை

பரிமேலழகரும தொலகாபபிய உரையாசிரியர்களும் இந் நூற் செய்யுட்களைத தததம உரையில் எடுத்தாண் டுள்ளனர். களவிய லுரைகாரர், முதற் சூத்திர வுரையில், "இனி இடையாயினா பெண் எனபது எற்புச சட்டகம,

1. அக்காரம் (௨௦௬) அஞ்ஞானம் (௩௧௧) அபகாரம் (௬௯) அபாரணம் (௨௦௭) அமிழ்து (௨௦௦) அருததம் (௩௦௪) அவததம் (௩௨௭) அவமதிப்பு (௧௬௩) இநதிரன (௩௪௬) இலககணம் (௩௯௯) ஈனம் (௧௯௮) உபகாரம (௬௯) கடகம் (௨௮௯) கணம் (௨௬) கல்யாணம் (௮௬) கருமம் (௫௨) கனம் (௩௪௧) கன்னியா (௨௭௪) காரணம் (௨௮௫) கும்பம் (௪௭) குமபி (௮௧) கோததிரம் (௨௪௨) கோட்டி (௧௫௫) கோடி (௧௬௮) சககரம் (௩௪௬) சகடம் (௨) சததம் (௫௨) சநதனம் (௨௩௪) சிகை (௧) சுரம் (௫) சுவர்க்கம் (௨௪௩) சூததிரம் (௩௧௪) சேடியர் (௩௫௪) சேனை (௩) சோதிடம் (௫௨) ஞானம் (௩௧௧) தண்டு (௧௪) தருமம் (௨௫௦) தவசி (௯௯) தாரம் (௮௧) தாரிதது (௭௨) தீரததம் (௧௭௫) துககம் (௧௨௧) துச்சாரி (௮௪) தெய்வம் (௩௦௪) தேசு (௧௦௫) நாகம் (௬௬) நிசசம (௮௧) நிததலும் (௩௭௬) நீசா (௬௮) பந்தம் (௨௯௪) பருவம் (௨௭௪) பாசம் (௧௩௦) பாடம ௩௧௨) பாணி (௧௬) பாரிககும் (௧௫௧) பாவம் (௮௨) பிததன் (௩௪௦) புண்ணியம் (௨௬௪) புததகம் (௩௧௮) புதல்வன (௧௯௭) போகம (௨௫௦) மண்டிலம் (௨௨) மாததிரை (௨௪௨) மாககம (௩௨௩) மூஙகை (௧௮௫) மூடர் (௩௧௬) மைத்துனர் (௩௪௦) வருணம் (௧௩௬) விசசை (௧௩௪) விரதஙகள் (௫௭) வேதிகை (௯௬). இவற்றுட் சில பலவிடஙகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

முடைக்குரம்பை, புழுப் பிண்டம, பைம்மறியா நோக்கப் பருந்தார்க்கும தகைமைத்து........" என எழுதுகிறார். இத னுள் பைம்மறியாநோக்கப் பருந்தாரக்கும தகைமைதது என்பது,

" தோற்போர்வைமேலும் தொளைபலவாய்ப் பொய்ம்மறைககும்
மீப்போர்வை மாட்சிதது உடமபானல் - மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பாாக்கப் படும" (சஉ)

என்னும் நாலடிச் செய்யுளின் ஈற்றடியை உட்கொண்ட தாகும். இதனுல நாலடியார் களவியலுரைக்கு முற்பட்ட தாதல் பெறபபடும். அவ் வுரை இன்றைய வடிவமெய்திய காலம் கி. பி. எட்டாம நூற்றாண்டின் பிற்பகுதி என ஆராய்ச்சியாளர் கூறுவர். ஆதலின நாலடியார் ஏறத்தாழக் கி. பி. 750-க்கு முன் தோனறியதாதல் வேண்டும.

இதுகாறும் கூறியவற்றால் நாலடியாரின் காலம் கி பி. 300-க்கும் கி. பி 750-ககும இடைப்பட்டது என அறிய லாம். இக் காலப பகுதியுள இன்ன நூற்றாண்டைச் சேர்ந்தது எனக கூறுதறகேறற சான்று, நூலில் வரும் 'முததரையர்' பற்றிய குறிப்பாகும்.

முத்தரையர் யாவர்?

முத்தரையர் யாவர் என்பது பற்றிப் பலரும் பலவாறு கூறுவர். முததரையா என்பதனை மூன்று + தரையர் என்றோ, முத்து + அரையர் என்றோ பிரிக்கலாம் என்பர். மூன்று தரையர் என்பது சேர சோழ பாண்டியரையும், முத்து அரையர் என்பது பாண்டியரையும் குறிக்கும் என்பர்.

இவ்வாறு பிரிததுப் பொருள்கொள்பவர்களின் நோக்கம வேறுபடுகிறது. ஒரு சாரார, இவ்வாறு கொள் ளக் கூடுமாதலின, முததரையா எனபது ஒரு வகுப்பினரின் பெயரன்று எனவும் மூவேந்தரும சஙககாலத்திலும் இருந்தனராதலான நாலடியாா சஙகநூல் ஆகும் என்பர்.

இதனை ஏற்றுக்கொள்ளுதலில் பெருந் தடை யொன்றுண்டு. முத்தரையர் (மூன்று தரையா) முடி மன்னர் மூவராயின் சங்க காலத்திலேயே தரை என்ற சொல் நிலம் என்னும் பொருளில் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். ஆயின் அச் சொல் அப் பொருளில் முதன் முதலாகத் தேவாரத்திலேயே வழங்கப்பட்டுள்ளது என்பர்.[1] இவ்வாறே முத்து அரையர் எனப் பிரித்தற்கும் சங்கநூல் வழக்கில்லை. ஆதலின் இங்குக் கூறியவாறு பிரித்துக் காட்டி நாலடியாரைச் சங்க காலத்தது எனல் ஒவ்வாது.

இனி, "இவரும் (முத்தரையரும்) 'பூங்குன்றநாட' என்றும் 'முத்தோடிமைக்கும் முழங்குவரித் தண்சேர்ப்ப' என்றும் 'முத்தம் நாவாய் கரையலைக்கும் சோப்ப' என்றும் முன்னிலைப்படுத்துக் கூறப்படுகின்றவரும் ஒருவரே எனத் துணிதற்கு இடனுகின்றது" என்பர் ஒரு சாரார்.[2] இவர்கள் முன்னிலைகளாக வருவன பாண்டியனைக்குறிக்கு மெனக் கொண்டனர், முத்துக்கள் அவற்றிற் குறிக்கப்படுதலால். ஆடூஉ முன்னிலைகள் பாண்டியனைக் குறிக்கும், முத்தரையரும் முன்னிலைகளாற் குறிக்கப்பட்டோரும் ஒருவரே என்பதுதான் இவர்கள் கருத்தாகும். ஆயின் ஆடூஉ முன்னிலை என்பது ஓர் ஆடவனை முன்னிலைப்படுத்திக் கூறுவதாக அமைக்கப்படுவதேயன்றி உண்மையில விளித்துப்பேசுவதாகாது, கவிமரபேயன்றி உண்மையில் ஒருவனைக் குறிப்பதன்று. அன்றியும் ஆடூஉ முன்னிலைகள் பாண்டியனைச் சுட்டுமாயின் இந்நூலில காணப்படும் ஒன்பது மகடூஉ முன்னிலைகளும் [3]எந்தப் பெண்ணைக் குறிப்

1. "தரை: The earth - பூமி 'தரையொடு திரிதல நலி தரு ..சலதரன' (தேவா ௬௬அ ௨.) Soil, land, ground - நிலம். 'தரையில் விழுந்து பணிந்தனா' (கோயில் பதஞ்ச ௩௩)" - Tamil Lexicon "செங்கோனறரைச செலவு" பிறபட்ட நூல் என்பதே ஆராய்ச்சியாளர் முடிவு

2. திரு. வே. இராசகோபாலையங்கார் "நாலடியாா" முகவுரை. ப௧. ௧௧.

3. நிறைதொடீஇ (௧௧0) தடங்கண்ணய் (௧௧௬) நறுமலாத் தண்கோதாய (௨0௧) வேல்நெடுங்கண்ணய (௨௬௫) வேற்கண்,

பன? மேலும் பெருமுத்தரையர் இருபாடல்களில் குறிக்கப்படுகின்றனரேனும முன்னிலைப்படுத்தப்பட்டனரல்லர். முன்னிலைகளாக வருவனவே ஒருவரையே குறித்தல் ஐயத்திற்கிடமானது. இந்நிலையில் 'முன்னிலை'யில்லாத ஒரு பெயர்க்கும், ஆடூஉ முன்னிலைகட்கும் தொடர்பு கற்பித்தல் அமையுமா? பெருமுத்தரையரைப் பாண்டியருடன் முகவுரையில் பிணைத்துக்கூறிய இவ்வாசிரியரே 200-ஆம் செய்யுள் குறிபபுரையில் "முத்தரையர் என்ற பெயருடையார் இந்நூல் செய்தார் காலத்து விளங்கிய சிற்றரசர் வகுப்பினர் என்ப" என்றார். இவற்றால் முத்தரையர்க்கும் பாண்டியர்க்கும் தொடர்பில்லை யெனவே இவ்வாசிரியர் கருதினர் என்பது விளங்கும.

முத்தரையர் என்பதனை மூன்றுதரையர் எனவும் முத்து அரையர் எனவும் பிரிக்கலாம் எனக்கொண்ட மற்றொருசாரா ஆசிரியர் நாலடியாா மதுரையில் வச்சிரநந்தி என்பாரால் நிறுவப்பட்ட சமண சங்ககாலமாகிய கி. பி. ஐந்தாம்நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றியது என்பர். இவ்வாசிரியரும் சிலர் மூன்றுதரையர் என்பது அக்காலத் தமிழ் வேநதரைக் குறிக்கும் எனவும் 'முத்து அரையர்' அக்கால பாண்டியரைக் குறிக்கும் எனவும் கொண்டனர்.[1] வேறு சிலர் முததரையர் என்பார் களப்பிரரே யெனவும் தமிழ் வேந்தரையும் வென்றமையால் மூன்று தரையர் என்றோ, பாண்டியரைப் புறங்கண்டமையால் முத்து அரையர் என்றோ களப்பிரர் அழைக்கப்பட்டனர் என்பர்.[2] ஆயின் களப்பிரர் முததரையர் என்னும்பெயருடன் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலேயே விளங்கினர் என்பதற்கு வரலாற்றுச் சான்று இல்லையாம். "களப்பிரர் கி.பி. 7,8-ஆம்

---

ணய் (௨௬௭) கூர்மையின் முல்லை அலைக்கும் எயிற்றாய் (௨அ௭) நானம் கமழுமகதுப்பினாய் (௨௯௪) புடைபரநத விற்புருவ வேல்நெடுங்கண்ணாய் (௨௯௭) வாட்கண்ணாய் (௩௫அ).

1. திரு. ஸ்ரீநிவாஸப் பிள்ளை : "தமிழ் வரலாறு"

2. டாக்டர். இராசமாணிக்கனார் : "பல்லவர் வரலாறு." (௧௯௫௨) பக். ௪௨ - ௪௩.

றாற்றாண்டுகளில் தஞ்சைக்கு அருகிலும் கொடும்பாளூரி லும் முத்தரையர் என்னும் பெயருடன் சிற்றரசர்களாகிய பல்லவர்கட்கும் பாண்டியர்க்கும் அடங்கி வாழ்ந்துவந்தனர்"[1] என்பது காண்க. ஆதலின் நாலடியார் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டினதாய சமண சங்கத்தைச் சார்ந்தது அன்று என உணரலாம். மேலும் நூலில் 'முத்தரையர்' பற்றிக் கூறும் செய்யுட்கள் இரண்டாகும்.

> " பெருமுத் தரையர் பெரிதுவந்து ஈயும்
> கருனைச்சோறு ஆர்வர் கயவர் - கருனையைப்
> பேரும் அறியார் நனிவிரும்பு தாளாண்மை
> நீரும் அமிழ்தாய் விடும்" (உ00)
>
> " மல்லல்மா ஞாலத்து வாழ்பவருள் எல்லாம்
> செல்வர் எனினும் கொடாதவர் நல்கூர்ந்தார்
> நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
> செல்வரைச் சென்றிரவா தார்" (உகக)

இவ்விரிடங்களிலும் 'பெருமுத்தரையர்' என்ற பெயரே வந்துள்ளது. அன்றியும் இந்நூலின் பழைய வுரை, "பெருமுத்தரையா என்னும் சிறப்புப் பெயர்பெற்ற செல்வர் பெரிதும் காதலித்து ஈயும் கருனை" எனக் கூறு கிறது. இவற்றால் 'பெருமுத்தரையர்' என்பதே பெயரா கக் கொள்ளத்தக்கது.[2]

பெருமுத்தரையர் யாவர்?

பெரும்பிடுகு முத்தரையர் என்னும் பெயரினர் இரு வர் செந்தலைக் கலவெட்டினால் அறியப்படுகின்றனர். முத

---

1. டாக்டர். மா இராசமாணிக்கனார்: "பல்லவ வரலாறு" (ககூடுஉ) பக் சஉ திருவாளர் சதாசிவ பண்டாரத்தாரவர்கள் தம் 'தமிழிலக்கிய வரலாற்'றில் முத்தரையரைப் பற்றிய செய் திகள் கி. பி அ-ஆம நூற்றாண்டில்தான் முதலில் கல்வெட்டு களில் காணப்படுகின்றன என்பர். (பக் எஉ - எங) ஆயின் இவ்வம்ச சரித்திரம் கி பி. எ-ஆம் நூற்றாண்டிறுதி முதல் கூ-ஆம் நூற்றாண்டு முடியக் கிடக்கின்றதென்பர் (திரிகடுகம் சிறுபஞ்ச மூலம் - முன்னுரை: பக்.கஉ - கங).

2. திரிகடுகம் சிறுபஞ்சமூலம் - முன்னுரை-பக். கஉ-கங; திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள்.

லாம் பெரும்பிடுகு முத்தரையன் (குவாவன் மாறன்) பாட்டனும இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையன் பெய ரனும் ஆவர். பெரும்பிடுகு முத்தரையர் என்பதே நாலில் பெருமுத்தரையர் என வந்ததுபோலும். இடி என்ற பொருளுடைய பிடுகு என்பது வேற்றுமொழிச் சொல்லா தலின் தமிழ் நூலில் ஒழிக்கப்பட்டது[1] என்பர். பெரும் பிடுகு முத்தரையர் இருவருள் பெயரனை சுவரன் மாறன் பல்லவமன்னனாகிய முதற் பரமேசுவரவர்மன் காலத்தவ னாகக் கருதப்படுகிறான்.[2] இப்பல்லவ மன்னன் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் ஆண்டவன். ஆத லின் நாலடியார் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இயற்றப்பட்டிருத்தல் கூடும்.

---

1. திரிகடுகம் சிறுபஞ்சமூலம், பக். 12, 13; திரு வையாபுரி பிள்ளையவாகள்.

2. பரமேசுவர வர்மன் I பெரும்பிடுகு என்னும் பெயர் ஒன்றினையும் தாங்கியவன். அவன்கீழ்க் குறுநில மன்னனாய் விளங்கிய முத்தரையனும் பெரும்பிடுகு முத்தரையன் என வழங்கப்பட்டனன்.

‘நாலடி வள்ளுவர் ஆமேயிப் பாலை நடந்த பெரும்
காலடி மேலடி.’

‘பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்.’

‘ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி.’

# உ. பழமொழி - - -

[திரு. ச. கணபதி முதலியார், எம்.ஏ., எல்.டி.]

## பழமொழி - இலக்கணம் தமவும் பிறவும்

தமிழ்மொழியில் பழமொழிகள் ஒப்பதும் மிக்கது மில்லா வகையில பண்டே தமிழகத்தில் பண்பட்டிலங்கின என்பதற்கு நற்றமிழர் பண்பாட்டினை அங்கை நெல்லி யெனப் புலப்படுத்தும் தொல்காப்பியமே அமையுஞ் சான்று. ஒல்காப் பெருமபுகழ்த தொல்காப்பியனார் ஈடு மெடுப்புமில்லாத் தம் நூலில் பொருளதிகாரத்துச் செய்யு ளியல் எழுபதொன்பதாவது நூற்பாவில்,

> " பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
> யங்கத முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்
> வண்புகழ் மூவா தண்பொழில் வரைப்பில்
> நாற்பெய ரெல்லை யகத்தவா வழங்கும்
> யாப்பின் வழிய தென்மனார் புலவர்."
>
> (தொல். பொ. செய் : எக)

எனக்கூறும் ஏழினுள் 'முதுசொல்' என்பது பழமொழி யைக் குறிக்கும என்பதை நுண்மாண் நுழைபுலமிக்க தமிழர் நன்கு அறிவர். தொலகாப்பியா அங்ஙனம் முது சொல்லை அலலது பழமொழியைச் சுட்டியதோடு அமைந் தார் அல்லா. அதற்கு இலக்கணததையும அன்றே வகுத் தும் தொகுததும் உரைததார்.

> " நுண்மையுஞ் சுருக்கமு மொளியு முடைமையும்
> எண்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக்
> குறிதத பொருளை முடித்தற்கு வரூஉம்
> ஏது நுதலிய முதுமொழி யென்ப."
>
> (தொல். பொ. செய் : கஎஎ)

என்றதினானே பழமொழி பல இயல்புகளைத் தன்னகத்தே அடக்கி மிளிர்தல் வேண்டும் என்பது புலனாம். அவர் கருத்தின்படி பழமொழி கூர்மையோடு நுட்பதிட்பம் உடையதாய் முதற்கண் இலங்குதல் வேண்டும். அடுத்து அது சொற்சுருக்கத்தில் பொருள் பெருக்கத்தைச் சுட்டுவதாய்ச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தல் நன்று. மற்றும் அது விழுமியதாய் எளிதாக இயற்றப்பெற்றுக் குறித்த பொருளொன்றினை முடித்தற்குக் காரணமாய், கருவியாய் அமைதல் வேண்டும் என்பர்.

ஐயாயிரம் ஆண்டுகட்குமுன் தொல்காப்பியர் பழமொழிக்குச் செய்யுளில் வகுத்த இவ்விலக்கணங்களையே இஞ்ஞான்று மேலைநாட்டு மேதக்கோர் பல்பட உரைநடையில் விரித்துரைப்பர். டப்ளின் தலைமை மதகுருவாக இராநின்ற ஆர். ஸி. டிரெஞ்சு[1] 'பழமொழிகளும் அவைகளின் படிப்பினைகளும்'[2] என்ற தம் புத்தகத்தில் பழமொழிக்குச் சில இலக்கணங்களை விதந்தோதுவார். பழமொழி ஒரு மூச்சில் சொல்லக்கூடிய அளவினதாய், சுருங்கிய சொற்களால் ஆக்கப்படுதல் இன்றியமையாதது.[3] இரண்டாவதாக அது செம்பொருள் பயப்பதாய், நற்பொருள் விரிப்பதாய், ஒரு பேருண்மையை உட்கிடக்கையாய், பொருட்செறிவுடன்கொண்டு இலங்குதல் நன்று.[4] மூன்றாவதாகப் பழமொழி நனிகூர்மையுடைத்தாய், வெகு காரமுடைத்தாய், நுட்பம் அமைந்து பிறந்தஞான்றே இறந்ததிலதாய், உப்பிட்ட பண்டம்போல் கேடிலதாய் என்றும் நின்று நிலவும் பான்மைத்தாதல் வேண்டும்.[5] இம்மூன்றையும்

---

1. R. C. Trench—Arch-Bishop of Dublin

2. "Proverbs and their Lessons."

3. "It must be succinct utterable in a breath. Brevity, the soul of wit, will be eminently the soul of a proverb's wit."

4. "It must have good sense."

5. "It must have salt, that is besides its good sense, it must in its manner, and outward form, be pointed and pungent."

ஒரு பழமொழிக்கு இன்றியமையாத இயல்பு அஃது உலகிடை மக்களால் நன்கு ஏற்றுக்கொள்ளப்பெற்று, விரும்பப்பெற்று, அன்றாட வாழ்க்கையில் உண்மையென எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுப் பயன்படுத்தப்படுதல் வேண்டும்.[1] தொகுத்துக் கூறின் பழமொழி சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைப் பயந்து, வடித்தெடுத்த தூய ஞானக்கட்டியாக, அறிவுத்திரளாக விளங்குதல் வேண்டும்.[2]

## பிற நாட்டுப் பழமொழிகள்

பழமொழிகள் ஆன்றவிந்தடங்கிய சான்றோர்களின் அனுபவமொழிகள்; நன்னெறிக்கு மக்களைச் செலுத்துபவை. அவை ஒரு தேயத்தார்க்கோ, அல்லது ஒரு சமயத்தார்க்கோ, அல்லது ஒரு மொழியினருக்கோ உரியவையல்ல. பழமொழிகள் உலகமெங்கணும் காணப்படுபவை. அவை எல்லா மதத் தலைவர்களாலும் எடுத்து ஓதப்பெற்றவை, ஆழ்ந்தகன்ற சிந்தனையாளர்களாலும், செஞ்சொலின்பம் தரவல்ல உயர் கவிஞர்களாலும், இலக்கிய அறிவாளிகளாலும், ஐயந்திரிபில்லாப் பொய்கண்டகன்ற மெய்ஞ்ஞானிகளாலும் சொல்லோவியம் தீட்டவல்ல பெரிய எழுத்தாளர்களாலும், உள்ளக்கனலை எழுப்பவல்ல உணர்ச்சி மிகுந்த பேச்சாளர்களாலும் பயன்படுத்தப்பட்டவை. ஏசுநாதர் தம் குழுவிலுள்ள நற்சீடர்களுக்குப் பழமொழிகள் வாயிலாகவே அறவுரை பகர்ந்திருக்கின்றார். மருத்துவனே உன்னை முதலில் குணப்படுத்திக்கொள்[3] என அறிவுரை கூறுவார் ஓரிடத்தில்; ஒரு தீர்க்கதரிசிக்குத் தன் தேயமல்லாமல் மற்றைய தேசங்களில் மதிப்பில்லாம

---

1 "The most essential of all, is its popularity, acceptance and adoption on the part of the people .. .. ..It must gain recognition and currency in the multitude.

2. "A proverb is a brief pointed saying. It must be concise, cut down, that is, to the fewest possible words condensed, quintessential wisdom."

3. "Physician, heal thyself."

லில்லை[1] என்பார் மற்றோரிடத்தில். ஒருவன் விதைக்கப் பிறனொருவன் அறுக்க[2] என மொழிவார் பிறிதோரிடத்தில்.

உலக நாடகக் கவியாம் செகப்பிரியரும் தம் நாடகங்களில் முதுமொழிகளைப் பயன்படுத்தாமல் இருந்தாரில்லை. வெனிஸ் நகர வணிகன்[3] என்ற நாடகத்தில் 'வெளுத்த தெல்லாம் பாலாமோ' என்பதற்கிணைந்த பழமொழி ஒன்றைப்[4] புகுத்தியிருக்கிறார். விரும்பிய வண்ணமே என்ற நாடகத்தில்[5] 'எல்லாம் (கேடுகளும்) நன்மைக்கே' என்ற கருத்தமைந்த ஒரு முதுமொழியை[6] வைப்பிடமறிந்து வைத்திருக்கிறார். 'பொன்னைவிட அழகும் களவு செய்ய ஒருவனை விரைவில் தூண்டும்'[7] என்று அந்த நாடகத்திலே இவ்வுண்மையையும் கூறியிருக்கின்றார். அன்றியும் அவரின் நாடகத் தலையங்கங்கள்[8] சில பழமொழிகள் போன்றே காணப்படுவன.[9] அவைகளை உற்று நோக்குங்கள். அரிஸ்டாட்டில், சாலமென் முதலியோர்களையும் பழமொழிப் பித்தர்கள் என்பார்கள்.

ஆங்கிலத்தில் பழமொழிகள் நனி உண்டு; பிரான்ஸில் சாலவும் உண்டு; இத்தாலியிலும் மிகுதியாக உண்டு; அமெரிக்காவிலும் வெகுவாக உண்டு. கீழ் வருபவை

1. "A prophet is not without honour but in his own country."

2. One soweth, another reapeth.

3. The Merchant of Venice.

4. All that glitters is not gold

5. As you like it.

6. Sweet are the uses of adversity.

7. Beauty provoketh thieves sooner than gold.

8. Titles.

9. 'As we like it', 'Measure for Measure', 'Much Ado About nothing', 'All's well that ends well', 'Twelfth night or what you will.'

ஆங்கில நாட்டில் பழக்கத்தில் பயின்று வருபவை; படித்து இன்புறுங்கள்.[1]

அடியிற் காண்பவை பிறநாட்டுப் பழமொழிகள் [2]

---

1 A friend in need is a friend indeed.
A good beginning is half the battle.
Appearances are deceptive.
Cleanliness is next to Godliness.
Forbidden fruit is the sweetest.
Honesty is the best policy
Look before you leap.
Marry in haste, repent at leisure.
Pride goeth before a fall.
Silent men, like still waters, are deep and dangerous.
Rolling stone gathers no moss.
Time and tide wait for no much.

2. Everyman at forty is a cool or a physicial—Scottish.
Whom God teaches not, man cannot—Welsh.
Marriage is a supreme blunder that all married people commit—American.
There is no knowledge so dangerous as half knowledge —American.
Man's chief wisdom consists in being sensible of his follies—French.
Virtues are often vice disguised—French.
No man is a hero to his valet—German.
Virtue, Though clothes in a beggar's garb, commands respect—German.
The love of money is the parent of all wickedness—Greek.
Better be the bird of the wood, than bird of the Cage —Italian
Everyman is the architect of his own fortune—Latin.
When money speaks, truth keeps silent—Russian.

## பழமொழிகள் சங்ககால இலக்கியத்தில்

இதுகாறும் பிறநாட்டுப் பழமொழிகளின் தன்மைகளைக் கண்டோம். இனி, தமிழகததில் தொன்றுதொட்டு நின்றுலாவிய முதுமொழிகளை ஒருவாறு காண்போம். பழமொழிகளை இலக்கியங்களில் வைப்பிட் மறிந்துவைத்து இறும்பூதெய்தும பேராற்றல் தமிழ்ப்புலவர்களது பிறப்புரிமை என்றே கூறுதல் பொருந்தும் சங்ககால முன்னாள் இலக்கியங்களே ஆயினும் ஆகுக, இந்நாள் இலக்கியங்களே ஆயினும் ஆகுக; அகபபொருளே ஆயினும் ஆகுக; புறப்பொருளே ஆயினும் ஆகுக; ஒழுக்கக் களஞ்சிய நூல்களே ஆயினும சரி, சமய இலக்கியங்களே ஆயினும் சரி; பெருங்காப்பியமே ஆயினும சரி; சிறுகாப்பியமே ஆயினும் சரி; நாடக இலக்கியங்களே ஆயினும் சரி; இசைப்பனுவல்களே ஆயினும் சரி; எந்நூல்களிலும் பழமொழிகள பயின்றிருத்தல் தமிழ்வாணர்களின் உயரிய பண்பாட்டைத் தெரிவிப்பதாகும், கற்றோர்க்கும் மற்றோர்க்கும் கழிபேருவகை அளிப்பதுமாகும். நாடோடி நாட்டுப் பழமொழிகள் இவ்விலக்கியங்களில் உள்புகுந்து உயிர் போல் ஊடுருவிநிற்றல் அங்கை நெல்லியாம். இவ்வுண்மையை வலியுறுதத முதற்கண் குறுந்தொகையிலிருந்து சில சான்றுகள் தருவாம்.

'அளவுக்கு மிஞ்சினல் அமுதமும் நஞ்சு' 'பழகப் பழகப் பாலும் புளிக்கும்'[1] என்ற இவவிரண்டும தமிழகத்தெங்கணும் சொல்லப்படும நாடோடிப் பழமொழிகள். இப்பழமொழியின் நுண்கருத்துக்களை வியததகு முறையில் பரத்தையிற்பிரிந்து வாயில் வேண்டிச்சென்ற தலைமகனை நோக்கித் தலைவிமாட்டுக் கெழுமிய அன்புபூண்ட விழுமிய தோழி, வாயில்மறுக்கும் துறையில் வைத்துக்கூறும் திறனை ஆய்மின். உலகு நீர இன்றி அமையாது. வெள்ளநீர் பள்ளம்பார்த்துத் தண்ணென்று, புவியினுக் கணியாய், ஆன்றபொருள் தந்து ஓடும. அந்நீரில் படியவிரும்பாதார் எவருமிரார். விரும்பி ஆடியநீர் இனிதேயாயினும் அள

1. Familiarity breeds contempt.

விற்குமிஞ்சி அதில் மூழ்கில் கண் சிவப்புறும்; உடம்பிற்கு ஊறு உண்டாம். இனிதேயாயினும் மிக்குழி வெறுப் படையச்செய்யும். தேன் இனிப்புடைய பொருள்தான். எனினும் இடைவிடாது பல்கால் உணின், உண்டார்க்கு அஃது வெறுப்பைக்கொடுக்கும். முன்நனிசுவை பயந்ததாய் இருந்த தேன் நாவிற்குப் புளிப்பை உண்டுபண்ணும். யாங்கள் நமக்கு முன் இனிய இன்பப் பொருள்களாகத் தோன்றினோம். பின் நமமோடு பல்கால் கலந்து பழகி னோம். எனவே நமக்கு விருப்புடைப் பொருளகளாகத் தோன்றிய யாங்கள், இப்பொழுது பழக்கமிகுதியால் வெறுப்புடைப் பொருளாக ஆயினோம். எங்களை எங்கள் தந்தையர் இல்லத்திற்குக் கொண்டுசெல்வீராக என்ற கருத்துக்களமைந்த,

> "நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்
> ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்
> தணநதனை யாயினெம் மில்லுய்த்துக் கொடுமோ."
>
> (குறு: ௩௫௪)

என்ற இச்செய்யுளின நயததையும, கயத்தூர்கிழான் எனும் இப்பாட்டின் ஆசிரியா முன காட்டிய இருபழமொழி களைப் புகுத்திய திறனையும நன்கு ஓர்க.

'அரண்டவன் கண்ணுக்கு மருண்டதெல்லாம் பேய்' என்பது தமிழ்நாட்டில மககளிடையே வழங்கிவரும் அனு பவப் பழமொழி. பேய் நிறததால் இருண்டிருக்கும் என்பர். ஒருநாள பேயைக்கண்டு அஞ்சி ஓடிய ஒருவனுக்கு அப்பேயுரு நெஞ்சில் பதிந்திருககும்; அவ்வுருவை மனதில் வைத்திருககும் காரணத்தால் ஒரோவழி தனி வழி இருட் டில் நடக்கும அவனுக்குச் சேய்மைக்கண் தோன்றும் இருட்டும் பேய்போல காட்சியளிக்கும. மனநிலை கலங்கும்; அங்கம் குலையும். முன்னைய நிகழ்ச்சியும் நினைவும் முன் வந்து நிற்கும. இபபழமொழியின் சீரிய கருத்து குறுந் தொகை 127-ஆம் செய்யுளில்,

"குருகுகோளக் குளித்த கெண்டை யயல
துருகெழு தாமரை வான்முகை வெருஉம்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர
ஒருநின் பாணன் பொய்ய னாக
உள்ள பாண ரெல்லாம்
கள்வர் போல்வர்நீ யகன்றிசி னோர்க்கே."

என்று தலைவன்விடுத்த தூதாகவந்த பாணனை நோக்கித் தோழி கூற்றாகவைத்துக்கூறிய நுட்பத்தைக் கற்று உணர்க. முன்னாளில தலைவனால விடுக்கப்பட்ட ஒரு தூதன் பொய் யுரைதது பொய்யனாயினான். ஆகலின் பின தூதுவனாக வந்த பாணனையும் அததனமையனே எனக்கூறித் தோழி வாயில மறுக்கின்றாள். அங்ஙனம வாயில் மறுக்கும தோழி அவன் ஊரில் அஃறிணைப்பொருளாம் குருகு ஒன்றின் இயல்பைச் சுட்டி இப்பழமொழியின் உண்மையினைப் பசு மரத்தாணி செலுததியாஙகு உளமபுகுததுதல சிந்திக்கற் பாலது. கெண்டைமீன் ஒன்று வெள்ளிய நாரைவாயி னின்றும் வாழ்நாள் இறுதியுறாது நீட்டித்த விதிகாரண மாகத் தப்பி நீரிற்குளிததது. எனினும் அச்சம தீர்ந்திலது. நிகழ்ச்சி சிந்தையில் குடிகொண்டிருந்தது. எனவே வெண் டாமரை முகையினைக் கண்டபோதெல்லாம் அஃது நாரை யெனப்பயந்து ஒளிக்கும என்கின்றார் இதே கருத்தமைந்த இயற்கை நிகழ்ச்சி ஒனறைச் சொல்லோவியமாகத தீட்டிய ஞானசம்பநதரின் திருவெண்காட்டுப் பதிகத்தின் நான்காம் திருநெறித்தமிழையும அகத்திருததி அகமகிழ்க.

"விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் றண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விணட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே."

என்பதே அப்பாசுரமாம.

இங்ஙனே "ஏர் பிடித்தவன் என் செய்வான் பானை பிடித்தவள் பாக்கியம்" என்ற முதுசொல் குறுந்தொகை 295-ஆம செய்யுளில் வைத்தாளப்பட்டிருத்தலைக்கண்டு அப்

பழமொழியின் பேருண்மையைத் தெரிந்துகொள்க. தலைவியைத் திருமணம் செய்துகொள்வதற்கு முன்னர் தலைவனின் செல்வநிலை 'ஒரான் வல்சிச் சீரில் வாழ்க்கை'யாக இருந்தது. திருமகளன்ன அவள் கால்வைத்த பாக்கியத்தாலே அவன்,

"உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயும்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி விழவொடு."

வரும இருந்திக்கிழவன ஆயினன்.

## பழமொழிகள் புராண இதிகாசங்களில்

இதுகாறும் சஙககால நூலொன்றில் பழமொழிகள் பல பயின்றிருத்தலை விளக்கினோம். இனி இடைக்காலப் புராண இலக்கியங்களிலும் இதிகாசங்களிலும் பழமொழிகள் எங்ஙனம் இடம்பெற்றுள்ளன என்பதை ஒருசிறிது ஆராய்வோம் பழமொழிகளை உவமைவாயிலாக வைத்து பொருள்நயம் புலப்படுத்துதல் கமபர் போன்ற பெரிய கவிஞர்கள் தழுவிய சீரிய முறையாகும் தயரதனிடத்து கோசிகன் வநது தானியற்றும் தவவேள்விக்கிடையூறாக வரும் நிருதரை விலக்க,

"நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத் தந்திடுதி."

எனக் கேட்டான். இம்மாற்றம தசரதச்சக்கரவர்த்தி திருச்செவியில் 'புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா லெ' இருந்ததென்றும, அதனால் அவன் 'கண்ணிலான் பெற்றிழந்தானென வுழந்தான்' என்றும கமபர் கூறும இப்பாட்டில் தமிழகப் பழமொழிகள் இரண்டு வைப்பிடமறிநது வைக்கப்பட்டமையை அறிக

பாரதத்தைத் தமிழில் யாத்துத் தந்த வில்லியாரும் பழமொழிகளை ஆங்காங்கு அமைத்துப் படிப்போர்க்கு மனவெழுச்சியை உண்டுபண்ணுவதில் ஒரு சிறிதும் பின் வாங்கியவர் அல்லர்.

"தூதேவிப் பணிந்திரந்து புவிபெற்று
உண்டு இருப்பதற்கே துணிகின்றான்."
(வில்லி. பா. கிருட்டிணன் தூது : கசு)

என்று குமுறியெழுந்த வீமனுக்குக் "குருகுலத்தோர் போரேறே, குறறமது பார்க்குங்கால் சுற்றமில்லை............கண் மலரிற் கைபடாதோ" என்ற பழமொழிகளை எடுத்துக் காட்டியே கனன்று எழும் வீமனை அமைதியுறச் செய்தார் தருமர். அடுத்துத் தனஞ்சயன் கருமருடன் உரையாடினன். கிருஷ்ணன் தூதால் பயனின்று: துரியோதனன் எதனையும் செவி மடுப்பான் அலலன் என்று கூறவந்த காண்டீபன் பல பழமொழிகளையே இடித்துரைக்கும் தன் வாய்ச சொறகளுககு ஆதாரமாகக் கொண்டான்.

"பொன்னுருந் திகிரியினுன் போனலும்
பொறைவேந்தன் புகன்ற வெல்லாம்
சொன்னலுமவன் கேளான் விதிவலியாற்
கெடுமதிகண் தோன்ற தன்றே
எந்நாளு முவர்நிலத்தில் நெல்முளைவித்
திடினும்விளை வெய்தி டாது
பன்னகந் தனக்கமிர்தங் கொடுத்தாலும்
விடமொழியப் பயன்கொ டாதே." (கிரு. தூது: உ௫)

பொய் மகளிர் பலர் கன்னனுக்குத் தாயர் என்று அவன் கொடுத்த ஆடையைப் புனைந்து மாண்டனர். குந்தி தேவி தானே அங்கர் கோமானின் உண்மைத் தாயென்று துகிலை உடுக்க வினவுழிக் கன்னன் 'அடாது செய்தவர் படாது பட்டனர்' எனனும் பழமொழியைக் கொண்டு அத் துகிலின் பெருமையையும் அழிந்த மகளிர்களின் சிறுமையையும் விளக்கினன்.

## பழமொழிகள் திருமுறைகளிலும் திருவருட்பாவிலும்

பழமொழிகள இறையனுபவ மொழிகள். ஆதலின் சிவநேசச் செல்வர்கள திருமுறைகளில பல இடங்களில் அவைகளை வைததுத தங்கள திருப்பாசுரங்களை அணி

பெறச் செய்தனர். மலங்கெடுத்து மனங்கரைக்கும் திரு வாசகத்துள் மணிவாசகர்,

"உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்கும்."

என்றும்,

"இருதலைக் கொள்ளியி னுள்ளெறும்பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண் டாய்."

என்றும்,

"கன்று நரித்தென்ன என்னையுந்தன் கருணையினாற்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான்."

என்றும் மூன்று சீரிய பழஞ்சொற்களை முத்துக்களென ஆங்காங்குப் பதித்துத் திருவாசகத்தைத் தெவிட்டாத தேனாக்கினார். அன்றியும் 'காமஞ் சான்ற ஞானப் பனுவ'லாம திருச்சிற்றம்பலக்கோவையுள்ளும் 'கொல்லன் தெருவில் ஊசி விற்றதுபோல' என்ற முதுசொல்லைப் 'பாணனொடு தலைவி வெகுளுதல்' என்ற துறையில் வைத்துப் புகுத்தியதையும் கற்றுத்தெளிக. பாணன் தூதாகத் தலைவி பால் தலைவனால் அனுப்பப்பட்டான். தலைவனின் பெருமை யைக் கூறிப் பாணன் தலைவியிடத்து வாயில் வேண்டினான். அஞ்ஞான்று தலைவி தலைவனின் அருமபெருங் குண நலத்தை நன்கு அறிந்திருக்கின்ற காரணத்தால் பாணன் அவன் மாட்சியைக் கழறுவது கொல்லன் தெருவில் ஊசி விற்க முயல்வது போன்றது என வெகுண்டுகூறி 'பசுவைத் தின்னும் புலையா' என அவனை இழித்துங் கூறினாள். இப் பழமொழியைத் தன்னகத்தே கொண்டு மிளிரும் பாமணியை ஈண்டுத் தருதும்.

"மைகொண்ட கண்டர் வயல்கொண்ட
தில்லைமல் கூரர்நின்வாய்
மெய்கொண்ட அன்பின ரென்பதென்
வின்னா அருள்பெரியர்

வைகொண்ட பூசிகோல் சேரியின்
விற்றேம்இல் வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற் ருேபுலே
ஆத்தின்னி போந்ததுவே."

தாண்டகவேந்தர் என்று மெய்யடியார்களால் சென்னி மேல் நனிகொள்ளப்படும அப்பர் அடிகளும் இப்பழ மொழிகளைப் பல்லிடங்களில் ஆண்டுள்ளனா. அவர் பல பழமொழிகளைக்கொண்ட ஒரு பதிகத்தையே யாத்துள் ளார். சைவத்தின் பாக்கியபபயனைத் தோன்றிய சேக் கிழார் சுவாமிகள் அப்பர் சுவாமிகளைத் 'திருவேடத்தரசு' எனப் புகழ்வர். அஞ்செழுத்தை நெஞ்சழுத்தித் திரு நீற்றை மெய்யழுததிய சொல்வேந்தராகிய திருநாவுக்கரசர் சைவநல்மரபில் பிறந்தவர் ; தவக்குறைவினல் சமண்பாழி புகுந்தவர் ; திலகவதியாரின் வேண்டுதலினுல் ஈசன் திரு வருள் புரிய மீண்டும் சைவத்தைச் சார்நதவர். அவர் தாம் சைவமாம் சமயமசாரும் ஊழ்பெறுது சமணமதத்தை முதலில் தழுவியதை திருவாரூர்ப்பதிகத்தில்,

"கொய்புலா மலாசசோலைக் குயில்கூவ
மயிலாலு மாரூரரைக்
கையினற் ருெழாதொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வனேனே"

"அன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண்
டருள்செய்த வாரூரர்தம்
முன்பிருககும் விதியின்றி முயல்விட்டுக்
காக்கைபின் போனவாறே."

"அப்போதைக் கப்போது மடியவர்கட்
காரமுதா மாரூரரை
எப்போது நினையாதே யிருட்டறையின்
மலடுகறந் தெய்த்தவாறே"

"மதிதந்த வாரூரில் வாரதேனை
வாய்மடுத்துப் பருகி யுய்யும்
விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க
மின்மினித்தீக் காய்ந்த வாறே."

"அறுத்தானை யாரூரி லம்மானை
யாலால முண்டு கண்டங்
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க
இரும்புகடித் தெய்த்த வாறே."

எனப் பழமொழிகளையே உவமையாகவைத்து உளம் வருந்தியதைக் கற்றோரும் மற்றோரும கற்றின்புறுவது தலையாய கடனும். அப்பா அடிகள் அப்பதிகத்தில் புகுத்தியுள்ள பழமொழிகள் முற்காலததவராலும் பிறகாலததவராலும் பொன்னேபோல் ஏறறுக்கொள்ளப்பட்ட திருந்தியமொழிகளாம். 'கனியிருக்கக் காய் கவர்ந்த கள்வனேனே' என்பது,

"யிய வுளவாக வினனுத கூறல
கனியிருப்பக் காய்கவாந் தற்று." (௧00)

எனும் குறளடிகளின் எதிரொலி எனலாம். நக்கீரதேவ நாயனாரின் கோபப்பிரசாததிலும் இப்பழமொழிகள் சிலவற்றைக் காண்டல்கூடும்.

"பூக்கமழ் சடையனை புண்ணிய நாதனை
இனைய தன்மைய னென்றறி வரியவன்
தனைமுன் விட்டுத் தாமற்று நினைப்போர்ப் மாமுயல்விட்டுக்
காக்கை பின்போங் கலவர் போலவும்
விளக்கங் கிருப்ப மின்மினி கவரு
மளப்பருஞ் சிறப்பி லாதர் போலவும்."

என்பவையே அவை. சேக்கிழார் புராணம் பாடிய உமாபதிசிவம அப்புராணததில் ஓரிடத்தில் இப் பழமொழிகளையெல்லாம் ஒருங்கே எடுததுரைததலை இவண் எடுத்துக் காட்டுவாம. அநபாயன் சிந்தாமணியையே மெய்ந்நூல் எனக்கொண்டு கேட்டு வந்தான். இதனையறிந்த சேக்கிழார் வளவனை நோக்கிச் சிவகதை பல இருக்க அவகதையைக் கேட்டல அழகிதாகாவெனக் கூறுமுகத்தால்,

"கலகமிடும் அமண்முருட்டுக் கையர் பொய்யே
கட்டிநடத் தியசிந்தா மணியை மெய்யென்

றுலகிலுளோர் சிலர்கற்று நெற்குத் துண்ணு
    துமிக்குத்திக் கைவருந்திக் கறவை கிற்க
மலடுகறந் துளர்ந்துளர்ந்து குளிர்பூஞ் சோலை
    வழியிருக்கக் குழியில்விழுந் தளறு பாய்ந்து
விலைதருமென் கரும்பிருக்க இரும்பை மென்று
    விளக்கிருகக மின்மினித்தீக் காய்ந்து நொந்தார்."

என இப்பழமொழிகளை எடுதது ஆட்சி செய்தமை நம்ம னோர்க்கு நல்விருநதாகும.

வாட்டமிலா மாணிக்கவாசகரின் வாசகத்தைத் திரு வருட்பாவில் ஆங்காங்கு கலநது பாடும் திருவருட்பிரகாச வள்ளலாரும் தம் இறை அனுபவக் கருத்துக்களைப் புலப் படுத்தப் பழமொழிகளை உறுதுணையாகக் கொண்டார் என்பதற்குப் பினவருபவை தக்க சான்றுகளாகும்; கண்டு கொள்க.

"ஆற்றி லொருகாலும் அடங்காச சமுசாரச
சேற்றிலொரு காலும் வைத்துத் தேய்கின்றேன்."
(விண்ணப்பக்கலிவெண்பா: ௪0அ)

"சேலுக்கு நேர்விழி மங்கைபங் காவென் சிறுமதிதான்
மேலுக்கு நெஞ்சையுட் காப்பது போனின்று வெவ்விடய
மாலுக்கு வாஙகி வழங்கவுந் தான்சம் மதித்ததுகாண்
பாலுக்குங காவல்வெம் பூனைக்குந் தோழனென் பாரிதுவே."
(திருவருள் முறையீடு ககக)

"மைகொள் மிடற்றீ ரூரொற்றிவைத்தீ
    ருண்டோ மனையென்றேன்
கைக்க ணிறைந்த தனத்தினுங் கண்ணி
    றைந்த கணவனையே
துய்க்கு மடவார் விழைவரெனச் சொல்லும்
    வழக்கீ தறிந்திலையோ."    (இங்கிதமாலை: ௧0உ)

"நின்பாற் சேரிட மறிந்தே சேர்ந்தனன்."

"பழம் நழுவிப் பாலில் விழுவதுபோல்" என்ற ஆப்த மொழியைச் சைவ எல்லப்ப நாவலர் திருவருணைக் கலம்ப கத்தில்,

"விலகரிய கொங்கைமீது பழநழுவிவந்து
பாலின் விழுவதேன வந்து சேர்கிலீர்."

என்று வைத்த அகப்பொருள நயத்தை வேறெந்த மொழியில், எந் நூலில் கண்டோ, காண்பீர, கூறுமின்.

## பழமொழிகள் நாடக இலக்கியங்களில்[1]

இன்னணம் சங்க நூல்களிலும், புராண இதிகாசங்களிலும், வழிபாட்டிலக்கியங்களிலும[2] பழமொழிகளின் ஆட்சியைக் கண்ட நாம் இனி நாடக இலக்கியங்களில் அவை எங்ஙனம் அமைக்கப் பெற்றுள்ளன என்பதை நோக்குவோம். சீகாழி அருணாசலக் கவிராயா அவர்கள் 'இராம நாடகக் கீர்த்த'னங்களை நமக்குக் கருவூலமாக அருளிப் போந்தார்கள். மேலகரம திரிகூடராசபபக் கவிராயர் அவர்கள் 'திருக்குற்றாலக் குறவஞ்சி' நாடகத்தைச் சைவ உலகிற்கு நல்கியுள்ளார்கள். பி. சுந்தரம் பிள்ளை அவர்கள் 'மனோன்மணீயம' எனும் ஒப்பதும் மிக்கதுமில்லா ஒரு தீந்தமிழ் நாடகத்தைத் தமிழருக்கு உரிமையாக்கியுள்ளார்கள்; மாயூரம் வேதநாயகம் பிள்ளையவர்கள் 'சர்வசமய சமரசக் கீர்த்தனங்களை' ஆக்கி அங்குமிங்கும் எஞ்ஞான்றும் தமிழிசையை முழங்க வழங்கியுள்ளார்கள். இவை நீங்கலாகப் பள்ளுகளும பலவுள. இவைகளில் பழமொழிகள் பெருகிககிடக்கின்றன இடமின்மை பற்றி ஒரு சிலவற்றைக் குறிக்கின்றோம்.

இராம நாடகத்தில் வந்துள்ள பழமொழிகள் பலப் பல.

'பெண் என்றால் பேயும் இரஙகுமே.'

'ஊமை கண்ட கனவாக உள்ளடக்கினேனே.'

'தம்பி உடையவன் படைக்கஞ்சான்.'

'வெண்ணெய் திரண்டு வரசசே தாழிஉடைந்தாற்போல.'

'தன் வீட்டு விளக்கென்று முத்தமிடுவாருண்டோ.'

---

1. Dramatic Literature. 2. Devotional Literature.

'நரிவாலைக்கொண்டோ ஆழம் பார்ப்பது.'

'மந்திரத்திலே மாங்காய் விழுமோ.'

'புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமோ.'

குற்றாலக் குறவஞ்சியுள் பயின்றுள்ள பழமொழிகள் இவை :

'கக்கத்தில் இடுக்குவையோ வெட்கத்தை அம்மே.'

'கொடிக்குச சுரைக்காய் கனத்துக் கிடக்குமோ.'

'ஆக்கப் பொறுத்தவர் ஆறப் பொறுரோ.'

'ஆசாரக் கள்வாபோல் நாரை திரியுது.'

'ஆற்றில் போட்டுக் கனகுளத்தில் எடுப்பது.'

மனோன்மணீயத்தில் காணக்கிடக்கும் பழமொழிப் பொன்மணிகளைக் காண்மின் :

'எடுப்பார் கைப்பிள்ளை.'

'பூவையை வளர்த்துப் பூனைக்கு ஈயவோ.'

'நேசமில் வதுவை நாச காரணமே.'

'அங்கைப் புண்ணுக்கு ஆடியும் வேண்டுமோ'

'கள்ளமனந்தான் துள்ளும்.'

'கெட்டார்க்கு உலகில் நட்டார் இல்லை'

வேதநாயகர் தரும் கீர்த்தனப் பழமொழிகளைக் குறிக் கொள்மின் :

'கரும்பு தின்னக் கைக்கூலி ஏனோ.'

'செத்தால் தெரியுமே செட்டியார் வாழ்வு.'

'பணமே உன்னால் என்ன குணமே.'

'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்.'

'அழுதழுதும் பிள்ளை அவளே பெறவேண்டும்.'

'எரிகிற வீட்டில் பிடுங்குவது லாபம்.'

பள்ளுப் பிரபந்தத்தில் வரும் பெறலரும் பழமொழி களை நிரல்படக் கோததறிமின் :

'காலஞ் செய்வது கோலஞ் செய்யுமோ.'

'மீனுக்கு வாலும் பாம்புக்குத் தலையுங்காட்டி.'

'வீணில் மெல்லும் வாயில் அவல் காணின் என் செய்யார்.'

'நாவிலே ஒன்று நெஞ்சிலே ஒன்று.'

இன்னனைய பல

## இரட்டைப் பழமொழிகள்: தமிழிலும் ஆங்கிலத்திலும்

மேலே காட்டிய இவைகளெல்லாம் ஒரு பொருளைக் குறியாகக்கொண்டு எழுநத பழமொழிகள. இவைகளே யன்றித் தமிழிலும் ஆஙகிலததிலும் இருபொருள்களைக் குறிக்கோளாககொண்டு அறவுரை கூறும் இரட்டைப் பழமொழிகளும் பலவுள. முதற்கண் தமிழில் உள்ள அவற்றை ஈணடுக் குறிப்பிடுவாம :

'கூழானாலும் குளிததுக் குடி
கந்தை யாயினும் கசிக்கிக் கட்டு.'

'பாத்திர மறிந்து பிசசை இடு
கோததிர மறிந்து பெண்ணைக் கொடு

'தினையை விதைத்தவன் தினையை அறுப்பான்
வினையை விதைததவன் வினையை அறுப்பான்.'

'அரசன் அன்று கொல்லும்
தெய்வம் நின்று கொல்லும்.'

'கார்த்திகை பின்னே மழையில்லை
கர்ணன் பின்னே கொடையில்லை.'

'பெற்ற மனம் பித்து
பிள்ளை மனம் கல்லு.'

இதேபோல் ஆங்கில இரட்டைப் பழமொழிகள் வருவதும் காண்க.[1]

### ஒரு பழமொழியின் வரலாறு:

'கைக்கெட்டியது வாய்க்கு எட்டவில்லை' என்ற பழமொழி நம் தாய்நாட்டில் வழக்கில் இலங்குவதுபோன்று கிரேக்க நாட்டிலும் பேச்சுவழக்கில் இருந்தது. ஆனால், அது ஒரு வரலாற்றின் அடிப்படையில் எழுந்ததாகத் தெரியவருகின்றது. ஒரு செல்வந்தன் பல திராட்சைத் தோட்டங்களுக்கு உரியவனாக இருந்தான். அவனிடத்தில் பணியாளர்கள் பலர். அவர்களைக் கொடுமையாக நடத்தினான். மிகவும் கொடுமையாக நடத்தப்பட்ட ஒருவன் செல்வந்தனைப் பார்த்து, நீங்கள் திராட்சைப் பழச்சாற்றை அருந்த இயலாது இறப்பீர்கள் என்று சூளுரை பகர்ந்தான். சிலநாட்கள் சென்றன. திராட்சைகள் கனிகளாயின. செல்வந்தன் திராட்சைச் சாற்றை ஒரு ஏனத்தில் வைத்துக்கொண்டு முன் வஞ்சினம் கூறிய பணியாளனைக் கூவி, 'இம்மது அருந்தும்பேறு எனக்கு வாய்க்காது என்று உறுதிமொழி கூறினையே இப்பொழுது என்ன சொல்வாய்' என்று மதுநிறைந்த கோப்பையைக் கையில் ஏந்தினான். அத்தருணத்தில் மற்றொரு பணியாளன் திராட்சைத் தோட்டங்களை எல்லாம் பன்றிகள் அழிக்கின்றன என்று உதவிக்குரலை எழுப்பினான். செல்வந்தன் கையில் அருந்த ஏந்திய மதுக்கிண்ணத்தைக் கீழேவைத்துவிட்டு இடர்தீர்ப்பான் ஓடி இடர்ப்பட்டான்; பன்றிகள் அவனைக் கொன்றன. எனவே கைக்கெட்டிய மது அவன் வாய்க்கு எட்டவில்லை.[2]

---

1. Speech is silver, silence is golden.
   To err is human, to forgive is divine.
   Love is potent; money is omnipotent.
   Men proposes; God disposes.
   No cross; no crown.
   Full of courtesy; full of craft.
   Far from Court; far from care.
   Out of sight; out of mind.
2. There is many a slip between the cup and the lip.

## தமிழ் நூல்களுக்குரிய சில பழமொழிகள்

தமிழில் இறவாநிலை பெற்றுள்ள நூல்கள் சில. அவை களின் பெருமைகளைத் தமிழ்ப்புலவர்கள் பழமொழிகள் கொண்டே அழைக்கலாயினர.

'பழகு தமிழ்ச சொல்லருமை நாலிரண்டில்.'

'ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலு மிரண்டும் சொல்லுக் குறுதி.'

'கல்லாடம் படிததவனிடத்தில் மல்லாடாதே அல்லது
சொல்லாடாதே.'

'திருவாசகததிற்கு உருகாதாா ஒருவாசகத்திற்கும் உருகார்.'

'முக்கூடற் பள்ளைப்போல் ஒரு பள்ளும், குற்றாலக் குறவஞ்சியைப்போல ஒரு குறவஞசியும், வருணகுலாதித் தன் மடலைப்போல் ஒருமடலும இல்லை' எனப்படுபவை மேற்கூறிய கூற்றிற்கு அமையும் சான்றுகள்.

## தமிழிற்கே உரிய இரு பழமொழி நூல்கள்

கடைச்சங்க மருவிய நூல்கள் தொகை எனவும், பாட்டெனவும், கணககெனவும முததிறபபடுவன. அவை எண்வகையால எட்டெனவும், பததெனவும, பதினெண் எனவும குறிக்கபபெற்றுளளன இறுதியிலுளள பதி னெண்கீழ்ககணக்கில அடங்குவது "பழமொழி நானூறு." இஃது நானுற்பது, ஐநதிணை ஐமபது, திணைமொழி ஐமபது, ஐநதிணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது போனற ஒரு எண் நூல. இநநூல தமிழ்மொழிக்கே ஒரு அணிகலனுகக் குன்றென ஓஙகி நிறபது. உலகிறறேன்றிய மொழிகளில எமமொழியிலும பழமொழிககென்று ஒரு தனிநூல இருநததாகக கண்டதுமிலலை; கேட்டதுமில்லை. தமிழ்மொழி ஒன்றில்தான பழமொழிக்கென்று இரு நூல்கள் காணக்கிடககின்றன. ஒன்று 'பழமொழி நானூறு' மற்றொன்று 'பழமொழி விளக்கம்' எனும தண்டலையார் சதகம். முன்னையது முன்றுறையரையனுர் என்ற சமண் சமயஞ்

சார்ந்த பாண்டிய மன்னனால் ஆக்கப்பெற்றது; பின்னையது படிக்காசுப் புலவரால் பாடப்பெற்றதென்பர். பழமொழி நானூறு வெண்பாக்கொண்டிலங்குவது; பழமொழி விளக்கம் நூறு பாக்களைக்கொண்டு எளிதில விளங்குவது. ஒவ்வொரு வெண்பாவின் இறுதியிலும் ஒரு பழமொழி நிற்பது போலத் தண்டலையார் சதகத்தின் ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் ஒரு நாடோடிப் பழமொழி வருதல் கண்கூடு. சதகத்தில் வரூஉம பழமொழிகளில் சில கீழ்வருவன :

'மழைவிட்டுந் தூவானம் விட்டதில்லை.'

'துறவிககு வேந்தன் துரும்பு தானே.'

'பொறுத்தவரே அரசாள்வர் ; பொங்கினவா
காடாளப் போவர் தாமே.'

'அற்பருககு வாழ்வுவந்தா லர்த்தராத்
திரிகுடை மேலாகுந தானே.'

'பன்றிபல வீன்றுமென்ன குஞ்சரமொன்
றீன்றதனாற் பயனுணடாமே.'

ஆனால் இந்நூற்குப் பழமொழி நானூற்றிற்கு இருக்கும் தனிச்சிறப்பியல்புகள் கிடையா.

## பழமொழி நானூற்றின் சிறப்பியல்புகள்

பழமொழி நானூற்றில் ஒவ்வொரு வெண்பாவும் ஒரே நெறியில் செலலும் தகைமைதது. ஆசிரியர் முதலிரண்டடிகளில் தாம் கூறுவான் எடுத்துக்கொண்ட செம்பொருளை இரல்படக் கூறுவார் மூன்றுமடி பெரும்பாலும் ஆடூஉ முன்னிலையாதல் சிறுபான்மை மகடூஉ முன்னிலையாதல் பற்றி நடைபெறுவது. நான்காமடி ஒரு பழமொழியைக் கொண்டு மிளிர்வது. பழமொழிகள நாடோடிப் பழமொழிகள் போன்றவை அல்ல. எல்லாம் இலக்கியப் பழமொழிகளே. அவை எதுகை, மோனை முதலியனபற்றித் திரிந்தும் மாறியும் காணபபடுவன. சில அக்காலத்திற்கே உரியன. சில இக்காலக கருத்துக்களுக்கு ஒவ்வாதனவாகவும் புலப்

படுவன. இப்பழமொழி நானூற்றில் திருக்குறளின் விழுப் பொருள்களும் நாலடியாரின் சீரிய கருத்துக்களும் காணப் படுதலின், இஃது அவ்விரண்டிற்கும் பின் தோன்றிய நூல் என்பதுபோதரும். அன்றியும் பழமொழி நானூற்றில் சங்ககால இரவலர் புரவலர் வரலாறுகளும், சேர, சோழ, பாண்டிய மன்னர்களைபபற்றிய குறிபபுகளும், புராண இதிகாசங்களின உட்கிடக்கைகளும் ஒருங்கே பொறிக்கப் படுதலின் பண்டைத் தமிழரின் பண்பாடுகளைக் கண்ணாடி யென எடுததுக்காட்டுதற்கு இஃதே சாலச்சிறந்த பண்டை நூல் எனக் கோடல் சாலும்.

## சில பழமொழிகளுக்கு விளக்க உரை

நானூறு பழமொழிகளில் 'நாய் காணின் கற்காணு வாறு' எனபதும ஒனறு. இபபழமொழி அரியபொருளைத் தன்பால் அடக்கியுளளது. ஆசிரியா ஒருவன், 'யாம் இளையம்' என்று எண்ணாது கைத்துண்டாம்போழ்தே கரவாது அறஞ்செய்தலவேண்டும என்று அறநெறி கூறு கின்றார். செயற்பாலதைப பின்செய்வோம் எனக் காலங் கடத்தினால் மூப்பெய்தும், மூப்பெய்தின் நோய் வந்துறும். நோய் வநதுற்றக்கால் அறஞ்செய்தல் ஒண்ணாது சிந்தனை அறததில் நிற்கும், நோய் அதுசெய்தற்குத் தடையாய் நிற்கும். அநநிலை நாயைக்கண்டபொழுது அதை ஓட்டக் கல்லைத தேடுஙகால் கல்லில்லாத தன்மையை ஒக்குமென்பர்.

"நாயைக் கண்டால் கல்லைக் காணோம்
கல்லைக் கண்டால் நாயைக் காணோம்."

என்ற சிறுவா வாய்ச்சொல்லைப் பின்பற்றி,

"மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை
ஆய்வின்றிச செய்யாதார் பின்னை வழிநினைந்து
நோய்காண் பொழுதின் அறஞ்செய்வார்க் காணுமை
நாய்காணின் கற்காணு வாறு."

என்ற இப்பழமொழி எழுந்தது.

கிற்க, இவ் வுலகியலகருததினைப்பாரார் பதார்த்தம் பாராது பரமேபார்ததிருககும பரனன்பர்கள். அன்னவர் இப்பழமொழியை அடிப்படையாகக்கொண்டு சித்தாந்த நுண்பொருளை விரிததுரைப்பர். கலைவல்ல சிற்பி கல்லில் நாயைச் செதுக்கினுன். நாய் கலலில் கவினுற உருப் பெற்றது. அவன் கல்லென்று எண்ணுஙகால் அஃது சிறந்த கல்லாகத்தானே காட்சியளித்தது. வடிவுடை நாயின் திருவுருவை உள்ளுஙகால் அஃது நாயெனவே தோன் றிற்று. கல்லாக நினைப்புழி நாய் இல்லை; நாயைக் கல்லில் கண்டுழி கல் என்ற எண்ணம் மறைநதது இக்கருததுக் கனை உள்ளிட்ட இரு பாடல்கள் திருமந்திரததிலுள்ளன. ஒன்று பொன்னையும ஆபரணததையும் பற்றியது, மற் ருென்று மரததையும் யானையையும் பறறியது பொன்னை எண்ணுங்கால் ஆபரணம மறையும், ஆபரணத்தை நினைக் குங்கால் பொன் என்ற நினைவு குன்றும். மரத்தில் செய் யப்பட்டது யானை. யானையைச் சிநதிக்குங்கால் மரம் என்ற கருத்து மனததைவிட்டகலும; மரம் என்று கருதுங்கால் யானை உரு மறையும.

‘பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்’

‘மரத்தை மறைத்தது மாமத யானை
மரததின் மறைநதது மாமத யானை.’

என்ற இவ்வடிகளே அக்கருத்துக்களை உணர்த்தும் திரு மந்திரங்கள், ஓர்ந்து இன்புறுமின்.

‘இடையன எறிந்த மரம’ என்பது நாடோடிப் பழ மொழியலல. அஃது ஓர் இலக்கியப் பழமொழி. மூன் றுறையரையர் இதனை வைததுத தீயவொழுக்கம் ஒன்றைக் கண்டிக்கின்ருர். புல்லர் சிலர் நட்டார்க்குப பொருளுடை யார்போல் உறறுழி உதவ உடன்படுவர்; உடன்பட்டதைக் கண்டு பொருளற்ருர் பூப்பா. ஆனல பின் உதவிக்கு ஏற்ற காலம் வந்தக்கால அவர் செய்யமாட்டாமைகண்டு அவரை வெறுப்பர். கீழ்வீழ்த்திய மரத்தின் தளிர்த்துள்ள பகுதி

களை ஆடுமாடுகள் விருப்பொடு மேயும். ஒன்று, மிலா மரத்தின் மற்றொரு பகுதியைக்கண்டு அவை வெறுத்து நிற்கும். இடையன் வெட்டியமரம ஒருபுறம வாடி ஒருபுறம் தளிர்த்திருக்கும. தளிர்தத இலைகளை ஆடுமாடுகள தின்று இன்புறும; வாடியபகுதியில ஒன்றுமில்லாதது கண்டு அவை துன்புறும. உதவிசெய்யபபெறுவோம என்று எண்ணுங்கால் இன்பமாம், உதவிசெய்ய இசைநதவன் அதைச் செய்யாக்கால துன்பமாம. இக்கருததுக்களையே அரசப் புலவா,

"அடையப் பயின்றாசொல் ஆற்றுவராக் கேட்டால்
உடையதொன் றல்லாமை யொட்டின்—படைபெற
றடைய அமர்ததகண் பைந்தொடி அஃதால்
இடைய னெறிந்த மரம்."

என உளளுறைப பொருளாக வைத்து ஓதினர். இவ் விலக்கியப் பழமொழி,

"கெடலருங் குரைய கொற்றம் கெடப்பிறந் ததுவுமன்றி
நடலையுள் அடிகள்வைக நட்புடை யவர்கள் நைய
இடைமகன் கொன்ற இன்ன மரத்தினேன்தந்த துன்பக்
கடலகத் தழுந்த வேண்டா கலைகஇக கவலை யென்றான்."

என்று சீவகசிந்தாமணி விமலையாா இலம்பகத்தும்,

"படைநின்ற பைந்தா மறையோ மணிநீலம்
மடைநின் றலரும் வயலாலி மணாளா
இடைய னெறிந்த மரமேயொத் திராமே
அடைய வருளா யெனக்குன்ற னருளே."

என்று பெரிய திருமொழியிலும் ஏறப்பெற்றிருத்தலை அறிக.

'நுணலும் தன் வாயால் கெடும' எனும் முதுசொல் அடுத்து உணரறபாறறு மணலில் கரந்துறையும தவளை யும் தன் வாயால் கெடும் என்பது இதன் மேற்பொருள. தனக்குததானே துன்பத்தைத தவளை தன் ஒலியால உண்டுபண்ணுவதைப்போல பேதை ஒருவன் வாளா

இராது தன் வாய்ச்சொல்லால் தனக்குத்தானே தீங்கை இழைத்துக்கொள்வான் என்பது இதன் உள்ளுறை பொருளாம. ஒருவன அறிவிலனாக இருத்தலினால் யாண்டும் குற்றமின்று. அவன் நாவடக்கம் உடையவனாகப் புறங்கூறாதிருப்பின் தீயதில்லானாகி நன்றுடையவனாக மக்களுள் மாணிக்கமாகத துலங்குவான்; இன்றேல் மாய்ந்தொழிவான்.

> "யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
> சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" (குறள்: கஉஎ)

என்ற திருக்குறட் கருத்து.

> "பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
> சொல்லாலே தன்னைத் துயர்படுக்கும்—நல்லாய்
> மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்
> நுணலுந்தன் வாயால் கெடும்."

என்ற பழஞ்சொல்லில் பயின்றிருத்தல் குறிக்கொளற்பாற்று. வலையில் அகப்படாப் புட்களை மரக்கிளையில் ஒட்டும் பொருளைத் தடவி அவைகளின் தாள்களைத் தளைப்படுத்தி அகப்படுத்துவார் வேடுவர்கள்.

> "சிக்காப்புள்
> ஒட்டுக்குளாவது போலுள்ள பணக்காரர்களென்
> பொட்டுக்குளாக வென்று பொட்டிட்டாள்"

என்ற விறலிவிடு தூது இக்கருத்தை விளக்குமாறு காண்க. மற்றும் இதனையே ஓர் [1]ஆங்கில உரைநடையும் வலியுறுத்தும்

தமிழகத்தில் சிறு மகாரிடத்தும், பெருமகளிரிடத்தும், ஆடவரிடத்தும இன்றும பேசப்படும் பழமொழி 'கொல்லன் தெருவில் ஊசிவிற்றாற் போல' அல்லது 'கொச்சியில் சென்று மிளகு விற்றாற்போல' எனும் பழ

---

1. Birds are entangled by their feet and men by their tongues.

மொழியாம். இச் செஞ்சொல் வெவ்வேறு தேயத்தில் வெவ்வேறு வகையில் பேசப்படும் என்பர். நியுகேஸிலில் கொண்டுபோய் நிலக்கரியை விற்க முயல்வதுபோல்[1] என்றும், ஆதென்ஸில் ஆந்தையை விற்க[2] விரும்பியது போல் என்றும், எகிப்தில மாயவித்தையைக் காட்ட ஆசைப்பட்டதுபோல்[3] என்றும், பாவமன்னிப்புச் சீட்டை ரோமாபுரியில விற்க வேணவாக்கொண்டது[4] போல் என்றும் இங்ஙனே அப்பழமொழி பலவாற்றானும நவிலப் படும் மல்கிக் கிடக்கும ஒருபொருளை அவ்விடத்திலேயே விற்க முயலவது அறிவின்மை என்பதை விளக்கவந்தவை இப பொன்மொழிகளாம்.

பழமொழியாசிரியரும இக் கருத்துக்களோடும் ஒத்த கருத்தொன்றைப் பழமொழியாகபபாட்டின் இறுதியில் வைத்து மொழிகின்றார். ஆற்றவும் கற்றார்முன் கற்றறி வில்லாச் சிதடன் தன் புலலறிவாண்மையாலும, பகைமை யாலும் பேச வாய்திறததல், பாட்டுப் பாடுவதில் போராற்றல் படைத்த பாணர் நடுவண் இசை நலமறியா அறிவிலி ஒருவன் பாட வாய்திறந்ததோடு ஒக்கும என்பதாம். இதனை மயலற உணர,

> "அகல முடைய அறிவுடையாா நாப்பண்
> புகலரியார் புக்கவர் தாமே—இகலினால்
> வீண்சேர்ந்த புன்சொல் விளம்பல் அதுவன்றே
> பாண்சேரிப் பற்கிளக்கு மாறு."

என்ற பழமொழிச் செய்யுளோடு,

> "கல்லாது நீண்ட வொருவ னுலகத்து
> நல்லறி வாள ரிடைபுகு—மெல்ல
> இருப்பினு நாயி ருந்தற்றே யிராஅ
> துரைப்பினு நாய்குரைத் தற்று."

என்ற நாலடிச் செய்யுளோடு ஒப்பிடுக.

---

1. Carrying coals to Newcastle.
2. Owls to Athens. 3. Enchantment to Egypt.
4. Indulgences to Rome.

'கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துக் கொக்கைப் பிடிப்பது போல்' என்ற பழஞ்சொல் பேச்சுவழக்கில் இன்றும் தமிழ்நாட்டில் காணப்படுவதொன்று. இப்பழமொழியை 'வெண்ணெய் மேல்வைத்து மயில்கொள்ளு மாறு' என்று திரித்துப் பயன்படுத்துகின்றார் பழமொழி ஆசிரியர். ஒருவன் 'திரைகடலோடியும் திரவியம் தேடுதல்' வேண்டும். அங்ஙனம் ஈட்டிய குன்றனைய செல்வத்தைக் காத்தலும் ஆங்கே கடுந்துன்பம். நன்றீட்டிய ஒண்பொருளைக் காவல் செய்யாது முயற்சி இன்மையால் கைநழுவப் பெறலரும் நிதியை மீண்டும் பெற ஒருவன் வழிகளை ஆராய்தல், மயிலின் தலைமீது வைத்திட்ட வெண்ணெய் உருகி அதன் கண்கள் மறைக்கப்பட்டபின் அதனைப் பிடிப்பல் எனச் சொல்லும் மடமையை ஒக்கும் என்பார். முன்றுறையனார் 'கொக்கு' என்பதை 'மயில்' என மாற்றியது அஃது பறவையினத்தைச் சார்ந்தது என்ற குறிப்பாற் போலும்.

> "முன்னை யுடையது காவா திகழ்ந்திருந்து
> பின்னையஃ தாராய்ந்து கொள்குறுதல்—இன்னியல்
> மைத்தடங்கண் மாதராய் அஃதால் வெண்ணெய்மேல்
> வைத்து மயில்கொள்ளு மாறு"

என்பது.

'நாய்க்கு முழுத்தேங்காய் தக்குமா' என்னும் பண்டையோர்சொல் 'நாய்பெற்ற தெங்கம் பழம்' எனப் பழமொழி நானூற்றில் இடம் பெற்றுள்ளது. ஒருவன் பண்ணிய புண்ணியத்தின் பயனாய்ப் பெருந் திருவினைப் பெற்றான். ஆனால் தெளிந்த அறிவினைப் பெற்றானிலன். என்னை? 'திரு வேறு தெள்ளியராதல் வேறு' என்ற காரணத்தால் உருண்டோடும் செல்வம் என்றேனும் ஒருநாள் தன்னை விட்டு ஓடிவிடும் என்றும் அவன் எண்ணினானிலன். பூதம் காத்ததுபோல் செல்வத்தைச் சிக்கெனப் பிடித்து அல்லும் பகலும் காத்துவந்தான். உண்ணான்; ஒளிநிறான்; ஓங்கு புகழ் செய்யான்; கொன்னே பொருள் காத்திருந்தான்.

அன்றியும் செல்வத்துப் பயனே ஈதல் என்பதை மறந்தும் அறிந்தானில்லை. அவன் செல்வம் அவனுக்கும் பயன் பட்டிலது; பிறர்க்கும் பயன் பட்டிலது, நடுவூருள் நச்சு மரம் பழுத்தாற்போல் ஊர் நடுவண் குடியிருந்தான். ஊருணிநீர் நிறைந்தாற்போல் உழையிருந்த சுற்றத்தார்க்கும் ஈந்தானில்லை. அவன் கைச் செல்வம் நாய் கையில் முழுத்தேங்காய் இருந்தது போலாம். நாய்க்குத் தேங்காயால் பயனில்லை; பிறர் அதை தேங்காயை எடுத்துப் பயன் படுத்தவும் விடாது; உடைத்து உண்ணவும் தனக்குத் தெரியாது. உலோபியின் செல்வம் அத்தன்மைத்தே. அதனை உடாஅதும் உண்ணாஅதும் தனது தனது என்று வைத்திருக்கும் ஏழையாகவே இருப்பன. பொருளற்றார்க்கு இலனென்னும் எவ்வம் உரையாது வழங்கவும் உள்ளம் இடந்தரவில்லை. தேங்காயைப்பெற்ற நாயைப்போல் வைத்திழக்கும் வன்கண்ணனாயினன். மிக நலம் பெற்றாள் தமியளாய் அவமே காலத்தைக் கழித்ததுபோல் வாணாட்களை வீணாட்களாக்கினன்.

## பழமொழியில் சங்ககால அரசர் வரலாறுகள்

சீர்காழியை ஆட்சிசெய்த மன்னன் வேந்தன் விண்ணுடெய்தினன். புலமிக்க காட்சியராகிய அமைச்சர்கள் கழுமலத்திலிருந்த பட்டத்து யானையை அனுப்பினர். அவ்வேழம் கருவூரின் கண்ணேயிருந்த கரிகாலனை முதுகின் மேலேற்றி வந்தது. கரிகாலன் மன்னனாக்கப்பெற்றான் என்பது வரலாறு.

> "கழுமலத்தில் யாத்த களிறும் கருவூர்
> விழுமியோன் மேற்சென் றதனால்—விழுமிய
> வேண்டினும் வேண்டாவிடினும், உறற்பால
> தீண்டா விடுதல் அரிது."

என்ற அடிகளால் உணரலாம். பின் கரிகாலன் இரும்பிடர்த்தலையார் என்னும் மாமன் துணைகொண்டு செங்கோலோச்சினன் என்பதையும்,

"சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்
பிடர்த்தலைப் பேரானைப் பெற்ற—கடைக்கால்
செயிரறு செங்கோல் செலீஇயினான் இல்லை
உயிருடையார் எய்தா வினை."

என்ற இப்பழமொழிச் செய்யுள் கூறுகிறது. ஒருகால் கரிகாலன் அவைக்குப பெருவழக்கொன்று வந்தது. இருதிறத்தாரும் தத்தம் குறையைக்கூறி முறை வேண்டினர். வேண்டினோர் கரிகாலனைநோக்குழிப் பாலன் என்று உன்னி இழிவுரை கூறி வெளிப்புக்கனர் கரிகாலன் பிற்றை நாளில் புரையிலா நரைமுடி தாங்கி வழக்கினைக்கேட்டாங்கு ஆய்ந்து நன்முடிவு கூறினான். அவன் சிறுவனே யெனினும் பெரிதும் கற்றிலனே யாயினும் அரசர் வழியில் வந்தோனாகலின் கல்லாமலே நல்ல தீர்ப்புக் கொடுக்க வல்லவனாயினான். இஃது குலவித்தைக் கற்றுப் பாதி, கல்லாமல் பாதி, என்ற பழமொழியிலடங்கும். இதனை 'குலவிச்சை கல்லாமல் பாகம படும' என்று ஈற்றடிச் செல்வமாக வைத்தார் புவியரசராகிய இந்நூற் கவியரசர்

. வள்ளுவர் பணிவுடையனாதல், இன்சொலனாதல் ஒருவர்க்கு அணி என்பார், இனியவை கூறலில், நெஞ்சத்து ஒருபால் கோடாமை சான்றோர்க்கு அணி என்பார் நடுவிலைமை என்னும் அதிகாரத்தில் கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம எனபார் கண்ணோட்டம் என்னும் அதிகாரப்பிரிவில். ஆனால் பழமொழியை ஆக்கிய இப்பாண்டிய அரசச்செம்மல், 'அறிமடமும சான்றோர்க்கு அணி' என்பார். இஃது அவர் உலகிறகு நலகிய ஓர் இலக்கியப் பழமொழி. வேண்டியார்க்கு வேண்டியவற்றை வேண்டியாங்கு ஈதலாகிய ஓம்பா ஈகையும் ஒருவற்கு அணியுமாம் என்பது அவரது கோட்பாடு. பாத்திரமறிந்து பிச்சை கொடுத்தல கொடைமடம் உடையாாகது இல்லை. பல்லெல்லாம் தெரியக்காட்டி, பருவரல் முகத்தில் தேக்கி சொல்லெல்லாம் நீட்டி இல்லை என்று உரைப்பார்க்கு இல்லை என்று உரையாது ஈதலே அறம் என்பதை இப்புதுச்சொல் நன்கு எடுத்துக்காட்டுகிறது. கானமஞ்ஞைக்குக் கலிங்கம்

நல்கினான் பேகன்; முல்லைக்கொடிக்குத் தேர் ஈந்தான் பாரிவள்ளல் குணநலக்குன்றுகளாகிய சங்கத்துச் சான்றோரின் செயல்களைத் தக்க சான்றுகளாக எடுத்துக் காட்டிக்கொடுத்தலில் அறிவு மழுங்குதல் ஒருவற்கு அழகாம் என்று,

> " முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
> தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்—சொல்லின்
> நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப
> அறிமடமும் சான்றோர்க் கணி "

என இப்பாட்டினால் பெறவைத்த அவரது பேரறிவு வியத்தற்குரியது. இவ்வரலாறு உண்மைகள் சிறுபாணாற்றுப் படையிலும், புறநானூற்றிலும், புறப்பொருள் வெண்பா மாலையிலும் முறையே செய்யுள் வடிவிலே யாக்கப் பெற்றமையுங் கண்டுகொள்க. செய்யுள் 76-இல் பொற்கைப் பாண்டியன் வரலாறும், 85-இல் தூங்கெயிலெறிந்த செம்பியன் வரலாறும், 234-இல் அரக்குமாளிகையில் பாண்டவர்கள் தப்பியோடிய நிகழ்ச்சியும், 257-இல் வீடணன் இராமன் துணைகொண்டு இலங்கைக்கு இறையாயதும் பிறவும் பழமொழி நானூற்றில் தேடித்தெரிந்துகொள்க.

## பழமொழியும் திருக்குறளும்

கருத்தொருமை புலவர்களுக்குள்யாத்த நட்புரிமையைப் பயக்கும். அவர்கள் ஒருதேயத்தராய் இருத்தல் வேண்டப்படுவதன்று; ஒருகாலத்தவராய் வாழ்தலும் வேண்டப்படுவதன்று. பலகால் பழகியும சொல்லாடியும் இருத்தல்வேண்டும் என்பதுவுமன்று. ஒத்த உணர்ச்சி தானே அவர்களை ஒன்றுபடுத்தும்.

> ' பழகு தமிழ்ச்சொல்லருமை நாலிரண்டில்.'

என்றமையால் முன்றுறையரையர் திருக்குறளையும் நாலடியாரையும் தம் நூலில் பழமொழிகளை விளக்கத் துணையாக எடுத்துக்கொண்டார். காலத்தால் வேறுபட்டாரேனும்

சிலத்தால் மாறுபட்டாரில்லை; பல குறட்பாக்களை பொன்னேபோல் தழுவியுள்ளார்.

> "உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்
> பாம்போ டுடனுறைந் தற்று." (குறள்: அ௯0)

என்பது உட்பகை எனும் அதிகாரத்தின் பத்தாவது குறள். மனவேறுபாடு உடையாரோடு வாழ்தல ஒரு குடிலினுள்ளே பாமபோடு வாழ்தலை நிகாக்கும என்பது அக் குறள்மணி யின் கருதது ஒருசிறு குடிலில் பாம்போடு வாழ்பவன் அப்பாமபினுல் தீண்டடபபடுதல எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை உட்பகை உள்ளாரோடு வாழ்தல்; அவ்வாழ்வு ஈறுபயக்கும எனபதாம. இவ்வுண்மை அரசர்க் குக் கூறப்பெறறது. ஆகலான முனறுறையரையா தலைமை யிடத்தைப் பெற விழையும் ஒருவனைச் சமநிலையில வைதது உறவாடுதல குடிலில பாமபோடுறையும தன்மைதது என்ற குறள் போதனையைப் பழமொழியாக்கித் தந்தார். உணர்ச்சிதான் நடபாஙகிழமைதரும் என்ற கருததையும் இச்செய்யுள எடுததுககாடடா நிற்கும்.

> " தலைமை கருதும் தகையாரை வேநதன்
> நிலைமையால் நோசெய் திருத்தல்—மலைமிசைக்
> காம்பனுக்கு மென்றோளாய் அஃதன்றே ஒரறையுள்
> பாம்போ டுடனுறையும் ஆறு."

அறிவுடைய அரசன் பகைவன் தன் வலியானும், மாற்றான் வலியானும, துணைவலியானும் ஆற்றல் பெருமுன் அவனை வெனறடுதலைத் தன் முதற்கடனாகச் செய்வன். இன்றேல் பகைவனுல் கொலலபபடுதல் உறுதி என்பதை யும் அறிவன இககருததை வளளுவா பிறிதுமொழிதல் என்ற அணிச்சிறபபால எடுததுக்காட்டுவர். முளமரத்தை முளையிலே கிளளி எறிதல அறிவுடைமையாகும. அங்ஙன மின்றி அம் மரததை வைரம் வைக்குமபடி வளரவிட்டு விட்டுப் பின் கிளைகளை நீக்க முறபடின் அம முட்கள் களைவா னுக்குப் பெரிதும்ஊறு செயயும.

> " இளைதாக முள்மரங் கொல்க; களையுநர்
> கைகொல்லும் காழ்த்த விடதது." (அஎக)

என்பது குறள். 'பகைத்திறம்' என்ற பகுதியில் பழமொழி ஆசிரியர் இவ்விழுமிய குறட்கருத்தை,

"எதிர்த்த பகையை இளைதாய போழ்தே
கதித்துக் களையின் முதிராதே."

என்று அரசர்க்கு ஆம் தகவுரையைப் பகர்வாராயினர்.

'கேளாதே
ஓடுக ஊரோடு மாறு.'

என்பது 195-வது பழமொழிச் செய்யுள். ஆற்றில் நீரை எதிர்த்துச் செலுத்தல் கடினம்; நீரப் போக்கில் போதல் எளிது. ஊரார் செல்லும் நெறியில் செல்லுதல் நன்று முரண்பட்டுச் செல்லுதல் பழிப்பிற்கு இடமாகும்! இதனையே வள்ளுவர்,

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லா ரறிவிலா தார்." (௧௪0)

என்பர். உலகத்தோடு ஒன்றி வாழ்தலைக் கல்லாதவன் பலதுறைக் கல்வியைப் பயின்றாலும் யாதும் கற்றிலன் என்றே பெரியவர்களால் கருதப்படுவன் என்பது இதன் பொருள்.

## பழமொழியும் நாலடியாரும்

இதுகாறும் பழமொழி நானூற்றில் குறள்கள் எங்ஙனம் எடுத்தாளப்பட்டன என்பதற்குப் பல சான்றுகளிருக்க 'மிகைபடக் கூறேல' என்ற முறைபற்றி ஒரு சிலவற்றை எடுத்துக் காட்டினோம். அடுத்துப் பழமொழியில் நாலடி புகுந்த திறத்தைக் காண்பாம். 'குறைகுடம் கூத்தாடும்'[1] என்பது உலகப் பொதுமொழி. இஃது கற்பன கற்று அடங்காதாரை நோக்கி எழுந்த ஒரு அனுபவமொழி. கற்றவர் கற்றது கைமமண்ணளவு, கல்லாதது உலகளவு என்று அடங்குவர் கல்லார் தாம் தினையளவு கற்பினும் தாம் கற்றதைப் பனையளவாகக் கருதிக் குன்றென நிமிர்ந்து

1. Empty vessels give the greatest sound.

இறுமாப்பெய்தி நிற்பர். கற்றவர் வடுவஞ்சி வாய்பேசாது அமைவர்; அல்லாதார் வாய்விஞ்சி நா நலமின்றி எதையும் நவில்வர். பெருமைக்குரியார் பணிந்து பேசுவர்; அவர்கள் பால் சொல்வணக்கமுண்டு. சிறுமைக்குரியார் தம்மைத் தாமே வியந்து பேசுவர்; வணங்கினும் அவரது வணக்கம் வில் வணக்கம் போன்றதேயாம். இவ்வுண்மைகள் எல்லாம் 'கற்றாரடக்கம்' என்ற தலைப்பில்,

"கற்றறிந்தார் கண்ட அடக்கம் அறியாதார்
பொச்சாந்து தம்மைப் புகழ்ந்துரைப்பர்—தெற்ற
அறைகல் அருவி அணிமலை நாட
நிறைகுடம் நீர்தளும்ப லில்."

கற்றவர் நிறைகுடம், கல்லாதவர் குறைகுடம். நிறை குடத்துநீர் தளும்புதல் இல்லை; குறை குடத்து நீர் தளும்புதல் உண்டு என்பது பழமொழி. நாலடி கற்றோர்க்கும் மற்றோர்க்குமுள்ள வேற்றுமையைப் பிறிதொரு உவமை யால் விளக்கும். அவ்வுவமை இஃதாம். கற்றடங்கியவர் கள் பச்சோலையைப் போன்றவர்கள்; கற்றடங்கா வாய்ச் சொல் வீரர்கள் காய்ந்த ஓலைகளைப் போன்றவர்கள். பச்சை ஓலைக்கு ஒலியில்லையாமாறுபோலச் சொற்சோர்வுக் கஞ்சிக் கற்றோர் ஒன்றும் பேசார். காய்ந்த ஓலைகளுக்கு ஒலி இருக்குமாப்போலக் கல்லாதார் வரும் ஏதங்களுக் கஞ்சாது வேறுவதெல்லாம் உரைப்பர்.

"கற்றறிந்த நாவினார் சொல்லார் தஞ்சோர்வஞ்சி
மற்றைய ராவார் பகர்வர்—பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கும் எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை ஒலி."

இவ்வுவமையே ஒருகால் முன்றுறையரையருக்கு 'நிறைகுடம் நீர்தளும்ப லில்' என்பதை நினைப்பூட்டியிருக் கும் என்று கருத இடனுண்டு.

தகவிலர் தக்கார்க்குத் துன்பம் இழைத்தால் தகுதி யுடைய பெரியார் பழிக்குப்பழி, பதிலுக்குப்பதில் செய்வா ரல்லர். கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே என்று

பொறையுடன் ஆற்றியிருப்பர் ; நாய் கடித்தால் கடியுண்ட மகன் நாயைக்கடித்தல் உலகவழக்கில் இல்லை. உயர்திணைப் பொருளாகிய மகனை அஃறிணைப்பொருளாகிய நாயை மீண்டும் கவ்வுதல் யாண்டும இல்லாததொன்று.

> "கூர்த்தநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
> போர்த்துநாய் கௌவினு ரீங்கில்லை—நீரத்தன்றிக்
> கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
> மேன்மக்கள் தம்வாயான் மீட்டு."

இந்நாலடிச்செய்யுள கருததினை முன்றுறையரையர்,

> 'கதம்பட்டு நாய்கவ்வின்
> பேர்த்துநாய் கவ்வினு ரில்."

என்று சகூ-ஆம் செய்யுளில இதனை ஓா பழமொழியாக்கி உளம்பூரித்தார்.

> "பெருவரை நாட! பெரியார்கண் தீமை
> கருநரைமேல் சூடேபோல் தோன்றும்."

என்பது நாலடியாரிலுள்ள ஒரு பாட்டின் முதல் ஈரடியா கும். இது ஓர் பெரியாாசெய்த குற்றம என்றும் மாட்டின் மீது போடப்பட்ட சூடேபோல் பனனளாயினும் விளங்கித் தோன்றும் என்ற கருத்தைப் புலப்படுததுவது. இக் கருத்தை ஒப்புக்கொண்டவாபோலப பழமொழியாரும் காக்கும் கடவுளாகிய திருமாலேயாயினுங் குற்றஞ்செயின் அக்குற்றம் குற்றமேயாய்,

> "நரை ஆன் புறத்திட்ட சூடுபோல்
> மறையா திறகும."

என்றார்.

> 'குன்றின் மேலிட்ட விளக்கு.'

என்ற பழமொழிநானூற்றிலுள்ள பழமொழியும் இத னையே மீண்டும் வலியுறுத்தும்

> 'மகனறிவு தந்தை யறிவு.'
> 'ஒருவர் பொறை இருவர் நட்பு.'

என்ற நாலடி அடிகளையும் அப்படி அப்படியே பழமொழி நானூற்றிலும பார்க்கலாம.

## முடிவுரை

ஒரு தேயத்தின் அறிவின் மாட்சி, அறிவின் மாட்டுப் பிறந்த நகைச்சுவை யின்பம, வீரம ஆகிய இவைகளை அத் தேயததின் பழமொழிகளினின்றும் கண்டுபிடிக்க முடியும் என்று பேகன்[1] அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிறார்.[2]

தமிழரின் ஞானக் களஞ்சியத்தை, அறிவுச் சுடரை, வீர உணர்ச்சியை இதுகாறும சில பழமொழி விளக்கத் தால் பல துறைகளிலும விரித்துரைததோம. எஞ்சிய பொன்மொழிகளில் சிலவற்றை அடியில் தருகின்றோம். கற்றுப் பழமொழிநானூற்றின் உயர் இடத்தைக் குறிப் பிட்டு உணர்மின் :

‘ இலைகளை நாய் குரைத்தற்று.’
‘ காககையைக காப்பிட்ட சோறு.’
‘ கற்றலில் கேட்டலே நன்று.’
‘ பாம்பறியும் பாம்பினகால்.’
‘ யானையால் யானையாத் தற்று.’
‘ ஞாயிற்றைக் கைமறைப்பா ரில்.’
‘ கடங்கொண்டும் செய்வார் கடன்.’
‘ அதுவே, சுரையாழ அம்மி மிதப்ப.’
‘ கெட்டார்க்கு நட்டாரோ இல்.’
‘ தமக்கு மருத்துவர் தாம்.’
‘ முன்னம் எழுதினன் ஓலை பழுது.’
‘ ஆயிரம் காக்கைக கோர் கல்.’
‘ குரங்கின் கைக்கொள்ளி கொடுத்து விடல்.’
‘ முன்னின்ல் முட்கலையு மாறு.’
‘ உமிககுற்றுக் கைவருந்து மாறு.’
‘ எய்ப்பினில் வைப்பு.’
‘ கடிஞையில் கல்லிடுவா ரில்.’
‘ இறைத்தோறும் ஊறுங் கிணறு.’

---

1. Bacon.
2. The genius, wit, and spirit of a nation are discovered in its proverbs.

# III. மும்மருந்து

## கடுகம் மூலம் ஏலாதி - -

[திரு. கணியர், டாக்டர், இ. மு. சுப்பிரமணியபிள்ளை]

### காப்பு

*“எம்முயிர்க்கு நற்றுணையாய் எல்லா உலகினிலும்
எம்மருநதும் ஈடாக மாட்டாத—மும்மருந்து
யாம்கூறி ஈடேற எம்பெருமான் இன்னருளே
சாம்நிலையை மாற்றுமெமைச சார்ந்து.”*

### நூல்

*தோற்றுவாய்*

*“சுவரை வைததே சித்திரம எழுதவேண்டும்” என்பது பழமொழி. சுவா இலலாதுபோனால் சித்திரம் எழுதுவது முடியாது. சுவர் இடிந்து போனால் அதன்மேலே உள்ள சித்திரமும் சிதைந்து அழிந்துபோகும. அதைப் போலவே நாம் இநத உலகததில் எநதச்செயலையும வெற்றியாகச்செய்து முடிக்கவேண்டுமானால் நமது உடம்பை ஓம்புவது இன்றியமையாதது. உயிர் நிற்பதற்கு ஒரு சுவர் போன்றது நம உடமபு உடம்பை உடுத்துக்கொண்டு அதன்சார்பில் உயிா நிற்கின்றது. உடம்பு வளர வளர அதனுள் இருக்கும உயிரும் தானாகவே வளர்கின்றது. உடம்பு எப்போது அழியுமோ அப்போது உயிரும் அழிந்து போய்விடுகின்றது.*

*“உடம்பார் அழியில் உயிரார் அழிவா ;
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார் ;*

உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே."
(திருமூலநாயனர்—திருமந்திரம் ௭௨௪.)

திருவள்ளுவ நாயனர் தமது உலகப் பொதுமறையில், "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்றருளினர். புகழே என்றும அழியாது நிற்கும் உடம்பு அதனைப் பெறுவதற்கு மெய்யான ஞானம் வேண்டும். மெய்யான ஞானமாவது மெய்யான அறிவு. அதனை அடைவதற்கு நம் உடம்பு நல்ல நிலைமையில் இருநதால்மட்டும முடியும. உடமபிலே சிறிது நோய் கண்டாலும மனம் சரியாக வேலை செய்யாது; அதனுல ஆராய்ச்சி செய்து உண்மையை அறிவது முடியாதாகும்.

நோய் என்பது தளர்ச்சி, மெலிவு; நொய்ம்மையைச் செய்வது நோய். உள்ளம் எதனையும சரியாக ஆராய விடாமற் பிணிப்பது பிணி. அப்பிணிப்பை அவிழ்ப்பது அவிழ்தம். உடம்பில் நோய்வராமல் பாதுகாக்கும் உபா யத்தையும், வந்த பிணியை அவிழ்த்தெறியும் அவிழ்தத்தை யும் ஆண்டவன் அருளினுலே கண்டறிந்து பல சித்திகளை யும் பெற்ருர்கள நம்முன்னேர் பல்லோா. சிததிகள் கைவந்தமையினுலேதான் அவர்கள சித்தாகள் என்னும் சிறப்புப்பெயா படைத்தாாகள். அதனுலேயே முதற் பெருஞ சிததராகிய திருமூலநாயனா "உடமபை வளர்க்கும் உபாயம் அறிந்தே உடம்பை வளர்த்தேன்" என்று -ளையிடுகின்ருர்

டம்பை ஓம்புவதற்கு மற்றொரு முதன்மையான காரணமும் உண்டு. உடமபினில் உயிர் குடியிருப்பது போல உடம்பினுள்ளும உயிரினுள்ளும் ஆண்டவன் குடி யிருக்கின்ருன். நம உடம்பு ஆண்டவன் அன்புடன் எழுந்தருளியிருக்கும திருக்கோவில. நம்முடைய நிலைமை யையும் நம் உடம்பின் நிலைமயினையும அதனுள்ளே கோவில்கொண்டிருக்கும ஆண்டவன் நிலைமையினையும் உள்ளவாறு ஆராய்ந்து உண்மையைக் காண்பதே மெய் யறிவாகும்.

"உடம்பினை முன்னம் இழுக்கு என்றிருந்தேன்,
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்;
உடம்புளே உத்தமன் கோவில்கொண்டான் என்று
உடம்பினை யான்இருந்து ஓம்புகின்றேனே."
(திருமூலநாயனார்—திருமந்திரம்.)

"ஒன்பது ஓட்டைகளை உடையது உடம்பு; ஒருநாள் முழுகாதுபோனால் பிணநாற்றம் வீசும்; அதனாலே இந்த உடம்பைப் பலவாறு துன்புறுத்தித் தவம்செய்து ஆண்டவனை அடையும் வழியைத் தேடுதல்வேண்டும்" என்று சிலர் கூறுகின்றனர். உடம்புக்குள்ளே உயிரும், உடம்புக்குள்ளும் உயிருக்குள்ளும் ஆண்டவனும் இருக்கும் உண்மையை அவர்கள் ஆராய்ந்து உணர்ந்தால் உடம்பினை இழுக்கு என்று இகழமாட்டார்கள். உடம்புளே உத்தமன் கோவில் கொண்டிருத்தலினாலே உடம்பு அவனுடைய திருக்கோவில். ஆதலினாலே அதனை ஓம்புவது நம் முதற் பெருங் கடமையாகும்.

## மருந்து என்பது யாது?

உடம்பு நொய்ந்துபோகும்படி செய்யும் நோயை வாராமல் மறுப்பதுதான் மருந்து. நோயினால் உடம்பு கெடுநாற்றத்தை அடையும்; அக்கெடுநாற்றத்தை மறுத்து மருவினை (மரு - மணம்) அதாவது உடம்புக்கு இயற்கையாக உள்ள மணத்தினைப் பெறும்படி அருள்வது மருந்து எனப்பெற்றது. "வந்த நோயை மறுத்து, வரும் நோயினையும் மறுத்து, இயல்பாக வந்துசேரும் சாவினையும் மறுத்து நிலையான இன்பத்தை அருள்வதே மருந்து" என்று திருமூலநாயனார் திருவாய்மலர்ந்தருள்கின்றார்.

"மறுப்பது உடல்நோய் மருந்து எனல் ஆகும்;
மறுப்பது உளநோய் மருந்து எனல் சாலும்;
மறுப்பது இனிநோய் வாரா திருக்க
மறுப்பது சாவை மருந்து எனல் ஆமே."
(திருமூலர்—எண்ணாயிரம்.)

உடம்பினை அழியாது "வைத்து இயங்கச் செய்யும்" மருந்து முறையே வைத்தியம் எனப்பெறும். அதனை ஆண்டவன் திருவருளாலே கண்டு அமைத்தவர்கள் சித்தர்கள்; ஆகையால் அது சித்த வைத்தியம் என்று பெயர்பெறும். இங்ஙனமாகிய சித்த வைத்தியத்தில் எளிய மக்களும் நல்வாழ்வுபெற்று உய்வதற்காக மிக மிகச் சுருங்கிய செலவிலே மிக்குயர்ந்த பயன் விளைவிக்கும் மருந்துகள் கூறப்பெற்றுள்ளன அவைகளை ஆய்ந்து உடம்பினை ஓம்பி அதனுள்ளே கோவில் கொண்டிருக்கும் உத்தமனை அறிந்து அழியாப் பேரின்பவாழ்வினைப் பெறுவதே உடம்பினைப்பெற்றதனால் ஆகிய பெரும்பயன்.

சித்தர் மருந்துகள் பலப்பல உள; அவை தம்முள் சிறந்தனவாகத திரிகடுகம, சிறுபஞ்சமூலம், ஏலாதி என்பன இருக்கின்றன அவை உடலநோயைத் தீர்ப்பதுபோல உள நோயைத் தீர்க்கும் மருந்துகள் நல்லொழுக்க முறைகளே. அவைகளைத திரட்டி திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி என்ற உடல்நோய் மருந்துப்பெயர்களையே இட்டு உளநோய் மருந்து நூல்களைப் பாடியிருக்கின்றனர் சங்க காலப்புலவர்கள். பின் வருவது பழையபாட்டு:

> "நாலடி, நான்மணி, நானாற்பது, ஐந்திணை,முப்
> பால், கடுகம், கோவை, பழமொழி—மாமூலம்
> மெய்ந்நிலைய காஞ்சியோடு ஏலாதி என்பவே
> கைந்நிலைய வாம்கீழ்க கணகக."

கீழ்க்கணக்கு நூலகள் பதினெட்டினைக் குறிக்கும் இப்பாடலில் கடுகம் என்றது திரிகடுகததை; மாமூலம் என்றது சிறுபஞ்சமூலததை, ஏலாதி என்பது அப்படியே குறிக்கப்பெறறுள்ளது. முதலில் இமமருந்துகள் இன்னஎன ஆராய்ந்து பின்னர் அபபுலவாகளைப பற்றியும் அவர்களுடைய நூல்களைப்பற்றியும் ஆராய்வோம்

## மும்மருந்து

கடுகம் என்பது உறைப்பு, கார்ப்பு என்று பொருள் படும். கடுக்கும் பொருள்களாகிய சுக்கு, மிளகு, திப்பிலி

களில் ஒன்றையோ அல்லது இம்மூன்றையுமோ கடுகம் என்பது உணர்த்தும். சுக்கு, மிளகு, திப்பிலியாகிய மூன்றையும் குறிக்கும்போது இது திரிகடுகம் என்று சொல்லப்பெறும்.

மாமூலம் என்பது மாமூலர் இயற்றிய நூல். மா என்பது சிறப்பு. மூலத்தைக்கண்டவர் மூலர். மூலம் என்பது மூலமாக, முதன்மையான ஆதாரவாக இருப்பது; அதுதான் வேர். அது அடி, கிழங்கு என்றும் பெயர் பெறும். மூலத்தில் ஐந்து மூலம் சேர்ந்து பஞ்சமூலம் ஆகும். பஞ்சமூலம் சிறு பஞ்சமூலம் என்றும் பெரும் பஞ்சமூலம் என்றும் இருவகைப்படும். சிறு செடிகளின் வேர்கள் ஐந்து சிறுபஞ்சமூலம், பெருமரங்களின் வேர்கள் ஐந்து பெரும்பஞ்சமூலம் சிறுவழுதுணை, சிறுநெருஞ்சி, சிறுமல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்தரி இவைகளின் வேர்கள் சிறுபஞ்சமூலம் என்னப்பெறும். வில்வம், வாகை, பெருங்குமிழ், தகுதாழை, பாதிரி இவைகளின் வேர்கள் பெரும்பஞ்சமூலம் என்னப்பெறும்.

ஏலாதி என்பது ஏலத்தை ஆதியாகக்கொண்டு பல பொருள்களின் கூட்டுமருந்து ஏலாதிப்பொடி என்றும், ஏலாதிக்குளிகை என்றும் மருந்துகள் அமைகின்றன. ஏலத்தோடு இருபது முப்பது பொருள்கள் சேர்ந்து மருந்தாகும். இருந்தாலும் சிறப்பாக ஏலத்தொடு ஒருமுறையில் இலவங்கம், மிளகு, சிறுநாகப்பூ, தாளிசபத்திரி, கூகை நீர், சுக்கு, வெல்லம் ஆகிய எட்டுப்பொருள்களும், மற்றொருமுறையில் நற்சீரகம், இலவங்கம், மரமஞ்சள், விலாமிச்சவேர், கார்கோலரிசி, கடுக்காய், முத்தக்காசு, நெற்பொரி, சிறுநாகப்பூ, பெருங்காயம், தேன் ஆகிய பதினொரு பொருள்களும்சேர்த்து மருந்துகள் செய்யப்பெறுகின்றன.

மேலேகூறிய திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி ஆகிய மருந்துகளிற் சேரும் ஒவ்வொரு மருந்துப் பொருளும் தனித்தனியே உடலுக்குப் பலப்பல நலங்களைச் செய்யும் ஆற்றல்படைத்தன; அவை ஒன்றுசேருமிடத்து

மேலும் பல தனி நலங்களை விளைவிக்கின்றன. இங்ஙன மாகி உடலுக்கு நலமபுரியும திரிகடுகம, சிறுபஞ்சமூலம், ஏலாதிகளைபபோலவே உளளததிறகும அதன்வழி உயிருக் கும் நலமவிளைக்கும மருநதுகள இருக்கின்றன. அவை களைத் தொகுததுத திரிகடுகம, சிறுபஞசமூலம், ஏலாதி என்று மருநதுப்பெயா படைதத நூல்கள் கூறுகின்றன.

பெயர்க்காரணம்

திரிகடுகம் என்ற உயிா மருந்து நூலை ஆக்கிய பெரியார் நல்லாதனார் என்ற சங்கபபுலவர். இவர் திரிகடுகமபோல மும்மூன்று ஒழுக்கமுறைகளை ஒன்றுசேர்த்து ஒவவொரு வெண்பாவில் அமைதது நூறு வெண்பாக்கள் பாடியிருக் கிறார். இவர் பாடிய முதறபாட்டுப பின்வருவது :—

"அருநததிக கற்பினா தோளும் திருநதிய
தொல்குடியில் மாண்டாா தொடர்சசியும்—சொல்லின்
அரில் அகற்றும் கேளவியார் நட்பும்இம் மூன்றும்
திரிகடுகம் போலும் மருந்து."

இப் பாடலில் ஆசிரியர் நல்லாதனார் தாம் பாடிய நூலின் பெயா திரிகடுகம் என்று அமைததற்கு வெளிப் படையாகக் காரணம் கூறினார்.

ிகடுகத்திலுளள நூறு பாடல்களிலும் மூனறாவது அடியின் ஈற்றில் இம்மூன்றும் என்று ஐம்பத்தொன்பது பாடல்களிலும், இவை மூன்றும் என்று ஏழு பாடல்களிலும், இம்மூவர் என்று முப்பத்தொரு பாடல்களிலும, இவர் மூவர் என்று மூன்று பாடல்களிலும தாம் கூறிவரும் பொருள் களைத தொகுதது ஆசிரியர் கூறியிருக்கிறார்; வெண்பா வின் ஈற்றடி நிரையசையில் தொடங்குமபோது "மூன்றும்" என்றும, "மூவா" என்றும் மூன்றாவது அடியின் ஈற்றுச் சீரைத தேமாச்சீராக முடித்திருக்கிறார்; மூன்றாவது அடியின் மூன்றாவதுசீர் மாச்சீராக வரும்போது நான்கா வது சீரை "இவை மூனறும" என்றும், "இவர் மூவர்" என்றும் நிரையசையில் தொடங்கியிருக்கிறார்.

சிறுபஞ்சமூல ஆசிரியர் காரியாசான் என்பவரும் தம நூலுக்குப் பெயர் அமைத்த காரணம்தோன்ற முதற்பாடலைப் பாடியிருக்கிறார் அது வருமாறு :

"ஒத்த ஒழுக்கம் கொலைபொய் புலால்களவொடு
ஒத்த இவைஅல ஓர்நாலிட்டு—ஒத்த
உறுபஞ்ச மூலம்தீர் மாரிபோல் கூறீர்
சிறுபஞ்ச மூலம் சிறந்து."

இப் பாடலின் கருதது, "உலகிற் பொருந்திய மிக்க பஞ்சததின் காரணமாகிய விளைவின்மையை மழை நீக்குகின்றது. அதுபோல உடலுக்கு உற்ற மிக்க நோயைச் சிறுபஞ்சமூலம என்ற மருநது நீககுகின்றது. அங்ஙனமே உயிரைப்பற்றிய பிணியைப பொருந்திய நல்ல கற்பொழுக்கமும, கொலை, பொய், புலாலுண்ணல், களவு செய்தல் ஆகிய இவைகளுக்கு மாறான அருளுடைமை, மெய்மமை, புலால் உண்ணாமை, திருடாமை என்ற நான்கும் ஆக இவ்வைந்தும் நீக்கும் காரணததினாலே இந்நூலுக்குச் சிறுபஞ்சமூலம எனற பெயர் சிறநது விளங்குகின்றது என்று இந்நூற் பெயர்க்குக் காரணம் கூறுங்கள்" என்பது. கீழ்க்கணக்குக்கு ஏற்ற நூல் ஆதலின் சிறுபஞ்சமூலம் என்று பெயரமைத்தார் ஆசிரியர்.

ஏலாதி நூலாசிரியர் கணிமேதையார் என்பவர் இங்ஙனம் தமது நூலுக்குத் தாம பெயர் அமைதத காரணம தோன்ற யாதும கூறுகின்றிலர். ஏலாதி என்ற மருந்து ஐந்திற்கு மேற்பட்ட பொருள்கள் கலநத மருந்து என்பதைக்கொண்டு தாம கூறும ஏலாதி என்ற நூலில் ஒவ்வொரு பாடலிலும பெரும்பாலும் அவ்வாறு உண்மைகளை ஒன்று சேர்ததுப் பாடியிருக்கிறார். இது பின்வரும் முதற் பாடலிலேயே விளங்குகின்றது.

"சென்ற புகழ்செல்வ மீக்கூற்றம் சேவகம்
நின்ற நிலைகல்வி வள்ளன்மை—என்னும்
வழிவந்தார் பூங்கோதாய் ஆறும் மறையின்
வழிவந்தார் கண்ணே வனப்பு."

"ஒழுக்கமுறையின் வழிவந்து பொருந்திய பூக்களை அணிந்த கூந்தலையுடைய பெண்ணே! திருநான் மறையின் வழியிலே தவறாது ஒழுகுபவரிடத்திலே விளங்குகின்ற வனப்பு உலகெங்கும் பரந்த புகழும், செல்வமும், பெருந் தன்மையான பேச்சும, ஆண்மையில் நிலைத்து நிற்கின்ற வீரநிலையும், கல்வியும், கொடைத்தன்மையும் என்னும் இவ் வாறுமே," என்பது இப் பாடலின் பொருளாகும்.

### ஆசிரியர் வரலாறு

திரிகடுக ஆசிரியர் நல்லாதனாரும், சிறுபஞ்சமூல ஆசிரியர் காரியாசானும், ஏலாதி ஆசிரியர் கணிமேதை யாரும் கடைச் சங்ககாலப் புலவர்கள். மூன்று மருந்து களினுடைய பெயர்களின் தலைப்பில் இவர்கள் நூல் யாத் திருக்கின்றனர்; ஆதலின் இவர்கள் மூவரும் ஒரே காலத் தில் வாழ்ந்திருத்தல் கூடும் என நாம ஊகிக்கலாம். நல்லாதனார் பறறிய வரலாறு ஒன்றும் வெளிப்படையாக அறிவதற்கில்லை ஆனால் காரியாசானும் கணிமேதை யாரும ஒரு சாலை மாணாக்கா என்பது விளங்குகின்றது. எங்ஙனம எனில விளககுவோம்

ஏலாதி எனற நூலின இறுதியில,

"தமிழாசிரியர் மகனார் மாக்காயனார் மாணாக்கர்—கணி மேதையாா செய்த ஏலாதி முற்றிற்று" எனற குறிப்புக் காணப்பெறுகிறது. இதனால் மாக்காயனாருக்குக்கணிமேதை யார் மாணாக்கர் எனபது புலனாகின்றது. "தமிழாசிரியர் மகனாா மாக்காயனாா" என்றதனாலே மாக்காயனாருடைய குடும்பததொழில் ஆசிரியததொழில் என்பது வெளிப் படை. அவருடைய பள்ளியிலே படித்துப் புலமை நிரம்பப் பெற்றவரே கணிமேதையார். கணிமேதையார் என்பது இயற்பெயர் அன்று; காரணப்பெயரே. கணிக்கும ஆற்ற லால் மேதையாயிருந்தார் அப்புலவர் என்பதனால் அவர் கணிமேதையார் என்ற சிறப்புப்பெயர் பெற்றவர் ஆவார். அவர் பெயர் கணிமேதாவியார் என்றும் வழங்குகின்றது.

சிறுபஞ்சமூலத்தின் ஈற்றிலே பாயிரம் என்று தலைப் பிட்டு,

“மல்லிவர்தோள் மாக்காயன் மாணாக்கன் மாநிலத்துப்
பல்லவர்நோய் நீக்கும் பான்மையால்—கல்லா
மறுபஞ்சந் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
சிறுபஞ்ச மூலம்செய் தான்.”

என்ற வெண்பாக் காணப்படுகிறது.

மாக்காயன் மாணாக்கன் மாக்காரியாசான் என்று காணப்பெறுவதால் ஆசிரியர் பெயர் காயன் என்றுதான் கூறுதல் வேண்டும். மா என்ற சொல் காயன் என்ற பெயருக்கும காரியாசான் என்ற பெயருக்கும் அடை மொழியாக விளங்குகின்றது. ‘மல இவர் தோள’ என்பது வலிமை பொருந்திய தோள் எனப் பொருளபடும் காரி யாசான் என்பவர் பலப்பல நோய்வாய்ப்பட்டார் நோய்களை யெல்லாம் தீர்க்கும் சிறந்த மருத்துவர் என்பதும் கல் லாமையினால் ஏற்படுகின்ற மறுவாகிய அறியாமை என்னும் பஞ்சத்தை நீக்க மழைபோலும் கொடைத்திறம் படைத்த கையினால் பல பாமாலைகளாலாகிய நூல்களை யாத்தவர் என்பதும் புலனாகின்றன. மருத்துவராகிய காரியாசான் சிறுபஞ்சமூலம என்ற நூலை யாத்தமை மிகப் பொருத் தமே. இவர் மருத்துவத்தில் வல்லமையுடையவராக இருந் ததுபோல இவருடன் காயன் என்ற ஆசிரியரிடம் கல்வி பயின்ற ஏலாதி நூலாசிரியர் கணித நூலில் மேதாவியாராக இருந்திருக்கிறார். கணிமேதாவியார் திணைமாலை நூற்றைம் பது என்ற நூலுக்கும் ஆசிரியர் ஆவார்.

ஆசிரியர் சமயம்

நல்லாதனார் திரிகடுகத்தின் காப்பாகப் பின்வருமாறு தம் வழிபடு கடவுளை வாழ்த்துகின்றார்.

“கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த்
தண்நறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம்—நண்ணிய
மாயச் சகடம் உதைத்ததூஉம் இம்மூன்றும்
பூவைப்பூ வண்ணன் அடி.”

பூவைப்பூ—காயாம்பூ; அது நீலநிறமுடையது; அத ஞல் நீலநிறமுடைய திருமால் காயாமபூ மேனியன் என்று கூறப்பெறுகிருன. திருமாலின் திருவடியே இம்மூன்று செயல்களையும் செய்தது; இடம் அகன்ற பூமியை அளந் தது; உள்ளம கவருவதும் சிறப்பும் குளிர்ச்சியும் மணமும் பொருந்தியதுமாகிய அழகிய குருந்த மரத்தை வேரோடு சாய்ததது, தன்னைக் கொல்ல நெருங்கிய மாயமான சகடத்தை உதைதது நொறுக்கியது.

திருமாலின் திருவடி எங்கும் நிறைந்தது; எல்லா ஆற்றலும் படைத்தது என்றுகூறி ஆசிரியர் வாழ்த்து கின்ருர். திரிகடுகம என்பதற்கு ஏற்பக் காப்புச் செய்யு ளிலும மூன்று செயல்கள் குறிக்கப்பெற்றன. திருமால் தாயின் வயிற்றில் பத்துமாதம் இருநது குறளாகிப் பிறந்து பின் வளர்ந்து மாவலி மன்னன் முன் மூவுலகங்களையும் அளந்ததும், கண்ணனுகப் பிறநது குருந்த மரமாகி நின்ற அசுரனையும் மாயசசகடமாகி வந்த அசுரனையும் அழித் ததும ஆகிய வரலாறுகள கூறப்பெற்றன

பிறப்பு இறப்பு என்பன உயிர்க்குணங்கள்; பிறவாமை இறவாமை உடையவனே இறைவன். திருமால் அடியா ருள்ளும சிலர் திருமாலின் பததுத தோற்றங்களில் "குறளாய் வளாந்து ஞாலம் அளந்தமை, இராமனுய்ப் பிறந்தமை, கண்ணனுய்த தோன்றியமை" ஆகியவற்றைத் திருமாலின் தோற்றங்களாகக் கொள்ளார். அத்தகைய வருள் ஒருவரே புகழேந்திப்புலவா அவர் தமது நள வெண்பாவிற்கு வழிபடு கடவுள் வாழ்த்துக்கூறியமை

"ஆதித் தனிக்கோலம் ஆனுன் அடியவர்க்காச
சோதித் திருத்தூணில் தோன்றினுன்—வேதத்தின்
முன்னின்ருன் வேழம் முதலே என அழைப்ப
என்னென்ருன் எங்கட்கு இறை."

(நளவெண்பா - காப்புச செய்யுள்)

திருமாலின் திருவடி வழிபாட்டில் மிகவும் ஈடுபட்டவ ராகிய நல்லாதனுர் இந்த வரம்பினை விடுத்துத் திருமாலின்

திருவடிச் சிறப்புக்கூற ஞாலம அளந்ததும், குருந்தை முறித்ததும், சகடத்தை உதைத்ததும் கூறி வழிபாடு செய்கின்றார்.

ஒருசாலை மாணுக்கராகிக் காயனார் என்ற ஆசிரியரிடம் கல்வி பயின்ற பெரும்புலவர்களாகிய காரியாசானும் கணிமேதையாரும கடவுள்வாழ்த்துக் கூறுகின்றனர். சிறுபஞ்ச மூலததில்,

> "முழுதுணர்ந்து மூன்றொழிதது மூவாதான் பாதம்
> பழுதின்றி ஆற்றப் பணிந்து"

என்று ஆசிரியர் வாழ்த்துகிறார். இது வழிபடுகடவுள், ஏறபுடைககடவுள என்ற பாகுபாட்டில் எதனையும் சேரவில்லை. பொதுவான "மூன்று ஒழித்து முழுதுணர்ந்து மூவாதான்" என்று கூறியிருததலின் மூவாதான் யாவன் என்பது விளங்கவில்லை இஙஙனம் வாழ்த்துக்கூறுவது அருகசமயத்தினர் மரபு என்பது அறிஞர் முடிவு. ஐந்து மூலத்திற்கு ஏற்பக் கடவுள் வாழ்ததிலும் மூன்று ஆகிய காமம், வெகுளி, மயக்கம ஒழிததலும முழுதும் உணர்தலும் மூவாநிலையும ஆகிய ஐந்து குணஙகள் கடவுளுக்கு அமைத்துக் கூறபபெற்றன.

கணிமேதையார் பாடிய ஏலாதியின் தலைப்பில் கடவுள் வாழ்த்து என்று தலைப்பிட்டு ஒரு செய்யுள் காணப்பெறுகிறது ஆனால், அது எந்தத தெய்வததைக் குறிக்கிறது என்பது விளங்கவில்லை "அறுநால்வா ஆய்புகழ்ச் சேவடி" என்று அவர் திருவடி வாழ்ததினையே சிறப்பித்துக் கூறுகின்றார். இங்ஙனமாக மும்மருந்து நூல்களுக்கும் அமைந்துள்ள கடவுள் வாழ்த்துக்களில திருவடிச் சிறப்பே புகழ்ந்தோதப் பெறுதல் காண்க. இனி மும்மருந்து நூல்களைத் தனித்தனி சுருக்கமாக ஆராய்வாம்.

## திரிகடுகம்

இல்லறம் நல்லறம் ஆவதற்குக் கணவனும் மனைவியும் எங்ஙனம் வாழுதல் வேண்டும் என்பது ஆசிரியர் தம் ஒரு

நூறு பாடல்களிலே முப்பத்தைந்து இடங்களிலே கூறு கிறார். திருவள்ளுவ நாயனார் "தெய்வம் தொழாஅள் கொழு நனைத் தொழுது எழுபவள் பெய்யெனப் பெய்யும் மழை" என்று கூறியிருப்பதை ஆசிரியர் நல்லாதனார் "கொண் டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி, பெய்யெனப் பெய்யும் மழை" (96) என்று எடுத்தோதுகிறார். இதனையே அவர் மறுபடியும் (98) "பெண்பால் கொழுநன் வழிச்செலவு திங்கள் மும்மாரிக்கு வித்து" என்று கணவன் குறிப்பறிந்து மனைவி ஒழுகுவதே மாதம் மும்மாரி பெய்விக்கும் என விளக்கினார். விருந்தினரை ஓம்புவதில் கூட இருந்து துணை புரிவதில் நட்டாளாகவும், நாடோறும் இல்லறம் போற்றுத லில் பெற்ற தாயாகவும், தான்புகுந்த பழங்குடி வாழையடி வாழையாகத் தழைத்தோங்கச் செய்யுமாறு மக்களைப் பெறுவதில் மனையாளாகவும் விளங்குதலே கற்புடைய பெண்ணுக்குக் கடன் (64) என்று வலியுறுத்துகிறார்.

பெண்கள் பூப்பெய்திச் சில ஆண்டுகள் கழிந்த பின்னரே திருமணம் முடித்தல் நன்று. ஏனெனில் அப் படிச் செய்தாற்றான் அவர்களுடைய மெல்லிய உடம்பு வலுவடைந்து இல்லற வாழ்க்கைக்கு ஏற்றதாகும். இதனை ஆசிரியர் (69) "திருந்திய மெய்ந்நிறைந்து நீடிருந்த கன்னி பெறுமாறு அரியபொருள்" என்று கூறுகிறார்.

"பெண்ணுக்கு அணிகலம் நாண்உடைமை (52); அதனை உடையவளும், அருந்ததிபோன்ற கற்புடையவ ளும் ஆகிய பெண் கணவனுக்குத் திரிகடுகம் போன்ற மருந்தாகி உள்ளத்தின் நோயையெல்லாம் தீர்ப்பாள். மாசில்லாத சீர்பொருந்திய கற்புடையவளை மனைவியாகப் பெற்றவனே சாவா உடம்பு எய்தினன் (16)" என்று ஆசிரியர் கூறி மகிழ்கின்றார்.

தம்மிடத்து அன்பு உறுதிகொண்டு நிற்கும் மனைவி யரைச் சிலர் கோல்கொண்டு புடைத்துத் துன்புறுத்து கின்றனர்; இது அறியாமையால் வரும் கேடு (3) என்று நல்லாதனார் குறித்தார். தம் மனைவியரோடு ஒத்து ஒழு

குவதே பேரறிவு. வேறு பெண்கள் தம்மீது விருப்பம் கொண்டு பின்தொடர்ந்து வந்தாலும் தம் ஒழுக்கநெறி தவறாது நிற்பா கற்றறிந்த மேன்மையவர். தம் அருமை மனைவியரை அகன்று வாழும் இரவினை நோய் என்றே கருதுவர் அறிவுடையார். பூப்பினகண் தம மனைவியரை விட்டுப் பிரியும தலைமகன் அறிவில்லாதவன்; ஏனெனில் தம் மனைவியரைப் பேணாது இகழ்தல் ஆகாத செயலாகும்.

> "இல்சொற் பெருநதோன் மகளிர்
> காப்பிழுகல் ஆகாப்பொருள்." (47)

> "பெண்பாலைக் காப்பிகழும் பேதை
> ஒழுக்கம் கடைப்பிடியாதான்." (94)

சிலர் தம மனைவிமாரைக் கணடு நடுங்கி எருதுபோல் வாழ்கின்றனர் (79) மனைவியர் தம்மைவிட்டுப் பிறரோடு கட்புக்கொண்டாடினும் அதனை அறியாது தம்மிடம் மெய்யான பாசம் உடையவா என்று சிலர் கருதி வாழ்கின்றார்கள். அத்தகையார் வாழ்வு குன்றி அழிவர் (73).

தவறு செய்யும் பெண்களைப்பற்றியும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். கணவன் கூறும் கட்டுரையை இகழ்ந்து அவன் எதிரே எதிர்த்து நிறபவள் முற்பிறப்பிற் செய்த கொடுவினையே ஆவாள் (67). பொய் பல புகன்று தன் வீட்டுச் செல்வத்தையும் புகழையும கெடுக்கும பெண் இப்பிறப்பிற்கு உதவாத பேய் (49). தன் வீட்டைவிட்டு வேற்றிடம செல்லும் பெண்ணே மழை வாராமல் அழிக்கும் தீக்கோள் ஆவாள் (50).

சில பெண்கள் அடுத்த வீட்டாருடன் சண்டை தொடுத்து வழக்குச்செய்து நீதிமன்றம புகுகின்றனர்; சிலர் தம் கணவருடனேயே கலகம்செய்து அவாமேல் வழக்குத்தொடர்நது அல்லற்படுததுவர், அததகைய பெண்களைக் காண என் கண்கள் கூசும் என்று கூறி வருந்துகின்றார் நல்லாதனார்.

> "பெண்டிர் தொடுத்து ஆண்டுஅவைப் போர்புகல்
> காண அரியஎன் கண்." (71)

பெண்களுக்குப் பெருமபுணையாக இருந்து காப்பது கற்பே; பிறர்மேல் விருப்புற்று அதனைக் கைவிடுவது அவர்களுக்குப் பெருங்கேடு விளைக்கும் பகையாகும (86). தமக்குள்ள விருப்பததிற் குறைந்த விருப்புடைய பெண்களை நாடுதல் அருந்துயரம காட்டும் நெறி (5).

விலைமகளிரைப்பற்றியும் ஆசிரியர் கருத்துரைக்கின்றார். காண்பதற்கு இனிய தோற்றமுடைய கணிகையர் பேசும இன்சொல்லைக கேட்டு நடப்பது நரகக்குழியில் தள்ளிவிடும ; கணிகையர் கையினால் சோறும் உண்ணார் கற்றறிந்த பெரியார

“மனம் பிறிதாய்க் காரியத்திற் குன்றாக்கணிகை
போற்றார்க்கு அரியாள் புரிந்து.” (76)

“தோள்வழங்கி வாழும் துறைபோல் கணிகை
ஆசைக்கடலுள் ஆழவாள்.” (81)

“புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த் தோய்தல்
நன்மையி லாளர் தொழில்.” (39)

தமக்கு உரிமையில்லாத பெண்களைச் சிலர் விரும்புகின்றார்கள். அத்தகையவர் அறிவுகெட்ட முழுமுண்டங்கள் ஆவர்.

“உரிமையில் பெண்டிரைக் காமுற்று வாழ்தல்
முழுமக்கள் காத லவை.” (9)

நல்லாதனார் தம் நூறு வெண்பாக்களில் நன்மையாயினவாக அறுபத்தாறும், தீமை தருவனவாக முப்பத்து நான்கும் கூறியிருக்கிறார். அவை ஒவ்வொன்றும் மிகப் பொருத்தமுடையனவே. அவைதம்முள் சில தொகுதிகளை மட்டும் இங்கே ஆராய்வோம்.

மழையைப்பற்றி அவர் மூன்று பாடல்கள் பாடியிருக்கிறார் அதில் ஒன்று “வல்லே மழை அருக்கும் கோள்” (50) என்று முடிவது. மற்றிரண்டும் “பெய்யெனப் பெய்யும் மழை” (96) என்றும், “திங்கள் மும்

மாரிக்கு வித்து" (98) எனவும் முடிவன. குடிகளைக் கொடுமைப்படுத்திப் பொருள்கவரும் மன்னவனும், உள்ளதைக் கூறாது பொய்யே பேசும் மக்களும், ஒருவனுக்கு மனைவியாக வாழ்க்கைபபட்டு அவனுடைய சொல்லை மீறி வீட்டைவிட்டு விருமபிய இடம் சேருமபெண்ணும் இருத்தலினாலேதான் மழை பெய்யாமற் போகிறது என்று அவர் கூறியது எவ்வளவு பொருத்தம. நாட்டில தோன்றும் தீமைகளை விலக்கிக் குடிகளுக்கு நலலனவே செய்யும் அரசனும தன்னை மனைவியாக மணநதுகொண்ட கணவனுடைய குறிபபினை அறிநது அவன கூறுமலே நடக்கின்ற கற்புக்கரசியும, தான் மேற்கொண்டுள்ள நோன்புகளை முறைதவறாது செய்யும தவநிலையுடையவனும பெய் என்றால உடனே மழைபெய்யும எனக் கூறுகின்றார் ஆசிரியர். இதனை அவர் அடுத்துப் பின்வருமாறு மொழிகின்றார்:

*"செநதீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும்*
*வெஞ்சின வேநதன் முறைநெறியில் சேர்தலும்*
*பெணபால் கொழுநன் வழிசசெலவும் இமமூன்றும்*
*திஙகள் மும்மாரிககு வித்து."*

"பிறநதும் பிறந்திலாதார்" (89) எனவும, "பிறந்தும் பிறவாதவா" (91) என்றும அவாகூறுகின்றார். பெருநூலைப் படிதது அதன்படி அறநெறியாகிய அருள ஒழுக்கம பூணாதவரும், ஏழைமக்களுக்குக் கொடுததுப் பாதுகாக்கும பொருட்டுத் தேடிய பொருளை ஒருவருக்குப் பயன்படாது புதைதது வைப்பவரும் எத்தனமைததாகிய சொல்லையும் அருளை நாடிச சொல்லவேணடியதிருகக அந்நிலை கடந்து பிறாக்குத் துன்பநதரும தீயசொறகளைப் பேசுபவரும், மக்களாகப் பிறந்திருந்தும் மாக்களாகவே கருதப்பெறுவர். அருள் ஒழுக்கம் உடைய பெரிய குடும்பத்திற் பிறவாதவரும அறநூலகளைக் கறறு நல்லறம் செய்ய அறியாத பேதையரும என்றும் வரம்புகடந்து தீயனவே பேசவிரும்புபவரும் பிறந்தும் பிறவாதவர் என்று அவர் மறுபடி வலியுறுத்துவது மிகவும் பொருத்தமுடையது.

"ஞாலம் எனப்படுவார்" (26) எனவும், "உலகம் எனப்படுவார்" (34) எனவும் ஆசிரியர் கூறுவதை ஆராய்வோம். தாம் விருந்தாகச் சென்றுள்ள வீட்டினர் தமக்கு இயன்றதைத் தந்து அன்பு பாராட்டுவது கண்டு நன்றி பாராட்டும் விருந்தினரும், அருமையான உயிர்களைப் பிறர் கொலைசெய்வதைத் தடுத்துக் காக்கும் அறநெறியாளரும், ஒழுக்க நெறியிலிருந்து ஒருசிறிதும் வழுவாது நிற்கும் உறுதியுடைய ஆசிரியரும் உயர்ந்தோர் என்று புகழப் பெறுவார்கள். தமக்குரிய கடமைகளைத் தவறாது செய்து முடிக்கும் அந்தணரும், நீதிநெறியில் வழுவாது முறை செய்யும் வேந்தரும், வரம்புமீறாத குடிகளும் உயர்ந்தோராவர்.

பொய்யே பேசி வாழ்கின்ற தீயவரும், வினை வலியால் தாழ்வடைந்த பெரியாரைத் தம்மினும் தாழ்ந்தவர் என்று கருதும் சிறுமையாளரும் எதிலும் தமக்கு வரும் நலமே பார்க்கின்ற தம்நலக்காரரும் நாம் நட்புக்கொள்ளத் தகாதவர், அத்தகையாரால் நமக்கு என்றும் தீமையே விளையும் (15), கடன் வாங்காமல் வாழ்கின்ற பெருமுயற்சியாளரும், விருந்து புறத்தில் இருக்கத் தாம்மட்டும் தனித்து உண்ணாது உள்ளதை விருந்தினருடன் பகிர்ந்துண்ணும் பெரியாரும், பெரியார் கூறும் நீதி நெறிகளை மறவாது கைக்கொண்டு ஒழுகி நிற்பாரும் நமக்கு நட்புக்கொள்ள ஏற்றமுடையவர்; அவர்களால் நமக்கு என்றும் நன்மையே ஓங்கும் (12).

"தன்னை வியந்து தருக்கலும், தாழ்வுஇன்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்—முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை." (நஅ)

என்று ஆசிரியர் தொகுத்துரைப்பது மிகச் சிறந்த உண்மையை விளக்குவது. தகுதியுடைய பிறரை மதியாது தம்மையே புகழ்ந்து தருக்குகின்ற பேதையாருக்குத் தக்கார் துணையைப் பெறுவது முடியாது; அதனால் அவர்களுடைய செல்வம் குறையும். வீணாகப் பலரோடு

சினந்து பேசுபவருக்குப் பல்லார் பகைவந்து சேரும்; அதனால் விளையும் பல கேடுகளால் செல்வம் அழியும்; தம்நிலை அறியாமல் காணும் பொருள்களையெல்லாம விரும்பிப் பெறுபவரிடம செல்வம் நிலைக்குமா?

பணியாளர் செய்யததகுந்த பணிகளையே செய்யும்படி ஏவுதல் அறிவுடைமை. மேலும் அவர்களால செய்யமுடியாத செயல்களைசசெய்து முடிக்கும்படி அவர்களைத் துன்புறுததுவது அறக்கொடுமைபாவம் 'இயலவது கரவேல்' என்பதை மறநது தம்மால இயலும அறவினையைச் செய்யாதாரும, தமக்கும முடிவுண்டு என்பதை உணராமல் தீயனவே செய்து ஒழுகும பேதையரும நரகில விழுந்து வருந்துவாாகள (45)

ஆசிரியராவார் நல்லொழுக்கநெறியில் தவறுதவராக இருத்தல்வேண்டும என்று ஆசிரியா கூறுவதைக கண்டோம். அன்னார் தம மாணுககரிடததுப் பேரன்பும் இன்சொல்லும் உடையவராக இருததல மிகவும் இனறியமையாதது. "சீறிககறுவி வெகுணடு உரைபபவர் பள்ளிக்கூடத்தை அறிவுடையவா அணுகமாட்டாாகள்" என்று (46) அவர் கூறியது மிகவும் பொருததமுடையதாம்.

செருக்குடன் தருக்கும் அற்பரை நட்புக்கொண்டு அவருடைய வீட்டில் அறிவுடையாா உண்ணமாட்டார்கள். நல்லவாகளுக்கு அறம் புரியுமபடி தம்முன்னோா தேடிவைத்துச்சென்ற அறச்சாலையை அழித்து அவ்வறப் பொருள்களைத் தீய வழிகளிலே செலவிடும் அற்பர் கொடுக்கும் விருந்தினையும மேலோர் ஏற்றுக்கொள்ளார். கற்றறிநத பெரியார் விலைமாதர் வீட்டிலும் உண்ணமாட்டார்கள் (25).

காணக் கண் கூசுதே! எவர்களை? இடுப்பில் ஆடை உடுக்காமல் தண்ணீரில் இறங்கித தடிபோல நின்று நீராடுபவரையும், கணவரோடும் பிறரோடும் சண்டை தொடுத்து நீதிமன்றம் ஏறும் கொடும்பாவிகளாகிய பெண்களையும்,

எப்போதும் ஏழை மக்களுக்கு இல்லை யென்னுமல் கொடுத்துக்கொடுத்து ஆதரித்து வறுமையடைந்தவள் ளல்களையும் "காண அரிய என் கண்" (71).

"உயிரைக் குத்திக் கை வருந்துபவர்" பின் வருபவர் என்று ஆசிரியர் கூறுகிறார் (28). ஒருகாரியத்தை வெற்றியாகச்செய்து முடிக்கவேண்டுபவருககுச் சினம் ஆகாது. "வெல்வது வேண்டின் வெகுளிவிடல்" என்றார் பிறரும், தமக்குக கிடைததற்கு அரிய பொருள்மேல் விருபபம கொண்டிருப்பது மூடவன் கொம்புதேனுக்கு ஆசைப் படுவதுபோலாம். பிறர் கற்ற கல்வியின் அருமை தெரிந்து பாராட்டுவதுதான் நேர்மை; அதனைவிடுத்து அவர்பேசும் பேச்சில் என்ன குற்றம் காணலாம என்று நாடியிருப்பது வீண்செயலாம.

"வெல்வதுவேண்டி வெகுண்டு உரைக்கும் நோன்பிலியும்
இல்லது காமுற் றிருப்பானும்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானும்இம் மூவர்
உயிக்குத்திக் கைவருந்து வார்."

ஒருவர் தம்மைவிட்டு நல்வினை நீங்காது பாதுகாக்க விரும்புவார் என்றால் அவர் மறவாது கைக்கொள்ள வேண்டிய கடமைகள் பினவருவன: நல்ல வழியிலே பொருளைத் தேடுதலும் அங்ஙனம் தேடிய பொருளைத் தக்கார்க்கு அகமும் முகமும மலர்ந்து இன்சொல் இயம்பி வழங்குதலும்வேண்டும் மானங்கெடாது வாழ்ந்த நற்குடியாளருக்கு வரும் குறைவுகளையெல்லாம் முன்நின்று நீக்குவதற்கு இயன்றனவெல்லாம் செய்தல்வேண்டும். பல பொருள்களின்மேலே நாடியோடும் சிந்தையைக் கட்டுப்படுத்தி ஆசையறுமாறு நல்வழியிலே நிற்றல் இன்றியமையாதது (23).

தவத்தில் தலைநிற்பவர் தூய்மை உடையவர்களாக இருத்தல்வேண்டும. நெஞ்சிலே தோன்றும் கள்ளத்தை ஒழித்தல் இன்றியமையாதது. இதுவே பல சிறந்த நூற்களிற் சொல்லப்பெற்ற உண்மைப்பொருள். வாய்மை

என்பது தொழில் வளர்ச்சிக்கு முதன்மையானது, ஆதலின் தவம் வளர்வதற்கும் வாய்மையுடைமை வேண்டும். மனததினைக் கெட்ட வழியிலே இழுத்துச் செல்வதற்கு முதன்மையான காரணமாக இருப்பது அழகுதான். அழகாக இருக்கும் பொருள்களின்மேலே சிந்தை குதித்தோடிச்சென்று அவைகளைப் பெறுவதற்குத் தூண்டுகின்றது; அந்நெறி தகாதது; ஆதலின் தவநிலை நிற்பவர் அழகிய பொருள்களை உள்ளததால் உள்ளலும் தீதே; அவைகளைப்பற்றிப் பேசுதலினால் தீமைவிளையும் என்பது சொல்லாமலே அமையும் (78).

"பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்
பற்றறாது ஓடும் அவாததேரும்—தெற்றெனப்
பொய்ததுரை என்னும் பகையிருளும் இம்மூன்றும்
வித்தற வீடும் பிறப்பு." (உஉ)

மெய்ப்பொருள் பதி, பசு, பாசம் என்பன. பசு என்பது உயிர் உயிர் பாசததளையினால் கட்டுண்டு பலப்பல துனபங்களில் கிடந்து தவிக்கின்றது. பதி இறைவன். இறைவன் அழியாத இனபக்கடல்; பாசம் அழியாத துன்பக்கடல். உயிா பாசககடலுககுக காரணமாகிய பிறவியினைவிட்டு விலகவேண்டுமானால் இறைவனுடைய திருவடியாகிய புணையைத் துணையாகக்கொள்ளுதல் வேண்டும். "பறறுக பற்றறறான பற்றினை; பற்றுக பற்று விடறகு" என்றருளினா தெய்வபபுலவர். அவா என்பது ஆசை; இதனை மனம ஏறிச்செல்லும் தேர் என்றார் ஆசிரியர். அவாத தேர்மேல ஏறிக்கொண்டு உள்ளம் பற்று அறாது பலவழிகளிலும் இழுத்துக்கொண்டு செல்லும் அவாததேரை அடியோடு அழித்தால்தான் வீடுபேறு கிட்டும். பற்றிலிருநது விடுபடுவதுதான் வீடு. "ஆசை அறுமின்கள ஆசை அறுமின்கள, ஈசனோடாயினும் ஆசையறுமின்கள், ஆசைப்படடப்பட ஆய்வரும துன்பம, ஆசை விடவிட ஆனந்தம் ஆமே" என்பது திருமந்திரம். மெய்யறிவு தலைப்படுவதற்குத தடையாக இருக்கும் பகையிருள பொய் பேசுதலே, அதற்குக் காரணம் ஆவது

தன்னலமே; அதனை அறவே நீக்குதல் வேண்டும். "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற, செய்யாமை செய்யாமை நன்று" என்பது தமிழ்மறை முடிவு.

"பற்றற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்." மேலே குறித்துள்ள சிறு ஆராய்ச்சியினாலே திரிகடுகம் என்ற மருந்து நூல் உலகில் நாம் சிறப்பாக வாழ்வதற்குக் கைக்கொள்ளவேண்டிய செயல்கள் இவை, தவிர்க்கவேண்டுவன இவை என்று வழிகாட்டுவதோடு பிறவிநோய் அற்று வீடு பேறு ஆகிய அழியாப் பேரின்பப்பேற்றுக்கு வழிகள் இவை என்றும் தெளிவாக எடுத்தோதியமை கண்டோம். இனி, இரண்டாவது மருந்து நூலாகிய சிறுபஞ்சமூலத்தை ஆராய்வாம்.

## சிறுபஞ்சமூலம்

இந்நூலில் தொண்ணூற்றேழு வெண்பாக்கள் உள. உயிர்க்குறுதி பயக்கும் ஐயைந்து பொருள்களை ஒவ்வொரு வெண்பாவும் கூறுகின்றது.

### வனப்பு

வனப்பு என்பது அழகு. நால்வகைப் படைக்கும் அழகு செய்வது யானைப்படையே; பெண்ணின் இடை ஒடுங்கியிருப்பது வனப்பு, ஒழுக்கத்துக்கு நடுநிலை தவறாத சொல் அழகாகும்; போர்வீரருக்கு அஞ்சாமைதான் வனப்பு (7).

கணவனுக்கு வனப்பு கண்ணோட்டமே; காலுக்கு அழகாவது பிறரிடத்து இல்லை என்று இரந்து செல்லாமைதான்; ஆராய்ச்சிக்கு அழகு பொருள்களைத் துணிந்து சொல்லுதல்; பாட்டுக்கு வனப்பு கேட்டோர் இனிது என்று பாராட்டுதல்; அரசனுக்கு அழகு நல்லவன் என்று குடிகளாலே கொண்டாடப்பெறுவது (9).

"மயிர்வனப்பும் கண்கவரும் மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின் வனப்பும்—செயிர்தீர்ந்த

பல்லின் வனப்பும் வனப்புஅல்ல நூற்கு இயைந்த
சொல்லின் வனப்பே வனப்பு."

"குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும், மஞ்சள் அழகும் அழகல்ல, கல்வி அழகே அழகு" என்றார் பிறரும் நெஞசத்து நல்லம்யாம என்னும் நடுவு நிலைமையைச் செய்கின்றது கல்வி; அதுதான் இங்கே "நாலுக்கு இயைந்த சொல்லின் வனப்பு" என்று கூறப் பெற்றது

பெண்டிர்

தீயகுணமுள்ள பெணடிர் களளினை உண்பர், கணவனை விட்டுப பிரிநது வாழ்வார்கள, நாணம இல்லாதவராய்ப் பிறருடைய வீட்டுக்குச் செலலுவார்கள, பிறர் செயலைப் பறறிப பிறருடன் ஆராய்வாாகள, கெட்ட பெணகளோடு நட்புடையராகி வாழவார்கள (25)

கற்புடைய பெணடிா தம கணவருக்கு வரும வருவாயை நன்றாகத தெரிநதுகொளவாாகள; பின அதற்குத தக்கபடி தம குடும்பச செலவுத திட்டததை வகுபபாாகள். தமமைச சுறறியிருக்கும உறவினரைத தக்கபடி பாதுகாப் பாாகள; கடிந்துநோககவே குழையும விருந்தினரை முகமலாந்து இனிய சொறகளை இயமபி உண்பிபபாாகள. அவாகள தம வழிபடுகடவுளாகிய கணவரைப பணிந்து பூசிப்பார்கள இவையே பெணடிாககு உரிய சிறபபாம (43).

ஆசிரியரும் மாணுக்கரும்

ஆசிரியர் ஒழுக்கநிலையிற் சிறிதும் தவறாாதவராக இருததல்வேண்டும. மாணுக்கா ஆசிரியரிடத்து அன்புடன் வழிபாடு செய்தல் இன்றியமையாதது; காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றனையும் கடிநது ஒதுக்குதல் அவர்க் குக் கடமையாம். காமம வெகுளி மயக்கங்களைக் கடிந்து விலக்காத மாணுக்கரைக் காணுமபோதெல்லாம ஆசிரியர் நெஞ்சு புண்படும (29).

மாணுக்கர் குடுமிவைத்திருத்தல் வேண்டும் அதுவும் நெய்தல் மொட்டின் அளவுடையதாக இருத்தல்வேண்டும். அவர்கள் ஒரு மாதத்திற்கு ஒருமுறை தலைமுழுகலாம். அவர்கள் ஆசிரியரை வலமாகவந்து வணங்கி நின்று இரு என இருந்து நூல்களை ஓதுதலும் ஐயப்பாடுகளை வினவி அறிதலும் வேண்டும் (30).

அமிர்து

உடலினுள்ள உறுப்புக்களைப் பிணித்து வைப்பது பிணி; அப்பிணியை அவிழ்ப்பதாம் மருநது அவிழ்தம். அவிழ்தம் என்ற சொல்லே அவிழ்து, அமிழ்து, அமிர்து, அமுது என்றெலலாம திரிந்து வழங்கிவருகின்றது.

கற்புடைய பெண் அவளுடைய கணவனது உள்ள நோயைத தீாககும மருநது என்று திரிகடுக நூலாரும் ‘கற்புடைய பெண்ணை மணாநதவன் நோயற்றுச் சாவா உடமபும அடைந்தவன் ஆவான்’ என்று கூறுகின்றார். கற்றறிந்து தவமபுரிநது பொறிகளை அடககின பெரியான் உலகததாருக்கு அமிர்துபோல உதவுவான் நற்செய்கைகள் அமைந்து திகழும நாடு அரசுக்கு அமிாதம. நாட்டுக்கு அரசு அமிாது. நனனெறியில் நிற்கும சேவகன் அரசுக்கு அமிர்தம போன்றவன் (4)

ஒருநோயும் இன்றி வாழ்வார்

நம கண்முன்னுல் பலவாறு நோய்வாய்ப்பட்டுத் துன்புறுவாா பலரைக காண்கின்றோம; ஒருசிலரே நோயற்ற வாழ்வாகிய குறைவற்ற செலவத்தை உடையவராகி வாழ்ந்து வருகின்றனா. இதனை காரணம யாது என ஆராய்ந்த காரியாசான் தகக பொருததமான காரணம் இதுவெனக கண்டு கூறுகின்றார்.

நோய்வாய்ப்பட்டு அலறித் துடிதுடிப்பவரைக் காண்பவர் நெஞ்சம் கலங்குகின்றது. நோய்க்கு மருந்து இதுவென

அறிந்த மருத்துவர் ஒருசிலரைத் தவிரப் பலர் கல்நெஞ்சும் அதற்குக் காரணமாகும பொருளாசையும் உடையவராகி நோயுற்றாரிடம அன்புப்பேச்சும் இல்லாமல் மிக்க பணத்தை வெளவுகின்றனர். இரக்கமுள்ள வைத்தியர் ஒருசிலர் நோய்வாய்ப்பட்டவரைத தேடி வலிய அடைந்து இன் முகம் காட்டி இனியனபேசி நன்மருநது தந்து உடல் நோயினையும தீர்க்கின்றார்கள் மிகக் கொடிய தலைநோய் உடையவரும், பிதநேறியவரும், வாய்ப்புற்று உடையவ ரும், சயநோய் கொண்டாரும, மூலநோய் வாய்ப்பட்டவ ரும் அப்பேரருளாளராகிய வைத்தியர்களுடைய பெருந் துணையால் நோய்நீஙகி இன்புறுகின்றார்கள். இங்ஙனம் வலியச்சென்று பல நோய்களைத் துடைத்த அருளாளரே இப்பிறப்பில் ஒருநோயும இன்றி வாழ்கின்றார்கள் (76).

எண்பதின் மேலும் வாழ்வார்

பஞ்சகாலததிலே தன்னிடம் உள்ள உணவுப்பொரு ளைப் பலருக்குச் சிலர் பகிர்ந்து கொடுககின்றனர்; கைப் பொருளும ஈகின்றனர்; எதிர்த்துக் கொன்றுவரும் பகைவ ரோடு எதிரதது நின்று வெருட்டிக் காக்கின்றனர் சில வீரர்; மருநதேயாயினும் விருந்துடனேயே உண்கின்றார் சிலர்; பசிதது வருநதும் குழநதையாக்குப் பாலூட்டிப் பாதுகாக்கின்றனர் சிலா. அவர்கள்தாம் எண்பது வய துக்கும் மேலாக நீண்ட வாழநாளுடன் வாழ்நது வருகின் றனர் (79).

இருகால் எருது

இரண்டு கால்களையுடைய மனித மாடு யார்? ஆசிரியர் கூறுகிறார்: "தாம தாழ்நதநிலை அடைந்தும் அறிவு வாராமல் 'முன்பு பணம உடையோம' என்று செருக்கி வாழ்பவர் இரு கால் எருதாவா. மேலும் அழகு அழிந்து மூத்த சிலர் 'யாம் இளமையில் பேரழகுடன் இருநதோம' என்று செருக்குடன் பேசி இறுமாபபா; அவரும் இரண்டு கால்க ளோடு உலாவும் மனித எருதாவர்." எவவளவு பொருத்த மான விடை பாருங்கள் (20)

**மேதையரும் பேதையரும்**

பலா முதலிய மரங்கள் பூவாமலே காய்க்கின்றன; பூத்தாலும் காயாத பாதிரி முதலான மரங்களும் இருக்கின்றன நூல்களைக் கற்றுவல்ல மேதையர் ஆண்டுகளால் மூவாதவர் ஆயினும் அறிவினாலே மூத்தவரே; நூல்களைக் கற்றுத் தெளியாத பேதையர் ஆண்டினால் முதிர்ந்தவராயினும் அறிவினால் சிறியவரே.

பாத்தி கட்டி விதையாமலே முளைத்து வளர்ந்து பலன்தரும் விதைகள் உண்டு; பிறர் எடுத்துரைக்காமலே மேதையர்க்கு அறிவு தோன்றும். பாத்திகட்டிப் புதைத்தாலும் முளைக்காத விதைகளும் உள; அதனைப்போல அறிந்து அடங்கிய பெரியார் பேதையர்க்கு நன்மை தரும் மொழிகளை எடுத்து மொழிந்தாலும் அறிவு தோன்றாது (22, 23.)

**தலைமகனைத் தாழ்க்கும் மருந்து**

தன் கணவன் தன் சொற்கேட்டு நடக்கவேண்டும் என்று விரும்பாத பெண் உண்டா? இல்லை, இல்லை அதனால் சிலர் தம் கணவரைத் தம்மிடத்தில் வணக்க விரும்பி மருந்துதேடி அலைவர். ஏமாற்றுக்காரர் பலர் அத்தகைய பெண்களை மயக்கி, நிரம்பப் பொருள்பெற்று நஞ்சு கலந்த மருந்துகளைத் தருகின்றார்கள் அம்மருந்துகளைப் பெற்றுத் தம் ஆருயிர் போல்பவராகிய தம் கணவர் தம்மீது பற்றுக் கொள்வர் என்று நம்பிப் பெண்கள் சிலர் தம் கணவருக்கு உணவிலோ பாலிலோ கலந்து கொடுத்துவிடுகின்றார்கள். ஆனால் அம்மருந்தெனப் பெயரிய நச்சுப்பொருளிலுள்ள நஞ்சு உண்ட கணவர் உடலிற் புகுந்து இரத்தத்தோடு கலந்து விரைவில் நோய் செய்யத் தொடங்குகின்றது. பலர் அந்நோய்களினால் இறந்துபோதலும் வழக்கமாயிருக்கிறது, வட்டிக்கு ஆசைப்பட்டு முதலை இழந்தவர்போல அப்பெண்டிர் நீங்கா வேதனைக்கடலுள் ஆழ்கின்றனர். இத் தீமைதரும் மருந்திட்டினைச் செய்யவேண்டாம், பெண்டிர்! இங்கே வாருங்கள், உங்கள் கணவரை வணக்கும் அரும்பெரு மருந்து இதோ கூறுகிறோம் கேளுங்கள்"

என்று காரியாசான் தலைமகளைத் தாழ்க்கும் மருந்தினைக் கூறுகின்றார். அது வருமாறு :

"சிறுபஞ்ச மூலமபோலும ஐந்து மருந்துப் பொருள் கள் உங்களிடம இருக்கின்றன. அவை தனிததனியேகூட மிக்க பயனை விளைவிபபது உறுதி அவை மிகவும் சிறந்த பொருளகள், மேறகொளளுஙகள். மக்கட்பேறு கருதி மட்டும கணவரை அணுகுஙகள். மக்கள தம தாய்தநதைய ருக்கு இடையே அணபு வலைபோல நின்று இருவரையும் இன்புறுத்தும இடைநிலைப பொருள் அலலவா! கணவர் உங்களை எவ்வளவு துன்புறுததினாலும நீங்கள் அடக்க முடையவராக இருததல் இனறியமையாதது. உங்கள் கணவா விருபபம அறிநது உஙகளை அழகுசெய்து கொள் ளுங்கள்; அவர்களுடைய குறிபபினை அறிநது அவர்களோடு உடன உறையுஙகள் அவாகள உணட மிசசிலை விரும்பி உண்ணுஙகள். இவவைநதும செய்வதுதான் நீங்கள் அவர் களை மயககி வயபபடுததும மருநதாகும் (53).

அறிவு

பிறா செய்யும நன்மைகளையே நாம் பலர்க்கும் வெளிப் படையாகப பேசுதல வேண்டும "பிறர் பிறா சீர்எல்லாம் தூறறிச் சிறுமை புறஙகாததது" எனறாா் பிறரும. பிறர் செயயும தீமைகளை ஆராயநது சொலலித திரிவது அறி வுடையாா செயல ஆகாது நாம பிறருககுத தீமை செயவதை மனததாலும நினைததல ஆகாது, பிறா நமக்குச் செயயும தீமைகளையும மறநது ஒழிததுவிடவேண்டும். ஏனெனில தீயவே தீய பயககும ஆதலின. பிற உயிர்கள் துன்புறுவதைக் கணடால் விரைநது ஓடிசசென்று அவை களுக்கு ஊன்றுகோல்போல நின்று பாதுகாத்தல வேண் டும. பிறா பொருளை வஞசிததுக கவர எண்ணுவதும் அறிவாகாது "வஞசிதத எஙகும உளன ஒருவன காணுங கொல் என்று அஞசி அங்கம குலைவது அறிவு" எனறாா் பிறரும. மானமுடையவராயின் அவமானததுக்கு இழுக்கு வந்தபோது நெஞ்சழிநது திருநதுவதோ அன்றி உயிர் விடுவதோதான் அறிவாகும (57).

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்" (௯௬௯)

என்றார் தெய்வப் புலவரும்.

காக்கைக்குக் காப்படுத்த சோறு

சோற்றுக்குக் காவலாகக் காக்கையை வைத்தால் அச் சோறு என்னாகும்? காக்கை அதனைத் தின்று அழித்து விடும் அல்லவா? மக்கள் யாக்கைக்கு ஏற்ற நல்லறிவு இல்லாதவர்களைத் தோழமைகொண்டு தம வீட்டுக்குக் காவலாக வைத்தால பல பொருளும அழிவுபெறும். பொருளைச் சேர்த்துவைததிருக்கும பெட்டியிலிருந்து நாம் அறியாமல் அவர்கள பொருளைத் திருடுவார்கள்; அதனை நாம் அறியாமல் நமமை ஏமாற்றுவதற்கு நம் கணக்குகளை யும் மாற்றி எழுதிவிடுவார்கள்; பலருக்குப் பங்கிட்டு வழங்குவதற்காக நம் வீட்டிற் சமைக்கும உணவுப்பொருள் களையும் தம வீட்டுக்குத் திருடிச் செல்லுவார்கள். பின் வருவது இவ்வுண்மைகளை விளக்கும் சிறுபஞ்ச மூலப் பாட்டு.

"பண்டாரம், பல்கணக்கு, கணகாணி, பாத்துஇல்லா
உண்டார் அடிசிலே தோழரில்—கொண்டாரா
யாககைககுத தக்க அறிவில்லார்க காப்படுப்பின்
காக்கைக்குக் காப்படுதத சோறு." (௭0)

தவம்

"உற்றநோய் நோன்றல் உயிாக்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு." (௨௬௧)

என்பது தேவர் வாக்கு. இதனையே காரியாசான் பின் வருமாறு விரித்துக் கூறுகிறார்:

பிறிதோர் உயிாக்கு நாம் நோய் செய்தல் ஆகாது. பிறர் நமக்குச் செய்யும துன்பஙகளைப் பொறுத்து மறந்து விடுதல் வேண்டும். நமககு நீங்காப் பழியைத் தரும் துன்பச்செயல்களைப் பிறருக்குச் செய்யும் எண்ணத்தையும் நம் நெஞ்சில் தோன்றவிடுதல கூடாது. பல காரணஙக

ளால் நம் நெஞ்சை அள்ளி உண்டு நம்மையே கொல்லும் வெகுளியைத் தோன்றவிடாது விட்டுவிடுதலும் இன்றி யமையாதது. இங்ஙனம் ஒழுகுவதே சிறந்ததாம்; இவை நமக்கு என்றும் நன்மையே தரும் (32).

பிறவியறுக்கும் வழி

எத்தனை கோடி பொன்னைக் குவித்து வேண்டிக் கொண்டாலும் பொய் சொல்லாதிருத்தல் இன்றியமையா தது; பிறர்பொருளைக் களவுசெய்யும் எண்ணமும் நன் றன்று; நம்மின் மெலியாரை இகழ்ந்து துன்புறுத்தாது ஆதரித்தல் வேண்டும்; பிறர்க்குரிய அழகிய பெண்கள் நம்மை விரும்பித் தேடித் தமது விருப்பம் வெளிப்பட நடந்தாலும் நாம் அவர்களை நமது உடன்பிறப்பாகக் கருது தலே சிறிய குணமாகும், நம உடம்பு அழிந்துவிடாமற் காக்கும்பொருட்டு ஊனை உண்ணவேண்டும் என்று மருத் துவர் கூறி வற்புறுத்தினாலும் பிறிதோருடம்பின் தசையை உண்ணாதிருத்தலே சால நலந்தரும். இங்ஙன மாகிய சீரிய குணங்கள் கைவரப்பெற்றால் பிறவி வேர் அறும்; பேரின்பம் கைகூடும் (19).

பெரும்போகம் சாலப் பெறவழி

குடிக்கத் தண்ணீர் என்று கேட்டார்க்கு உடனே தண்ணீர் உதவுக. வெயிலால் துன்புறுவார் தங்கிக் களைப் பாறச் சாவடிகள் அமைக்க; தம வீட்டுக்கு வரும் விருந் தினருக்கு இடம்தந்து தமக்கு ஆக்கியுள்ள உணவினையும் பகிர்ந்து கொடுத்து உண்ணுக; கோவில் கட்டுதலும் சாலை அமைத்தலும் செய்யும் கடமையாம். இவ்வைந்தும் செய்த வர்களைப் பேரின்பம் உடனே மிகுதியாக வந்து பொருந் தும் என்று காரியாசான் வழிவகுத்து உரைத்தார் (63).

சிறுபஞ்ச மூலத்திற் கூறப்பெறும் ஏனைய அறவழிக ளெல்லாம் அனைவரும் அறிந்து மேற்கொண்டுநின்று பெரும்பயன்பெறத் தகுந்தவை. இனி, மூன்றாவது மருந் தாகிய ஏலாதியினை ஆராய்வாம்.

## ஏலாதி

ஏலாதி ஆசிரியர் கணியும் மேதையும் பொருந்திய கணிமேதையார் ஆதலின் அவர் மேதைகள் கைக்கொள்ள வேண்டிய சிறந்த ஒழுக்கங்களை வகுத்துக் கூறுகின்றார், தம் எண்பது பாடல்களிலும்; நல்லொழுக்கம் வாய்ந்தவர் விண்ணோர்க்கு மேலாய் வாழ்வார், மண்ணுலகிலும் மன்னராய்ப் பெருஞ்செல்வத்துடன் வாழ்வார் என்று கூறுகின்றார்; காலன் பொல்லாதவன், ஆதலின் வீட்டு நெறியை விரைந்து தேடுக என அறிவுரைக்கின்றார். அவர் பொன்னுரைகளை மேலே காணுவாம்.

### மண்ணாளும் மன்னவனும்

மண்ணாளும் மன்னவராவதற்கு ஏற்ற ஒழுக்கமுறை இவை என இருபத்தொரு வெண்பாக்களில் ஆசிரியர் கூறுகிறார். அவைகளைச் சுருக்கமாக விளக்குவாம்.

துறவிகள், மாணவர், வறியவர், இறந்து கண்ணிற் படாதவராகிய தென்புலத்தார், துணையற்றவர், சிறுவர், சான்றோர் ஆகிய இவர்களுக்கு நல்ல உணவைப் பகுத்துக் கொடுத்தவர் மறுமையில் மன்னராய் மண்ணாளுவர் (35).

சூதாடுதலை விரும்பாமலும், ஒன்றினை மறைந்து பிறரை வஞ்சியாமலும், பிறர் நெஞ்சம் கலங்கும்படி பேசாமலும், வாது பேசாமலும், பெண்கள் சொற்களை நம்பாமலும், தவம் புரிவார்க்கு உணவு உதவி ஒழுகும் மக்கள் மகரவாய் மாடத்திருந்து அரசவாழ்வடைவர் (43).

பொய் பேசாமல், பிறர் சொல்லும் பொய்யுரைக்கு இணங்காமல், புலால் உண்ணாமல், யாவரையும் வையாமல், விருந்தினர் முகம் கோணாது முகமலர்ந்து, பகுத்துக் கொடுத்து உண்பவர் மண்ணரசராகி மகிழ்ந்து புகழ்பெறுவார் (44).

வழிபாட்டு நெறியில் வழுவாது, துன்பம் செய்யாது, மனையாளோடு அன்பு தவறாது, பிறர் பொருளைக் கவராது,

ஒழுக்கம் தவறாது, குற்றமற்ற உணவைக் கொடுப்பவர் பகையறுத்து அரசாள்வர் (45)

செருக்கடையாமலும், கள்ளுண்ணாமலும், கள்ளுண்பாரோடு பழகாமலும், விருந்தினர்க்கு ஒளியாமலும், ஒழுக்கத்தில் வழுவாமலும், எளியாரை இகழாமலும் பிறர்க்கு உணவளித்து உண்ணுகிறவர் மண்ணாளும் மன்னராய்க் குடும்பம் பெருகி வாழ்வார்கள் (46)

பெரியோர் சொற்பேணி, அவற்றிற் பிறழாது நின்று, அன்பு நிரம்பிய அடியவரோடு கூடி, கீழ்மக்கள் சொல்லைக் கேளாமல், பிறருக்கு உணவு பகுந்து கொடுத்து உண்பவர் மண்ணாளும் மன்னவராவர் (47).

பிறர் வருந்துமாறு கொடுமை பேசாமலும், விருந்தினருக்கு ஒளியாமலும், பசித்தோர் முகம் பார்த்து இனியன பேசி அவர்களுக்கு உணவிட்டுப் பின் உண்ணுதலும், பகைவர் சொல்லைக் கேளாமல் உறவினரைப் பாதுகாத்தலும் உடையவர் அரசாகி மண்ணுலகாளுவர் (48).

யானையும், குதிரையும், பொன்னும், கன்னியும், பசுக்களும், மற்றைய பொருள்களும் இரப்பவர்க்கு இல்லை எனாது கொடுத்து, மாதவம் புரிவாருக்குப் பசு நெய்யுடன் உணவளிப்பவர் குபேரராகிப் பெருவாழ்வடைவார்கள் (49)

எள்ளும் எண்ணெயும் அரைஞாணும் ஆடையும் போர்வையும் பணமும் ஆகிய இவைகளோடு உணவும் கொடுத்தவர் மனைவி மக்களோடு அரசவாழ்வடைந்து இன்புறுவர் (50).

உண்ணும் நீர்வளமும், குளமும், கிணறும், வழியில் தங்கும் இடங்களும், தண்ணீரும், மண்டபங்களும் வகை வகையாக அமைத்தவர் அரசுரிமைச் செல்வராய் வாழ்வார்கள் (51).

வீடிழந்தவர், கண்ணிழந்தவர், செல்வம் இழந்தவர், நெல்லை இழந்தவர், பசுக்களை இழந்தவர் ஆகிய இவர்களுக்கு உணவு தருபவர் பல்யானை மன்னராவார் (52).

கடன் பட்டவர், காப்பு இல்லாதவர், கைப்பொருள் இல்லாதவர், கைகால் அற்றவர், வயது முதிர்ந்தோர், ஆதரவற்றவர் ஆகிய இவர்களுக்கு உணவு கொடுத்து உண்பவர் மண்மேல் மன்னராகி வாழ்வார் (53).

அந்தணர், பசித்தவர், தவம்புரிவார், குழந்தைகள், உடம்பை வெறுப்பவர், ஆதரவு அற்றவர், தூய ஒழுக்கம் தவறாதார் ஆகிய இவர்களுடைய துன்பங்களைப் போக்குபவர் மண்ணாண்டு வாழ்வார் (54).

கருவுற்றார், கருவுயிர்க்கும்போது துன்புறுபவர், கருவுயிர்த்தவர், குழந்தைகள், பித்தேறியவர், வாதநோயுடையவர் ஆகிய இவர்களுக்கு உணவு கொடுத்துத் துன்பந் தீர்த்து ஆதரிப்பவர் பெருஞ் செல்வம்பெற்றுப் பெருவாழ்வடைவர் (55).

காலில் விலங்கிடப்பட்டவர், பிறரால் தாக்கப்பட்டவர், தாழ்ந்தவர், பெண்கள், வறுமை நோயால் வருந்துபவர், பசித்தவர் ஆகிய இவர்களுக்கு உறவாகி உணவு கொடுத்தவர் பெருங்கடல் சூழ் நாவலந் தீவினை ஆளுவார்கள் (56).

கருஞ்சிரங்கு, வெண்குட்டம், கல்லடைப்பு, வாதம், பெருந்துன்பம் தரும் கழலை, வயிற்றுத்தீ உடையவர்க்குத் துன்பம் தீர்த்து உணவு கொடுப்பவர் அரசராகி உலகினை ஆளுவர் (57).

காமத்தை நாடாமல், பிறர் பொருளை விரும்பாமல், கல்லார் இனத்தைச் சேராமல், தண்ணீரில் விளையாடாமல், பெரியார் கூறுமாறு ஒழுகித் தம்மை வந்து இரக்கும் ஏழைகளுக்கு இன்புறும்படி உணவு முதலியன கொடுப்பவர் இம்மையில் எதிரிலா மன்னராய் வாழ்வார் (58).

பணிவும், ஒழுக்கமும், பெரியார் வழியில் தவறாமை யும் கொண்டு அறநூல் வழி வாழ்பவர் பழியில்லா மன்ன ராய் வாழ்வார் (59).

உணவும், ஆடையும், எழுத்தாணியும், புத்தகமும் என்ற நான்கினையும மாணக்கருக்குக் கொடுத்து வாழ்பவர் பெருவாழ்வு பெறுவர் (63).

ஐயமும், பிச்சையும், அருந்தவர்க்கு உணவும், உடை யும் கொடுததவர் ஐயமில்லாமல் மண்ணும் விண்ணும் ஆளுவர் (70)

புலையாளர், புண்பட்டவா, கண் கெட்டவர், நாடுசுற்றி வருபவர், நன்னிலை இழந்தவர், தலைமையானவர் ஆகிய இவர்களுக்கு ஆதரவாய் உணவு கொடுத்து உதவுகின்றவர் மன்னராய் வாழுவார் (80).

இவை இருபதொரு பாடல்களிலும் உணவு கொடுதது ஆதரிப்பவரே பெருவாழ்வு பெறுவர் என்பதை ஆசிரியா வலியுறுததுகின்றமை காண்க. "உணவு கொடுத் தோர் உயிர் கொடுததோா" என்பது உண்மை மொழி அல்லவா!

விண்ணுலக வாழ்வடைபவர்

இத்தகையவர் விண்ணுலக வாழ்வு பெறுவர் என்று ஆசிரியர் எட்டுப் பாடலகளில் கூறுகின்றார். அவைகளை ஆராய்வோம் :

கொலை விரும்பாதவராய், கொலை புரியாதவராய், புலால் உண்ணாதவராய், பிறரைத் துன்புறுத்தாதவராய், வஞ்சியாது யாதும நிலைதிரியாது வாழ்பவர் மன்னவர்க்கும் விண்ணவர்க்கும் மேலாவர் (2).

தம் வீடு தேடிவருபவர்க்கு வன்சொற கடிந்து இன் சொல்லே பேசி அளவளாவி மகிழ்ச்சியுடன் உணவு கொடுப்பவர் விண்ணவர்க்கு விருந்ினர் ஆவர் (7).

பெண்கள் சொல்லைக் கேளாமல், அவர் காம நுகர்ச்சியை விரும்பாமல், சினங்கொள்ளாமல், கொலை புரியாமல் பிறர்க்கு உதவத்தம் உடமயினையும் கொடுக்கும் மேலோர் விண்ணுலகததிலும் இல்லை (20).

தம்மைப் புகழாமல், பிறரை இகழாமல், தம் பொருளும் வாழ்வும் வாழ்நாள் எல்லையும் யார்க்கும் கூறாமல், வறியவருக்கு உணவு கொடுததுு உண்பவர் தேவாதி தேவராகி வாழ்வார் (32).

பொய் பேசாது, பிறரை வையாது, புறங்கூறாது, தம்மிடம் உளள பொருள்களை வெளிப்படையாகச் சொல்லாது தோழரோடும் ஏழமை பேசாது வாழ்பவர் இவ்வுலகம விட்டு விண்ணோர்க்கு வேநதராவார் (33).

கீழான பேச்சுக்களைப் பேசாமலும், பகையூட்டும்படி பேசாமலும், பகையாமலும், தம்மைப்புகழாமலும், பிறரை இகழாமலும் இருப்பவர்களை விண்ணவர் விரும்புவர் (34).

முடவர், குருடர், ஊமையர், சார்பற்றவர், அறிவில்லாதவர் இவர்களுக்கு வயிறுஆர உணவு கொடுத்தவர் இமையவரால் விரும்பப்பெறுவர் (36).

தளராமல், பிறரைத் துன்புறுத்தாமல், ஐயுறாமல் அருள்நெறி தேர்ந்து பசியையும் உண்டியையும் நீக்குபவர் விண்ணுலகினுக்கும் மேலான உலகம் பெறுவர் (40).

கொலைபுரியாமையும, புலால் உண்ணாமையும், உணவு கொடுத்தலும ஆகிய அறங்களே சிறந்த விண்ணுலக வாழ்வினை அடைய வழிகளாவன என்பது வற்புறுததப் பெறுகின்றமை காண்க.

> "கற்றாரைக் கற்றது உணரார் எனமதியார்
> உற்றாரை அன்னணம் ஓராமல—அற்றார்கட்கு
> உண்டி உறையுள் உடுக்கை இவை ஈந்தார்
> பண்டிதராய் வாழ்வார் பயின்று." (9)

என்றும்,

" தாயிழந்த பிள்ளை தலைஇழந்த பெண்டாட்டி
வாயிழந்த வாழ்விஞர் வாணிகம்—போயிழந்தார்
கைத்தூண் பொருள்இழந்தார் கண்ணிலவர்க்கு ஈய்ந்தார்
வைத்து வழங்கி வாழ்வார்." (78)

எனவும கணிமேதையார் கூறுவன பொன்மொழிகளாகப் போற்றி யாவராலும மேற்கொள்ளத தகுந்தன

காலனுக்கு அஞ்சுக, வீடுபெற முயல்க

முடிவுகாலம் அறிந்து வருபவன் காலன். அவன் வாளுக்கும் அஞ்சான, வனகண்மைக்கும் அஞ்சான், வனப்புக்கும் அஞ்சான், ஆள் அஞசான், பொருளுக்கும் அஞ்சான் எதற்கும் அஞ்சாது வருவான். அவன வரு முன்னே நல்லொழுக்கம் மேற்கொண்டு வீட்டுநெறி நிற்றல் வேண்டும (22).

காலன் குணம் நோக்கான், கூழ் நோக்கான், கோலமும் நோக்கான், மணம நோக்கன், மங்கலமும் நோக்கான், கணம் நோக்கான், கால் காப்பு வேண்டான். ஆதலின் அறநூல் வழிநின்று காலன் வாராமல் தடுத்தல் வேண்டும் (23).

காலன் அழுதாலும் போகான், அஞ்சான், அலறினாலும் கேளான், புகழ்ந்தாலும் வணங்கினாலும் போகான். ஆதலின் வாணுள் வழியடைக்கும் கலலாகிய தவம் முயல்வாராக (37).

இங்ஙனமாகக் கணிமேதையார் காலனுடைய பெருமையைக் கூறி அவனைத தடுக்க விரும்புபவர் தவம் மேற்கொள்வாராக என்று வலியுறுத்துகின்றார்.

சுவர்க்கமும் வீடும்

ஒருவன் கொடையினால் இம்மையில் இன்புற்று வாழலாம், தவத்தினால விண்ணுலக வாழ்வு பெறலாம், மெய்புணர்வினால் வீடுபேற்றை அடையலாம என்று கூறுகின்றார் ஆசிரியா. இவ்வுலக வாழ்விலும் விண்ணுலக

வாழ்விலும் மேலான தன்மையுடையது வீடுபேறு என்னும் உண்மை இதனால் வலியுறுத்தப் பெற்றது (76).

பல்லுயிர்க்கும் தாய்

"நிறையுடைமை நீர்மை உடைமை கொடையே
பொறையுடைமை பொய்ம்மை புலாற்கண்—மறையுடைமை,
வேயன்ன தோளாய்! இவையுடையான் பல்லுயிர்க்கும்
தாயன்னன் என்னத் தகும்." (6)

மும்மருந்தும் கூறும் முடிவு

இங்ஙனமாக திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி ஆகிய மும்மருந்துகளின் பெயர்களால் அமைந்த நூல்களை நாம் ஆராய்ந்து பார்த்ததில் முடிவாக நாம் காண்பன பின் வரும் உண்மைகள் :—

பணிவுடைமை முதலிய நல்லொழுக்கம் மேற்கொள்ளுதல், கொலைபுரியாமை, புலால் உண்ணாமை, அருளுடைமை, இனிய முகத்துடன் இனியன பேசி இனிய உணவு கொடுத்து ஆதரித்தல் ஆகிய இவையே இம்மைக்கும் மறுமைக்கும் பெருவாழ்வு தருவன. மெய்யுணர்வுகொண்டு ஆண்டவனுடைய திருவடியிற் பதிந்த உள்ளத்துடன் வாழ்தலால் பேரின்பப் பெருவாழ்வு பெறலாம். அதுவே அழியா வாழ்வு.

பெருவாழ்வு பெற்று உலகம் ஈடேறுவதாக!

# IV. நாலுற்பது

## இன்னு இனிய களம் கார்

[திரு. தி. அ. சோக்கலிங்கம், பி.ஏ., (ஆனர்சு).]

### தோற்றுவாய்

பழங்காலத் தமிழரின் தொகுப்பு நூல்களுள் பதினெண்கீழ்க்கணக்கும் ஒன்று. பதினெட்டுச் சிறந்த நூல்களைக் கொண்ட இத் தொகுப்பிலே இன்னு நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது என்ற நூல்களும் அடங்கும். இவை ஒவ்வொன்றும் நாற்பது செய்யுட்களையுடையனவாதலால் நானுற்பது என்ற பொதுப் பெயரால் அழைத்து வந்தனர். இவை நான்கும் வெவ்வேறு காலங்களில் தோன்றியவை; வெவ்வேறு ஆசிரியரால் எழுதப்பட்டவை; வெவ்வேறு பொருள்பற்றிப் பேசுபவை; இன்னு நாற்பதும் இனியவை நாற்பதும் ஒழுக்கத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு நீதிநூலாக எழுந்தவை. காரும், களமும் முறையே அகமும் புறமும் பற்றிப் பேசும் இயற்கை அடிப்படையிலே பிறந்தவை; எனவே, இவை ஒவ்வொன்றின் சிறப்பியல்புகளையும் தனித் தனியே நோக்குதல் வேண்டும்.

இன்னு - இனியவை பிறந்த சூழ்நிலை

கடைச்சங்க காலமாகிய கி. பி. 3-ஆம் நூற்றாண்டின் இறுதியில் 'களப்பிரர்' என்ற வேற்றுநாட்டார் பாண்டி மண்டலத்தை அடிமைப்படுத்தினர். இதன் காரணமாக மதுரைமா நகரில் நிலவி வந்த கடைச்சங்கம் அழிவுற்றது.[1]

1. தமிழ் இலக்கிய வரலாறு - திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள், பக்கம்: கச - கரு.

இவர்கள் கி. பி. 6-ஆம் நூற்றாண்டு முடியத் தமிழகத்தை ஆண்டு வந்தனர். இக் காலங்களில் தமிழர்களின் சமூக, அரசியல், பொருளாதார இலக்கிய வாழ்வுகள் நசுக்கப்பட்டன. வேற்றுப்பண்பும் வேற்றுநாகரிகமும் இந்த நூற்றாண்டுகளில் வளர்ந்து பெருகின. சங்ககாலததில் சிறப்புற்றுத் திகழ்ந்த தமிழினத்தின் வாழ்வு அவலநிலை அடைந்தது; இலக்கிய முயற்சிகள் எல்லாம் முளையிலேயே கருகி விட்டன; பௌத்த மதத்தினரான பாலி மொழி பேசும் களப்பிரர் ஆட்சியில் பாண்டிநாடு அடைந்த இன்னல்களை யெல்லாம்[1] வேள்விக்குடிச் செப்பேடுகள் அறிவிக்கின்றன. தென்பகுதியின் நிலை இவ்வாறு இருக்க, தமிழகத்தின் வடபகுதியினைப் பல்லவர் கைப்பற்றித் தஙகள் பண்பினைப் பரப்பி வந்தனர்; வடமொழி, பிராகிருதம் முதலிய மொழியினை வளர்த்தனர்; தமிழகத்தின் வட எல்லையிலே பல்லவர் வடமொழியினை வளர்க்க, தெற்கே களப்பிரர் 'பாலி' மொழியினைப் போற்ற,—இதன் காரணமாக இந்த நூற்றாண்டுகளில் தமிழும் தமிழகமும் அல்லல் உற்றன; இந்த நூற்றாண்டுகளை வரலாற்று ஆசிரியர்கள் தமிழிலக்கிய வரலாற்றின் இருண்டகாலம் (Dark ages) என அழைக்கின்றார்கள்.

இருண்ட காலமாகிய இந்த நூற்றாண்டுகளில் தமிழகத்தில் சமணரும், பௌத்தரும் அரசியல செல்வாக்குப் பெற்று விளங்கினா தமிழர்களில்கூட சிலர் பௌதத, சமணக் கொள்கைகளைப பின்பற்றத் தொடங்கினர். வேற்று நாகரிகத்தில் நசுக்கப்பட்டு, நல்ல தமிழ்ப்புலமை கூட இல்லாது வாழ்ந்த இருண்ட[2] காலத தமிழ்மக்களால் "திருக்குறள்" முதலிய நீதிநூலகளைக் கற்றுணரும் திறம் இல்லை. எனவே சிறுசிறு நீதிநூல்கள் எழுதவேண்டிய நிலை ஏற்பட்டது. அப்படி எழுதியவையே 'இன்னா நாற்பது' 'இனியவை நாற்பது' போன்ற நீதிநூல்கள்.

---

1. Epigraphia India Vol. XVII No. 16.

2. திரு. பண்டாரத்தார் அவர்கள் எழுதிய 'தமிழ் இலக்கிய வரலாறு' பக் : உச.

இன்னா - இனியவை நாற்பது இரண்டுமே ஓரளவுக்கு ஒரே கருத்தை வெவ்வேறு முறையில் வெளிப்படுத்தும் நீதிநூற்கள். ஒன்றை நோக்கி ஒன்று எழுதப்பட்டது போல நமக்குத் தோன்றுகின்றது. இவை இரண்டில் எது முதலில் இயற்றப்பட்டது என்பது உறுதியாகத் தெரிய வில்லை. வீரசோழியம் (47-க்கு உள்ள) உரையில் "இன்னா என்னும் சொல்லினையுடைய நாற்பது கவி யாதொரு நூலில் உண்டு; அந் நூல் இன்னா நாற்பது எனவும், இவ் வண்ணம், இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது எனவும் வருவன............"—என்ற குறிப்பு வரு கின்றது. இதில் இன்னா நாற்பதைத் தனியாக விளக்கி முன்னால் சொல்லியிருக்கிறார். [1]ஏட்டுப் பிரதிகளிலும் இன்னா நாற்பதன்பின் இனியவை நாற்பது இருக்கின்றது. மேலும செய்யக்கூடாத செயல்களை முதலில் சுட்டிக் காட்டுதலே மரபு. எனவே இன்னா நாற்பதுதான முதலில் தோன்றியிருக்க வேண்டும் என்று கொள்வது தவறாக மாட்டாது.

## இன்னா நாற்பது

உலகில் இன்னாதவை இவை இவை என்பதன் பட்டியல் தான் 'இன்னா நாற்பது' ஒவ்வொரு வெண்பாவுக்கும் நான்கு இன்னாதவை கூறி நாற்பது வெண்பாவில் இதை முடிக்கிறார். மக்களுக்கு நன்மை பயக்கும பொது நீதி களையும், உறுதிப் பொருள்களையும் சுட்டி உணர்த்துவதே இவைகளின் நோக்கம்.

இந் நூலின் ஆசிரியர் கபிலர் என்னும் பெயருடைய ஒருவர். வள்ளல் பாரியின் நண்பரும், குறிஞ்சிக் கலியினைக் கவினுறப் பாடியவரும், புறத்திலே பல பாடல்கள் செய்த வருமாகிய கடைச்சஙகக் கபிலரே இவர் எனச் சிலர் வாதாடுவர். இதன்மூலம் 'இன்னா நாற்பதை'க் கடைச் சங்க நூலோடு கணக்கிடுவர். ஆனால் இக் கொள்கை தவ

1. இன்னா நாற்பது : திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை அவர் கள் பதிப்பு, முன்னுரை, பக் : க.

றுடைத்து. வள்ளல் பாரியின் நண்பராகிய கடைச்சங்கக் கபிலர் கள்ளுண்டு களித்தவர்; புலால் உணவைச் சுவையுடன் உண்டவர் என்பது [1]புறநானூறு கூறும உண்மை. ஆனால் 'இன்னா நாற்பது' ஆசிரியராகிய கபிலரோ கள்ளுண்ணுதலையும ஊனைத் தின்று ஊனைப் பெருக்குதலையும் 'இன்னாதவை' என இந் நூலில மூன்று இடஙகளில மறுக்கிறா [2] சஙககாலக கபிலரோ அந்தணா. [3]'யானே பரிசிலன் மன்னும் அந்தணன்' என்றும, [4]'அநதணன் புலவன் கொண்டுவந்தனனே' என்றும கபிலரே தமமைப்பற்றிக் கூறுகிறார். ஆனால் 'இன்னா நாறபது' இயற்றிய கபிலரோ [5]மூன்று இடஙகளில அந்தணரைப்பற்றிப பேசுகிறா இம் மூன்று இடங்களும் அநதணருடைய பெருமையை விளக்குவதாகத தோன்றவில்லை; மாறாக அவாகளை 'நையாண்டி' செய்வதுபோலக காணபபடுகினறன. எனவே, இன்னா நாற்பதை இயற்றிய புலவர் கபிலர் அல்லர். மதுவும் புலாலும் உண்ணாதவர். எல்லாவற்றிற்கும் மேலாகச சங்க காலக் கபிலர் இயற்றிய பாடலின் நடைக்கும இன்னா நாற்பதின் நடைக்கும் பெருத்த வேறுபாடு காணப்படுகின்றது.

இதோ சங்ககாலக் கபிலரின் ஒருபாட்டில் சில வரிகள் :—

"வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக்
கட்சி காணாக் கடமா நல்லேறு
கடறுமணி கிளரச சிதறுபொன் மிளிரக
கடிய கதழு நெடுவரைப் படப்பை
வென்றி நிலைஇய விழுப்புக ழொன்றி
....................... ..............
........................................... (புறம்: உ0உ)

இவ்வாறு செல்கிறது ஒரு பாட்டு

1. புறநானூறு: பாட்டு: ககக.
2. இன்னா நாற்பது பாட்டு க0 ; கச ; உக.
3. புறநானூறு: பாட்டு: உ00.
4. ,, ,, உ0க.
5. இன்னா நாற்பது: பாட்டு உ, க, உஉ.

ஆனால் இன்னா நாற்பதில் கபிலர் என்பவர் எழுதிய ஒரு பாடலைப் பாருங்கள்.

"யானைஇல் மன்னரைக் காண்டல் நனி
ஊனைத்தின்று ஊனைப் பெருக்குதல் முன்னே
தேன்நெய் புளிப்பின் சுவைஇன்னே
கான்யாறு இடையிட்ட ஊர்" (உ௩)

முன்னதைவிடப் பின்னது எளிய நடையிலே நெகிழ்ச்சியுற்றுச் செல்லுகின்றது. சங்ககால நடைக்கும் பிற்கால நடைக்கும் உள்ள வேற்றுமை நமக்குப் புலனாகின்றது. மேலும் சங்ககாலக் கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டு, குறிஞ்சிக்கலி—இவைகளிலுள்ள நயமும் இனிமையும் 'இன்னா நாற்ப'திலே கிடையாது மாறாகச் செங்கலால் சிறு வீடு கட்டும் குழந்தைகளைப்போல் நீதிகளைச் சுவையற்ற முறையிலே அடுக்கிச் செல்கிறது சிலபாடல் சங்ககாலக் கபிலரைப்பற்றி ஆராய்ச்சி செய்த திரு வே. வேங்கட ராஜுலு ரெட்டியார் அவர்கள். [1]"இன்னா நாற்பது என்ற இந்நூல் கபிலர் இயற்றியதுவே எனத் துணிந்து கூறுதற்கு இயலவில்லை" எனக் கூறுகிறார். எனவே சங்ககாலக் கபிலரும், இன்னா நாற்பதின் கபிலரும் ஒருவர் அல்லர் என்பதும், ஒரே பெயருடன் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்த கவிஞர் இவர்கள் என்பதும் புலனாகிறது.

இக் கபிலருடைய சமயத்தைப்பற்றி அறிய நமக்கு ஒரு சில அகச்சான்றுகளே கிடைத்துள்ளன. இன்னா நாற்பதின் கடவுள் வாழ்த்துப் பாடலில்

"முக்கட் பகவன் அடிதொழாதார்க்கு இன்னா;
பொற்பனை வெள்ளையை உள்ளாது ஒழுகு இன்னா;
சக்கரத்தானை மறப்பு இன்னா; ஆங்கு இன்னா
சத்தியான் தாள்தொழா தார்க்கு"

என, சிவன், பலராமன், மாயோன், முருகன் இந்நால் வரையும் வணங்குகிறார். சமயக் கொள்கையில் இவர்

1. கபிலர்—வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்கள் பக்கம்: ச௨.

கடைச்சங்கப் புலவராகிய[1] நக்கீரரைப் போலப் பொது நோக்கு உடையவர் என்பது புலனாகின்றது.

சங்கநூல் கருத்துக்கள் பலவற்றை நாம் இன்னா நாற்பதில் காண்கின்றோம்.

"மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப் பாளர் உறைபதி" (உகக-குOக)

என்ற பெரும்பாணாற்றுப் படையிலுள்ள கருத்தை அப்படியே எடுததுப் "பார்ப்பாரில் கோழியும் நாயும் புகல் இன்னா" எனக் கபிலர் குறிப்பிடுகிறார்.

"கூற்றத்தைக் கையால் விளிததற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார இன்னா செயல்" (அகச)

என்ற குறட்கருத்தை எடுததுப் "பெருவலியார்க்கு இன்னா செயல் இன்னா" (பாட்டு : ௬) என இன்னா நாற்பது பேசுகின்றது.

"கல்லாதான் சொல்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று" (குறள் ௪0௨)

என்று குறள் கூறும் கருத்தினை த தம் இன்னா நாற்பதில்

"முலையில்லாள் பெண்விழைவு இன்னா" (இன் : கூ)

எனக் கபிலர் குறிப்பிடுகிறார்.

"சான்றோருள் பேதைபுகல் இல்லை" (பாட்டு : க அ)

என்பதன் கருத்து,

"கழாஅககால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர
குழாஅத்துப் பேதை புகல்" (அ௪0)

என்ற குறளை அடியொற்றிச் செல்லுகின்றது.

"ஆங்கு இன்னா கல்லாதான் கோட்டி கொளல்" (உக)

என்ற இன்னா நாற்பதின் கருத்து,

---

1. புறம்—56 - (நக்கீரர் பாட்டு)

"அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்" (௪0௧)

என்ற குறள் வெண்பாவினை நினைவுபடுத்துகின்றது.

"நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி ஆகி விடும்" (குறள் : ௪௭௬)

என்பதன் கருத்து

"நெடுமர நீள்கோட்டு உயர்பாய்தல் இன்னா" (௩௧)

என்பதில் பொதிந்து கிடக்கின்றது.

சான்றாண்மைமிக்க பேராண்மை பற்றி விளக்க வந்த வள்ளுவர்,

"பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு"

எனக் கூறுகிறார். இன்னா நாற்பது ௩௮-ஆம் பாடலில்,

"பிறன்மனை பின்னோக்கும் பேதைமை இன்னா"

என, வள்ளுவர் கருத்தை ஒட்டிச் செல்கின்றது. எனவே கபிலர் திருக்குறளையும் சங்க இலக்கியங்களையும் கற்றுத் தெரிந்தவர் என்பது புலனாகின்றது திருக்குறளின் தெளிந்த சாரத்தை இன்னா நாற்பதாக வடித்திருக்கின்றாரோ என்று கூட நினைக்க இடமிருக்கின்றது.

சில ஒழுக்க முறைகளும் பழக்க வழக்கங்களும் இந்நூலிலிருந்து நமக்குக் கிடைக்கின்றன. கொடுங்கோல் மற மன்னரின் ஆட்சியில் வாழ்வதைக் கொடிய துன்பமாகக் கருதினர். முறையின்றி ஆளும் அரசை வெறுத்தனர்.[1] வீரம் இல்லாத மன்னன் போர்க்களம் செல்லுதல் கூடாது என்பது அவர்கள் குறிக்கோள்.[2] மன்னனுக்கு யானைப் படை மிகவும் முதன்மையாக அக்காலத்தில் கருதப்பட்டது; யானை இல்லாத மன்னரைக் காண்பது இன்னாதது என்பது அவர்கள் கொள்கை.[3] மன்னன் உலாவாக வரும்

1. பாட்டு : ௪, ௬ 2. பாட்டு : ௩௬. 3. பாட்டு : ௨௩.

யானைக்கு மணி கட்டியிருத்தல் வேண்டும்; மணியில்லாத யானைமீது மன்னன் சென்றால் அவனுக்கு அது தீங்கு என்பது அக்காலக் கொள்கை[1]

கள்ளும் ஊனும் உண்ணுதல் வெறுக்கப்பட்டன.[2] சமூகக் குற்றவாளியாகக்கூட இவர்களைக் கருதினார்கள். (சைன பௌத்தமதங்களின் செல்வாக்குத்தான் இதற்குக் காரணம் போலும்.) கள்ளுண்பவன் பேச்சைக்கூட நம்ப மாட்டார்கள். தான் உண்ணாது சேர்த்துவைக்கும் பொருளை இன்னாத பொருள் எனக் கருதினர் மக்கள்[3] பெற்றதாயைக் கண் எனக் காக்கும் வழக்கம் இருந்தது.[4] அடைக்கலப் பொருளைத் தனதாக்கிக்கொள்ளும் செயல் வெறுத்தொதுக்கப்பட்டது.[5] வறுமையுடையவன் வள்ளல் தன்மையுடையவனாக இருத்தல்கூடாது என்பது அக்கால வழக்கம்[6]

அக்காலத்திய அந்தணர் வாழ்வுபற்றியும் நமக்குச்சில செய்திகள் கிடைக்கின்றன வேதம் ஓதாத அந்தணரை அக்காலமக்கள் வெறுத்தனர்.[7] அந்தணர் வீட்டில் வேறு குலத்தார் உண்பது கூடாது[8] கோழியும் நாயும் அந்தணர் வீட்டில் புகுதல் கூடாது.[9] எனவும் அறிகிறோம். அக்காலத்திலேயே தமிழகத்தில் 'வருணாசிரமம்' புகுந்து விட்டது என்பதை இவை எடுத்துக்காட்டுகின்றன. சிவன், பலராமன், கண்ணன், முருகன் முதலிய தெய்வங்களை வணங்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது.[10]

மக்களுக்கு உறுதிப்பொருள் கூறும் பொருட்டு உலகில் 'இன்னாதவை எவை' என்பதை அறிவிப்பதற்கு எழுந்த நூல்தான இன்னா நாற்பது. இந்நூலிலிருந்து மேலே கண்ட செய்திகளும் பழக்க வழக்கங்களும் நமக்குக்

1. பாட்டு: கச
2. பாட்டு: ௩ச, க0, உ௩.
3. பாட்டு: கஎ.
4. பாட்டு: கஅ.
5. பாட்டு: சக.
6. பாட்டு: எ, ச0, ககூ.
7. பாட்டு: உஉ.
8. பாட்டு: உ.
9. பாட்டு: ௩.
10. கடவுள் வாழ்த்து.

கிடைக்கின்றன. கசுச-இன்னாத கருத்துக்களை இந்நூல் மூலம் ஆசிரியர் நமக்குத தருகிறார்.

## இனியவை நாற்பது

இன்னா நாற்பதை அடுத்துத் தோன்றிய நூல் இனியவை நாற்பது 'இனியன எவை'—அஃதாவது மக்களால் செய்யத்தக்கன எவை என்பதுபற்றி இந்நூல் பேசுகின்றது. இதில் மொத்தம் நாற்பது வெண்பாக்கள். ஒவ்வொரு வெண்பாவிற்கும் பெரும்பான்மை மூன்று கருத்துக்கள்; சிலவற்றில் நான்கு கொண்டு முடிந்துள்ளன. கஉஎ இனிய கருததுக்கள் இந்நூலில் நமக்குக் கிடைக்கின்றன, இன்னா நாற்பதில் சொல்லாதுவிட்ட கருத்துக்களைச் சொல்லலாம் என்ற நோக்கத்தில் இந்நூலைப புலவர் எழுதியிருக்கலாம். பொதுவாகப் பாாக்கபபோனால் இன்னா நாற்பதின் மறுபதிப்புத்தான் இனியவை நாற்பது.

இதன் ஆசிரியர் மதுரைத தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேநதனார் எனக் குறிக்கப்பட்டிருக்கின்றது. சேந்தனார் என்பது இவரது பெயர். பூதன் என்பது தநதை பெயர். இவர் தமிழாசிரியராக இருந்து புகழ்பெற்றிருக்க வேண்டும். எனவே, விளம்பரததிற்காகததம தநதையின் பெயரையும் இணைதது 'மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார' எனத் தமது பெயரைக் கூறுகின்றார். 'பூதஞ்சோந்தன்' என்பது பூதனுடைய மகன் சேந்தன் என்னும் பொருள்படும் எனபது தொல்காப்பிய விதி.[1] இவர் இன்னா நாற்பதின் ஆசிரியராகிய கபிலருக்குப்பின் சுமார் கி.பி. ரு-ஆம நூற்றாண்டில் வாழ்நதிருக்கவேண்டும். இவரது வரலாறு அறிய வேறு சான்றுகள கிடைக்கவில்லை.

கபிலரைப்போலவே இவரும் கடவுள் வாழ்த்துடன் இந்நூலை ஆரம்பிக்கிறார். சிவன், மால், பிரமன் ஆகிய மூவரையும வணங்கித தமது நூலைத் தொடங்குகிறார்.

---

1. "அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியும், நிற்றலு மூரித்தே யம்மென் சாரியை, மக்கண் முறைதொகூஉ மருங்கி னை" (தொல் - எழுத்து - புள்ளிமயங்கியல் : கூ)

கபிலர் சொல்லாத பிரமனின் வணக்கம் இவர்காலத்தில் புகுந்துள்ளது. சமய ஒருமைப்பாடு உள்ளவர் என்பது புலனாகின்றது. பூதஞ்சேந்தனார் திருக்குறளை நன்கு கற்றவர் என்பது அறியக் கிடக்கின்றது. தம் பாடல்களில் பல இடங்களில் குறளின் வரியையும கருத்தையும் புகுத்தியுள்ளார். சில எடுத்துக்காட்டுகள் ;

"ஒற்றினால் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்த தில்" (௫௮௩)

என்ற குறள்வரியை,

"ஒற்றினா லொற்றிப் பொருள் தெரிதல் முன்னினிதே"
(௩௬)

என அப்படியே அமைத்திருப்பது நோக்கத்தக்கது.

"இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுமகரி" (௧0௬0)

என்ற குறட் கருததினைத் தமது செய்யுளில்

"பிச்சைபுக் குண்பான் பிளிற்றாமை முன்னினிதே"

என அமைத்துள்ளார். மேலும்

"குழலினிது யாழினிது என்ப தம்மக்கள்
மழலைசசொல் கேளா தவர்" (௬௬)

என்ற குறட் கருத்தை அடியொற்றி

"குழவி தளர்நடைகாண்டல் இனிதே
அவாமழலை கேட்டல் அமிழ்தினுமினிதே"

எனக் கூறியுள்ளார். 'அமிழ்தினும் ஆற்ற இனிதே' என்ற குறளும இவ்வேளை நம நினைவுக்கு வருகின்றது. எனவே இனியது நாற்பதின் ஆசிரியர் குறளை நன்கு கற்றவர் என்பது புலனாகின்றது.

திருக்குறளைக் கற்றதுபோலவே தமக்கு முன்னர்த் தோன்றிய இன்னா நாற்பதையும் ஊன்றிக் கற்றிருக்க வேண்டும். இந்நூலைத தமது நூலுக்கு வழிநூலாகக்

கொண்டாரோ என்றுகூட நினைக்கவேண்டியிருக்கின்றது! இன்னா நாற்பதின் கருத்துக்களும் சொற்றொடர்களும் அப்படியே இந்நூலிலும் அமைந்து கிடக்கின்றன.
சில எடுத்துக்காட்டு :—

1. இன்னா, பொருளில்லார் வண்மை புரிவு (இன்னா: கக)
   உடையான் வழக்கு இனிது ... ...(இனிய : ௩)
2. யானையில் மன்னரைக் காண்டல் நனியின்னா;
   ஊனைத்தின் றூனைப் பெருக்குதல் முன்னின்னா;
   .........இன்னா கான்யாறிடை யிட்டஊர். (இன்னா உ௩)
   யானையுடைய படைகாண்டல் முன்னினிதே;
   ஊனைத் தின்றூனைப் பெருக்காமை முன்னினிதே;
   கான்யாற் றடைகரை யூரினிது (இனிய: ௫)
3. இன்னா, ஓத்தில்லாப் பார்ப்பானுரை (இன்னா ; உஉ)
   அந்தண ரோத்துடைமை ஆற்றமிகவினிதே (இனிய : அ)
4. பொருளுணர்வார் இல்வழிப்பாட்டுரைத்தல் இன்னா;
   (இன்னா: கக)
   கற்றார் முன் கல்வியுரைத்தல் மிகவினிதே ; (இனிய:கஎ)
5. கல்லார் உரைக்கும் கருமப் பொருள் இன்னா ;
   (இன்னா: க0௩)
   கற்றறிந்தார் கூறும் கருமப் பொருள் இனிதே;
   (இனிய: ௩௩)

இவ்வாறு இன்னா நாற்பதும் இனியவை நாற்பதும் ஒன்றை ஒன்று சார்ந்து செல்லுகின்றன.

அக்காலப் பழக்க வழக்கங்களும் இந்நூல் மூலம் நமக்குக் கிடைக்கின்றன. இன்னா நாற்பதில் நாம் கண்ட வழக்காறுகளாகிய, யானையுடைய படைகாண்டல், கொல்லாமை, வேதம ஓதும் அந்தணனை விரும்பல், முறைசெய்யும அரசனைப்போற்றுதல்—இவையெல்லாம் இப்போதும் உண்டு. இவை தவிர்த்து ஒன்றிரண்டு பழம் வழக்கங்கள் நமக்குக் கிடைக்கின்றன.

பிரமனை வழிபடும் முறை இவர் காலத்தில் இருந்ததாக அறிகிறோம்.[1] மயிர்நீப்பின் வாழாக் கவரிமானைப் போல மானம் அழிந்தபின் வாழும் வாழ்வை இக் காலத்தவர் விரும்பவில்லை.[2] குளங்கள் வெட்டிச் சோலை உண்டாக்குவது இனிய செயலாகக் கருதப்பட்டது பசுவையும் பொன்னையும் அந்தணருக்குக் கொடுத்தால் நன்மை கிடைக்கும்[3] எனக் கருதிய மக்கள் வாழ்ந்திருந்தார்கள்.

சங்ககாலத்தில் இல்லாத வழக்கம் ஒன்று இப்போது புகுந்துவிட்டது. பெண்களை நஞ்சாகக் கருதும் 'பரதேசி மனப்பான்மை' இந்தக் காலத்திலதான் மெல்ல முளைவிடுகின்றது. பெண்மையை அன்பாக, அருளாக, தாய்மையாகக் கண்ட சங்கத்துச் சான்றோரின் உள்ளம் மெதுவாக மறைந்துவிடுகின்றது. பௌத்த சமணர்களின் கூட்டுறவால் 'பேய்' எனக் கருதும் உள்ளம் வந்துவிட்டது.

> "தடமென் பணைத்தோள் தளிரியலாரை
> விடமென்றுணர்தல் இனிது" (இனியவை: கூஅ)

எனப் பேசுகின்றது இந்நூல். இப்போதுதான் முதல் முதல் பெண்ணடிமை ஆரம்பமாகின்றது.

முன்னர்க் கூறியபடி இன்னா நாற்பதின் மறுபதிப்புத் தான் இனியவை நாற்பது—என்றாலும் இன்னா நாற்பதில் உள்ளதைப் போன்று 'பலசரக்குக் கடைப் பட்டியல்' போலச் செய்திகளை—நீதிகளை— அடுக்காமல் சொற்சுவையுடன் சோர்வுதட்டாமல் செல்லுகின்றது இனியவை நாற்பது.

## களவழி நாற்பது

தமிழ் இலக்கியத்தை அகம், புறம் எனப் பகுத்தனர். இந்தப் பகுப்பு முறை எந்த நாட்டிலும் எந்த இலக்கியத்திலும் இல்லாத ஒன்று. தமிழுக்கே சிறப்பானதும்கூட. புறவாழ்வைப்பற்றி—போரைப்பற்றி—பேசுவது புறம்.

---

1. கடவுள் வாழ்த்து. 2. பாட்டு: கஎ.
3. பாட்டு: உக.

அகத்து நிகழும் நிகழ்ச்சியினைப் பற்றி—காதலைப்பற்றி—கூறுவது அகம். எலலாத் தமிழ் இலக்கியங்களையும் இப் பகுப்புமுறையுள் அடக்கிவிடலாம. புறநானூறு, பதிற்றுப் பதது, பத்துப்பாட்டில் பல, பதினெண்கீழ்க்கணக்கில் சில, இவையெல்லாம புறப்பொருள் பற்றி விளக்குபவை. இவை அக்கால மன்னர் செய்த போர்கள், ஆற்றிய வீரச் செயல்கள், கொடைச் சிறப்பு முதலியனபற்றிக கூறுபவை. பதினெண்கீழ்க்கணக்கில் 'நாலூற்பது' என்ற தொகுதியில் வரும 'களவழி நாற்பதும்' புறம் பற்றியே பேசுகின்றது.

களத்திடத்து நிகழ்நத நிகழ்ச்சியினைப் பாடும் செய்யுள் களவழி. களம இருவகைபபடும். கலப்பையை ஆயுதமாக உடைய உழவா நெற்போரைக் குவிக்கும் களம் ஒன்று; தேரை அணியாக உடைய மனனர் மாற்றார் படைகளை வென்று குவிக்கும போாககளம மற்றொன்று.[1] நாம் இப்போது பாாககபபோகும களவழி மன்னா புரிநத போர்க்கள நிகழ்ச்சிகளைக கூறுவது களம் என்ற இடத் தின் பெயரை நூலுக்கு அமைத்து நாற்பது செய்யுட் களால் போரின் வரலாறறை விளக்குகிறார் இதன் ஆசிரியர். எனவே இது 'நாலூற்பது' என்ற தொகுப்பில் ஒன்றாக அமைகின்றது.

சேரமன்னன் ஒருவனைச் சோழமன்னன் ஒருவன் வென்று சிறைப்படுத்தினன். சேரனின் அவைக்களப் புலவ ராகிய பொயகையாா் எனபவர் சோழனது வெற்றியையும், போராற்றலையும், களததில் அவன காட்டிய கருணை மறத்தையும் வியந்து போற்றி நாற்பது செய்யுட்களில் 'களவழி நாற்பது' என்ற நூல் இயற்றினார். இதனல் மகிழ்நத சோழன் சேரனை விடுதலை செய்தான் என்பது இந் நூல் தோன்றிய வரலாறு.

களவழி பாடிச் சேரன் விடுதலைபெற்ற கதையைப் பிற்கால இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.

---

1. "ஏரோர் களவழி யன்றிக் களவழித
தேரோர் தோன்றிய வென்றியும"—புறத்திணையியல்.

"களவழிக் கவிதை பொய்கையுரை செய்ய வுதியன்
காலவழித தளையை வெட்டியரசிட்ட வவனும்"

என, கலிங்கத்துப்பரணியும்,[1]

"மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளை விட்ட பாரதிபனும்"

என மூவருலாவும்[2] குறிப்பிடுகின்றன. பொய்கையார் என்ற புலவர் சோழன் காலததில் ஆற்றிய வென்றிச் சிறப்பினைப் புகழ்நது சொலலிக் களவழி பாடிய காரணத் தால் சேரன் விடுதலை செய்யப்பட்டான் என்ற செயதி நமக்குக் கிடைக்கின்றது.

ஆனால் இநதப் பொய்கையார் யார்? பாடப்பட்ட சோழன—அஃதாவது வெற்றிபெற்ற சோழன் யார்? இவனால் சிறைசெயயப்பட்ட—தோல்வியுற்ற-சேரன் யார? என்பன போன்ற வினாக்கள் நம்முன் எழுகின்றன. இவர்கள் மூவருமே கடைசசஙக காலததைச் சோந்தவர்கள் என ஆதாரங் காட்டிப் பலர் கூறுகின்றார்கள். பொய்கையார் பாடியதாக இரண்டு பாடல்கள் புறநானூற்றில[3] வருகின் றன. இவை இரண்டுமே சேர அரசர்களைப் பற்றிப் பாடியவை. பாடப்பட்ட சேர அரசனின் பெயரை இதில் குறிப்பிடவில்லை

"கோதை மார்பிற் கோதையானும்
கோதையைப் புணர்நதோர் கோதையானும்"

என்று ஆரம்பமாகிறது புறம சஅ-ஆவது பாடல். 'கோதை' என்ற பொதுப் பெயராலேயே சேரனைப் புலவர் அழைக் கிறார். சேரனுக்கும, தனக்கும் உள்ள நட்பின் ஆழத்தை யும், அன்பின் திறத்தையும், நமக்கு இப் பாடலமூலம் பொய்கையார் விளக்குகிறார். "கானலந் தொண்டி - அஃ தெம்மூரே ; அவனெம இறைவன்"—எனப் புலவர்

1. கலிஙகத்துப் பரணி: ககூ௬.
2. மூவருலா (விக்கிரம சோழனுலா: கச).
3. புறம்: சஅ, சக.

கூறுவதால் சேரமன்னர்கட்கும், பொய்கையாருக்கும் உள்ள தொடர்பு நமக்குப் புலனுகின்றது.

சேரமான் கணைக்காலிரும்பொறை என்ற சேர மன்னன் பாடியதாக புறநானூற்றில் ஒரு பாடல் வரு கின்றது. இந்தப் பாடலின் கீழே :—

"சேரமான் கணைக்காலிருமபொறை சோழன் செங்க ணுனேடு திருப்போர் (பி - ம. போர்க்) புறததுப் பொருது, பறறுக் கோட்பட்டுக், குடவாயிற கோட்டததுச சிறையில் கிடந்து, தண்ணீர் தாவென்று பெருது, பெயாத்துப் பெற் றுக் கைக் கொண்டிருநது உண்ணுன சொல்லித் துஞ்சிய பாட்டு"

எனக் குறிக்கப்பட்டுள்ளது. வீரமன்னர்களின் இயல்பு குறித்து மானமே பெரிது என்ற கருததுடன் பாடப்பட்ட இப் புறம் எச-ஆம் பாட்டின அடியிலே உள்ள குறிபபுத் தான் மேலேயுள்ளது. இதிலிருநது சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும சோழன் செஙகணுனுக்கும போர் நடந்தது எனறும் போரில சேரன் தோல்வியுற்றுன் என்றும அறிகிறேம. தோலவியுறற சேரன் கைது செய்யப் பட்டான். குடவாயில் (கும்பகோணமாக இருக்கலாம) என்ற இடத்தில சிறைவைககபபட்டான். சிறையின் வாயில் காவலனிடம் தண்ணீர் கேட்டான் சேரன். தாமதித்து நீர் கொண்டுவந்த காரணத்தால் இப் பாடலைச் சொல்லி மானமகாத்து உயிர் நீத்தான் என்ற பொருள் இதிலிருந்து

ஆனுல் களவழி நாற்பதிலிருந்தும் பிற்காலக் கலிங் கத்துப பரணி, மூவருலா போன்ற நூல்களிலிருந்தும் இச் சேரன் சோழனுல் விடுதலை செய்யப்பட்டான் என அறிகி றேம். இவை முன்னுக்குப் பின் முரணுக அமைந்திருக் கின்றன. இறந்த மன்னனுக்காகச் சோழனிடம் களவழி பாடி எப்படி விடுதலை பெறமுடியும் ?

புறம் எச அடிக் குறிப்பிலுள்ள "..........உண்ணுன் சொல்லித் துஞ்சிய பாட்டு" என்பதிலுள்ள துஞ்சிய என்ற

சொல்லுக்கு 'மூர்ச்சித்த' என்று பொருள் கொள்ளுதல் வேண்டுமெ என டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயர் அவர்கள்.[1] குறிப்பிடுகின்றார்கள். மாகாணக் கல்லூரி முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் திரு. இ. வை. அனந்தராம ஐயர் அவர்கள்.[2] 'துஞசிய' என்பதற்கு 'உறங்கிய' என்ற பொருள் கொள்ளுதல் வேண்டும் எனக் கூறுகிறார். ஆனால் இதே புறநானூற்றில் இருபத்தைந்து இடங்களில் 'துஞசிய' என்பது 'இறந்த' என்ற பொருளிலேயே வருகின்றது. எனினும் 'துஞ்சிய' என்பது பழைய செய்யுட்களில 'உறஙகிய' என்ற பொருளில வருவதால் இந்த இடத்திலும 'உறஙகிய' என்றே பொருள் கொள்ளலாம என்பது பின்னவரின் கட்சி. எனவே சிறைக்காவலாளர் தண்ணீர் கொண்டு வரத் தாமதம் ஏற்பட்ட காரணத்தால் சேரன் தூஙகிவிட்டான் என்றோ, நீர் வேட்கையால் மயங்கிவிட்டான் என்றோ கொளளுதல் வேண்டும். மயங்கி அல்லது தூங்கி எழுந்தபின் சிறையில் வாழும் மானமற்ற வாழ்வை "குழவி யிறப்பினும்" (புறம் எச) என்ற பாடலால் தன் கவிஞர் பொய்கையாருக்கு அறிவித்திருக்கலாம். அவர் உடனே சோழன் செஙகணான்மேல் 'களவழி' பாட அதன் காரண மாகச சேரன் விடுதலை செய்யபபடுகிறான். எனவே பாடிய பொய்கையார், பாடபபெற்ற சோழன செங்கணான், விடுதலை செய்யப்பட்ட சேரன கணைககாலிருமபொறை இம் மூவரும் கடைச்சங்க காலததவரே என்பது இவ் அறிஞர்களின துணிபு. நாவலர் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களும்,[3] தமிழ் ஆராய்ச்சியாளர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்களும[4] இக்கருத்தினை ஆதரிக்கின்றார்கள்.

---

1. புறநானூறு—டாக்டர் உ. வே. சு. ஐயா பதிப்பு பக்கம்: கஎஎ.

2 களவழி நாற்பது—அனந்தராம ஐயர் பதிப்பு முகவுரை. பக்கம். கஉ.

3. களவழி நாற்பது—கழகப் பதிப்பு (திரு. நாட்டார்) முகவுரை பக்· கூ.

4. தமிழ் இலககிய வரலாறு திரு. T. V. S. பண்டாரத்தார் பக்: எக-எஉ.

ஆனால் பதினெண் கீழ்க்கணக்கு ஆசிரியர்களைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் நச்சினார்க்கினியர் "பிற்சான்றோர்" என அழைக்கிறார் என்றும், சங்ககாலப் புலவர்களைச் 'சான்றோர்' எனக் குறிப்பிடுகிறார் என்றும—எனவே சங்க நூற்களுக்குப் பிற்பட்டவை பதினெண் கீழ்க்கணக்கு நூற்கள் என, திரு. எஸ். வையாபுரிபிள்ளை அவர்கள் கூறுகிறார்கள்.[1] சங்ககால, பிற்காலத் தமிழ் நடையினை அடிப்படையாகக் கொண்டு மொழிநூல் வழியில பல சான்றுகள் காட்டிப் பதினெண் கீழ்க்கணக்குக் காலத்தைப் பிற்காலம் (அதாவது கி. பி. ௬00 முதல் அ௫0 க்கு உள்) என முடிவு கட்டுகிறார். களவழி நாற்பதுபற்றிக் குறிப்பிடும்போது,

> [2]"களவழி நாற்பது கொண்டவன் தனைசை விசயாலயன் எனக் குலோத்துங்க சோழன் உலாவின் பழைய உரை கூறுகின்றது செஙகணான், கணைக்காலிரும்பொறை—என்ற இருவரைப பற்றிய வரலாறுகள் ஒன்றற கொன்று முரணுயிருக்கின்றன ; விசயாலயன் காலம கி. பி. அ௫0. ஆதலால 'களவழி நாற்பது' இக்காலத்தில இயற்றப பெற்றதாதல் வேண்டும்."

என முடிவு கட்டுகிறார்.

இரு வேறுபட்ட வாதப் பிரதிவாதங்களைக் கண்ட நாம இருட்டு வீட்டிலே கருப்புப பூனையைத தேட முற்பட்ட குருடனின் நிலையினை அடைகிறோம. 'முன்னுல பார்த்தால தெனனுலிராமன குதிரை, பினனுல் பார்த்தால் அரசன் குதிரை' எனறு ஒருவன சொன்ன கதை நினைவுக்கு வருகின்றது களவழி ஆசிரியர் பொய்கையாரின் காலம பற்றி எந்தவிதமான முடிவுக்கும் வரமுடியாத நிலையில நான் இருக்கிறேன். பெருமபான்மையான அறிஞர்கள் ஒப்புக்கொள்கிறார்கள் என்ற காரணததுக்காக, தற்காலிகமாக, இந்நூலைப் பிற்காலச் சங்க நூல்களோடு சேர்த்துக் கொள்ளலாம

1. இலக்கிய மணிமாலை, பக்: - அ௬-௯0.
2. Ibid........................... ..௧௧௩.

புறப்பாடல்களின் வரலாற்றிலே 'களவழி நாற்பது' இரண்டாவது பருவம். சங்ககாலப் புறப்பாடல்கள் எல்லாம் வெவ்வேறு அரசர்களைப் பற்றிப்பாடும் தனித்தனிப் பாடல்கள். ஒரே கருத்து ஊடுருவிச் செல்லும் பல பாடல்கள் அப்போது கிடையாது. களவழி நாற்பதோ ஒரே அரசனைப் பற்றிய ஒரே கருத்தை—அதாவது அவன் போர்க்கள வென்றியை—நாற்பது செய்யுட்களில் விரித்துக் கூறுகின்றது. இவ் வழக்கம் விரிந்து பெருகிப் பிற்காலத்தில் பரணியாக மலர்ந்தது. புறத்தைப் பற்றிய சங்கப் பாடல்களில் "அரும்பு" ஆகி, களவழியில் "போது" ஆகி, பரணியில் மலர்ந்தது. எனவே சங்கப் பாடல்களின் அடிப்படையில் வளர்ந்து, பரணி தோன்றுவதற்குக் கால்கோள் இட்டது களவழி என்பது பொருந்தும்.

சோழன் செங்கணான் போர்செய்த போர்க்களத்தின் வருணனையைப் புலவர் பொய்கையார் இலக்கியச் சுவையுடன் நயமாக வருணிக்கிறார். போர்க்களத்திலே [1]'யானைமேல் யானைவந்து நெரி' தருகின்றது. எட்டுத் திசைகளிலும் பிணங்கள் செத்து விழுகின்றன.[2] குதிரை மேலுள்ள மாற்றார் படைவீரரின் கால்களைச் சோழ வீரர்கள் வெட்டி வீழ்த்துகின்றார்கள்; வெட்டப்பட்ட கால்கள் கீழே ஓடிக்கொண்டிருக்கும் இரத்த வெள்ளத்திலே வீழ்ந்து கருஞ் சுறாமீன்போல் காட்சி தருகின்றன,[3] நினைத்தலே நமக்கு அச்சந் தருகின்றது. சோழன் அம்பு தொளைத்த காரணத்தால் சேரனின் யானைகள் செந்நிற யானைகளாகத் தோற்றம் அளித்தனவாம். யானைப் போர் தான் மிகுத்துச் சொல்லப்படுகின்றது. பாதிக்கும் மேற்பட்டவை யானைச் சிறப்பின வருணனை. கருங்குன்று போன்ற யானை செங்குன்றாக மாறிற்றாம் போர்க்களத்திலே,

"ஓவாக் கணைபாய வொல்கி யெழில்வேழந்
தீவாய்க் குருதி யிழிதலாற் செந்தலைப்
பூவலங் குன்றம் புயற்கேற்ற போன்றவே" (கஉ)

என்றும்

---

1. பாட்டு: - அ. 1. பாட்டு: சு. 2. பாட்டு: க.

"அஞ்சனக் குன்றேய்க்கும் யானை அமருழக்கி
இஞ்சிலிகக் குன்றேபோல் தோன்றும்" (எ)

என்றும்,—இதே கருத்தை இன்னும் பல இடங்களிலும் விளக்கிக் கூறிப் போர்க்களத்தின் கோரக் காட்சியினை நமக்குக் காட்டுகிறார் பொய்கையார். எங்காவது நாம் 'செங்காகம்' பார்த்திருக்கிறோமா? ஆனால் சோழன் போரிட்ட போர்க்களத்திலே செங்காகம் பறந்ததாம். சோழனின் அம்பாலும், வேலாலும் திறக்கப்பட்ட மாற்றார் மேனியிலிருந்து வடியும் இரத்தத்தினை உண்டு, அதன் மேல் படிந்து விளையாடிய காரணத்தால் கருங்காகம் செங்காகம் ஆகிவிட்டதாம். பாட்டைப் பாருங்கள் :

"தெரிகணை எஃகம் திறந்தவாய் எல்லாம்
குருதி படிந்துஉண்ட காகம்—உருவிழந்து
குக்கில் புறத்த சிரல்வாய, செங்கண்மால்
தப்பியார் அட்ட களத்து" (அ)

சோழ வீரரால் துணிக்கப்பட்ட மாற்றான் கையையும், காலையும் வாயிற் கவ்விக்கொண்டு பருந்துகள் வானத்திற் பறந்து செல்லுகின்றன.[1] செங்குருதி வெள்ளத்தில் பிணங்கள் மிதந்து வருகின்றன, பிணத்தைக் கவ்விக்கொண்டு நரிகள் ஓடுகின்றனவாம்.[2] கணவனை இழந்த மகளிர் காற்றால் அலைவுற்ற மயிலைப்போல அலைகின்றார்களாம்;[3] எங்கும் பிணக் குவியல்,—மடிந்து விழும் மக்கள்—யானைக் கூட்டம்—ஓடி ஒளியும் மாற்றார்—பறந்து வட்டமிடும் கழுகு—இவை போன்ற கோரப் போர்க்களக் காட்சியினை நாம் களவழி நாற்பதில் காணுகிறோம். இதைக் கேட்டு மகிழ்ந்தானும் அந்தக் கருணை வள்ளலாகிய "சோழன் செங்கணான." சேரன் கணைக்காலிரும்பொறைக்கு விடுதலையும் தந்தானாம். இந்தப் போர்க்கள வருணனைகளைக் கேள்விப்பட்டவுடன் "அசோகனாக" மாறியிருந்தானானால் நன்றாக இருந்திருக்கும்—மாறாக மகிழ்ந்திருக்கிறான். ஒரு வேளை தமிழ்க்கவிதையின் இனிமையில் மகிழ்ந்தானோ

1. பாட்டு: உக  2. பாட்டு: உச.  3. பாட்டு: உக.

என்னவோ? அக் காலப் போர் வெறியின் உச்சத்தைத் தான் நாம் "களவழி" யில் காண்கிறோம்.

மாதத்தில் விளக்கேற்றி அலங்கரிப்பது மரபு. களவழி தோன்றிய காலத்திலும் இந்த நிகழ்ச்சி இருந்தது என அறிகிறோம். வீரர்களின் மார்பில் அம்பு பட்டு வடிந்துகொண்டிருக்கும் இரத்தம் கார்த்திகை விளக்குப்போல இருந்தது எனப் புலவர் கூறுகிறார்.[1] யானைப் படைகளைப் பயன்படுத்தும் வழக்கம் மிகுதியாக இருந்தது.

மன்னன் ஒருவனின் விடுதலைக்காகப் புலவர் எடுத்துக் கொண்ட முயற்சியும், விடுதலை வாங்கித் தந்த தமிழ்க் கவிதையின் திறத்தினையும் நாம் "களவழி" மூலம் அறிகிறோம்.

## கார் நாற்பது

போரின் கொடுமையினைக் கண்ட நாம் இப்போது காதல் கனி தூங்கும் கவின் மரச் சோலையாகிய "கார் நாற்பதினுள்" நுழைவோம்.

தமிழகச் சான்றோர்கள் நிலத்தை ஐந்து வகையாகப் பிரித்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன அவை. ஒவ்வொன்றினுக்கும் கருப்பொருள், ஒழுக்கம், சிறுபொழுது, பெரும்பொழுது இவையெல்லாம் வகுத்தனர். இந்நிலங்களை யெல்லாம் பொதுவாக "ஐந்திணை" என அழைப்பது மரபு.

முல்லைத்திணை காடும் காடு சார்ந்த இடமும் ஆகும். தூது காரணமாகவோ, பொருள் சேர்க்கும் பொருட்டோ, போரின் நிமித்தமோ, தலைவன் தலைவியைப் பிரிந்து விடுகிறான். "பிரியேன்! பிரியில் உயிர் தரியேன்" என்றெல்லாம் அன்று கூறி மணஞ் செய்த தலைவன்—இன்று தலைவியை நோகப் பிரிந்து விடுகிறான். கார் காலம் ஆரம்பமானதும் வந்து விடுவதாகக் கூறிவிட்டுச் சென்றான். என்ன செய்வாள் தலைவி!

1. பாட்டு· கஎ

"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு." (குறள் : ககஅசு)

என்பது தலைவனுக்குத் தெரியவாபோகின்றது. விதி வலிது எனக் கார்காலம் வருமவரை ஆற்றியிருந்தாள் தலைவி (இப்படி ஆற்றியிருப்பதுவே முல்லைத்திணைககு உரிய ஒழுக்கம்). காரும் வநதது; ஆனால காதலரின் தோதான வரவில்லை. "கன்னல் எனும கருங குருவி கனக மழைக்கு ஆற்றாமல், மின்னல் எனும புழு எடுதது விளக்கேற்றும்" கொடிய கார் காலம் அவளை வாட்டிற்று காா காலம வநதால் கட்டாயம் வந்து விடுவாரே! அவர் வந்தால் காாகாலம வந்துவிட்டது என்றல்லவா பொருள! பொய் சொலலவும் மாட்டாரே! என்றெலலாம ஏஙகுகிறாள தலைவி. "எப்படியும் வந்துவிடுவாா! ஆறறியிரு" எனத் தேற்றுகிறாள் தோழி! வாசலை நோக்குகிறாள தலைவி. காா காலததில் மலரும் கொன்றை மலா மலாநதிருக்கினறது. கார் வநது விட்டது என்பதைக் கொன்றை மரஙகள அறிவிக்கின்றன. கார் காலம் இல்லாமலும கொன்றை பூககும என முடிவு கட்டுகிறாள்—தன் காதலன் மேல அவவளவு நமபிக்கை அவளுக்கு,

"கொன்றைக் கானம காா எனக கூறினும்
யானோ தேறேன!
அவா பொய வழஙகலரே!"

எனபது தலைவியின உறுதியான எணணம.

காணாது நொநதுகொண்டிருக்கும வேளையிலே தலைவனும் தன் காதலியைக் காணாத தன அலுவலை முடிததுக் கொண்டு விரைவாக வருவான். ஓடுகின்ற மேகததினிடம ஓடாத தேரில தன் கூடு வருவதாகக் கூறி அம் மேகத்தையே காதலிக்குத தூது விடுவான். தேரை விரைவாக ஓட்டச் சொல்லிப பாகனை விரட்டுவான். ஆற்றாமையின் உச்சததில் இருவரும இருக்குமபோது "தேரொலிகேட்டுத் தலைவி மகிழ்ந்தாள்" என முடிப்பது வழககம். இவ்வகையாக முல்லைத் திணைக்குரிய நிகழ்ச்சிகள் செல்லும்.

"கார் நாற்பது" என்ற இந்த நூலும் இதுபோன்ற ஒரு நிகழ்ச்சியை நாற்பது வெண்பாக்களில் கூறுகின்றது. கார்காலத்தில் நடந்த நிகழ்ச்சியாதலால் 'கார் நாற்பது' எனக் காலம்பற்றி இந்நூல் பெயர் பெற்றது. தலைவன், தலைவி, தோழி, பாகன்—என நான்கு வாயில்கள் (பாத்திரங்கள்) இந்நூலில் வருகின்றார்கள். நாடக வழக்குப் போல வாயில்களே பேசுவதாக ஆசிரியர் அமைத்திருப்பது சுவையுடன் விளங்குகின்றது. கார் காலத்தின் சிறப்பினை யெல்லாம் தனித்தனியே கூறினால் படிப்போருக்கு வெறுப்புத் தோன்றலாம். ஆதலால் முல்லையின் ஒழுக்கமாகிய ஆற்றியிருத்தலை அடிப்படையாகக் கொண்ட நிகழ்ச்சி ஒன்றில் காரின் சிறப்பை அமைத்துச் சுவைபடப் பின்னியிருப்பது போற்றத்தக்கது.

இதன் ஆசிரியர் மதுரைக் கண்ணங் கூத்தனார் என்ற புலவர். இவருடைய தந்தை மதுரையைச் சார்ந்த கண்ணனார் என்றும் இவருடைய இயற்பெயர் கூத்தனார் எனவும் அறிகிறோம். இவர் திருமாலைப்பற்றியும்,[1] பலராமனைப் பற்றியும்[2] இந்நூலில் இரு இடங்களில் கூறியுள்ளார். எனவே இவர் வைணவராக இருக்கலாம் என எண்ண இடமிருக்கின்றது. இதிலுள்ள வெண்பாக்கள் ஒரூஉ, எதுகை முதலியன மிகுந்தும், இன்னிசையாகவும் இருத்தலால் கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் இவர் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது.

இந்த நூலின் நயத்தையும் போக்கையும் ஒரு சிறிது பார்ப்போம். இதில் வரும் தலைவன் பொருள் தேடச் சென்றான் என்ற குறிப்பும்,[3] போர் காரணமாகப் பிரிந்தான் என்ற குறிப்பும்[4] வருகின்றன. எனவே, பொருள் வயிற் பிரிந்தான்; வேந்தற் குற்றுழிப் பிரிந்தானென்று கொள்ளலாம். அவன் கார்காலம் வந்ததும் வருவேன் என்று கூறிப் பிரிந்தான்; தலைவியும் கார்காலம் வருந்

1. பாட்டு. க.  2. பாட்டு: கக.
3. பாட்டுகள் ௬, கக, கச.  4. பாட்டு: உக.

துணையும் ஆற்றியிருந்தாள். காரும் வந்தது; தலைவிக்கு ஆற்றுமை மீதூர்கின்றது; வானம நோக்கி நிற்கின்றாள்; கார் வானில் இருண்டு நீரைப் பொழிகின்றது; தலைவியின் கண்களும் நீரைப் பொழிகின்றன; இடையில் தோன்றித் தோழி தலைவியை ஆற்றுகிறாள்; வானம் மின்னுகிறது; அது தலைவர் வநதுவிடுவாா எனத தூது உரைப்பது போலத் தோழிக்குத் தோன்றுகிறது.[1] இடி இடித்து மழை பெய்வது தலைவியின் பொருட்டே நிகழ்வதாகத் தோழி கருதுகிறாள். பிரிவின் காரணமாகத் தலைவியின் மேனியில் பசலை படர்ந்து விட்டது. கார்காலம, அவள் பசலையினை நீக்கும் மருந்து எனத் தோழி கூறுகிறாள்[2] முல்லை மலர்ந் திருப்பதையும் குயில் வருநதுவதையும், மயில் ஆடி மகிழ் வதையும், தோழி தலைவிக்கு எடுததுக்காட்டி இன்னன வெல்லாம் கார்கால அறிவிபபுகள; ஆதலால், தலைவர் விரைவில் வந்துவிடுவார் எனச் சொல்லுகிறாள்; தலைவியோ கேட்கவில்லை, தலைவன்மேல் சினம் பொங்கு கின்றது. "இந்தப் பொல்லாதவர் இப்படியெலலாம் ஏமாற்றலாமா" எனறெல்லாம ஏஙகுகிறாள். "வரட்டும் அவரோடு ஊடல் கொளகிறேன" என உறுதிகொள் கிறாள். தோழியோ! "அம்மா! மழையோ பெய்ய ஆரம்பித்து விட்டது; அவர் | உறுதியாக வந்து விடுவார்! ஊடும நிலை எதற்கு"[3] என்கிறாள் தலைவி கேட்டால் தானே!

இவ்வேளை தலைவனும தான் சென்ற அலுவல் முடிந்த காரணததால் கார் காலம வநது விட்டது என வேகமாக வருகிறான். வழியில் மலர்ந்து நின்ற 'வெண்கடம்புகள்' அவனுக்குக் காாகாலததையும, தலைவியையும் நினைவு படுத்திவிடுகின்றன.[4] தேர் வரும் வழியிலே முல்லைக்காடு. இதைப் பார்த்தவுடன் அவள் முறுவலும் நுதலும் நினைவுக்கு வருகின்றன.[5]—எரிகின்ற தீயிலே எண்ணெய்

1. பாட்டு: உ. 2 பாட்டு: ச.
3. பாட்டு: உங. 4. பாட்டு: கரு.
5. பாட்டு: உக.

யைப்போல—கார் காலம் வந்துவிட்டது பேதை வருந்துவாள் என இவன் வருந்துகிறான்.[1] பாகனிடம் விரைந்து குதிரைகளைத் தூண்டுமாறு சொல்லுகிறான்.

> செல்வ மொழி மதாக்கண் சின்மொழிப் பேதையூர்
> நல்விருந் தாக நமக்கு." (பாட்டு ௩௬)

எனக் காதலியோடு மகிழப் போகும் நினைப்பால் வேகமாக வருகிறான் தலைவன். தலைவியோ இவ்வளவு நாள் ஆற்றியிருந்து இப்போது ஆற்றாமை மிகுதியால் தவிக்கிறாள்.

> "நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட
> தலைநாள் விளக்கில் தகையுடைய வாகிப்
> புலமெலாம் பூத்தன தோன்றி: சிலமொழி
> தூதொடு வந்த மழை"

எனக் கார்காலம் வந்து விட்டதைத் தோழி சான்று காட்டிக் கூறி, "அவர் வந்து விடுவார்" எனக் கூறுகிறாள். இறுதியில், இப்போது உறுதியாக 'அவர் வந்து விடுவார்' என்று கூறுவதோடு நூல் முடிகின்றது.

இதன்பின் என்ன நடந்திருக்கும் என்பதை நம் கற்பனைக்கு விட்டுவிட்டார் ஆசிரியர். தலைவன் வந்தவுடன் "ஊடல் கொண்டாளா" அல்லது,

> " ...... .. ............... ........ ........... .....
> காணுக்கால் ஆயிரமும் சொல்லுவேன் கண்டக்கால்
> பூணாகம் தாவென்று புல்லப் பெறுவேனோ
> நாணோடு உடன்பிறந்த நான்."

என்று ஒரு பெண் சொல்கிறாளே அதுபோல் செய்தாளோ! கற்பனையில் உணர்ந்து கொள்ளுங்கள்.

கார்நாற்பதில் எல்லாப் பாடலுமே சுவையுடன் செல்லுகின்றன. கார்த்திகையில் விளக்கேற்றும் வழக்கம்

---

1. பாட்டு: ௩௨.

உண்டு என உணர்கிறோம் மாயோனையும், பலராமனையும், வேள்வித் தீயையும் பற்றிய குறிப்புகள் இந்நூலில் வருகின்றன. கார்காலத்தின் இயல்புகளை யெல்லாம் கவி நயத்துடன் பாட்டில் இணைத்திருப்பது போற்றத் தக்கது.

பொதுவாக,

"முல்லைக் கொடிமகிழ மொய்குழலார் உள்மகிழ
மெல்லப் புனல்பொழியும் மின்னெழில்... .."

கார்காலத்தின் இன்பத்தினை நாமும் அனுபவிக்கிறோம்.

இதுவரை 'நானாற்பது' என்ற தொகுப்பிலுள்ள நான்கு நூல்கள்பற்றி ஒருவகையாக அறிந்தோம். மக்கள் வாழவேண்டிய முறையினையும், ஒழுக்கச் சிறப்பினையும் செய்வன இவை, செய்யத் தகாதன இவை என்பனவற்றையும் இன்னா—இனியவை நாற்பதில் கண்டோம். போர்க்கள வருணனையையும், விடுதலை வாங்கித் தந்த தமிழ்க் கவியின் சாதனையையும் களவழியில் பார்த்தோம். தலைவியின் ஏக்கத்தையும், அதை நீக்க ஓடோடி வரும் தலைவனின் வேகத்தையும் கார் காலம் தரும் இன்ப வேதனையையும் கார் நாற்பது நமக்குக் காட்டிற்று. தமிழக இலக்கிய வரலாற்றின் திருப்பு மையமாக இவை திகழ்கின்றன—காலத்தால் அழிந்துபடாத இவ் இலக்கியங்கள் தமிழ் நாடு உள்ளவரை வாழும்!

# V. ஐயைந்திணை

## க. எழுபதும் ஈரைம்பதும் - -

[வித்துவான், திரு. அ. க. நவநீத கிருட்டிணன்]

### தோற்றுவாய்

திக்கெல்லாம் புகழுறும் திருநெல்வேலியில் நிகழும் பத்தாவது தமிழ்த்திருநாள் இரண்டாம்நாள் இடம்பெற் றுள்ள பதினெண்கீழ்க்கணக்கு மாநாட்டில் எனக்கு வழங்கியுள்ள பணி 'எழுபதும் ஈரைம்பதும்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்துவதாகும். சிறப்புடைய இவ் உரைப் பணியினைச் சிற்றறிவுடைய எளியேற்கு அளித் தருளிய இருபெருங் கழகத்தார்க்கும் கனிவும் பணிவும் கலந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

இனிமை நலம் கொழிக்கும் இன்பத் தமிழ்மொழிக்கு இலக்கணம் அமைந்திருப்பது போன்று, எந்த மொழிக்கும் அமையவில்லை என்பது பன்மொழி அறிந்தார் திருந்திய கருத்தாகும். தமிழில் உள்ள எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐவகை இலக்கணங்களுள் நடுவண தாகிய பொருள் இலக்கணம் எந்தப் பிறமொழிக்கும் இல்லாத தனிச் சிறப்புடையது. இது நாகரிகமிக்க தமிழர் தம் நல்வாழ்வு முறைகளை வகுத்துரைக்கின்றது. இங்ஙனம் மக்கள் வாழ்வுக்கு இலக்கணம் வகுத்த பெருமை தமிழ் மொழி ஒன்றற்கே உண்டு.

மக்கள் வாழ்வை அகம், புறம் என இருவகைப் படுத் தினர் தொல்காப்பியர் போன்ற இலக்கண ஆசிரியர்கள்.

இவ் உலகில் பெறும் உறுதிப்பொருள்களாகிய அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள் இன்பத்தைப் பற்றியனவெல்லாம் அகப்பொருள் எனப் பகுத்தனர். ஏனைய அறமும் பொருளும் பற்றியனவெல்லாம் புறப் பொருள் என்று பகுத்தனர். இவை பற்றிய ஒழுக்கங்களைத் திணை என்று குறித்தனர். வாழ்வொழுக்கங்களில் வகை யுற நிகழும் பலவேறு நிகழ்ச்சிகளைத் துறைகள் என்று வகுத்தனர். ஆற்றில நீராட இறங்கும் துறைகளைப் போன்று, உலக வாழ்வில் இன்ப நுகர்வுக்குச் செல்லும் இடங்கள் துறைகள் என்று குறிக்கப்பெற்றன இத்தகைய அகத்துறை, புறத்துறை இலக்கணங்களால் அணிபெற்ற அருந் தமிழ் மொழியினை, மணிமொழிப் பெருமானார்,

> "சிறைவான் புனல்தில்லைச் சிற்றம்
> பலத்தும்என் சிந்தையுள்ளும்
> உறைவான் உயர்மதிற் கூடலின்
> ஆய்ந்தஒண் டீந்தமிழின்
> துறை"

என்று நயம்படப் பாராட்டினர். ... தால் பெருமையுற்ற இனியமொழி என்பதை 'ஒண்டீந் தமிழ்' என்ற தொடரால் குறித்த நயம் வியத்தற்குரிய தாகும். புறத்துறை வீரத்தால் புகழ்பெற்ற தமிழை ஒண்டமிழ் என்றும், அகத்துறை இன்பத்தால் இனிமை யுற்ற தமிழைத் 'தீந்தமிழ்' என்றும் கொண்டு, 'ஒண்டீந் தமிழ்' என்று குறித்தருளிய திறத்தை என்னென்று போற்றுவது! இவ் உண்மையையே திண்மையுற வலி யுறுத்த எண்ணிய குமரகுருபர அடிகளார், "நறை பழுத்த துறைத் தீந்தமிழ்" என்று நாவாரப் போற்றினர்.

ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக் கூட்டத்தின் பின்னர் அவ் விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதாய பொருள்

அகம் எனப்படும். அஃது அகத்தே நிகழ்கின்ற இன்ப மாதலின் அகமெனப்பட்டது. இதனை ஒழிந்தன, ஒத்த அன்புடையார் தாமேயன்றி, எலலோரும் துய்த்து உணரப்படுதலானும், இவை இவ்வாறு இருந்தவெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும் அவை புறமெனப்படும்.

இவற்றுள் இன்பததைப் பற்றிய அகவொழுக்கங்கள் குறிஞ்சி, முல்லை, மருதம, நெய்தல், பாலை என ஐநதிணை களாகப் பகுக்கபபெறுமு. இவை 'அன்பின ஐநதிணை' என்றே குறிக்கபபெறும். இவைகளுள முதல் நான்கற்கே நிலம் வகுத்தார தொல்காப்பியர். பாலையை நடுவுநிலைத் திணையென நவின்றார்.

> "முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
> நல்லியல் பழிந்து நடுஙகுதுயர் உறுத்துப்
> பாலை என்பதோர படிவம் கொள்ளும்"

என்று பாலைக்கு இலக்கணம் வகுபபர் இளங்கோவடிகள நால்வகை நிலததிறகும இடையிடையே வேனில் கொடுமை யால் வெந்தழிநத நிலமெலலாம் பாலையெனவே பகரப்படும். மேலும், புணர்தற்கும் இருததற்கும் இடையே பாலைக்குரிய பிரிவொழுக்கம நிகழும். அஃதன்றி உலகியல் பொரு ளாகிய அறம பொருள இன்பம என்பவற்றுள் நடுவணதாய பொருட்குத, தான் காரணமாய் அமைவது ; இன்ன பல காரணஙகளால் பாலைததிணை நடுவுநிலைத்திணை என லாயிற்று.

இவ் ஐந்திணைகட்கும் முதல், கரு, உரி என முப் பொருள்கள மொழியப பெறும நிலமும பொழுதும் முதலெனப்படும். தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, செய்தி, யாழ் முதலாயின கருபபொருள் எனப்படும். நாற்கவிராச நம்பி நல்கிய அகபபொருள் விளக்கம்,

> "ஆரணங்(கு) உயர்ந்தோர் அல்லோர் புள்விலங்(கு)
> ஊர்நீர் பூமரம் உணாப்பறை யாழ்பண்
> தொழிலெனக் கருஈ ரெழுவகைத் தாகும்,"

என்ற நூற்பாவால் கருப்பொருளைப் பதினான்கு வகையெனப் பகுக்கும். தெய்வம், உயர்ந்தோர், தாழ்ந்தோர், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம, உணவு, பறை, யாழ், பண், தொழில் என்று கருப்பொருளைப் பதினான்கு வகைப் படுத்தார், நம்பி.

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேரும் காலைத் திணைக்குரிப் பொருளே"

என்னும தொல்காப்பியரது நூற்பாவால் புணர்தல், பிரிதல், இருததல, இரங்கல், ஊடல், இவற்றின் நிமித்தம் என்ற பத்து வகையினை உடையது உரிப்பொருள் என்று அறியப்படும்.

இங்ஙனம் முப்பொருள்களையுடைய திணைகளைத் தொல்காப்பியர் முறைப்படுததிய வகை வேறு, பிற்கால இலக்கண ஆசிரியர்கள் முறைப்படுத்திய வகை வேறு.

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"

என்றார் தொல்காப்பியர்.

"குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்(கு) எய்திய பெயரே"

என்பது நமபி அகப்பொருள். தொல்காப்பியர் தமது நூற்பாவில் 'சொல்லவும் படும்' என்ற உம்மை எதிர்மறையாகலின், இமமுறையன்றிச் சொல்லவுமபடும் என்பது பொருளாயிற்று. இது தொகை நூல்களினும் கீழ்க்கணககு நூலகளினும் இம்முறை மயங்கிவரக கோததவாறு காண்க என்பா தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர்.

சங்கததுச் சானறோர் பலரால் பாடப்பெற்ற பாக்களையும் நூல்களையுமப் பதினெண் மேற்கணககு என்றும், பதினெண் கீழ்க்கணககு என்றும வகுததுத் தொகுத்தனர். கணக்கு என்ற சொல் நூலைக் குறிக்கும்.

"உணற்கினிய இன்னீர் பிறிதுழிஇல் என்னும
கிணற்றகத்தத தேரைபோல் ஆகார்—கணக்கினை
முற்றப் பகலும் முனியா(து) இனிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று."

என்பது பழமொழிப் பாடல். இதன்கண் உள்ள கணக்கு என்னும் சொல், நூலையே குறிக்கும் நூல்களைக் கற்பிக்கும் ஆசிரியர் 'கணக்காயா' என்று குறிக்கப்பெற்றூர். மதுரைக் கணக்காயனுர் மகனுா நக்கீரர் என்னும் நல்லிசைப் புலவர். இனி, மேல கீழ் என்பன அடிகளின் பெருக்கத்தையும் சுருக்கததையும குறிப்பனவாகும்.

"அடிநிமிர்(பு) இல்லாச செய்யுள் தொகுதி
அறம்பொருள் இன்பம அடுக்கி அவவகைத
திறம்பட உரைப்பது கீழக்கணக காகும்."

என்பது பனனிரு பாட்டியலுள காணும நூற்பாவாகும். பெரும்பான்மையும வெண்பாக்களால அமைந்து, அறம் பொருள் இன்பம எனனும முபபாற் பொருளையும பற்றி வரும நூல்கள் கீழ்ககணககு எனபபட்டன இததகைய பதினெட்டுக் கீழ்க்கணக்கு நூல்களுள் அகததுறை பற்றியனவாக ஆறு நூல்கள் உள. அவை கார் நாற்பது, ஐந்திணை ஐமபது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைமபது, திணைமொழி ஐமபது, கைந்நிலை என்பன. இவ் ஆறனுள் நடுவண் நின்ற நான்கு நூல்களையும நாலைந்திணை என்பர். கார் நாற்பது என்னும நூல, தலைவியைப் பிரிந்து கார்ப்பருவத்தே வந்து பொருந்துவதாகச் சொல்லிச் சென்ற தலைவனது மனநிலைகளையும, குறிதத பருவம் வந்தும் தலைவனைக் காணுமையால் நிலைகலஙகும் தலைவியின் உளநிலைகளையும் சிததிரிக்கும சில துறைகளைக் கொண்டு நடப்பதாகும. மறறை ஐநது நூல்களும ஐந்திணைப் பாகுபாடுகளையுடையது. அகத்திணைத துறைகளைக் கொண்டு நடப்பது.

தமிழில் அகததுறை இலககியமாகத் திகழும் கோவை நூலுள், கருத்தொருமிதத காதலர் வாழ்வு படிப்படியாகச்

சித்திரித்துக் கொண்டு வருதலைக் காணலாம். அத்தகைய கோவை நூல் முறையில் துறைகள் நிரல்பட்த தொகுக்கப் பெறவில்லை. அவ்வத்திணைக்குரிய பல்வேறு துறைகளில் பாக்கள் அமைந்துள்ளன. திணை வைப்பு முறைகளும் முன்பின் முறை பிறழ்ந்தும் அமைந்துள்ளன. இங்ஙனம் ஐந்திணை பற்றிய ஐந்து நூல்களுள், இங்கு ஆராய எடுத்துக் கொண்ட நூல்கள் மூன்று அவை ஐந்திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது என்பன.

## உள்ளுறை உவமம்

அகத்துறைப் பாக்களுள் எடுத்தாளப் பெறும் பொருள் வகைகளில் உள்ளுறை உவமம் என்பதொன்று. புலவன் பாட்டுள், தான் சொல்ல எண்ணிய கருத்தைச் சொல்லாத வழியும் கேட்டோர்க்கு இவன் கருதிய பொருள் இதுவாகும் என்று ஆராய்ந்து கொள்ளுதற்குக் கருவியாகிய சில சொற்களை அமைப்பது உள்ளுறை உவமம் என்பர் நச்சினார்க்கினியர்.

"உள்ளுறுத்(து) இதனோ(டு) ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத்(து) இறுவதை உள்ளுறை யுவமம்"

என்பது தொல்காப்பியரது நூற்பா.

புலவன் தனது பாட்டில் புலப்படக் கூறும் உவமையுடன் புலப்படக் கூறாத உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாக என்று தன் உள்ளத்தே கருதி, அப்பாட்டைக் கேட்டோர் உள்ளத்திலும் அவ்வாறே நிகழுமாறு செய்து அங்ஙனம் உணர்த்துதற்கு உறுப்பாகிய சிறப்பான சொற்களைக் கொண்டு முடிப்பதாகும்.

" உள்ளுறை யுவமம் உய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்."

என்பர் அகப்பொருள் ஆசிரியர்.

கருத்தொருமித்த காதலர் வாழ்வை முறையாகச் சித்திரித்துக் காட்டும் செந்தமிழ் நூல் கோவை எனப்படும்.

கோவை நூல்களுள் தலைமை சான்றது திருச்சிற்றம்பலக் கோவையார். அந் நூலின் இணையற்ற பெருமையால் திருக்கோவையார் என்றே குறிக்கப்பெறும். அதனைப் பாடியருளிய ஆசிரியர் மாணிக்க வாசகர் "பாவை பாடிய வாயால் கோவை பாடுக!" என்று இறைவனே வேண்டிக் கொள்ள மணிவாசகரால் பாடப்பெற்ற மாண்புடையது. காதல் வாழ்வில நிகழும பல்வேறு நிகழ்ச்சிகளை முறையே நானூறு துறைகளாக வகுதது அவற்றிற்குத் தேனூறும் தீந்தமிழ்ப் பாக்களை ஆக்கியுள்ளார அந்நூலில் காணும் துறைகளில் 'இடமணித்தென்றல்' என்பது ஒரு துறை. அத்துறைக்கண் அமைந்த அழகிய பாட்டைக் காண்க:

"வருங்குன்றம் ஒன்றுரித்தோன் தில்லை
அம்பல வன்மலயத்(து)
இருங்குன்ற வாணர் இளங்கொடி
யேஇடர் எய்தலெம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்களப்
பத்தொளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுகம்
ஏய்க்கும் கனங்குழையே."

இப் பாட்டில் உள்ளுறை உவமம் என்னும் அகப் பொருள் அணிநலம் அமைந்துளளது. இளங்கொடி போல் வாய்! யான் பிரிந்து செலகிறேன் என்று பெருந்துயர் கொள்ளாதே. இதோ! கூப்பிடுதூரத்தில்—மிகவும் அண்மையில்தான் எனது ஊர் அமைந்துள்ளது. எனது ஊர்க்கண் உள்ள மலையன்ன பெருமாளிகைகளில் சந்தனச் சாந்தைச் சந்தமுறப் பூசியுள்ளனர். அந்தப் பேரொளி உனது ஊர்க் கருங்குன்றததினமேல் பாய்ந்து வீசுகிறது. அக் காட்சி கருஙகுன்றம வெண்ணிறச் சட்டை அணிந் திருப்பதுபோல அழகுற்று விளஙகும அவ்வளவு அண்மை யில்தான் என்னூர் உள்ளது என்று கூறிய தலைவன் மொழியில் உளளுறை பொருள் ஒன்று உள்ளத்தை அள்ளுவதாக அமைநதுளளது. எனது ஊர்ப் பெரு மாளிகையின் நறுஞ்சாந்து ஒளியினால் உனது ஊர்க் கருங்

குன்றம் அழகுற்றது போன்று, நீயும் என்னால் என்றும் குன்றாத எழிலைப் பெறுவாய் என்பது உறுதி என்ற கருத்தையும் தலைவிக்கு அறிவுறுத்திய தலைவன் திறம் மணிவாசகரின் நுண்மாண் நுழைபுலத்தையன்றோ விளக்கி நின்றது!

இத்தகைய உள்ளுறை உவமங்கள் பலவற்றை ஐந்திணை நூல்களில் கண்டு மகிழலாம். இஃதன்றி இறைச்சிப் பொருள் என்பதொன்றையும் அகபொருள் பாக்களில் அமைந்து அழகு செய்வதைப் பார்க்கலாம்.

## இறைச்சிப் பொருள்

பாட்டில் கூறப்படும் பொருளின் புறத்தே கருப் பொருளால் புலப்பட்டு அப் பொருட்கு உபகாரப்படும் பொருள் தன்மையுடையது இறைச்சி என்பர் நச்சினார்க்கினியர். இது பெரும்பான்மையும தலைவன் கொடுமை கூறும வழிப் பிறப்பதென்பா.

"இறைசசி தானே பொருட்புறத ததுவே"

என்பர் தொல்காப்பியர்

"கருப்பொருட் பிறக்கும இறைசசிப் பொருளே."

என்பர் அகப்பொருள் ஆசிரியர்.

"வெடிக்கின்ற இப்பியுள் நித்திலம்
பைத்தலை வெம்பகுவாய்த்
துடிக்கின்ற திஙகளில் தோன்றும்
துறைவ! செஞ் சொற்புலவோர்
வடிக்கின்ற முத்தமிழ் மாணன்தென்
மாறையெம் மான்மருங்கை
ஒடிக்கின்ற கொங்கைகண் டாலெவர்
நெஞ்சுரு காதவரே!"

என்பது 'பிறர்வரைவு உணர்த்தல்' என்ற துறையில் அமைந்த இனிய பாடல். இது தஞ்சைவாணன் கோவை

என்னும் நூலில் உள்ள, நெஞ்சை அள்ளும் செஞ்சொல் பாடலாகும்.

தோழி, தலைவனுக்குத தலைவியைப் பிறர் மணம்பேசி வந்த செய்தியைத் தெரிவிக்கிறாள். "தலைவியோ பருவ முற்ற உருவெழில் திருமகள் அனையாள்; அவளுடைய உளங்கவர் நலங்களைக் கண்டு உருகி மணந்துகொள்ள மனங்கொள்ளாதார் யாவர்? பலரும் அவளை மணம் விரும்பி வருகின்றனர். ஆனால், தலைவனே! உன்மீது கொண்ட காதல் பெருக்கால் பாம்பின் வாயில் அகப்பட்ட பனி மதியைப் போலத் தலைமகள் இல்லுள் இருந்து துடி யாய்த் துடிக்கிறாள் என்ற கருத்தைச் சொல்லாமல் அவன் அறிந்து கொள்ளுமாறு செய்யும தோழியின் சொன்னயம் எண்ணி யெண்ணி இன்புறத் தக்கதாகும.

வெடித்த சிப்பிக்குள் பளிச்சுப் பளிச்சென்று ஒளி வீசிக்கொண்டிருக்கும் முததிற்கு இராகுவின் வாய்ப்பட் டுத் துடிக்கும நிறைமதியை ஒபபிட்டாள். இக் கருப் பொருளால் தலைவியின இற்செறிப்புண்ட நிலையையும் உள்ளத துடிப்பின் நிலையையும தலைவற்கு இறைச்சிப் பொருள் நலத்தால் இனிது அறிவுறுத்தினள்.

## ஐந்திணை எழுபது

முதற்கண் ஐநதிணை எழுபது என்னும் நூலை நோக்கு வோம. இந்நூல் ஒவ்வொரு திணைக்கும் பதினான்கு பாக் களைக் கொண்டது. ஆதலின் ஐநதிணை எழுபது எனப் பெயர்பெற்றது. இந்நூலில் இப்போது அறுபத்தாறு பாக்களே உளளன. இப் பாக்கள இன்னிசை, நேரிசை வெண்பாக்களாக விளங்குகினறன. இதன்கண் நூலுக்குப் புறமபாகக் கடவுள் வாழ்ததுப் பாடல் ஒன்றுண்டு. அஃது யானைமுகக் கடவுளைப்பற்றிய வாழ்த்து. தமிழகத்தே விநாயக வழிபாடு கி. பி ஏழாம் நூற்றாண்டிற்குப் பின் னரே எழுநதது என்பர். இந நூலுக்குப் பழைய உரை ஒன்றுளது. இக் கடவுள்வாழ்த்துப் பாடலுக்கு அவ்வுரை

காணப்பெற வில்லை. பாவின் போக்கும் வாக்கும் பழமையைப் புலப்படுத்தவில்லை. இக் காரணங்களால நூலாசிரியரால் கடவுள்வாழ்த்துப் பாடல் பாடப்பெறவில்லை என்பது தேற்றம்

இந்நூலை இயற்றிய ஆசிரியர் மூவாதியார் என்னும் முதுபெரும் புலவர். இவரைச சமண சமயத்தினர் என்பர் சிலர். அவ்வாறு கூறுதற்குத் தக்க சான்று ஒன்றேனும் இல்லை. இவ்வாசிரியரைபபற்றிய வேறு செய்திகளும் அறிய வழியிலலை ஐந்திணை ஐம்பதுள் காணும் சில பாடல் அடிகளை மூவாதியாா, தம் நூலுள் எடுத்தாண்டுள்ளனர் ஆதலின் அந்நூலைப் பாடிய மாறன் பொறையனா காலத்திற்குச் சிறிது பிற்பட்டவராக இருத்தல் வேண்டும். இவரது காலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு எனபர் ஆராய்ச்சியாளர்.

பதினென் கீழ்க்கணக்கைச் சார்ந்த ஐந்திணை நூல்களுள் திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலே முன்னர் வைத்து எண்ணத்தக்க நன்னூலாகும். அதற்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றத் தக்கது ஐந்திணை எழுபது. இந்நூலின் பாக்கள சில, இளம்பூரணர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்களால் தொல்காப்பிய நல்லுரைக்கண் மேற்கோள் பாக்களாக எடுத்தாளப் பெற்றுள்ளன. இந்நூலில் திணைகள குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற வைபபு முறையில அமைந்துள்ளன. இன்பத் தொடக்கமாகிய புணர்ச்சி ஒழுக்கததையுடைய குறிஞ்சியை முதற்கண் அமைத்தார். அப்புணர்ச்சியால் பெற்ற பேரன்பு மாறாது இல்லிருத்தலாகிய முல்லையை அடுத்தமைத்தார். அவ் அன்பின் உண்மையையும திண்மையையும கண்டறிதற்குக் காரணமாகிய பிரிவொழுக்கத்தைக் கொண்ட பாலையை முலலையின் பின் அமைததார். பிரிவின் பயனாகிய ஊடலையும் கூடலையும் பெரிதும் கொண்ட மருததை அப் பாலையின் பின்னே அமைத்தாா. இவையெல்லாம் பேரின்பத்தைப் பெறுதற்குரிய பெருவழியென்பது அறிந்து இரங்கிடவே இரங்கலாகிய நெய்தலை இறுதிக்கண்

உறுதி தோன்ற உரைத்தார். மூவாதியார் மேற்கொண்ட இத்திணைவைப்பு முறை இணையிலா இன்பம் பயப்பதாகும்.

## குறிஞ்சி

இந்நூலின் குறிஞ்சித் திணைப் பகுதியுட் காணும் சில இயற்கைக் காட்சிகள் சிந்தைக்கு இன்பம் தந்து நிற்கின்றன. மலைச்சாரலில் தினைப்பயிர்கள் செழித்து வளர்ந்துள்ளன அவற்றின்மேல் அவரைக் கொடிகள் பின்னிப் படர்ந்துள்ளன. இத் தினைக்கொல்லையில் இளங் கவரி மான்கள் புகுந்து நறும்பயிரை மேய்கின்றன. மழையால் நீர் பெருகி மலையுச்சியிலிருந்து விழும் அருவி, சாரலிலுள்ள தினைப்புனத்தே கிடக்கும் அகிற் கட்டைகளை அள்ளிச் செல்கின்றது. மலையைச் சூழ்ந்த பொழில்களில் இலையடர்ந்த மல்லிகைக் கொடிகள் நிறைந்து படர்ந்துள்ளன. காந்தட் செடிகளில் கொத்துக் கொத்தாகப் பூக்கள் பூத்துள்ளன. ஆங்குள்ள பாங்குறு பலவின் தீம்பழச் சுளைகளை உண்டு, நீர் வேட்கையுடன் குரங்குகள் நீளத் திரிகின்றன. பொழிலின் நிழலில் காட்டுப் பசுக்கள் உறங்கிக்கொண்டிருந்தன. அவற்றின் மடியைக் குரங்குகள் பற்றி வருடின. கன்றுகளோ என்று எண்ணிய காட்டுப் பசுக்கள் பாலைச் சுரக்கக் குரக்கினம் அதனைப் பருகி வேட்கை தீர்ந்தன. அப்பொழிற்கண் வானுற ஓங்கி வளம் பெற வளர்ந்த வேங்கை மரங்கள் பொன் போன்ற பூங் கொத்துக்களைப் பூத்துக் குலுங்குகின்றன

மலைக்கண் உள்ள தண்சுனைக் கரைகளில் தேமா மரங்கள் திகழ்கின்றன. அவற்றின்மேல் மிளகுக் கொடிகள் வளர்ந்து படர்ந்துள்ளன. மாவில் கனிந்த நறுங்கனிகள் சுனைநீர் துள்ளுமாறு நீரில் வீழ்கின்றன. வேடர் கூடும் மன்ற வெளிகளில் பெரும கற்பாறைகள நெருங்கி விளங்குகின்றன. அவற்றின்மேல் முசு என்னும ஒருவகைக் குரங்குகள் குதித்து விளையாடுகின்றன. மலைப் பாறைகளிலும் மரத்துச்சிகளிலும் அமைந்த தீந்தேன் அடைகளை வேடுவர் பற்றித் தேனைக் கவர்ந்து கீழே எறிந்துள்ளனர்.

அத் தேன் இறால்களை மான்குட்டிகள் தம் காற்குளம்புக ளால் மிதித்து உழக்குகின்றன. தினைக்கதிரை அரிந்த புனத்தே பன்றிகள் நிலத்தைக் கொம்பால் உழுகின்றன. அப் பன்றிகள் கிளறிய பள்ளங்களுள் ஆண் குரங்குகள் முதிர்ந்த வாழைக் காய்களைக் கனிவிக்க விரும்பி உளளே யிட்டு மண்ணை மூடிவைக்கின்றன. மலைவாழ் களிறுகள் மலைநெற் பயிரை மாந்தி மராமரப் பொழிலின் நிழலில் உறங்குகின்றன.

## துறை நலங்கள்

தலைவன் களவுப் புணர்ச்சியில் தலைவியைக் கலந்து மகிழ்ந்து சென்றான். தோழி அவனைக் கண்டு, எம் தலை வியை விரைந்து வரைந்து கொள்ளுதலே முறையென மொழிந்தாள். அதனைக் கேளாது வாளாவிருந்தான். அவன் தலைவியைக் காணுதற்குத் தினைப்புனத்தின் வேலிப் புறத்தே விருப்புடன் வந்து நின்றான். அவன் ஆங்கு நிற் பதைக் கண்ணுற்ற பொறுப்புடைய தோழி, அவனது இயல பைப் பழித்துரைத்தாள். அப்பழிப்புரை கேட்கப் பொறாத தலைவி, அவனது மாறாத அன்புடைமையை மன முவந்து கூறுகிறாள். தான் அவன் பால் கொண்ட அன் பையும், அத்தலைவன் தன்பால் கொண்டுள்ள அன்பையும் தலைவி தோழிக்குப் புலப்படுக்கும் திறம் வியப்பும் சிறப்பு முடையது.

தலைவி, எனது அகத்தைக் கவர்ந்த அணிமலை நாட்டை யான் உயிருடன் வாழும்வரைக்கும் பிரியமாட்டேன் என் றாள். அத தலைவனும் தன்பால் பேரன்பு பூண்டவன் என் பதை அவனது மலைநாட்டுச் சிறப்பைக் கூறுமுகத்தால் புலப்படுத்துகின்றாள். சாரலில் உள்ள பலவின் தீம்பழச் சுளைகளை உண்டுவந்த மந்திகள் நீர்வேட்கை கொண்டன. மரத்தடியில் படுத்துறங்கும் காட்டுப் பசுக்களின் கனத்த மடிகளைப் பற்றி வருடின. உறக்கத்தில் ஆழ்ந்த அப் பசுக் கள், தமது கன்றிடத்துக் கொண்ட அன்பால் பால் சுரந்து ஊட்டுவது போலப் பாலைச் சுரந்தன. அதனை உண்ட

குரங்குகள் நீர்வேட்கை தணிந்தன. அத்தகைய மலை நாட்டுத் தலைவன், எனது உளங்கவர்ந்த கள்வன். ஆதலின் அவன் காதலில் தீதிலன் என்று இறைச்சிப் பொருள் நலங்கனிய இயம்பும் தலைவியின் கூற்று, உள்ளம் குழைவிப்பதாகும.

"மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழம்
உண்டுவந்து மந்தி முலைவருடக்—கன்றமர்ந்(து)
ஆமா சுரக்கும் அணிமலை நாடனை
யாமாப் பிரிவ(து) இலம்"

என்பது மூவாதியாரின் பாவார்ந்த மொழி.

மேலும், அத்தலைவி தனது கருத்தைக் கவர்ந்த காதலன் மேதக்க சான்றோன் என்று கூறி இன்புறுகின்ற திறம், அவளது அன்பு நலத்தை இனிது புலப்படுத்தும்.

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்"

என்பர் சமணமுனிவர். தெய்வப் புலவராய திருவள்ளுவர்,

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு" (எஅஉ)

என்று மேதையர், பேதையர் ஆகிய இருவர் தம் நட்பையும் ஒருங்குரைத்தருளினர்

"ஒருநாட் பழகினும் பெரியவர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே"

என்று வலியுறுத்தினர் அதிவீரராமர். இக் கருத்துக்களை யெல்லாம் உள்ளடக்கித் தலைவி கூற்றாகச் சான்றோர் நட்பின் திட்பத்தைக் கூறும் புலவர் திறம் போற்றற்குரியதாகும்.

"சான்றவர் கேண்மை சிதைவின்றாய் ஊன்றி
வலியாகிப் பின்னும் பயக்கும் மெலிவில்
கயந்திகழ் சோலை மலைநாடன் கேண்மை
நயந்திகழும் என்னும்என் நெஞ்சு"

சான்றாண்மை மிக்க ஆன்றோர் நட்பு, ஒருநாள் பழகிய அளவிலேயே உறுதியாக வேரூன்றி விடும். நவில்தொறும் நயந்தரும் நன்னூலைப் போலப் பயில்தொறும் அவர்தம் நட்புப் பெட்புறும் இன்பத்தைப் பெருக்குமன்றோ! அஃதே போல், எனது மனங்கவர்ந்த தலைவன் தலைசிறந்த சான்றோனாதலின் அவனது அன்பு என்றும் குறைவின்றி நிறையும்; மேன்மேலும் இன்பத்தைப் பெருக்கும்; இங்ஙனம் என் நெஞ்சம் உறுதியாக எண்ணி இறுமாக்கும் என்று தலைவனைப்பற்றித் தோழியிடம் பெருமிதமாகத் தலைவி பேசுகிறாள். தலைவனைப் பழித்த தோழிக்கு அவனது அன்பின் பெருக்கை விளக்கும் தலைவியின் மொழிகளை நினைந்து இன்புறத்தக்கன.

பாங்கியிற் கூட்டத்தால் தலைவியைக் கூடிப் பிரியும் தலைமகனைக் கண்டு, விரைந்து மணம் புரிந்துகொள்ளுமாறு வற்புறுத்துகிறாள். அங்ஙனம் தலைவனைத் தோழி வரைவு கடாவும் திறம் நயமுடையதாகும். "தலைவ! இத் தலைவியை மறவாது காக்க; அவளுக்கு நின்னையன்றிச் சிறந்த உற்றார் எவருமிலர்; ஆதலின அவளை மணம் புரிந்து கொள்க" என்று சொல்லும் தோழி, "தலைவி இன்னுயிர் தாங்கும் மருந்தை ஈயாயோ?" என்று வேண்டுகின்றாள். தலைவியின் உயிரைக் காக்கும் மருந்து, திருமணம் ஒன்றே என்பதை நன்றாகப் புலப்படுத்துகின்றாள்.

"பொன்னிணர் வேங்கை கமழும் நளிசோலை
நன்மலை நாட! மறவல் வயங்கிழைக்கு
நின்னல(து) இல்லையால் ஈயாயோ கண்ணோட்டத்(து)
இன்னுயிர் தாங்கும் மருந்து"

என்பது அக் கருத்தமைந்த பாவாகும்.

மணத்தை வலியுறுத்தும் அத் தோழி மிகவும் குறிப்பாக அறிவுறுத்தும் திறம் அறிந்து இன்புறற்பாலது.

"வெறிகமழ் தண்சோலை நாட!ஒன் றுண்டோ?
அறிவின்கண் நின்ற மடம்"

என்று தோழி, தலைவனை வினவினாள். அறிவுநிறைந்த பெருமகனாகிய தலைவனை நோக்கி, 'நின் அறிவின்கண் நின்றதொரு பேதைமை யுண்டோ ?' என்று இடித்துரைப் பாள் போலவும், இரங்கி வேண்டுவாள் போலவும் பேச வைக்கும் திறம் சாலவும் இன்பம் தருவதாகும்.

படைத்துமொழி கிளவியால் தோழி வரைவு கடாவும் திறம் எண்ணியெண்ணி இன்புறுதற்குரியதாகும். தலைவி யின் களவுப் புணர்ச்சியைச் செவிலித்தாய் நனகு தெரிந்து கொண்டாள்; ஆதலின் தலைவியை வரைந்துகொள்ள விரைந்திடுக என்பதைச் சிறைப்புறத்து நிற்கும் தலைவ னுக்குக் குறிப்பால புலப்படுத்துகின்றாள்.

பகற்குறிக்கண் தலைவனைக் கூடி மகிழ்ந்து வந்த தலைவி யைத் தினைப்புனத்தில் செவிலித்தாய் கண்ணுற்றாள். களவுப் புணர்ச்சியின் காரணமாகத் தலைவியின் கண்கள் சிவந்து காணப்பெற்றன அங்ஙனம் சிவப்புற்றமைக்குக் காரணம் யாதென வினவினாள். இந் நிலையினைத் தலைவன் வேலிப்புறத்தே நின்று நோக்கிக் கொண்டிருந்தான். அப்போது தோழி, தலைவிக்குப் புணர்ச்சியால் உண்டாகிய கட்சிவப்பினை அருவியில் நீராடியதால் ஆயதெனக் கூறி மறைக்கும் திறநலம உரைக்குந் தரமன்று.

" காய்ந்தீயல் அன்னை! இவளோ தவறிலள்
ஓங்கிய செந்நீா இழிதரும் கான்யாற்றுள்
தேஙகலந்து வந்த அருவி குடைந்தாடத்
தாம்சிவப் புற்றன கண் "

என்பது அந் நயம் கெழுமிய பாடல்.

இரவுக்குறிக்கண் வந்து போகும் தலைமகனை விரைவில் மணந்து கொள்ளும் விருப்பால தலைவி, தோழியிடம் கூறும சொற்கள வீறும இன்பம விளைப்பனவாகும். தோழீ! எனக்கு உற்ற குறையொன்று உண்டு. எனது உயிா ஒரு நிலையில இல்லை. அதற்கு ஒரு காவலை நீ விரைந்து செயல் வேண்டும். இரவில் நமமைக் காணும்பொருட்டு நம் இல்லின்பக்கமாகவுள்ள இரவுக்குறிக்கண் வரும்

தலைவனை வாராது விலக்கல் வேண்டும். அவன் வரும் வழி நச்சரவங்கள் அச்சம் விளைத்து உலவும் இயல்புடையது என்பதை அவனுக்கு அறிவித்தல் வேண்டும். இங்ஙனம் கூறி வரைவை வலியுறுத்த வேண்டும் என்பதையும், தலைவன்பால் கொண்ட அன்பு அளவாவற்றது என்பதையும் தலைவி குறிப்பிடும் நயம் மிகச் சிறப்புடையதாகும்.

"குறையொன்(று) உடையேன்மன் தோழி! நிறையில்லா
மன்னுயிர்க்(கு) ஏமம் செயல்வேண்டும் இன்னே
அராவழங்கும் நீள்சோலை நாடனை நம்மில்
இராவாரல் என்ப(து) உரை."

என்பது அத் தலைவி குறையிரப்பதாக அமைந்த பாடல்.

## முல்லை

தலைவன்பால் கொண்ட மாறாத பேரன்புடன் அவனது உறுதிமொழியால் தேறியிருக்கும் தலைமகள் முல்லைக் கொடிகள் மொய்ம்மலர் பூத்துக் கமழ்வதைக் கண்டாள். அம் மலர்களில் வண்டுகள் சென்று இன்னிசை பாடுவதைக் கண்ணுற்றாள். வானத்தில் மேகங்கள் வந்து கூடுவதை நோக்கினாள். தலைவன் வருவதாகக் குறித்துச் சென்ற கார்காலம் குறுகிவிட்டதே; தலைவனைக் காணோமே என்ற கவற்சியால் கண்கள் நீரைத் தாரை தாரையாகக் கக்கு கின்றன. இதனைக்,

"காரோ(டு) அலமரும் கார்வானம் காண்தொறும்
நீரோ(டு) அலமரும் கண்"

என்ற அழகிய ஈரடிகளில் விளக்கும் புலவர் திறம் போற்றற்கு உரியதாகும்.

கார்காலம் மணந்தார்க்கு இன்பமும் தணந்தார்க்குத் துன்பமும் தருவது. ஆதலின்,

"புல்லுநர் இல்லார் நடுங்கச் சிறுமாலை
கொல்லுநர் போல வரும்"

என்று தலைவி, தோழிக்குச் சொல்லித் துயருற்றாள். இடி முழக்கும் மேகங்கள் வானத்தில் சூழ்வதை நோக்கினால் எனது உயிர் துடிக்கின்றது என்றாள். எனது ஆவி, உலையிலிட்டு உருகப் பெற்றதுபோல் உலையாநின்றது என்றுரைத்தாள்.

"யானும் அவரும் வருந்தச் சிறுமாலை
தானும் புயலும் வரும்"

என்று புலம்பி நைந்தாள். இக் கார்காலத்து மாலைக்கு நம்மைப்போல அறியாமையால வலியிழந்து மெலிவாற்றி உயிர் வாழ்வார் இல்லை என்று சொல்லி இளைந்தாள். ஐயோ! கையணிந்த வளைகள் எல்லாம் ஒன்றும நில்லாது கழன்றனவே! இன்று நம இன்னல நீங்குமாறு தலைவன் வருவானோ? வாரானோ? இப்படியே நம்மை வருந்துமாறு விட்டுவிடுவானோ? என்று ஏஙகினாள.

பசுக்களைப் பைமபுல் நிலததில் மேயவிட்ட ஆயன் மாலையணிந்து மாலைநேரத்தில மனையை நோக்கி வருகிறான. அவனது வரவை நோக்கிய தலைமகள் வருதத மிகுதியால் நிலைகலங்கி நின்றாள். அவ் ஆயனைப் பின்தொடர்ந்து மழை பெய்துகொண்டே வருகிறது. இதனை நோக்கிய தலைவி, தோழியிடம், "எனக்கு ஏற்பட்ட வருத்தம் ஆயனைப் பின்தொடர்ந்து பெய்து வநத மழையால் விளைந்ததோ?" என்று வினவினாள். மாலையில் ஆயன்மனைப் புகுந்தும் மழை பெய்யத் தொடங்கிய செயலைப்,

"பின்னொடு நின்று பெயரும் படுமழைகொல்
என்னொடு பட்ட வகை"

என்னும் அடிகள் எவ்வளவு அழகுற விளக்குகின்றன!

## உவமை நலங்கள்

காந்தள் அரும்புகள் கூழைத் துழாவ உதவும் துடுப்பையொதது விளங்கின. இதனைத் 'தண்ணறும் கோடல் துடுப்பெடுப்ப' என்று குறித்தார் மூவாதியார்

கொன்றை மலர்கள் செந்நெருப்பை யொத்துச் சிவந்து திகழ்ந்தன. ஆதலின் 'தாதிணர்க் கொன்றை எரிவளர்ப்ப' என்று குறித்தார். முல்லை அரும்புகள் மெல்லியல் மகளிரின் பற்களைப்போன்று பொலிந்தன. இதனைக் 'கார் கொடி முல்லை எயிறீன' என்று குறித்தார். தலைவன் ஏறி வரும் தேரில் குதிரைகள் பூட்டப்பெற்றுள்ளன. அவற்றின் கழுத்தில் ஒலிக்கும் மணிகள் மாலையாகக் கோத்து அணியப்பெற்றுள்ளன அம் மணியோசை தவளைகள் கத்துவதுபோல் இருந்ததாம். 'தேரைத் தழங்குகுரல் தார்மணி வாயதிர்ப்ப' என்பது புலவர் மொழி.

## பாலை

பிரிவொழுக்கத்தையுடைய பாலைக்குத் தனி நிலம் வகுக்காத தொல்காப்பியர் கருத்தை மூவாதியார் தம் நூலுள் நன்கு வலியுறுத்துகின்றார். மாறுகொண்ட பகைவர்களைச் சீறி வருத்தும் மறவர்கள் வாழிடம் அப்பாலை. வில்லேருழவர்கள் ஆங்கு வரும் வழிப்போக்கரை வருத்திக் கொள்ளையடிப்பர் கற்கள் சூழ்ந்த சிறுசிறு புதர்கள் ஆங்காங்கே காணப்பெறும். பேழ்வாய்ப் பெரும்புலி பாழூர் மன்றம் புகுந்து பசியால் இரை நாடி நிற்கும். காட்டுப் பசுக்களின் கூட்டம் தாகத்தால் நீரின்றித் தயங்கித் திரியும். உச்சிக் கொண்டையால் அழகுற்ற காட்டுக் கோழிகள் மருட்செடிகளைக் கொத்தி வழிகளைத் தூர்த்துக் கொண்டு திரியும். சிற்றூர்களில் காணப்பெறும் சிதைந்த பாழ்மனைக் கூரைகளில் பீர்க்கம் கொடிகள் ஏறிப்படர்ந்து கிடக்கும். அம் மனைகளில் கரடிகள் இனத்துடன் சென்று கண்படுக்கும். இடையிடையே பிரப்பம் புதர்கள் செறிந்து பிறங்கும். அவற்றின்மேல் அணிற்பிள்ளைகள் துள்ளியாடி ஒலித்துக்கொண்டிருக்கும். சிற்றூர்களில் திரியும் சேவற் கோழிகள் காடைப்பறவையுடன் சண்டையிட்டுக் கொண்டிருக்கும். ஆங்காங்கே முள்ளுடை மூங்கில் புதர்கள் சூழ்ந்து விளங்கும். அவற்றிடையே காட்டுப்பூனை தன் குட்டிகட்கு இரை தேடித்திரியும். ஆறலை கள்வர்களும் ஆங்கு மறைந்துறைவர். ஆங்குள்ள ஓமை மரத்து நீழலில்

யானை பிடியோடு உறங்கும். அடர்ந்த புதர்களிடையே புலிக்குழாம் உலவிக்கொண்டிருக்கும் இத்தகைய அச்சம் தரும கொடிய பாலைநில வழியிலே பொருள் கருதிச் செல்ல விரும்பும் தலைவன் தோழியிடத்தே தனது பிரிவை உணர்த்தினன். அவனது பிரிவிற்கு உடன்படாத தோழி தலைவிக்கு நேரும் இன்னலைக் கூறுகின்றாள். "தலைவ! நீ செல்லும சுரநெறி களிறுகள் பிடியோடு உறங்கும் மர நிழலையுடையது ஆதலின, அவற்றைக் காணுந்தோறும் தலைவியைப்பற்றிய நினைவு அலையலையாக எழும். உடனே விரைந்து மீளவான் என்பதைக் குறிப்பாக அறிவுறுத்தி யும் அவளது மையுண்ட கண்களில் நீரமல்கி வடியாநிற் கும். ஆகவே நின்பிரிவைத் தலைவி பொறுக்கலாற்றாள்," என்று மறுக்கும தோழியின் உரை நயம நிறைந்ததாகும்.

தலைவனது பிரிவைக்கேட்டுப் பெருந்துயருற்றாள் தலைவி என்னுமிடத்து, அவன் செல்லும் பாலைநிலம் களிறு பிடியோடு உறஙகும பெற்றியுடையது என்று குறிததாள் தோழி பாவில கூறும பொருளுக்குப் புறததே உரைத்த கருப்பொருள் பற்றிய கருததால் தலைவன் பிரியினும் சுரநெறியில காணும காட்சி, தலை வியை விரைவில் வநது வரைந்து கொள்ளுமாறு செய்யும எனற இறைச்சிப் பொருள் தோன்றிற்று.

> "பொரிபுற ஓமைப் புகர்படு நீழல்
> வரிநுதல் யானை பிடியோ(டு) உறஙகும்
> எரிமயங்கு கானம் செலவுரைப்ப நில்லா
> வரிமயங்(கு) உண்கண்ணுள் நீர்"

என்பது அவ் இறைச்சிப் பொருள் அமைந்த இனிய பாடல்.

பிரிந்துசென்ற பெருமகனது வரவை எதிர்நோக்கி வாடியிருக்கும தலைவியைத் தோழி ஆற்றும் வகை, பெரிதும் போற்றற்குரியதாகும். மன்றின்கண் விளங்கும் ஆலமரத்தில் வாழும் ஆந்தைகள் அடுத்தடுத்துக் கதது கின்றன. நலமிகுந்த தும்மல் நம்பால் தோன்றுகின்றது.

ஆதலின் பாலைநிலக் குறும்புகள் பலவற்றைக் கடந்து பொருள்வயிற் சென்ற காதலர் பெருங்காதல் கொண்டு திரும்பி வருவார்போல தெரிகின்றது என்றாள் தோழி. இடக்கண் துடிக்கின்றது. காணும் கனவுகள் மாணுடைய வாய் உள்ளன. இல்லத்தே உள்ள பல்லி இணக்கமாக நன்னிமித்தம் சொல்லுகின்றது. ஆதலின், நம் மெல்லிய தோள்கள் பூரிக்கவும் பிரிவால் நோந்த பிணி தீர்ந்தொழியவும் தலைவன் விரைந்து பொருந்துவான் என்று சொல்லித் தேற்றுகின்றாள் நல்லியல் தோழி.

## மருதம்

'ஊடுதல் காமத்திற்கு இன்பம்' என்பர் திருவள்ளுவர். காதலர் வாழ்வில் இன்பந் தரும் இவ் ஊடல் உணவிற்குச் சுவை தரும் உப்பை யொப்பதாகும். உப்பு மிக்குழி உணவின் சுவை கெட்டொழியும். அஃதே போல் ஊடல் வரம்பிகந்து நீடித்தவழி வாழ்வில் பெருந்துன்பம் விளைப்பதாகும். ஆதலின் தெய்வப்புலவர்,

"உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்" (கஉ0உ)

என்று

இத்தகைய ஊடல் ஒழுக்கத்தையுடைய மருதப் பகுதியுள் தலைமகன் தான் பெற்ற இளமகனது எழில்நலம் கண்டு இன்புற்ற நிலையைத் தோழி மகிழ்ந்து புகழ்ந்தாள். பிறந்த மகனுக்குப் பெயரணி விழாவில் அவனை முதலெடுத்து மார்பில் இறுக அணைத்துப் பெருமகிழ்வு கொண்டான் தலைவன். தனது மெல்லிய மேலாடை சிதையத் தூக்கி இளமகனது பொன்முகம் நோக்கினான். ஐம்படை அணிகள் பூட்டி அகமிக மகிழ்ந்தான் இங்ஙனம் செய் பெருஞ் சிறப்பின் கண்ணே சிந்தை சொக்கி நிற்கும் பண்பு மிக்கானைத் தோழி பாராட்டினாள்.

தலைவியின் இல்லற நலத்தை இனிது கண்டு மகிழ்ந்த செவிலி, நற்றாய்க்கு அப் பெற்றி உரைக்கும் திறம் நயம் பயப்பதாகும். நம் மகளும் தலைவனும் மனையகத்தே

கூடியிருக்கக் கண்டேன். மகளின் மடிக்கண் கிடந்த நம் பேரன், தன் கால்களால் தலைமகனை உதைத்துச் சிதைத்துக் கொண்டிருக்கிறான். மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் அன்றோ! அவ் இன்பத்தை நுகர்ந்துகொண்டே மற்றோர் இன்பத்தையும் பெறுகிறான அப் பெருமகன் மகவைப் பெற்றமையால் தளர்வுற்ற மகளது மாாபு நுனியினைக் கைகளால் வருடியும் நெருடியும மகிழ்ச்சியுறுவதைக் கண்டேன். அவாகள அன்பு நிறைந்த இன்பவாழ்வு எனக்கு அளவிலா இன்பததை அளித்தது என்று உரைத் தாள்.

> " தேஙகமழ் பொய்கை அகவய லூரனைப்
> பூங்கண் புதல்வன் மிதித்துழக்க—வீங்குத
> தளாமுலை பாராட்டி என்னுடைய பாவை
> வளர்முலைக கண்ணுமுக்கு வாா "

என்பது செவிலி வாயிலாகத் தெரிவிக்கும் அரிய பாடல்.

தலைவியின் ஊடலைத தணித்துத் தன்னைக் கூட்டி வைக்குமாறு தலைவன தோழியைக் குறையிரந்தான். அத் தலைவன் வயத்தளாய் நின்று தலைவியை இடித்துரைக்கும் தோழியின் மொழிகள ஆழ்நத கருத்துடையனவாகும். நுண்ணறிவுடைய சான்றோா எண்ணி அமைத்த இல்லறம் உள்ளன்போடு இணைந்தது என்ற உண்மை அறியாத எண்மையர் பரத்தையர். கலவி ஒன்றனையே கருதும் இழிதகவுடையர். அனனவரிடததே காட்டிய அருளினை அறவே விட்டொழிததான நம தலைவன் தான் செய்த குற்றத்தைப் பொறுத்து ஏற்றுக்கொளளுமாறு வேண்டி ஆற்றவும் வணங்கி நிற்கின்றான இனன தன்மையனை ஏற்றுக்கொள்ளாது இகழ்வையாயின் உளதாகும் பெரும் பழி உன்னையே சாரும் என்று தோழி இடிததுக் கூறும் திறம் இன்பம் தருவதாகும்.

> " உண்ணாட்டம் சான்றவர் தந்த நசையிற்றென்(று)
> எண்ணாககுக கண்ணோட்டம் தீாககுதுமென்(று)—எண்ணி
> வழிபாடு கொள்ளும் வளவய லூரன
> பழிபாடு நின்மே லது "

என்பது அத்தோழி வாயிலாகத் தோன்றிய பாடல்.

பரத்தையர் இல்லம் புகுந்த தலைவன்மீது தலைவி யாகிய நல்லாள் தணியாத ஊடல் கொண்டாள். அவள் கொண்ட கோபம் தணிதது வருமாறு தலைவன் பாணனைத் தூதனுப்பினான் வாயில் வேண்டி வந்த பாணனுக்குத் தலைமகள மறுத்துரைக்கும் கருத்துக்கள் பெருதத மகிழ் வூட்டுவனவாகும.

தலைவி தன்பால் தூது வந்த பாணனை நோககி ஓது கின்றாள. "பாணனே! தலைவன் முன்பு அன்புடன் தழுவி மகிழ்நத மார்பினில் இப்போது என்மகன் பாலுண்டு அமைகின்றான். ஆதலின அத தலைவன தழுவி மகிழ்தற்குப் போதுமில்லை மேலுமம அவனுககுத தகுதியின்றி யான் மூப்புறறேன். இச் செய்திகளை அவனுககுச் சென்று இயம்புக நீயுமம அவனுடன் சேர்ந்து குடித்துக கூத்தாடி மகிழ்க" என்று வெறுத்துரைததாள. மேலுமம அத் தலைவனது காதலை ஊர்ப்புறத்தே வாழும் பரதத்தையர்க்கு எடுத்துரை! என்று பழிததுரைததாள். தலைவனைப் பிரிந்த இந்நாளில் அன்புப புதல்வனையே அருந்துணையாகக் கொண்டு வாழும் யான அவனுக்கு என் செய்து பயன் படப் போகினறேன என்று வருநதி உரைததாள். இங் ஙனமெல்லாம் சொல்லியுமம பாணன அகலானாய்த தலைவ னது காதல் மிகுதியைக் கட்டுரைத்து நின்றான் அது கண்ட தலைவி, "என் அருமைப் பாணனே! இனித் தலை வன் அன்பு நிலையைப் பற்றிச் சிறிதும் உரையாதொழி வாய் அத்தலைமகனுக்கு நேர்ந்த குறையெல்லாமம ஒரு பால் இருக்கட்டும். உனக்கு ஏதும் குறையுண்டேல் கூறு வாய்" என்று கடிந்து மொழியும் தலைவியின் சொற்கள் அழகு வாய்ந்தன.

-" நாணுடையான்

தன்னுற்ற எல்லாம் இருக்க இரும்பாண
நின்னுற்ற(து) உண்டேல் உரை"

என்பது அத்தலைவியின் மொழி.

பலவாறு கூறியும் விலகாத பாணனைத் தலைவி கடிந் துரைப்பதாகவுளள மற்றொரு பாடல் கற்பவர்க்குக் களிப்

பூட்டுவதாகும். "பாணனே! தலைமகன் திறங்களை எனக்கு எடுத்துரைக்க வேண்டா. அவன் பிரிய நேர்ந்தது எனது தவறேயாயினும் ஆகட்டும். இவ்விடத்தைவிட்டு நீ எழுந்து நட" என்று கடிந்துரைத்தாள். இவ்விடத்துத் தனது அருமைப் புதல்வன் தனக்கு மகிழ்வூட்டும் திறத்தைக் குறித்தாள் தலைவி. "பொன்வளை யணிந்த மென்கரங்களை வீசியும் விரித்தும் விளையாடி என் மகன் எனக்கு இன்பூட்டு கின்றான். அவனையே துணையாகக் கொண்டு வாழுகின் றேன" என்று இயம்பினாள்.

நெய்தல்

இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகிய ஒழுக்கத்தை யுடைய இப்பகுதியில் தலைவன் தலைவியர் கலவி பெறாது கலங்கி இரங்கும் நிகழ்ச்சிகள் பலவற்றைக் காணலாம். வரையாது காலந் தாழ்க்கும் தலைவனைத் தோழி, இவன் பெரிதும் பேதைமையுடையான் என்று பழித்துரைத்தாள். அதுகேட்ட தலைமகள், "அவன் நம்மை ஏமாற்றும் வஞ்சக னாகாது பேதையானது பெரிதும் போற்றற்குரியதாகும்" என்று இயற்பட மொழிந்தாள். அங்ஙனம் தலைவனைப் பேதையென்று கொண்டிருக்கும்உள்ளமுடையராதல் நமது உயிர்க்கு நன்மை விளைப்பதாகும் என்று குறிப்பிட்டாள்.

"பேதையான் என்றுணரும் நெஞ்சம் இனிதுண்மை
ஊதியம் அன்றோ உயிர்க்கு"

என்பது தலைவியின் இனிய மொழி.

இரவுக்குறி வேண்டிவந்த தலைமகன் தலைவி அல்ல குறிப்பட்டாளாக அவளைக் காணாது அல்லலுற்றுச் சிறைப் புறத்தே நின்றான். அவன் ஆண்டு நிற்றலைக் கண்ட தோழி அவனுக்கு நிகழ்ந்த செய்தியை நெகிழ்ந்துரைக் கிறாள். "பொழிற்கண் எழுந்த புள்ளரவத்தைத் தலைவ னது தேரில் பூட்டிய புரவிகளின் கழுத்தணிந்த மணியரவ மென்று மயங்கிக் குறியிடத்தேவந்து நின்றாள். நின்னை வரக்காணாமையால் தன்னைச் சிறுகுடி வாழும் பரதவர் எவ

ரேனும் காணின் ஐயுறுவர் என்றஞ்சிப் பெயர்ந்தாள்" என்று அறிவுறுத்தினள்

இங்ஙனம் தலைவியை இரவுக்குறியில் கண்டு, மகிழ வந்து கொண்டிருக்கும் தலைமகன் வரைவு பற்றிச் சிறிதும் கருதிலன். இதனை அவனுக்கு உணர்த்த விரும்பிய தோழி, அவன் வேலிப்புறத்தே நிற்கும் வேளையில் அவனது செவியில் கேட்குமாறு தலைவியிடம் பேசுகிறாள். "தலைவியே! நம் தலைமகன் முன்னைய நிலையில் இல்லை. அவன் கையில் நாம் அகப்பட்டுக் கொண்டதனைத் தனது ஆண்மையின் பாற்பட்ட செய்தி என்று கருதி இறுமாந்துள்ளான். அதனால் வரைதலை நினையாது தேரேறி வாராநின்றான். ஈதென்ன ஆணவம்!" என்று தலைவிக்கு உரைத்து நின்றாள் அத்தோழி.

> "தண்ணந் துறைவனோ தன்னிலன் ஆயிழாய்!
> வண்ணகைப் பட்டதனை ஆண்மை எனக்கருதிப்
> பண்ணமை தேர்மேல் வரும்"

என்பது அத்தோழி கூற்று.

தலைமகனைக் காணாது காலம் நீட்டித்தவழித் தலைவியின் நிலைகண்டு இரங்கிய தோழி, நெய்தல் நிலத்தேயுள்ள கடற்கழிக்கண் உலவும் மீன்களை உண்டு, அருகமைந்த பனைமரத்தில் சென்று தங்கும் இணைபிரியாத அன்றில் பறவைகளை நோக்கி, "புணர் அன்றில் புட்களே! களவுப் புணர்ச்சியின்போது தலைவியின்பால் கவர்ந்து சென்ற கன்னிமை அழகை அவள்பால் திருப்பிக் கொடுக்குமாறு தலைவனுக்கு உரைப்பாய்!" என்று வேண்டினாள். இவ்விடத்து என்றும் இணைபிரியாது கூடிவாழும் அன்றில் பறவைகளை 'வணர்வாய்ப் புணரன்றில்' என்று குறித்த திறம் வியத்தற்குரியதாகும்.

கடலைச் சார்ந்த கழியிடத்தேயுள்ள மீன்களைக் கவ்வியுண்டு திரியும் நாரைக் கூட்டத்தைத் தலைவி கண்ணுற்றாள். நாரைகளே! களவுப் புணர்ச்சிக் காலந் தொடங்கி

எங்களைப் பற்றி நன்றாகத் தெரிந்துள்ள நீவிரே தக்க சான்றுவீர். இக் கடற்கரைத் தலைவன் என்னை விட்டுப் பிரிந்த முறையினையும் நீவிரே தெரிவீர்கள்," என்று உளமெலிந்து இரங்கி உரைத்தாள்.

தலைவனைப் பிரிந்தமையால் நலிந்து வருந்தும் நங்கையின் நிலையினை அந்த தலைவற்கு அறிவிக்கும் தோழியின் வாக்கில் தோய்ந்த நயம் ஆய்ந்து இன்புறற்பாலதாகும். இறைச்சிப் பொருளாக அமைத்துக் கருத்தை உய்த்துணர வைத்திடும் புலவர் கவிநயம் போற்றத் தகுவதாகும். "மணல் மேட்டிலே ஆண் நண்டு பெடைநண்டுடன் ஓடி விளையாடுதற்கு இடமான நெய்தல் நிலத்தலைவனே! என் தோழியாகிய நின் தலைவி உனது பிரிவால் பெரிதும் மேனியெல்லாம் பசலை பூத்து வருந்துகின்றாள். அவளது பசலைநோயை அகற்றுவாயாக," என்று தலைமகனை வேண்டினாள். ஆணும் பெண்ணுமாகிய நண்டுகள் கூடியாடும் நிலத்திற்குத் தலைவன் என்று குறித்தமையால் நீயும் தலைவியுடன் குலவி மகிழ விரைவில் வரைந்துகொள்வாய் என்ற இறைச்சிப் பொருள் தோன்றலாயிற்று.

"இவர்திரை நீக்கியிட்(டு) எக்கா மணல்மேல்
கவர்கால் அலவன் தனபேடை யோடு
நிகரில் இருங்கழிச சேர்ப்ப! என் தோழி
படர்பசலை யாயின்று தோள்."

என்பது அவ் இறைச்சிப் பொருள் நலம் கனிந்த பாடல்.

## பழங்கால வழக்கங்கள்

இந் நூலால் தமிழகத்தின் பண்டை வழக்கங்கள் பலவற்றைக் கண்டுணரலாம். மாறுகொண்ட பகைவரை வீறு கொண்டழிக்கும் வில் வீரர்க்குப் பாலை நிலத்தே கல் நாட்டினர். அந் நடுகற்களில் மறைந்த வீரர்தம் மாண்பினைச் சிறுற எழுதிவைத்தனர். ஆலமரத்தில் வாழும் ஆந்தை கத்துதல், தும்மல் வருதல், மகளிர்க்கு இடக்கண் துடித்தல், நல்ல கனவுகளைக் காணுதல் இவற்றை நன்னிமித்தங்

களாக எண்ணி இன்புற்றனர். மனையறம் பூண்ட காதலர் தம் புதல்வனுக்குச் செய்பெருஞ் சிறப்பு நிகழ்த்தி மகிழ்ந் தனர். செய்பெருஞ் சிறப்பாவது பிறந்த புதல்வன் இன் முகம் காண்டல், ஐம்படை அணி பூட்டுதல், பெயர் சூட்டு தல முதலான செயல்களாகும. மருத நிலத்து வயல்களில் சென்று விழும எருமைகட்குத தொண்டு கட்டையொன் றைக் கழுததில கட்டிவிட்டனர். மணமபுரியும் காலததே தலைவன் கூறும உறுதி மொழிகளைத தலைவி ஏட்டில் எழுதிப் பெறுதலும உண்டு பரத்தையிற் பிரிநத தலைவன் தலைவியின் ஊடலைத தணிக்கப பாணமகனைத தூதாக அனுப்பினான்.

## ஐந்திணை ஐம்பது

இந் நூல் முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்ற வைப்பு முறையில அமைந்த ஐநதிணைப் பகுதிகளை யுடையது. ஒவவொரு திணைக்கும் பததுப பாக்களாக ஐந்து திணைகட்கும ஐமபது பாக்களைக் கொண்டுளளது. அதனாலேயே ஐந்திணை ஐமபது என்னும் பெயர் பெறுவ தாயிற்று. இதன்கண் உள்ள பாக்கள் பல நேரிசை வெண் பாக்களாகவும சில இன்னிசை வெண்பாக்களாகவும் விளங்குகின்றன. இவ் வெண்பாக்கள் மிடுக்கான நடையும் மேலான பொருள் வளமும் கொண்டு மிளிர்கின்றன. ஆதலின் கற்பவர் நெஞ்சத்தை இந் நூல் கவர்வதாகும். இக் கருததை இந் நூலின் பாயிரப் பாடல் இனிதின் விளக்கும்.

"ஐந்திணை ஐம்பதும் ஆர்வத்தின் ஓதாதார்
செந்தமிழ் சேரா தவர்."

என்பது அப் பாயிரப் பகுதி.

இந் நூலைப் பாடிய ஆசிரியர் மாறன் பொறையனார் என்னும் பெயரினர் மாறன்பொறையனார் என்ற தொடர் மாறனுடைய மகனார் பொறையனார் என்று இருத்தல் கூடும். அன்றிப் பொறையன் என்ற இயற்பெயருடன் மாறன்

என்ற சிறப்புப் பெயர் பெற்றிருத்தல் கூடும். மாறன் என்பது பாண்டியனைக் குறிக்கும் சிறப்புப்பெயர். பொறையன் என்பது சேரனைக் குறிக்கும் சிறப்புப் பெயர். இப்பெயரமைதிகொண்டு இந்நூலாசிரியர் தென்பாண்டிநாட்டினராயிருக்கலாமோ என்று கருத இடமுண்டு. இவரை 'வண்புள்ளி மாறன் பொறையன' என்று பாயிரம் குறிப்பிடுகின்றது. 'பள்ளிக் கணக்குப் புள்ளிக்கு உதவாது' என்பது பழமொழி. புள்ளி என்பது கணக்கென்றே பொருள்படும் தமிழில் ஐந்தொகை முதலிய பெருங் கணக்குகள் புள்ளியென்றே சொல்லப்படும். வண் புள்ளி என்ற அடைமொழிச் சிறப்பால் இந் நூலாசிரியர் பாண்டி நாட்டு அரசியலில் பண வரவு செலவுக்குரிய பெரிய பதவி யொன்றைப் பெற்று விளங்கியவராக இருத்தல் வேண்டும் என்று கொள்ளலாம் இவர் இருவகைத் திருவும் ஒருங்கு பெற்றவராதல் வேண்டும்

இவரது காலம் கி. பி. நான்காம் நூற்றாண்டாதல் வேண்டும். இவரது நூலின் முதற்பாட்டால் இவரது சமயக் கொள்கை இன்னதென நன்னாப் புலனாகும்.

"மல்லர்க் கடந்தான நிறம்போன்(று) இருண்டெழுந்து
செல்வக் கடம்பமர்ந்தான் வேல்மின்னி—நல்லாய்!
இயங்கெயில் எய்தவன் தாரபூப்ப ஈதோ
மயங்கி வலனேரும் கார்."

• இப் பாட்டால் நூலாசிரியர் தமது சமயப் பொது நோக்கைப் புலப்படுத்துகிறார் வானத்தில் கருமேகங்கள் கண்ணபிரானது வண்ணத்தைப் போன்று இருண்டெழுந்தன. கடப்பமாலை அணிந்த முருகவேளின் வேற்படையைப்போல மின்னின. திரிபுரம எரித்த விரிசடைப் பெம்மானாகிய சிவனுக்குரிய கொன்றைப் பூக்கள் நன்றாக மலரும வண்ணம் மழை பெய்யத் தொடங்கின என்று குறித்தார் முதற்கண் முல்லைத் திணையைச் சொல்ல எடுத்துக் கொண்டாராதலின் அத்திணைக்குரிய கருப்பொருள்களில் சிறப்பு வாய்ந்த மாயோனாகிய தெய்வத்தை முன்னர்

வைத்து மொழிந்தனர். பின்னர்ச் சிவனும் முருகனு மாகிய இரு பெருஞ் சைவத் தெய்வங்களைக் குறித்தார். ஆதலின் இந் நூலாசிரியர் சைவ சமயத்தினர் என்று கருத இடமுண்டு. மேலும இப்பாவால் அவா புத்த சமண சம யத்தினர் அல்லர் என்பதும் நன்கு புலனாகும்.

இந்நூல் பாயிரப் பாடலைச் சேர்த்து ஐம்பத்தொரு பாடல்களைக் கொண்டுள்ளது; இந் நூல் முழுதிற்கும் பழைய பொழிப்புரை ஒன்றுளது.

> "ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
> நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
> கேட்போா பயனோ(டு) ஆயெண் பொருளும்
> வாய்ப்பக காட்டல் பாயிரத் தியல்பே!"

என்பது பாயிரத்திற்கு இலக்கணம் கூறும் நூற்பா ஆக்கி யோன் முதலாய எண்வகைப் பொருளும் இயைபப் பாயிரம் அமைய வேண்டும் ஒரே பாவில அவ் எட்டும் அமைத்துக் கட்டுரைக்கும் புலவர் கவித்திறம் பெரிதும் போற்றற்குரியதாகும்.

> "பண்புள்ளி நின்ற பெரியாா பயன்தெரிய
> வண்புள்ளி மாறன் பொறையன் புணாத்தியாத்த
> ஐந்திணை யைம்பதும் ஆர்வத்தின் ஓதாதார்
> செந்தமிழ் சேரா தவர்."

பாயிரமாக அமைந்த இப் பாட்டில் மாறன் பொறை யன் என்றதனால் ஆக்கியோன் பெயா குறிக்கப்பெறறது. ஐந்திணை எனறதனால் அகபபொருள நூலாகிய வழியும் அகமாகிய நுதலிய பொருளும குறிக்கபபெற்றன. செந் தமிழ் என்றதனால் நூல வழங்குதற்குரிய தமிழ்நாட்டு எல்லை குறிக்கப்பெற்றது. ஐந்திணையைம்பது என்றதனால் நூற்பெயர் குறிக்கபபெற்றது. யாதத என்றதனால் செய் யுள் வடிவமாகிய நூல் யாபபுக் குறிக்கப்பெற்றது. பண் புள்ளி நின்ற பெரியார் என்றதனால் கேட்போர் யாவர் எனக் குறிக்கப்பட்டது. பயன் என்றதனால் நூற்பயனும் நுவலப்பெற்றதன்றோ! இங்ஙனம் எண்வகை இலக்கண

மும் பாவொன்றில் ஒருங்கமைந்த திறம் பாராட்டற்குரிய தன்றோ!

## முல்லை

தலைவன் பிரிவால் பெருகும் துயரைப் பொறுத்துக் கற்பொழுக்கில் தவறாது, தலைவி பொறுப்புடன் ஆற்றியிருப்பதே முல்லையென்று சொல்லப் பெறும். இருத்தலும் இருத்தல் நிமித்தமுமாகிய ஒழுக்கத்தை விளக்கும் இப்பகுதியில் முல்லைக்குரிய பெரும்பொழுதாகிய கார்ப்பருவமும், சிறு பொழுதாகிய மாலைக்காலமும் அழகுற வருணிக்கப்படுகின்றன. நூலின் முதற்பாட்டிலேயே கார்காலத்து இயல்பு சிறப்பெறக் கூறப்பெற்றுள்ளது. பொருள்வயின் பிரிந்து சென்ற தலைமகன், தலைவிக்குக் கார்முந்துமுன், தன் தேர் முந்துமெனத் தேற்றிச் சென்றான். அங்ஙனம் தேற்றிச் சென்ற தலைவன் திருமபிவரும் கார்காலம் இதோ நெருங்கிவிட்டது என்று கார்ப்பருவ வான் தோற்றத்தைத் தோழி, தலைவிக்குக் காட்டித் தேற்றுகின்றாள்.

கண்ணனது வண்ணத்தைப்போன்று கருநிறம் கொண்ட கார்மேகங்கள் வானில் எழுந்தன. முருகனது சுடர்வேலைப்போன்று மின்னின. சிவபெருமான் விரும்பி யணியும் கொன்றை மலர்கள் கொத்துக் கொத்தாய்ப் பூத்துக் குலுங்கின. ஆதலின் தலைவன் குறித்துச் சென்ற காலம் இதோ! குறுகிவிட்டது. தலைவன் விரைவில் வந்து விடுவான் என்று சொல்லித் தலைவியைத் தேற்றுகின்றாள் தோழி.

கார்காலத்து மாலை வேளையில் கதிரவன் ஒளியின்றி இருள் சூழ்ந்துவிடுகிறது. முல்லைக்கொடியில் அரும்பிய அரும்புகளில் வண்டுகள் சென்று இன்னிசை பாடுகின்றன. 'முல்லை வரிவண்டூத வாய் நெகிழ்ந்தனவே' என்பார் சங்கப் புலவர் ஒருவர். வண்டுகளின் இன்னிசை கேட்டு முல்லை அரும்புகள் மலர்கின்றன. அம் மாலைவேளையில் ஆனிரைகளைச் செலுத்திக்கொண்டு வரும் ஆயன் அகமகிழ்ந்து புல்லாங்குழலின் நல்லிசையை எழுப்பிக்கொண்டு வரு

கிறான். இந்தக் குழலிசையைக் கேட்டாள் தலைவி. பிரிந்தார்க்குப் பெருந்துயர் விளைக்கும் கார்காலம், மாலைவேளை, குழலோசை எலலாம் ஒருங்கு சேர்ந்து தலைவியின் உள்ளத்தைச் சிதைத்து வருத்தின. அந்துயரத்தைத் தோழியிடமேனும் வாய்விட்டுச் சொல்லி ஆற்றிக்கொள்ள விருமபினள்

"தேரோன் மலைமறைந்த செக்கர்கொள் புன்மாலை
ஆரான்பின் ஆயன் உவந்தூதும்—சீரசால்
சிறுகுழ லோசை செறிதொடி ! வேல்கொண்(டு)
எறிவது போலும் எனக்கு !"

என்று தோழியிடம கூறினள "தலைவன் பிரிவோ உள்ளத்தைப் புண்ணாக்கி உறுதுயர் பண்ணிற்று. இந்தக் காரும் மாலையும மனப்புண்ணைப் பெரிதாக்கிவிட்டன. இதோ! கேட்கும ஆயன் குழலோசை, வெந்த புண்ணில் வேல் கொண்டு எறிவதுபோல் என்னை வருத்துகின்றதே! என்று கூறி வாடினள்

"காதலன் குறித்துச்சென்ற காலம் குறுகியும் அவன் வந்தானில்லையே! நாடும பொருள் தேடிக் காடுகள் பல கடந்து சென்ற நம காதலன் இப்போது வாரானோ?" என்று வாடிய தலைவியைத தோழி தேற்றும் விதம் சிநதைககு இதம விளைபபதாகும.

"பிரிந்தவர் மேனிபோல் புல்லென்ற வள்ளி
பொருந்தினர் மேனிபோல் பொற்பத்—திருந்திழாய் !
வானம் பொழியவும் வாரார்கொல் ! இன்னாத
கானம் கடந்துசென் றார்."

என்று வியப்பக்கூறி நயப்புறச் செய்யும் தோழியின் திறம் வியபபிற்குரியதாகும்.

தலைவன விரைவில வருவான், உனக்கு இன்பம தருவான; நீ பெருநலம் பெற்று மகிழ்வாய் என்பதைச் சொல்லாமல் உணாந்துகொள்ளவைக்கும் தோழியின் வாக்கு, கோக்குவாாக்குப் பேரின்பம விளைக்கும. மழை முகம்

காணாத இம் மலர்க்கொடிகள் எல்லாம் தலைவனைப் பிரிந்த மகளிரைப் போன்று பொலிவிழந்து வாடிக்கிடந்தன. இப்போது பருவமழை பெய்தலால் இக் கொடிகள் தளிர்த்துச் செழித்துத் தனியழகு பெற்றுத் திகழ்கின்றன என்றாள். இந்த உவமம், உள்ளுறை பொருளொன்றைக் கொண்டு நின்றது. தலைவி உளளம் களி பொங்குமாறும் மேனி எழில் பொஙகுமாறும தலைவன் விரைந்து வநது கலநது நிறைந்த இனபம் அளிபபான் எனபதைக் குறிப்பாக அவ் உவமததால் உணரவைதத தோழியின் சொன்னயத்தை என்னென்பது!

வினை முற்றிய தலைமகன் தலைவியைக் காணுதற்கு வேணவாக்கொண்டு விரைநது வருகிறான். தேரைச் செலுத்தும் வலவனை நோககி,

> "நானவின்ற பாக! தேர் நொவ்விதாச் சென்றீக!
> தேனவின்ற கானத்(து) எழில்நோக்கித்—தானவின்ற
> கற்புத்தாழ் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி
> நிற்பாள் நிலைஉணர்கம் யாம்"

என்று கூறினான். "பல்கலை பயின்ற பாகனே! தேரை விரைந்து செலுத்துக. வண்டுகள் இன்னிசை பாடும் வனத்தின் எழிலை நோக்குவாள போன்று எனது வரவையே வழிமேல விழிவைதது எதிர்நோக்கி இருப்பாள் தலைவி. அவள என்னைப பிரிநத நாளமுதல் தனது உள்ளமாகிய இலலததிற்குக் கறபென்னும கதவுததாழிட்டுக் கன்னத்தில் கையூனறித் தன்னுயிரைக் காதது நிற்பாள். அப் பெண்ணணஙகின் கற்புநிலையைக் கடிதில் சென்று காண்போம் என்று அன்பு மேலீட்டால் தலைவன் கூறும் மொழிகள் கற்பார்க்கு இன்பம தருவனவாகும்.

## குறிஞ்சி

காதலர் வாழ்வில் கழிபேரின்பத்தை ஊட்டும் மலைநாட்டு வாழ்வே மகிழ்ச்சி நலம் கனிவது. தலைவிக்குக் களவுப் புணர்ச்சியால் மகிழ்வூட்டிச் சென்ற தலைமகன் திணைப்

புனத்தின் வேலிப்புறத்தே நின்றுகொண்டிருந்தான். அப்போது தலைவி தலைவன்பால் கொண்ட அலகிலாப் பேரன்பை அவன் அறியுமாறு செய்யத தோழி வழி யொன்று நாடினாள். தலைவனுக்குக் கேட்குமாறு "நம் தலைவன் வறுமபூத துறக்கும வண்டு போலவானோ?" என்று தலைவியை வினவினாள். அதுகேட்டுப் பொறாத தலைமகள், "தோழீ! நமது இற்செறிப்பால் தலைவன் எனது தோள் தோய்ந்து கலவான் என்று கருதற்க. அவனது மலைமேல் விழும அருவி நீரில் ஆடினாலும்கூட அவனைக் கூடிப் பெற்ற இன்பததை எய்தலாம்" என்று கூறித் தலைவன்மீது கொண்ட தணியாத காதலைப் புலப் படுததினாள்.

> "கானக நாடன் கலவானென் தோளென்று
> மானமர் கண்ணாய்! மயஙகல்நீ—நானம்
> கலந்திழியும் நன்மலைமேல் வாலருவி யாடப்
> புலம்பும் அகன்றுநில் லா"

என்பது அத தலைவி இயற்பட மொழிந்த இனிய பாட லாகும்.

தலைவியைத தனியிடத்தே கண்ணுற்று அவளது உள்ளக் குறிப்பையும் விருப்பையும் தெள்ளத் தெளியத் தெரிநது நீங்கிய தலைமகன் மறுநாள் அப் பக்கமாக வந்தான். தலைவி இருநத இடத்தில் மற்றொருத்தி இருந் தாள். அவள் அத தலைவியின் ஆருயிர்த தோழி என்பதை முன்பே அறிந்திருந்தான். அவாகள் இருவரும் ஒருநாள் தினைப்புனத்தில காவல் புரிந்துகொண்டிருநதபோது, அவர் களை நெருஙகி, "என்னால் துரததபபெற்று ஓடிவந்த பெருங் களிறு இபபககம வரக்கண்டீரோ?" என்று வினவினான். இன்று தனிததிருக்கும தோழியிடம் சென்று, "எனது மனததிற்கு இனித்திருக்கும் அநத ஏந்திழையாள் எங்கே? அவளிடம எனது ஆராத காதலைக கூறுவாயோ?" என்று வேணடி நின்றான். இஙஙனம வேண்டிய தலைவனது குறை நயப்பைத் தோழி, தலைவிக்கு மெல்லிதாகச் சொல்லும் நல்லியல்பை என்னென்பது!

"மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவ லுற்றதொன்(று) உண்டு"

என்பது அத் தோழியின் ஆழமான மொழி.

தினைப்புனத்தின் புறப்பொழிலில் தலைவனைக் கண்டு குலவிக்களித்து வந்த தலைவி கண்கள் சிவக்கக் கலக்கமுற்று வந்து நின்றாள் அவ் வேளையில் அவளை அழைத்துச் செல்ல வந்த செவிலித்தாய் மகளது தோற்றத்தில் காணும் மாற்றத்தைக் கண்டு, "கண்கள் சிவந்திருக்கக் காரணம் யாது?" என்று வினவினாள். மன நடுக்கத்தால் மறுமொழி கூற இயலாது மயங்கி நிற்கும் தலைவியைக் கண்ட தோழி படைத்து மொழியும் திறம் படித்து மகிழும் சிறப்புடைய தாகும்.

"வேங்கை நறுமலர் வெற்பிடை யாம்கொய்து
மாந்தளிர் மேனி வியாப்பமற்(று)—ஆங்கெனைத்தும்
பாய்ந்தருவி ஆடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தனவாம் சேயரிக்கண் தாம்."

மலைச்சாரலில் உள்ள வேங்கை நறுமலர்களைக் கொய்து விளையாடினோம். உடம்பெல்லாம் வியர்வைநீர் தோன்றி உறைந்தது. ஆதலின் அவ் அழுக்கினை அகற்ற அருவியில் நெடுநேரம் நீராடிவிட்டோம். அதனால் தலைவிக்குக் கண்கள் சிவப்பேறிவிட்டன. இயற்கையாகவே அவளின் கண்கள் சிறிது செந்நிறம் கொண்ட சேயரிக் கண்கள். இப்போது அருவி நீராட்டால் பெருகவும் சிவந்தன என்று பேசிய தோழியின் சொன்னயம் எண்ணியெண்ணி இன்புறற் பாலதாகும்.

இரவுக்குறியில் வந்து தலைவியைக் கூடி இன்புற்றுச் செல்லும் அன்புத் தலைவனைக் கண்டு, தலைவியை விரைவில் கடிமணம் புரிந்துகொள்ளுதலே பொருந்துவதாகும் என்பதைப் பண்புடன் தெரிவிக்க விரும்பினாள் தோழி. அவனைக் கண்ணுற்று இரவில் அவன் வரும் நெறியின் கொடுமையினைக் குறித்தாள். "சிறிப் பாய்ந்த சினவேங்கைக்குத் தப்பிய யானை, அடியோசை கேளாதவண்ணம் அஞ்சி மெல்ல

நடக்கும அருங்காட்டு நெறியில் இரவு நேரத்தில் வந்து சென்ற நினைவையே எண்ணியெண்ணி நேற்றிரவு முழுதும் தூங்காது ஏங்கித் துயருற்றாள் இங்ஙனம் இரவெல்லாம் துயில் கொள்ளாமையால் உள்ளுருகி உருவெழில் சிதைந் தாள் ஆதலின் இங்ஙனம வருதலை ஒழிதது விரைவில் வரைந்துகொள்ளுவாய்" என்பதைக் குறிப்பாகத் தோழி அறிவுறுததினாள்.

> "திருவொடுஙகும் மென்சாயல் தேங்கோதை மாதா
> உருவொடுஙகும் உள்ளுருகி நின்று"

என்று கூறும தோழியின மொழியில் எத்துணைப் பொருள் நயஙகள் பொதிந்துள்ளன!

## மருதம்

ஊடல் ஒழுககததையுடைய இம மருதப் பகுதியில் தலைவி, தலைவனமீது கொணட ஊடலால வாயில்வேண்டி வருவார்க்கு வழஙகும மறுமொழிகள் பெருவியப்பைத் தருவனவாகும். தலைவனால் அனுபபபபெற்ற விருப்புடைய பாணன தலைமகள்பால தலைவனது குலையாத அன்பை எடுத்துத் தொடுததுப் பலவாறு உரைத்தான. அவனின் உறுதிமொழிகளை உள்ளம கொளளுமாறு சொலலினான். அதுகேட்ட தலைவி, 'கொலலன் தெருவில் ஊசி விற்பாரைப் போலத தலைவனது தகுதியெல்லாம இனிதுணர்ந்த என் னிடமோ இங்ஙனம உரைக்கிறாய்!' எனறு கேட்கும் தலைவி யின் மொழிகள் நயம் நிறைநதனவாகும்.

> "தொண்டுழிப் பண்டம் விலையொரீஇக் கொற்சேரி
> நுண்டுளைத் துன்னூசி விறபாரின்—ஒன்றானும்
> வேறல்லை பாண! வியலூரன் வாய்மொழியைத்
> தேற எமக்குரைப்பாய் நீ!"

என்பது அத தலைமகள் வாயில் மறுத்துக் கூறிய மறு மொழியாகும்.

மேலும் அத்தலைவி, பாணனை நோக்கி, "பாணனே! பண்புடையாளர் நண்பு, நவில்தொறும் நயந்தரும் நூலைப்

போலப் பயில்தொறும் இன்பம பயக்குமன்றே! அந்த நட்பைப் பற்றிப் பிறர் வாயால் கூறித்தான் அதன் பெருமையைத் தெரிய வேண்டுமோ? பிரிந்து சென்ற பெருமகன் உண்மையாகவே என்பால் உள்ளன்பு நிறைந்திருப்பானாயின் நீ வந்து தூதோத வேண்டிய நிலையே ஏற்பட்டிராதே!" என்று இடித்துரைத்தாள். இங்ஙனம் உரைத்து வாயில் மறுத்த தலைவியின் மொழியாக அமைந்த பாடல் அழகு வாய்ந்ததாகும.

"யாணா அகல்வய லூரன் அருளுதல்
பாண! பரிந்துரைக்க வேணடுமோ—மாண
அறிவ தறியும் அறிவினா கேண்மை
நெறியே உரையாதோ மற்று."

இன்னும அத்தலைவி, பாணற்குத் தன் உள்ளக் கொதிப்பைச் சொலலுகின்றாள "முனபெலலாம் இத்தலைவனுக்கு யான் மேனி மணக்கப் பூசும சந்தனக் குழமபாய் இருந்தேன். இன்று புண்ணிற்கு இடும வெஙகாரமபோல வெய்தாகிவிட்டேன்" என்று வெறுப்புடன் விளமபினாள்.

"சார்தற்குச சந்தனசசாந்(து) ஆயினேம் இப்பருவம்
காரத்தின வெய்யஎன் தோள்"

என்பது அத்தலைவியின் மொழி

அத் தலைவி தனனிலை எண்ணித் தளர்வாள் போலப் பாணற்குப் பகரலுற்றாள. "பாணனே! அத் தலைவன் பால் ஊடல் கொளளுதற்கு எனககு என்ன தகுதி உள்ளது? முன்னர், நுணணிய கருமணல போன்று நீணடு வளாந்த எனது கருஙகூந்தல் இப்போது வெளளை மரல் போன்று நரைத்து வெளுத்து விட்டது. இத்தகைய மூப்புற்ற என் பால தலைவன அனபு செலுத்துவானோ? இதை அறியாது அவனிடம ஊடல் கொண்டு யாது பயன்?" என்று பேசினாள்.

இங்ஙனம் ஊடல் கொண்டு வாடியிருந்த தலைவியை அவளது ஆற்றாமையே வாயிலாக வந்து கூடி மகிழ்ந்தான்

தலைவன். அவன் புணர்ந்து நீங்கிய சிறிது போழ்தில் தோழி, தலைவியைக் கண்டாள். அவளது முகத்தில் இன்பம் குதிகொள்வதைக் கண்ட தோழி, செய்தி யாதென வினவினாள்

"ஒல்லென் ஒலிபுன லூரன் வியன்மார்பம்
புல்லேன்யான் என்பேன் புனையிழாய்!—புல்லேன்
எனக்கோர் குறிப்பும் உடையனோ ஊரன்
தனக்கேவல் செய்தொழுகு வேன்"

என்று மறுமொழி பகர்ந்தாள்.

"எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து" (கஉஅ௬)

என்பார் தெய்வப் புலவர் திருவள்ளுவர். இக் கருத்தை உட்கொண்டு தலைமகள் கூற்றாக அமைக்கும் பாடல் மிகவும் அழகுடையதாகும். தலைமகனைக் காணாத விடத்துக் கொண்ட கோபத்தால் தலைவன் மார்பை இனித் தழுவேன் என்று மொழிந்தேன் அவனை நேரில் காணப் பெற்றவுடனே எனக்கென்று தனிக்குறிப்பு ஏதும் இல்லாது, அவன் குறிப்பே என் குறிப்பாய் அமைய இருவருள்ளமும் கலந்துவிட்டன. அவனுக்குப் பணிந்து ஏவல் புரியும் பாவையானேன் என்று பணிமொழி பேசினாள். இதில் தலைவன் தலைவியரின் உள்ளநிலை எத்துணை ஒன்றுபட்டிருக்க வேண்டும் என்பது நன்றாக வலியுறுத்தப் படுகின்றதன்றோ!

இத்தகைய ஊடற்காலத்துத் தலைவன் ஊடல் தணித்துக் கூடுதலால் உளதாகும் இன்பம் பெரிதாகும் என்பதை உவமை நயத்துடன் விளக்கும் புலவர் புலமைத் திறம் போற்றற்குரியதாகும். வேனிற்காலத்து வீசும் தென்றலே மேனிக்கு மேலான இன்பம் விளைக்கும் என்பதில்லை. குளிர்காலத்து வீசினும் தென்றல் என்றும் குன்றாத இன்பமே பயக்கும். அதுபோல,

"ஊடி இருப்பினும் ஊரன் நறுமேனி
கூடல் இனிதாம் எனக்கு"

என்று குறித்தாள் தலைவி.

## பாலை

### பாலைநிலக் காட்சிகள்

பிரிவொழுக்கத்தையுடைய பாலைப் பகுதியில் காணும் சில வருணனைகள் நினைந்து மகிழும் நலமுடையனவாகும். பாலைக்கண் இளவேனில் காலத்தே முள்முருக்க மரங்கள் செந்நிற அரும்புகளைத் தோற்றுவித்தன. அவ் அரும்புகள் வேங்கைப் புலியின் குருதிக் கறை தோய்ந்த கூரிய நகங்களைப் போல் விளங்கின. பெண்யானை ஒன்று காட்டுத் தீயில் அகப்பட்டு வருந்தியது. அதைக்கண்ட ஆண்யானை அப் பாலையிடத்துள்ள மலைச்சுனைச் சிறுநீரைத் தன் துதிக் கையால் முகந்துவந்து அப்பெண் யானையின் தலையுச்சியில் பெய்யும். வன்னெஞ்சம் படைத்த வில்லில் வல்ல வேட்டுவர்கள் வழிப்போக்கரைக் கொள்ளையடிப்பர். அவர்பால் பொருள் ஏதும் இல்லையாயின் அவரைக் கொலை புரிந்து குறையுடலம் கூத்தாடல் கண்டு உளங்குளிர்வர். ஆங்குப் பகைவரைக் கொன்று வென்று மாண்ட வீரர்க்கு நடுகல் பல நாட்டியுள்ளனர். பாலை மறவர்படையால் வீழ்ந்த பிணங்களின் நிணத்தைப் பெய்த்துண்ட பேய்கள் அந் நடுகற்களின் நிழலில் சென்று நீள்துயில் கொள்ளும். அங்கே காணும் கானல்நீராகிய பேய்த்தேரை நீரோடும் ஆறென நினைந்து பிடியொடும் விரைந்தோடிய களிறுகள் காலோய்ந்து சாய்ந்து கிடக்கும். இத்தகைய அச்சம் விளைக்கும் அருஞ்சுர நெறிக்கண் நம் தலைவன் எங்ஙனம் சென்றானோ என்று ஏங்கினாள் தலைவி; துடித்தாள் தோழி; சிந்தை நொந்தாள் செவிலி.

### சில துறைநலங்கள்

தலைவன் பிரிவைக் குறிப்பால் தெரிந்தாள் தலைவி அவனது பிரிவுக்கு ஆற்றாது பெருந்துயர் அடைந்தாள். அது கண்ட தோழி, அவளை ஆறுதல் மொழிகளால் தேற்ற முற்பட்டாள். "தலைவியே! நம் தலைவன் செல்லும் சுர நெறி எத்தகையது என்பதை நீ அறியாய்; காட்டுத் தீயால் சுடப்பெற்று வாடிய பிடிக்குக் களிறு சுனைநீரைக்

கொணர்ந்து தலையில் சொரிந்து துயர் போக்கும் சுரம் அது. அந்தக் காட்சியை நம் தலைவன் காணுகிறான். கண்டதும் நின் துயரைத் துடைக்க விரைந்தோடி வருவான். அவன் உன்னை விட்டுச் செல்ல வல்லனோ?" என்று கூறித் தேற்றினாள். களிற்றின் செயலைக் கூறித் தலைவன் தனியன்பை உள்ளுறை உவமப் பொருளால் உய்த்துணர வைத்தாள். இத்தகைய பொருள் நலம் பொதிந்த பாவைப் பாருங்கள்!

"விலங்கல் விளங்கிழாய்! செல்வாரோ அல்லர்
அழற்பட்(டு) அசைந்த பிடியை—எழிற்களிறு
கற்சுனை சேற்றிடைச் சின்னீரைக் கையால்கொண்(டு)
உச்சி ஒழுக்கும் சுரம்."

இங்ஙனம் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைவியைத் தோழி ஆற்றுவிக்கும் திறம் போறற்கு உரியதாய் உள்ளது. சுனை நீரைப் பருகித் தாகம் தணிக்க, ஆண்மான் தனது பிணையுடன் வந்தது. சுனைக்கண் தண்ணீர் மிகவும் சுருக்கமாகவே இருந்தது. இரு மான்களும் நீரைப் பருகுதற்கு ஒன்றுபோல் வாய்வைத்தன. இரண்டற்கும் அந்நீர் போதாது என்பதை அறிந்த ஆண் மான், தனது பிணைமான் மட்டுமே அந்நீரைப் பருகி வேட்கை தணியட்டும் என்ற விருப்பால் தான் நீரைப் பருகாது பொய்யாக உறிஞ்சுவதுபோல் நடித்துக் கொண்டு நிற்கும். அத்தகைய பாலைச் சுர நெறியில் நம் தலைவன் படர்ந்து செல்லுன் என்று தோழி பகர்ந்தாள். இதன்கண்ணும் உள்ளுறையுவமம் என்னும் பொருள்நலம் பொதுளக் காண்கிறோம். மான், தனது பிணையிடத்துக் கொண்ட பெருங்காதலால், தன் வேட்கையைக்கூடத் தணிக்க விரும்பாது சுனைநீர் முழுவதையும் பிணைமானே பருகுமாறு செய்து பெரு மகிழ்வு கொண்டது அது போலத் தலைவனும், தலைவியாகிய நின்பால் அன்பில் குறையாதவன். மான்களின் செயலைப் பார்த்ததுமே மனம் ஒருவழி நில்லாது உன்னை நினைந்து ஓடோடி வந்து விடுவான் என்று சொல்லித் தோழி தேற்றும் திறம் ஏற்றமுடையதாகும்.

"சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென்(று) எண்ணிப்
பிணைமான் இனிதுண்ண வேண்டிக—கலைமாத்தன்
கள்ளத்தின் ஊச்சும் சுரமென்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி"

என்பது அப் பொருள்நலம் கெழுமிய அரியபாடல்.

## நெய்தல்

தலைவனிடத்துக் கொண்ட அளவிலாக் காதலால் அவனைப் பிரிந்து வருந்தும் காலத்து மிகுந்த துன்பத்தால் மெய்ம்மறந்து பலவாறு பேசுவாள் அதனைக் காமம் மிக்க கழிபடர் கிளவி எனனும் துறையில் அமைத்துப் பேசுவர். கடற்கரை மணலின்மேல் நண்டுகள் மெல்ல நகர்ந்து செல்லுவதைத் தலைவி கண்டாள் "நண்டே! உன்னைப் பெரிதும் வேண்டிக்கொள்கிறேன், என் தலைவன் ஏறிச் சென்ற தேர் போன வழியெல்லாம் தேர்க்கால் பதிந்த அடையாளம் இருக்கும்; அந்தப் பாதையையேனும் பாவியேன் எனது கண்ணாரப் பார்த்து ஆறுதல் அடைய வேண்டும்; ஆதலின் நீ அதன்மேல் நடந்து சிதைத்துவிடாதே" என்று வேண்டிக்கொள்கிறாள் "இதோ! இந்த மணல் மேட்டில் ஏறியிருந்து கடல் இழைத்துத் தலைவனை விரைவில்கூட முடியுமா என்பதைக் காண்போமா" என்று தன்னுள் பேசிக் கொள்கிறாள்.

இப் பகுதியிலும் தோழி, படைத்து மொழி கிளவியால் தலைவற்கு வரைவு கடாவும் திறம் நயம் நிறைந்து காணப்படுகிறது. தலைவன் வேலிப் புறத்தே நின்றுகொண்டிருக்கிறான். அவன் செவி கேட்கத் தோழி செப்புகின்றாள் :

"கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழில்நோக்கி
உண்கண் சிவப்ப அழுதேன் ஒளிமுகம்
கண்டன்னை எவ்வம்யா(து) என்னக் கடல்வந்தென்
வண்டல் சிதைத்ததென் றேன்."

"தலைவியே! நம் தலைவன் நின்னைக் கூடிப் பிரிந்த குளிர்பூஞ்சோலையை நோக்கி நின்று, ஐயோ! இத்தலைவன் இங்ஙனம் பனைநாட்களாகப் பகற் குறியில் வந்து கலந்து மகிழ்ந்து பிரிந்தானே. தாயர் நம்மை நாளை இற்செறித்து விட்டால் யாது செய்வானோ? என்று எண்ணிக் கண்கள் கலங்கிச் சிவக்க அழுது நின்றேன். இந்த வேளையில் எங்கிருந்தோ நம் அன்னை அங்கு வந்து என்னைப் பார்த்து விட்டாள். 'என்ன துன்பம் நேரிட்டது? ஏன், அழுதாய்?' என்று வினவினாள். நான் தந்திரமாக மறுமொழி தந்தேன். நான் கட்டிய சிறு வீட்டை இந்தப் பாழும் கடல் அலைகள் வந்து கரைத்துச் சிதைத்துவிட்டன. அதனால் வருந்தி அழுதேன் என்று சொல்லித் தப்பித்துக் கொண்டேன். இங்ஙனம் இல்லாததைப் படைத்துக் கூறி நமது களவுப் புணர்ச்சியை மறைத்தேன்," என்றாள் தோழி

மேலும் தலைமகனை வரைவு கடாவும் தோழி அத் தலைவனிடம் அணிநலம் பொருந்தப் பேசுகிறாள்: 'தலைவனே! தன்னைச் சேர்ந்தவர்க்கு இன்னல் போக்கி இன்பம் விளைப்பவனையே உலகம் உவந்து புகழ்ந்து கொண்டாடும்; அல்லாதவனை மனத்தால் நினைக்கவும் செய்யாது," என்று குறித்தாள். இதில் அத்தோழி, தலைவற்குக் குறிப்பாக நின்னை விரும்பிய தலைவியின் குறையாகிய மணம் புரியும் வேட்கையை நிறைவேற்ற வேண்டும் என்று அறிவுறுத்தினாள் இங்ஙனம் குறிப்பாகக் கருத்தை உணர்வைக்கும் கவிதைகள் பல நமது கருத்தைக் கவர்வனவாக உள்ளன.

> "மிக்க மிகுபுகழ் தாங்குபவோ? தற்சேர்ந்தார்
> ஒற்கம் கடைப்பிடியா தார்."

என்பது தோழியின் கருத்துத் தோய்ந்த மொழியாகும்.

## பழங்கால வழக்கங்கள்

மலைநாட்டு மக்கள் தினைப்புனத்திற்கு எருவேண்டி மலைச்சாரல் மரங்களை நெருப்பிட்டு எரிப்பர். அச் சாம்பலையே உரமாக இட்டு உழுது விதைப்பர். வில் வீரத்தால்

போரில் இறந்த சிறந்த வீரர்க்கு நடுகல் நாட்டுவதுண்டு. புண்ணிற்கு வெங்காரம் என்னும் மருந்திட்டனர் பழந் தமிழ் மக்கள் மலைநாட்டில் வேலன் வெறியாட்டயரும் பழக்கம் இருந்தது. மகளிர் மணலில் கூடல் வட்டம் இழைத்து எதிர்காலச் செய்தியைத் தெரிந்தனர் மகளிர் தம் கூந்தலை, குழல், கொண்டை, சுருள், பனிச்சை, முடி என்னும் ஐவகையாக முடித்து அணிசெய்து கொண்டனர். இன்ன பல பழைய வழக்கங்களை ஐந்திணையைம்பது என் னும இந்நூலால் அறியலாம்.

## திணைமொழி ஐம்பது

அகப்பொருள் துறைகளில் அமைந்த ஐம்பது பாக் களையுடைய இந்நூல் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் எனனும வைப்பு முறையில் அமைந்த ஐந்திணைப் பகுதிகளை உடையது. திணையொன்றுக்குப் பத்துப் பாக் களாக ஐந்திணைகட்கும ஐமபது பாக்களைக் கொண்டுள்ள மையால் இந்நூல் திணைமொழி ஐமபது என்னும பெயர் பெறறது. இந்நூலின்கண் நாற்பத்தாறு இன்னிசை வெண்பாக்களும நானகு நேரிசை வெண்பாக்களும உள் ளன இப் பாக்கள அணைத்தும சங்கநூல் பாக்கள போன்று சுருஙகிய சொற்களால் பெரும பொருள் விளக் கும பெற்றியுடையன ஆதலின நச்சினார்க்கினியா போன்ற உரையாசிரியர்களால எடுத்தாளும் சிறப்புற்றுள்ளன.

இந்நூலின் ஆசிரியர் கண்ணன் சேந்தனார் ஆவர். இவர் சாத்தநதையார் என்பார்க்குப் புதல்வர் என்று அறி கின்றோம. கடைச் சங்ககாலததில் வாழ்நதவரும் சோழன் போரவைக கோப்பெருநற்கிள்ளியைப் பாடியவரும் ஆகிய சாத்தந்தையாா என்னும் சான்றோரே இந்நூலாசிரியரின் தநதையார் எனச் சிலர் கூறுவர். இக் கருத்தை வலியுறுத் தும் சான்று ஒன்றேனும் இன்றாதலின் அதனை உறுதி யாகக் கொள்ளற்கில்லை. இவ் ஆசிரியரின் இயற்பெயரைக் கொண்டு இவா சமண் சமயத்தவர் அல்லா எனபதை அறியலாம். சைவம் வைணம் ஆகிய இருபெரு நெறிகளுள்

ஒன்றைக் கொண்டு ஒழுகியவராதல் வேண்டும் என்பதை யும் உணரலாம். இவரது காலமும் கி. பி. நான்காம் நூற்றாண்டு என்றே கருதப்படும்

## குறிஞ்சி

இந்நூலில் குறிஞ்சி நிலக் காட்சிகள் குறிப்பிடத்தக்க சிறப்புடையனவாய் உள்ளன. வானளாவிய வரையிடத்தே வாழும் வேடுவர் சந்தனக் கட்டைகளை வெட்டி எரியூட்டி நறுமணப் புகையை உண்டுபண்ணுகின்றனர். அந் நறு மணத்தை நுகர்ந்த வானோர் கைமமாறாகப் பூந்தாது போன்ற மழைத்துளிகளை மலையின்மேல் பொழிகின்றன ராம். இயற்கையாகச் சொரியும சாரல் மழையை இங்ங னம கற்பனை செய்து காட்டும் கவிஞர் திறம கவினுடைய தாகுமன்றோ !

மலைச்சாரலில் உள்ள காந்தட் செடிகள் மக்களின் கைகளைபபோன்று கவினுடைய அரும்புகளைக் கொண்டு விளங்கின அவற்றைக் கண்ட மந்திகள மணத்தில் கொள் ளும் முளைப்பாலிகைகளோ என்று நினைத்துக் கைகளில் எடுத்துக் களித்து விளையாடும் தினைப்புனத்தை உழுங் காலததுப் புதைந்து கிடந்து புலப்பட்ட மாணிக்க மணி களைக் குறவர்தம் சிறுவர்கள நெருப்பென நினைததாகள். குளிர்மிகுதியால் நடுங்கிய அவர்கள் அவைகளின்மேல் கை களைக் காட்டி வாட்டிக் குளிர் காய்கின்றனர்.

மலையுச்சியினின்று வீழும் வியனருவி வியத்தகு நல் லிசையோடு வீழ்கின்றது. யாழிசை, குழலிசை, முழவிசை ஆகிய மூவிசைகளும் கூடி ஒலித்தாற்போன்று இன்னிசை யோடு விழுகின்றது என்று குறிபபிடும் சிறப்பு கூர்ந்து நோக்கதத் தக்கது.

> "யாழும் குழலும் முழவும் இயைந்தென
> வீழும் அருவி விறன்மலை நன்னாட !"

என்பது அவ் அருவியினை வருணிக்கும் அழகிய பகுதி யாகும்.

ஆங்கு வேங்கை மரங்களும் பலா மரங்களும் அடர்ந்து ஓங்கி வளர்ந்துள்ளன. மாலை நேரத்தில் பூத்த வேங்கை மலர்களில் வண்டுகள் பாங்கான பண்ணிசை பாடுகின்றன. பலா மரத்தில் பழுத்த தீங்கனியை ஆண்குரங்கு பறித்துச் சிதைக்கும். அதன் திருசுளைகள் உடனிருந்து தின்று மகிழப் பெண்குரங்குகளைப் பெட்புடன் அழைக்கும். இத் தகைய பல இனிய காட்சிகளை ஆசிரியர் அழகிய சொல் லோவியமாகத் தீட்டிக் காட்டும் திறம் தெவிட்டாத இன் பத்தை ஊட்டுவதாகும்.

## சில துறை நலங்கள்

பகற்குறியில் தலைவியைக் கண்டு இன்புறும் காதல் விருப்புடன் தினைப்புனத்தின் வெளிப்புறத்தே தலைவன் வந்து நின்றான். அதனை அப் புனங்காத்து நின்ற தலைவி யும் தோழியும் கண்டு கொண்டனர். தலைவன் இங்ஙனம் களவுப் புணர்ச்சியில் காலம் நீட்டித்தலை ஒழித்துக் கடி மணம் புரிந்து கொள்ளுமாறு செய்யவேண்டும் என்று விரும்பிய தோழி படைத்துமொழி கிளவியால் வரைவு கடாவும் திறம் நயம் நிறைந்த பகுதியாக உள்ளது.

"தோழியே! நமது களவொழுக்கத்தை அறிந்த அன்னை, 'இனி நீவிர் தினைப்புனத்திற்குச் செல்லவேண் டாம்' என்று தடை செய்துகொண்டிருக்கின்றனள். அத னால் நாம் பகற்குறிக்கண் வந்துபோகும் தலைவனைச் சந்திக்க இயலாது வருந்துகின்றோம். இதனால் நம் தலைவன் நம்முடன் பிணங்கி ஊடல் கொள்வானோ? அறிகின்றி லமே!" என்று தலைவியுடன் தலைவன் கேட்குமாறு உரை யாடும் தோழி இறைச்சிப் பொருள் நலம் கனியுமாறு அவ னது மலைநாட்டு வளத்தைக் குறிப்பிடுகின்றாள்.

> " பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவன்
> எலவென்(று) இணையயிரும் ஏகல்சூழ் வெற்பன்
> புலவுங்கொல் தோழி! புணர்வறிந்(து) அன்னை
> செலவும் கடிந்தாள் புனத்து"

என்பது அத் தோழியின் பொருள்நயம் பொதிந்த வாக்கு.

ஆண்குரங்கொன்று பலவின் தீங்கனியைப் பறித்தது. அதனைக் கிழித்துச் சுளைகளை எடுத்தது. அவற்றைத் தனித்துண்ண விரும்பாது தன் துணையாகிய மந்தியுடன் குந்தியிருந்து உண்ண எண்ணியது. "ஏடி! பெண்ணே! இங்கு வா!" என்று அன்போடு அழைக்கின்றது. அத்தகைய இன்பக் காட்சி நல்கும் இனிய மலைச்சாரலையுடைய மலைநாட்டுத் தலைவன் அவன் என்று குறித்தாள். இதனால் "தலைவ! இங்ஙனம் களவொழுக்கம் கருதி வருதலை ஒழித்து, எங்கள் தலைவியை எப்பொழுதும் அருகில் வைத்து மருவுதற்குக் காரணமான திருமணத்தை விரைந்து புரிந்து கொள்வாய்!" என்று தோழி வலியுறுத்தும் திறம் எத்துணைச் சிறப்புடையதாக இருக்கின்றது!

இரவுக்குறி விலக்கித் தலைவனை வரைவுகடாவும் தோழியின் மொழிகள் சிந்தையைத் தொடுவனவாகும்.

"மாழைமான் நோக்கியும் ஆற்றாள் இரவரின்
ஊரறி கௌவை தரும்!"

என்று மிகவும் நுட்பமாகத் தலைவற்கு அறிவுறுத்துகின்றாள். இரவுக்குறியில் வந்து காணுதலை ஒருவுக; "நீ இரவில் வந்தால் ஊரார் அலர் தூற்றுவர்; எங்கட்கும் உனக்கும் அஃது இழிவைத் தரும். நீ வாராதொழிந்தாலோ தலைவியும் நின்னைப் பாராமையாலே பேரின்னல் அடைவாள். ஆதலின் நுங்கள் உண்மைக் காதல் சிறக்க மங்கலத் திருமணம் புரிந்து மகிழ்க!" என்று தந்திரமாகத் தலைவற்கு அறிவுறுத்துகின்றாள். இப்பாடலின் சொல்லையும் பொருளையும் ஒத்து விளங்கும் முத்தொள்ளாயிரப் பாடல் ஒன்று உள்ளது.

"குடத்து விளக்கேபோல் கொம்பன்னார் காமம்
புறப்படா பூந்தார் வழுதி—புறப்படின்
ஆபுகு மாலை அணிமலையில் தீயேபோல்
நாடறி கௌவை தரும்"

இப்பாடல் 'நாடறி கௌவை தரும்' என்று முடிவது போன்றே, திணைமொழி ஐம்பதிற் காணும் மேற்குறித்த

பாடலும் 'ஊரறி கௌவை தரும்' என்று முடிந்துள்ளது. மகளிர் தம் மனத்துட் கொண்ட காதலைக் குடத்து விளக்கைப் போல மறைத்து வைப்பர். அது வெளிப்பட்டு விட்டாலோ மாலை நேரத்தில் மலையிற் பற்றிய தீயைப் போல ஊரார் அறியப் பெரும்பழி விளைக்கும். இக் கருத்தையே திணைமொழி ஐம்பது மற்றொரு வகையில் விளக்கி நிற்கிறது.

பாலை

களவொழுக்கத்தில் தலைவியைக் கலந்து மகிழ்ந்த தலைமகன் அவளை வரைந்துகொள்ள விழைந்தவனாய்ப் பொருள் தேடிப் புறப்படுகின்றான். அங்ஙனம் பொருள் வயிற் பிரியும் பிரிவொழுக்கத்தைப் பேசும் பாலையைக் குறிஞ்சியின் பின்னர் வைத்துக் கூறும் புலவர் உள்ளம் போற்றற்கு உரியதாகும்.

தலைவியைப் பிரிய முற்பட்ட தலைமகன், "யான் பிரிந்தால் தலைமகள் ஆற்றுவளோ?" என்று உளருகக் கேட்டான். அவற்குத் தோழி மறுமொழி கூறும் திறம் கற்பார்க்கு மகிழ்வூட்டுவதாகும் அவளுடைய ஆற்றாமையை அவளது உள்ளம் கவர்ந்த உன்னையன்றி அறிவார் யாவர்? மேலும் அவளது உள்ளத்தை அன்னவளின் அரிபரந்த உண்கண்கள் நன்கு திறந்து காட்டியிருக்குமன்றே! அங்ஙனமிருக்க யான் கூற என்னவிருக்கிறது? என்று கூறினாள்.

> " முரிபரல வாகி முரணழிந்து தோன்றி
> எரிபரந்த கானம் இயைபொருட்குப் போவீர்!
> அரிபரந்த உண்கண்ணாள் ஆற்றாமை நும்மின்
> தெரிவார்யார் தேரு மிடத்து "

இப் பாட்டில் கூறும் பாலைவருணனை படிப்பவர் உள்ளத்தில் பதைப்பினை உண்டுபண்ணும். "எங்கும் நெருப்புப் பரந்த நீள்கானம். அத் தீயின் கொடுமையால் ஆங்குள்ள பாறைகற்களும் சுக்குநூறாக நொறுங்கிப் போகின்றன. அத்துணை வெப்பமான நிலத்தன்றோ பொருள்

விரும்பி நடந்து போவீர்! அதனை எண்ணும்போது, தலைவி உள்ளம் ஆற்றுமோ!" என்று இரங்கிக் கூறினாள்.

## முல்லை

பிரிந்து சென்ற பெருமகனை நினைந்து ஆற்றியிருக்கும் கற்பொழுக்கத்தையுடைய முல்லையைப் பாலையினை அடுத்து வைத்துப் பாராட்டினார் ஆசிரியர். இல்லத்தே ஆற்றியிருக்கும தலைவிக்குத் தோழி ஆறுதல் மொழிகள் கூறுகிறாள். "தலைவன் குறித்துச் சென்ற கார்காலம் இதோ! குறுகிவிட்டது. காயா மரங்கள் அஞ்சனம் போன்று கருநிற நறுமலர்களைப் பூத்தன. மாதவிக் கொடிகள் மாதரார் பற்களைப் போன்று அரும்பின காந்தட் செடிகள் கூழைத் துழாவும் துடுப்பினைப் போன்று கொத்தரும்புகளைக் கொண்டு விளங்கின ஆதலின் நம் காதலர் இதோ! வந்துவிட்டார். தலைவியே! நின் தோள்கள் முன்போல் பூரித்துப் பொலிவனவாக" என்று வாழ்த்தினாள்.

பருவமழை கருக்கொண்டு காலூன்றிப் பெய்யத் தொடங்கிவிட்டது. அன்புகொண்ட மடமான்கள் பிணை மானோடு இணைந்து துள்ளி விளையாடுகின்றன. ஆதலின் நம் தலைவனும் நின்னொடு விளையாடி மகிழ விரைவில் வருவான் என்பதை இக் கார்காலம் நன்கு வலியுறுத்துகின்றது என்று உள்ளுறை யுவமநலம் கனியச் சொல்லினள் தோழி.

> "கருவியல் கார்மழை கால்கலந்(து) ஏந்த
> உருகு மடமான் பிணையோ(டு) உகளும்
> உருவ முலையாய்! நம் காதலர் இன்னே
> வருவர் வலிக்கும் பொழுது"

என்பது அத்தோழியின் ஆறுதல் மொழி.

## மருதம்

தலைவன் பிரிவால் ஆற்றியிருந்த தலைவி, அவன் வரவு கண்டு ஊடல் கொண்டாள் அவ் ஊடலைப் போக்கி, என்னைத் தலைவியுடன் கூடுமாறு செய்க என்று தலைவன் தோழியை வாயில் வேண்டி நின்றான். அப்போது தோழி,

வாயில் மறுத்து வழங்கும் மறுமொழி பெருநயம் உடைய தாகும் :

"தலைவனே! முன்பு எங்கள் தலைவியின் இளநலத்தை இனிது துய்த்தாய். இப்போது அவள் முதுமை கண்டு வெறுத்து ஒதுங்கினாய் கதிர்த்த மார்பைக் காட்டிக் கண் வலை வீசி இழுக்கும பரத்தையர் நலத்தை நாடி நிற்கின் றாய். உனது செயல் கீழமக்கள் நட்பிற்கு ஒப்பாகும்," என்று இடித்துரைததாள்.

"கடையாயார் நட்பிற் கமுகனையர்"

என்பர் சமணமுனிவர் அதுபோல, நீயும் எங்கள் தலைவி யின்பால் இளமை நலம் இனிது கனிநதொழுகும் காலத் துக் கூடிக் குலவினாய். அநத நலம அழிநத இந்நாளில் பொருளற்றவரை விட்டுப் பிரியும் புன்மையாளரைப்போல நீங்கினாய் என்று பழித்துரைக்கும் பாவையின் மொழி கருத்தைக் கவர்வதாகும்.

"கடையாயார் நட்பேபோல் காஞ்சிநல் லூர!
உடைய இளநலம் உண்டாய்—கடையக்
கதிர்முலை ஆகத்துக் கண்ணன்னார் சேரி
எதிர்நலம் ஏற்றுநின் றாய்!"

என்பது அததோழியின் கூற்றாக அமைந்த பாட்டு.

பலவாறு பணிந்த மொழிகளைக் கனிந்து பேசி நின்ற தலைமகனுக்குத் தோழி உளளம் இரங்கினாள். "உன்னை நொந்து என்ன பயன்? எங்கள் தலைவிக்கு அன்பும் இன்ப மும் எழிலும் ஆகிய எல்லா நலங்களையும் நீயே தந்தாய். இப்போது அவற்றை நீயே பறித்துக் கொண்டாய். கொடுத்தவன் எடுத்தால் தடுத்துப்பேச யாரால் இயலும்!" என்று கூறி வாயில் நேர்ந்தாள்.

"செந்தா மரைமலரும் செய்வயல் நல்லூர!
நொந்தான்மற் றுன்னைச் செயப்படுவ(து) என்னுண்டாம்
தந்தாயும் நீயே தரவந்த நன்னலம்
கொண்டாயும் நீயாயக் கால்."

என்பது அத்தோழியின் உளங்கனிந்த மொழி.

## நெய்தல்

இரங்கல் ஒழுக்கத்தையுடைய இப்பகுதியில் தலைவனும் தோழியும் இரங்கிக் கூறும் மொழிகள் இன்பந் தருவனவாகும். வரைவினை வலியுறுத்திக் கூறும் தோழி, தலைவனை நோக்கி, "எங்கள் தலைவியின்பால் தண்ணருள் செய்வாய்! பைம்பூண் ஒளிரும் நினது திருமார்பை அவள் மனங்குளிர மருவுமாறு அருள்புரிவாய்! அவள் கொடிபோல் நுடங்கும் நுடியிடையுடையாள். ஓவியத்தே ஒளிரும் பாவை ஒப்பாள்," என்று உள்ளுருகச் சொல்லும் தோழியின் நல்லியல்பு எல்லையற்ற இன்பம் தருவதாகும்.

> "சித்திரப் பூங்கொடி அன்னாட்(கு) அருளீயாய்
> வித்தகப் பைம் பூண்நின் மார்பு"

என்பது அவளது மொழியாக அமைந்த பகுதி.

"மனையறத்திற்குரிய குணநலங்கள் எல்லாம் ஒருங்கு பொருந்தியவளன்றோ எங்கள் தலைவி! பூங்கொடி போன்ற பொற்பும் உடையாள் அவள். அன்னவளை நன்மணம் புரிந்துகொள்வது பற்றிய எண்ணமே இல்லாது இங்ஙனம் வந்துபோகும் உனது செயல் பொருத்தமுடையதன்று. மேலும் உயர்குடிப் பிறந்த உனக்கு இச்செயல் தகுமோ?" என்று இரங்கிக் கூறித் தலைவனை மணத்திற்கு வற்புறுத்தும் பொற்பு மிக நன்றாயிருக்கிறதன்றோ!

> ..................................."தகுமோ?
> குணநீர்மை குன்றாக் கொடியன்னாள் பக்கம்
> நினைநீர்மை இல்லா ஒழிவு."

என்பது அத்தோழியின் ஆய்வுடைய மொழியாகும்.

குயில் பயிலும் குளிர்பொழில் ஒன்றின் கோங்க மரத்து நீழலில் கன்னியொருத்தி இன்னமுத உருவாய் நிற்கக் கண்டான் தலைவன். அவளது வேலன்ன விழியால் உள்ளம் வெதும்பினான்; உடலம் சோர்ந்தான்; தோள்கள் மெலிந்து நலிவுற்றான். அவனது மெலிவைக் கண்ணுற்ற பாங்கன்,

"இறைவா! நின் தடவரைத் தோட்டு
என்கொலாம் புகுந்தெய்தியதே?"

என்று வினவினான். அதற்குத் தலைவன், பாங்கன் இரங்குமாறு கூறும பதில்மொழி மிக்க இன்பம் விளைவிப்பதாகும்.

"மயில்கொல் மடவாள்கொல் மாநீர்த் திரையுள்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர்!—குயில்பயிரும்
கன்னி இளஞாழல் பூமபொழில் நோக்கிய
கண்ணின வருந்துமென் னெஞ்சு."

என்பது அத்தலைவன் கூறிய மொழியாகும்.

"யான் அப்பொழிலிடத்துக் கண்ட எழில் நல்லாள், மயிலோ? மடமாதோ? கடலுள் வாழும நீரரமகள்தானோ? யாரென்று அறிகிலேன் அவள் பார்த்த பார்வை, இன்னும் என் நெஞ்சைவிட்டு அகலாது வருத்துகின்றது" என்று உரைத்தான்.

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ! கனங்குழை
மாதாகொல் மாலுமென் னெஞ்சு." (௧௦௮௧)

என்ற தெய்வப் புலவரின் திருவாக்கு, இப்பாட்டில் எத்துணை இடம்பெற்றுளளது! இங்ஙனம் நுண்ணிய கருத்துக்களால் எண்ணரிய இன்பம பயக்கும இனிய பாக்கள் பலவற்றைக் கொண்டு மிளிர்வது திணைமொழி ஐம்பது என்னும் இச் சின்னூலாகும். அத்தனையும் எடுத்துரைக்க, இக்கட்டுரை இடந்தராதெனக் கருதி அமைகின்றேன்.

# ௨. நூற்றைம்பது கைந்நிலை இன்னிலை -

[திரு. கே. சுப்பையா பிள்ளை, எம். ஏ.]

## தோற்றுவாய்

சங்க இலக்கியங்களை அகம, புறமெனை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம. அவற்றுள அகமென்பது மனததின்கண்ணே நிகழும[1] உணாச்சிகளையும எண்ணங் களையும் சிததிரிததுககாட்டும் பாடல்களையேயாம். அவை அகப்பாட்டு எனபபடும். இப்பாட்டில் சிறந்த மக்களைப் பற்றியே[2] பேசபபடும. புறமென்பது, புறததே நடக்கும் காரியங்களை[3] விளக்கிக் காட்டும் பாடல்களையேயாம்; அவை, புறப்பாட்டெனப்படும. தலைவன் தலைவியாகிய இருவர்பால் நிகழும் உள்ளுணாச்சிகளைச் சொலலோவியமாகக் கவின் பெறக் காட்டினார்கள் நம் சங்கத்துச் சான்றோாகள். அகத்தே நிகழும உணர்ச்சிகளை, இயற்கையோடு சேர்த்துப் பின்னிப் பாடும அருமை, தமிழ் இலக்கியத்திறகே சிறபபாக அமைந்தது. வாழ்க்கைக்கும இயறகைக்கும் உள்ள தொடர்பை அகததுறைப்பாட்டின் வாயிலாக நம் பண் டைப் புலவர்கள் நன்கெடுததுக் காட்டியிருக்கிறார்கள். வாழ்க்கைக்கும் இயற்கைக்குமுளள பல்வேறு தொடர்பு களை அணிபெற அமைத்துக்காட்டிய பெருமை தமிழகப் புலவர்க்கே உரியது. கங்கை நதிக்கரையிலும, நைல் நதிக் கரையிலும், டைபர் நதிக்கரையிலும், ஏஜியன்[4] கடற்கரை யிலும், தோன்றிய பெருமபுலவாகளும இத்துறையில் நம் புலவர் பெருமக்கட்குச் சற்றுப பிற்பட்டவர்களென்றே அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம். இயற்கையாகிய உலக அரங்கிலே மனித இனத்தின் நாடக வாழ்க்கை நடந்து

1. Interior.
2. The best type of men.
3. Exterior.
4. Ageon.

வருகிறது உலகமாகிய நாடக அரங்கிற்கு இயற்கையே பின்னணித்திரையாகக் காட்சி அளிக்கிறது.

நிலத்தைக் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என ஐந்தாகப் பிரித்து, ஐவகை நிலங்களின் இயல்புகளையும் கூறி, அந்நிலங்களின் இயல்புகளுக்கேற்ற மன உணர்ச்சிகளையும் செவ்விதின்காட்டிய நம புலவர்பெருமக்களின் பெருமைதான் என்னே! இத்தகைய அக நெகிழ்ச்சிகளை அணிபெறக்காட்டும, அற்புதப் பாடல்கள் பல "திணைமாலை நூற்றைமபதில்" நாம் காணலாம். இவ்வரிய பாடல்களின் நயங்களையெல்லாம் சித்திரிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்

## திணைமாலை நூற்றைம்பது

கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டனுள் ஐந்திணை நூலகள நான்கினிற் சிறந்து விளங்குவது "திணைமாலை நூற்றைம்பது." இந்நூலின் ஆசிரியர் ஏலாதிநூல் செய்த கணிமேதாவியார் எனப்படுவர். இவர் மதுரைத தமிழாசிரியர் மாக்காயனா மாணுக்கராவர். இந்நூலின் திணை வைப்புமுறை, குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் என அமைநதுள்ளது அகததிணை ஒழுங்கினையுடைய நூற்றைம்பது பாக்களை இந்நூல் கொண்டிருப்பதால், இதற்குத் "திணைமாலை நூற்றைம்பது" எனப் பெயராயிற்று. உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் போன்ற பெரிய உரை ஆசிரியர்கள் இந்நூல் பாடல்களை எடுத்தாண்டிருக்கிறார்கள். குறிஞ்சிததிணைக்கு முப்பத்தொன்றும், நெய்தலுக்கு முப்பதமொன்றும், பாலைக்கு முப்பதும், முல்லைக்கு முப்பதமொன்றும், மருதத்திற்கு முப்பதும் கொண்டு மொத்தம் நூற்றைம்பத்து மூன்று பாடல்களில் அமைந்தது இந்நூல்.

> "முனிந்தார் முனிவொழியச் செய்யுட்கண்
> முத்துக் கனிந்தார்."

என்ற பாயிரப்பகுதியே இந்நூலின் சிறப்பினை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

இந்நூலில் முதற்கண் காணப்படும் குறிஞ்சி நிலக் காட்சியைப் பார்ப்போம். புணர்தலும் புணர்தனிமித்தமும் ஆகிய ஒழுக்கத்தைக் குறித்துப் பேசப்படுவதே குறிஞ்சித் திணையாகும் குறிஞ்சி நிலத்தில் நிகழும் மக்களின் காதல் வாழ்க்கை இவண் நன்கு பேசப்படுகிறது.

## குறிஞ்சி

மலையில் ஒருபகுதி, கண்ணுக்கினிய காட்சி தரும் தினைப்புனம். வினை விளையச் செல்வம் விளைவதுபோல் புனத்தில் தினைகளெல்லாம் நன்கு விளைந்திருக்கின்றன. தலைவி, பரண்மீதமர்ந்து தினைப்புனம் காக்கின்றாள். அனிச்ச மலரையும், சுனையில் மலர்ந்த நீலோற்பல மலரையும், அசோக மலரையும், தனது கூந்தலிலே சூடியிருக்கிறாள். அப்பொழுது இருகோட்டு முமமதத்து நால்வாய் மாலயானை பரண் பக்கத்திலே வந்து தலைவியைத் தாக்க முற்பட்டது. தலைவி செயவதென்னவென்று தெரியாமல் மயங்கினாள். அவ்வமயம் தலைவன் தோனறித் தனது மொட்டமபினால யானையை விலக்கித் தலைவியைக் காப்பாற்றினான். பிற உயிரைக் காப்பாறறுதலே சிறந்த அற மெனக் கருதித் தலைவன் தலைவியைக் காப்பாற்றினான். தலைவன் வீரத்திலும, அழகிலும ஈடுபட்டாள் தலைவி. தலைவனும் அஙஙனே! இருவா உள்ளங்களும பொருந்தின. பின்னா இருவரும கூடி இனபுற்றனர். இதனைக் "களிறு தருபுணாச்சி" என்று கூறுவர். இக்கருத்துக்களை யெல்லாம் கொண்ட பாடலைப் பார்ப்போம்.

> "சுள்ளி சுனைநீலஞ் சோபா லிகைசெயலை
> அள்ளி யளகத்தின் மேலாய்ந்து—தெள்ளி
> இதணாற் கடியொடுங்கா வீர்ஙகடா யானை
> புதணாற் கடிந்தா னுளன்."

களிற்றால் வந்த இடையூறு நீஙகிற்று. பரண்மீதமர்ந்த பாவை, தினைப்புனம காவல் செய்தாள். தினைக்கதிர்களைக் கவர்வதற்குக் கிளிக் கூட்டங்கள் புனத்திற்கு வந்து சேர்ந்தன. கிளிகளைச் "சோ"வென்று விரட்டினாள், கிள்ளை

மொழியாள். கிளிகள் அகலவில்லை. தன்னினத்துக் கிளி தான் பேசுகிறதென்று கருதியே அக்கிளிகள் அகலவில்லை. இதனைக் கண்டு, தலைவி நாணமுற்றாள்.

........"சாந்தம்
கமழக் கிளிகடியுங் கார்மயி லன்னாள்
இமிழக் கிளியெழா வார்த்து"

என்பது அக்கருத்தைப் புலப்படுத்தும் பாடற்பகுதியாகும்.

தினைக் கதிர்களெல்லாம் அறுத்த பின்னர்த் தலைவிக்குப் புனங்காக்கும் வேலையில்லை; அண்ணன்மார், தலைவியை இற்செறித்தனர்: தலைவன் வழக்கம்போல், தலைவியைப் புனத்திற் காணவந்தான், புனத்தில் காணவில்லை; விளையாட்டுப் பண்ணையிலும் சென்று பார்த்தான்; அங்கும் தலைவியைக் காணாது தனித்துயருழந்தான்.

"கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை
யாடா வடகினும் காணேன்."

என்று கூறினான் தலைவன். தன் அன்பார்ந்த தலைவியைக்

"கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை"

என்று குறிப்பது மிக அருமை. ஒரே தொடரில் தலைவன் நாட்டன்பு, அரசனிடத்திற்கொண்ட அன்பு, தலைவியிடம் கொண்ட அன்பு ஆகிய மூன்றுவித அன்பினைப் படம் போல் நமக்கு எடுத்துக் காட்டுகிறார், ஆசிரியர் கணிமேதாவியார். கெடாத புகழினையுடைய பாண்டியன் ஆட்சி புரிகின்ற மதுரைபோன்ற மதர மிகுந்த தலைவியே! என்று சொல்வதில் எவ்வளவு நயம் தோன்றுகிறது. ஒரு சிறந்த பட்டினத்திற்கு ஒப்பான தலைவி என்று வருணிக்கும் போக்கு, தமிழ் இலக்கியத்திற்கே யுண்டு. இதுபோன்று,

"தொண்டி யன்ன நின் பண்பு"

என்று பழம் பாடல்களில் வருவதை நோக்குக. மேல்நாட்டு இலக்கியங்களில் இத்தகைய வருணனை பார்ப்பதரிது. ஒரு

பெண்ணை "இலண்டன் போன்றவள்" "பாரீஸ் போன்றவள்" என்று பேசினால், அஃது மேனாட்டவருக்கு ஒரு வியப்பாகத் தோன்றும். சற்று வெறுப்பாகக்கூடத் தோன்றும். கரிகாற் பெருவளத்தானிடமிருந்து பதினாறு நூறாயிரம் பசும்பொன் பாிசுடன்பெற்ற உருத்திரங்கண்ணனார் தமது பட்டினப்பாலையில்,

> "முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
> வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய,
> வாரேன்."

என்று பேசுவதும் சிந்திக்கத் தக்கது.

தலைவன் தலைவியின் அண்ணன்மார்களை ஈரமில்லா நெஞ்சினர் என்று நினைக்கிறான். தலைவியை இவர்கள் இற்செறித்ததே இதற்குக் காரணம். ஈரமில்லா நெஞ்சினர் கூடப்பிறந்த தலைவியும் இரக்கமில்லாதவள் என்றும் தலைவன் நினைக்கின்றான் அண்ணன்மாரின் வன்கண்மையை மேலும் நினைக்கிறான் தலைவன. வன்செயல் யாது? தினைப் பயிர் செய்வதற்காக நறுமணங் கமழும் வானோங்கிய சந்தனமரங்களையும், குளிர்ந்த தகர மரத்தையும், மகிழ மரத்தையும், பயனற்ற புதர்களைப்போல வெட்டியெறிந்து விட்டார்கள். இத்தகைய ஈரமிலா நெஞ்சினருடன் பிறந்த தங்கையிடமிருந்து அன்பை எங்ஙனம் எதிர்பார்க்க முடியும்! என்று தலைவன் நினைததான். மனத்தின்கண் நிகழும் மென்மையான உணர்ச்சிகளைத்தான் எடுத்துக்காட்டுகின்றது தலைவன் கூற்று.

> "நறுந்தண் தகரம் வகுள மிவற்றை
> வெறும்புதல்போல் வேண்டாது வேண்டி—யெறிந்துழுது
> செந்தினை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு
> நொந்தினைய வல்லளோ நோக்கு." (உச)

எவ்வளவு அழகான பாடல்!

தலைவன், தான் தலைவிமாட்டுக்கொண்ட காதலைத் தோழியிடம் கூறும் பகுதி, படிப்போர் மனத்தை இன்புறுத்தும்.

"தோழியே! நான் தலைவியை நன்கு அறிவேன். அவளது இடையோ, உண்டோ இல்லையோ என்று சொல்லும்படி நலிந்திருக்கிறது; என்பால அருட்பார்வை செலுத்தாது ஆயத்தை விட்டுச் சிறிது அப்பாற் சென்றுள்; மெல்ல அசைந்து நடப்பதனால் அவள் இடைமுறிந்து விடுமோ வென்று கலங்கி, அவள் தளர்நடைக்குப் பின் என்நெஞ்சு சென்று மேலும் தளர்வுற்றது." மனத்தில் நிகழும் மென்மையுணர்ச்சிகளை அழகுபெற அமைத்துக் காட்டுகிறது இப்பகுதி. இனிப் பாடலைப் பார்ப்போம்.

"அறிகவளை யைய விடைமடவாய்! ஆயச
சிறிதவள்செல் லாளிறுமென் றஞ்சிச—சிறிதவள்
நல்கும்வாய் காணுது நைந்துருகி யென்னெஞ்சம்
ஒல்குவா யொல்க லுறும்."

தலைவன் தலைவியரின்மேற்கொண்ட காதலை விளக்கும் பாடல்களின் நயங்களை மேலும பார்ப்போம். தலைவியின் அண்ணனமார்களோ மிகக் கொடியவர்கள். யானைபோன்ற வன்மைமிக்கவர்கள் தினைப்புனத்திற்கு வருகின்றவர்களை, ஒரே அம்பினால் கொன்றுவிடுவர் ஆனால் இவர்கள் தங்கையோ ஒரே பார்வையினால் கண்ணெனற இரண்டு அம்பினால் பிழைத்துப் போகாது என்னைக் கொன்று விட்டாள்! இவளும மிகவும கொடியவளே! மேலும் இவளைக் கண்டபொழுதே எனது நாணமும் அழிந்தது; அறிவு முதலிய நற்பண்புகளெல்லாம கெட்டுவிட்டன; 'என் வலிமையெலலாம ஒழிந்து, மிக்க இழிந்த நிலைக்கு நான் வந்துவிட்டேன் என்று தலைவன் குறிப்பிட்டான்.

தலைவியின் அழகை யெடுத்துக்காட்டும் பாடலைப் பார்ப்போம்.

"திங்களுள் வில்லெழுதித் தேராது வேல்விலக்கித்
தங்களு ளாளென்னும் தாழ்வினால்—இங்கண்
புனங்காக்க வைத்தார்போற் பூங்குழலைப் போர்தென்
மனங்காக்க வைத்தார் மருண்டு."

"சந்திரன்போன்ற முகத்தில் விற்போன்ற இரண்டு புருவங்கள். புருவங்களுக்குக்கீழ் வேல்போன்ற இரு விழிகள். தங்கள குலத்திற் பிறந்தவள்தானே யென்ற எளிமைக்காரணத்தினாலே இவள் அண்ணன்மார், பூச்சூடிய கூந்தலுடைய இப்பெண்ணைத் தினைப்புனங் காக்கவைத்தனர். இப்பூங்குழலாளை நான் பார்த்தபொழுதே அவள என் மனத்தைவிட்டு நீங்காதவளாய் விட்டாள். நான் எப்பொழுதும அவளை என்மனதில வைத்துக் காக்க வேண்டியதாயிற்றே!" என்று தலைவன் புலம்பினான்.

கபிலரைக் குறிஞ்சிப்புலவரென்று கூறுவதுண்டு. இயற்கையின் நல்லியல்புகளை அழகுபெற எடுத்துக்காட்டுவதில் மிக வல்லுநர். நக்கீரர் இயற்கையைக் "கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு" என்று பேசி மகிழ்கிறார். வோர்ட்ஸ் வொர்த[1] டென்னிசன்[2] போன்ற மேனாட்டுப் புலவர்களும் இயற்கையின் இயல்புகளை மிகச் சிறபபாகப் பாடியிருக்கின்றனர். இத்தகைய பெருமபுலவர் வரிசையில் வைத்து எண்ணத்தகுந்தவர் நம் திணைமாலை நூறறைம்பது பாடிய கணிமேதாவியார்.

தலைவன் வாழும் சிற்றூரின் சிறப்பைப் பார்ப்போம். தலைவன் வாழும் மலைநாட்டில ஒரு மலையைப்போலவே எல்லாப்பக்கஙகளிலும் ஒரே யளவாய்ப் பல மலைகள இருக்கின்றன. இமமலைகளின் மத்தியில் தலைவன் வாழும் சிற்றூர் இருக்கிறது. அம்மலையின் உட்புறத்தே ஐநது வாய்களைகொண்ட நாகங்கள் கிடக்கின்றன வெளியில் துதிக்கையையுடைய யானைக்கூட்டங்கள் நிறைந்த காடுகள் இருக்கின்றன.

"ஒருவரைபோ லெங்கும் பல்வரையுஞ் சூழ்ந்த
வருவரை யுள்ளதாஞ் சீறூர்."

எனப் பாடியிருக்கும் பகுதி எவ்வளவு அழகாயிருக்கிறது!

மலையிலே பாலொத்த பல அருவிகள் வீழ்ந்து பாய்ந் தோடுகின்றன. மலை நெல் விளையும் தினைப்புனங்கள்

---

1. Wordsworth. 2. Tennyson.

பல்வகையான பூக்களைப் பரப்பிவைத்ததுபோலிருக்கின்றன.

"பாலொத்த வெள்ளருவி பாய்ந்தோடிப் பல்பூப்பெய்
தாலொத்த வைவனங் காப்பாள்கண்."

கற்பாறைகள்மீது வேங்கைமரங்கள் சொரிந்த வேங்கைப்பூக்கள பரந்து கிடக்கின்றன. இது வெற்றிபெற்ற புலிபோன்று காட்சி அளிக்கிறது இதைக்கண்டு புலி யென்று யானைகள் அஞ்சியோடுகின்றன. எவ்வளவு அழகான கற்பனை!

தலைவனும் தலைவியும் கூடும் பூம்பொழிலின் அழகைப் பார்ப்போம.

சேணோங்கி வளர்ந்திருக்கும் பலாமரப் பக்கத்தில் வருக்கைப் பலாமரங்களாலாகிய பலாதோட்டமொன் றிருக்கிறது அதன் நடுவே நிலவொளி நன்கு பொருந் தும்படியான வெண்மணற்குன்று; அக்குன்று பரந்தும் வளைந்தும் கிடக்கிறது; இதனருகே காட்டாற்றுப் பெருக் கினால், காந்தள் மலாகள் பூததுவிளங்கும் கவின்மிக்க சோலை; இச் சோலையிலே காதலர்கள் ஒருங்குகூடி விளை யாடுகிறார்கள். இவ்வழகிய காட்சியை நமமனக்கண்முன் காட்டும இன்பப் பாட்டைப் படியுங்கள்.

"பலாவெழுந்த பால்வருக்கைப் பாத்தி யதனேர்
நிலாவெழுந்த வார்மண லிடிச்—சுலாவெழுந்து
கான்யாறு கால்சீத்த காந்தளம்பூந் தண்பொதும்பர்
தானுறத் தாழ்ந்த விடம்."

தன்னால் அன்புசெய்யப்பட்ட தலைவியைப் பெற முடியாவிட்டால் தலைவன் மடலேறுதலை மேற்கொண்டு தலைவியை அடைவது அக்காலத்துப் பழக்கம். தோழி யிடம் தலைவன் சொல்வதுபோலமைந்த பாட்டில் இக்கருத் துக் காணக்கிடக்கிறது. "சுரபுன்னை மலரைச் சூடிய தலைவியின் மார்பை நான் பெறும்வரை என்மார்பை விட்டகலா என்புமாலைகள்; தலைவிவாழும் தெருவிலே

மடலாற்செய்யப்பட்ட குதிரையின் மீதமர்ந்து, மேனியெல் லாம் சாம்பறபூசி, என்புமாலை யணிந்து பவனிவருவேன்' இது திண்ணம்; இககாரியம் செய்யத் துணிந்துவிட்டேன்'; என்று தலைவன் தோழியிடம் கூறும்பாட்டு:

“ நாளுக நாறு நனைகுழலா ளல்கித்தன்
பூளுக சேர்வளவும் போகாது—பூளுகம்
என்றே னிரண்டாவ துண்டோ மடன்மாமேல்
நின்றேன் மறுகிடையே சேர்ந்து.”

குறிஞ்சிநிலக் காட்சியைக கடநது, இனி நெய்தல் நிலத்திற்கு வருவோம்.

## நெய்தல்

அழகான நெய்தல் மலர்கள் பூத்த கடற்கரை. ஆழ் கடலிற்சென்று வலையினை வீசிப பிடித்துவந்த மீன்களை யெல்லாம் கடற்கரையில் காய்வதற்காகப பரபபிவைத்துள் ளனர். இக்காயந்த மீன்களைப பறவைகள பற்றிகக்கொண்டு போகாவண்ணம, கடற்கரைச் சோலையிலிருந்து காவல் செய்துகொண்டிருக்கிறுள் ஒரு நெய்தல்நில இளநங்கை. அவ்வழியே வரும இளைஞன இவளைக் கண்ணுற்றுன். தலைவியின் பேரழகில் மனததைப பறிகொடுதத தலைவன், தன் பாங்கனிடம அவள கண்ணின் வலைப்பட்டு காப்படங் கிய தன் மனநிலையைக கழறுகின்றுன்

“.........கானற்
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் ளுேக்கம்
கடிபொல்லா வென்னையே காப்பு.”

படைநெடுங்கண் என்று குறிப்பிட்டார் ஆசிரியர். “வேற் படைபோன்ற அவள் கண்கள் என் நெஞ்சிற் பாய்ந்து, வேதனை விளைக்கின்றன. படுபுலாலைக் காக்கவந்த இப் பெண்ணரசி அதனைவிட்டு விட்டு, என் நெஞ்சினையே காக்கின்றுளே! என்னே இது!” என்று தலைவன் கூறுவது மிக நயமுடைத்து.

"இந்நங்கையின் ஐயன்மார் நெடுங்கடலிற் சென்று, தங்களின் உயிரையும் பொருட்படுத்தாது, கடலில் மூழ்கி, முத்தினும் வெண்சங்குகளை எடுத்து வருகிறார்கள். நானோ இவளது அழகுக் கடலிலே மூழ்கி, இவளது முத்தன்ன வெண்முறுவல் காண விழைந்தழிகின்றேன்," என்று தலைவன் பாங்களிடத்துப பேசும் அருமையைக் காட்டும் பாடலைப் பார்ப்போம்.

"பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணு
திருங்கடல் மூழ்குவார் தங்கை—இருங்கடலுள்
முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே
ஒத்தனம் யாமே உளம்."

மேலும் சென்று கடற்கரைக் காட்சியைப் பார்ப்போம் கடற்கரையில் ஒருபுறம நறுமணங்கமழும் முள்ளை யுடைய தாழை ஒன்று நிற்கிறது அத் தாழையில நீண்ட மொட்டுகள் தோன்றியிருககின்றன. இம மொட்டுகளை யெல்லாம் ஒரு நாரை பார்த்து, தன் குஞ்சுகள் எனக் கருதித் தான கொண்டுவந்த இரையினை அம மொட்டு களின் வாயிலே ஊட்டியது. அன்போடுஊட்டிய இரை யினை அமமொட்டுகள் உண்ணவில்லை இதைக்கண்ட அந் நாரை மிகவும வருநதித் தனது சிறகுகளினால், சூரிய வெப்பம் படாதவாறு அமமொட்டுகளைப் பாதுகாத்தி ருந்தது. இத்தகைய சிறப்பினையுடைய கடற்கரைத் துறை முகததிற்குரிய தலைவன்,

"முருகுவாய் முட்டாழை நீண்முகைபார்ப் பென்றே
குருகுவாய்ப் பெய்திரை கொள்ளா—துருகியிக
இன்னா வெயில்சிற கான்மறைக்குஞ் சேர்ப்ப ! நீ
மன்னா வரவு மற."

இது, தோழி தலைவனை வரைவுகடாவி மொழிந்த துறையில் அமைந்தது.

'வீடுபெற்றவரும் வீழும் விமலை'

என்று திருத்தக்கதேவர் சொல்லியபடி கணிமேதாவி யாரும் இந்நெய்தல்நிலப் பெண்ணைச்

"சாவார் சான்றாண்மை சலித்திராள்"

என்று வருணிக்கிறார். பரம ஞானிகளும் இவளழகில் ஈடுபடுவர். இப்பெண் கடற்கரையில் உலவுவது, அங்கு வருகின்றவர்களுக்குப் பேராபத்தை உண்டுபண்ணுமாம். கொல் களிற்றைச் சங்கிலியாற் பிணித்து ஒரு இடத்தில் கட்டியிருக்க வேண்டும். அதை அவிழ்த்து விட்டு விட்டால், காண்பார் பலர் உயிரையுண்ணும். இக் கொல்களிற்றைப் போன்றவள் தலைவி என்று நினைத்தான் தலைவன். இவளை வீட்டிலேயே பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்; இவளது பெற்றோர்கள், அப்படிச செய்யாது கடற்கரையில் உலவவிட்டுவிட்டார்களே! என்ன கொடுமை!

"மற்றிவளைக் காவார் கயிறரீஇ விட்டார்"

பார்த்தார் பலர்க்கும் தீங்குண்டாக்கி விட்டார்களே! என்று குறிப்பிடும் நயங்கண்டு மகிழ்க தலைவியை அவிழ்த்துவிட்ட யானைக்கு ஒப்பிட்டுப் பேசும் அருமையினை உணர்க.

## நெய்தல்நில வருணனையின் சில நயங்கள்

கடற்கரைச் சோலையிலே தேன்வண்டுகள் பாடுவதைப்

"பண்ணாது பண்மேற்பாடும் கழிக்கானல்"

என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். அலைகள் கடலிலிருந்து சங்குகளைக் கரையோரத்திற் கொண்டு சேர்க்கின்றன. கரையிற் சேர்ந்த சிப்பிகள் முததுககளை ஈனுகின்றன. இம் முத்துக்கள கடற்கரைப் பாக்கங்களுக்கு நல்விளக்குகள் போலமைந்து, இருளை நீக்கி ஒளியைக கொடுக்கின்றன. இங்ஙனம் கடறகரையோரங்களெல்லாம் நல்விளக்குகளையேற்றிவைத்தாற் போன்று முத்துக்கள் ஒளி கான்று கொண்டிருக்கின்றன. நீலக்கடலும் பசுஞ்சோலையும் சோலையினருகே யிருக்கும் வெண்மணற் குன்றமும் ஒன்று சேர்ந்திருப்பது, கண்ணபிரானையும் பலதேவனையும் ஒன்றாகக் கண்ட காட்சிபோல் அமைந்திருககிறது. சோலையின்

நடுவில் கோங்க மரங்களும், தாழைகளும் நிறைந் திருக்கின்றன. சோலையின் பக்கங்களிலே புன்னை மரங் களும் ஏராளமாக நிற்கின்றன. நெய்தல்நிலப் பெண்கள் கடற்கரைக்குச் சென்று, கரையோரங்களில் பதுங்கியிருக் கும் நண்டுகளைத் தங்கள் கால்களாற் கிளறியும நெய்தற் பூக்களைப் பறித்தும் இன்புற்று விளையாடுகின்றார்கள். கடலை ஒரு பெருஞ்சேனைக்கு ஒப்பிட்டுப் பேசுகிறார் ஆசிரியர். கடலின்மேற் பறந்துவரும் பருந்துகளைக் குதிரைகளாகவும், தோணிகளை யானைகளாகவும் ஓயாது ஓலமிடும் அலைகளைப் போர்ப்பறையாகவும், கடற்பறவைக ளெல்லாம் காலாட்படையாகவும் கற்பனைசெய்து, கடற் றுறைத் தலைவனுக்கு வேண்டிய மூவகைப் படைகளும் இயல்பாக அமைந்திருக்கின்றன என்று நமக்கு ஆசிரியர் காட்டுகிறார்.

தலைவனை விட்டுப் பிரிந்த தலைவி மிக்க வருத்தமுற்று இரவெல்லாம் தூங்காது அரற்றினாள். இந்தநிலையில் கடலைப் பார்த்து, "ஏ! இருங்கடலே! என்னைப் போல நீயும் துஞ்சாது ஓலமிட்டுக்கொண்டிருக்கின்றாயே! உனக்குத் துன்பஞ் செய்தவர் யார்?"

"மாக்கடலே
என்போலத் துஞ்சா திதுசெய்தார் யாருரையா
யென்போலுந் துன்ப நினக்கு."

என்று கேட்டாள். தன் துன்பத்திற்குக் கடலையும் சேர்த் துப் பேசுவது எவ்வளவு நயமாக அமைந்திருக்கிறது! இது தலைவி படும் துயரை விளக்கும் பகுதி.

தலைவன் படும் துயரத்தை இனிக் காண்போம். கடற் கரையோரத்தில் தலைவன் நிற்கிறான். அங்கு ஆண் நண்டு கள், பெண் நண்டுகளுடன் சேர்ந்து இன்புற்றுக் கடலாடு கின்றன. இக் காட்சியைப் பார்த்த தலைவன் நண்டைப் பார்த்து "ஏ நண்டே! நீ மிக இன்பமாக, உன் பெடை யுடன் கூடிக் கடலாடி இன்பத்தில் ஆழ்ந்து கிடக்கின்றாய்!

னாேனா உன்னைப்போல் தலைவியுடன் கூடி, இன்பம்பெறும் தவமுடையனல்லேன். தலைவியைப் பிரிந்து தனித் துயரால் வாடுகின்றேன். பிரிவுத துயரததினையே யறியாத உன் னிடத்தில் எனது துன்பததைச் சொல்வதில் யாதுபயன்?" என்று கூறி அப்பாற் சென்றனன். பாடலைப பாாப்போம:

" தன்றுணையோ டாடு மலவனையுந் தானேக்கா
இன்றுணையோ டாட விழையுமோ—இன்றுணையோ
டாடிஞய் நீயாயி னந்நோய்கதென் ஞெந்தென்று
போயினன் சென்றான் புரிந்து."

கடிமணம் செய்யாது காலம தாழ்த்திச் சிறைப்புறத்தி லிருக்கும தலைவனிடம் தனது ஆற்றாமையைத் தோழியின் வாயிலாகத தலைவி சொலலும பகுதியைப பார்ப்போம்.

அயலாரெல்லாம் அலர் உரைக்கின்றனர். அவர்கள் அலரோ நாளும பெருகி வருகிறது. ஒன்றாகப் பெருகி இடியும் மினனலும கொண்டு நாற்புறமும சூழ்கினற மழையினைபபோல அயலாா விரும்பும வண்ணம பழிச் சொற்கள் பெருகி வருகின்றன. ஆதலால் பல நாளும் என் உள்ளம் உருகுகினறது.

" உருகுமா றுள்ள மொருநாளு மன்றாற்
பெருகுமா னம்மலர் பேணப—பெருகா
ஒருங்குவான் மின்னேே டுருமுடைத் தாய்ப் பெய்வா
னொருங்குவான் போல நெகிழ்ந்து."

இக் கூற்று நெஞ்சிலே எத்தனை உணர்ச்சிகளைக் கிளறு கின்றது.

பாங்கன், தலைவியின் அழகினை வியந்து தலைவனிடம் கூறும் பகுதி படித்து இன்புறததகுந்ததாகும.

"தலைவனே! உன்னால் விருமபபபட்ட நங்கையைப் பண்ணாது பண்பாடும் கழிக கானலிலே கண்டேன். கண் டாரைக் காயும அணங்குபோலவாள் அவள்," என்றான்.

## பாலை

பாலை பாடுவதில் "பெருங்கடுக்கோ" என்ற புலவரே மிகச் சிறந்தவர். திணைமாலையில கணிமேதாவியார டும் பாலைக் காட்சியைக கண்டு மகிழ்வோம். நீரற்றுப் பசுமையற்று, எஙகும வெப்பம் மிகுந்து, மரஙகளும், விலங்கினஙகளும், புளளினஙகளும் வாடி வதஙகி நிறகும் நிலையைக் காடடுவதே பாலையாகும. பாலை எஙஙனம் பசுமையற்று விளஙகுமோ அதுபோலும் காதலா உள்ள மும் வாடி வதஙகிக் கிடக்கும்.

தலைவி, தலைவனுடன் அருஞ்சுரத்தைக் கடந்து வேற் றூர் சென்று விட்டாள. தலைவியைப் பிரிந்த செவிலித் தாய் தனிததுயருழநது, மகளைக கண்டுபிடிப்பதற்கு, அவ்வருஞ சுரததிடைச் சென்றாள. வழியிலே குராமரங் களும், கோங்க மரஙகளும, அடுததடுதது நிற்கின்றன; ஒரு குராமரத்தின்மீது, முல்லைபோனற மலர்களையுடைய கோங்க மரம் சாயநது நிறகிறது அக்காட்சி குரா மரத் திற்குக் கோங்க மரம கொங்கைபோன்ற தன் அரும்பினால் பாலூட்டுவதுபோலிருக்கிறது. இஙஙனம் பாலூட்டப் பெற்றமையினால், குராமரம் பொமமைபோன்ற மலர்கள் பூத்தது. இது பெண்குழந்தையைப் பெற்றெடுத்ததுபோ லிருக்கிறது. பெண்குழநதையைப் பெற்றெடுத்ததனால், குராமரததிற்குத தணணளி மிகுந்த தாயுள்ளம் நிறைந் திருக்கவேணடும ஆகவே குராமரததை நோக்கித் தாய் கூறுவது: "குராமரமே! நீயும பெண் குழந்தையைப் பெற்றிருக்கிறாய! இவ்வருஞ் சுரத்திடைச் சென்ற என் மகள் உன்னிடம ஏதாவது சொன்னாளா? அதை என்னிடம் சொல்லமாட்டாயோ! அதைச் சொல்லமாட்டாயாயினும் அவள் சென்ற வழியையாயினும் சொலவாயாக," என்று பேசுவது நம் உளளங்களிலெலலாம துன்ப உணர்ச்சியைப் பெருக்குகின்றது. இக் கருத்துக்களமைநத அற்புதப் பாடலைப் பார்ப்போம்:

" தான்தாயாக் கோங்கம் தளர்ந்து முலைகொடுப்ப
ஈன்றாய் நீ பாவை யிருங குரவே!—ஈன்றாள்

மொழிகாட்டா யாயினு முன்னெயிற்றுள் சென்ற
வழிகாட்டாய் ஈதென்று வந்து."

எத்தகைய அருமையான பாட்டு! தாயுள்ளத்தை வடித்துக்காட்டிய புலவரின் பெருமையை நாவாயிரமிலேன் நவில்வதெங்ஙன்!

"தலைவியே! வேனிற்காலம் வந்துவிட்டது. காதலரும் விரைந்து வந்துவிடுவார். நீ இனியும் துன்பப்பட வேண்டாம். இதோபார்! முருக்கமரங்களெல்லாம் அழகாகப் பூத்திருக்கின்றன. செல்வச்சிறார்க்குப் பொற்கொல்லர் செய்த ஐம்படைப் பொன்தாலியின்மேல் பவளத்துண்டங்களைப் பதித்துவைத்தாற்போன்ற முருக்கப்பூக்களை நீ பாராய்!" என்று தோழி, தலைவியை ஆற்றுவித்தாள். இக்கருத்துக்களமைந்த பாடலைப் பார்ப்போம:

"வல்வருங் காணாய் வயங்கி முருக்கெல்லாஞ்
செல்வர் சிறாரகுப்பொற் கொல்லாபோல்—நல்ல
பவளக் கொழுந்தின்மேற் பொற்றாலி பாஅய்த்
திகழக்கான் றிட்டன தோந்து."

பொருள் தேடுவதின்பொருட்டே தலைவன் பிரிந்து செல்வது வழக்கம். இக்கருத்தைத் தோழி சொல்லும் அருமையைக் கண்டுகளிகக

"வெறுக்கைக்குச சென்றார் விளங்கிழாய்"

வெறுக்கை யென்றால் பொருள் என்று பொருளபடும். மற்றொன்று நாம வெறுக்கும்படியாகத் தலைவன் சென்றார் என்று சொன்னயம்படப் பேசினாள் தோழி.

சுரத்திடை மதிபோன்று ஒளிவீசும் முகத்தையுடைய தலைவியும், சூரியன்போன்று வெஞ்சுடர் வேலேந்திய தலைவனும் ஒன்றுசேர்ந்து போகும காட்சி, உலகம் பாழ்பட இருசுடர்களாகிய சூரிய சந்திரர் ஒன்றுகூடிச் செல்வதுபோலிருக்கிறதென்பதை,

"ஒருசுடரு மின்றி யுலகுபா ழாக
இருசுடரும் போந்தன வென்றா."

சுரத்திடைச்செல்லும் தாயின் ஆற்றாமைகண்டு வருந்திய வழிப்போக்கர், தாயைப் பார்த்து, "தாமரை போன்ற முகமும், ஆம்பலபோன்ற பற்களையுடைய வாயும் நீலோற்பல மலர்போன்ற கண்களும, காநதள்போன்ற விரல்களுமுடைய நின் மகளைக்கண்டு, அவளின் உறுப்புக்களையெல்லாம் மேற்சொன்ன மலர்களாகக் கருதி, வண்டுகள் கூட்டங்கூட்டமாகச் சென்றதாலே, நின்மகள் வண்டுகளின் நீழலிலே வெயிலின் வருத்தமின்றிச் சென்றனள். நீ வருந்தாதே," என்று கூறினள்

அருஞ்சுரத்திலே செல்லும் தாய்க்கு எதிரே ஆணும் பெண்ணுமாக இருவர் வருகின்றனர். அவ்விருவரைப் பார்த்தத தாய், "இவ்வழியே இருவா போவதைப் பார்த்தீர்களோ?" என்று கேட்டாள். அப்பொழுது ஆண்மகன், "அமமையே! நீர் தேடிவருகின்ற வெஞ்சுடர் அன்னானை நான கண்டேன்; மதிமுக மாதரசியை இவள் கண்டாளாம்; விரைந்து செல்லுக; நீவிர் அவர்களைக் கண்டுகொள்ளலாம்," என்று கூறினாள். பாட்டைப் பார்ப்போம்:

"தண்ணிநீர் சென்மி னமரவ ராபவேல்
எண்ணிய வெண்ணம் எளிதரோ—எண்ணிய
வெஞ்சுட ரன்னானை யான்கண்டேன் கண்டாளாம்
தண்சுட ரன்னாளைத் தான்."

இப்பாட்டிலிருந்து நாம் அக்காலத்தில், எப்படி மக்கள் வாழ்ந்தனர் என்பதை அறிந்துகொள்கிறோம். பிறர்மனை நோக்காத பேராண்மையுடன் ஆடவர் வாழ்ந்து வந்தனர். மாணிக்கவாசகரும தமது திருக்கோவையாரில் இதே கருததைத் தெரிவிக்கிறார்.

"மீண்டார் எனவுவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே
பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலி யூரெனைநின்
றாண்டான் அருவரை ஆளியன் னானைக்கண் டேனயலே
தூண்டா விளக்கனை யாயென்னை யோஅன்னை சொல்லியதே."

சுரத்திடைச்செல்லும் தாய் ஆங்கு நிற்கும் கொன்றை, குருந்தம், முல்லை முதலாயவற்றைப் பார்த்துக், "கொன்

றாய்! குருந்தே! கொடிமுல்லாய்! வாடினீர்; நின்றே னறிந்தேன் நெடுங்கண்ணாள் சென்றாளுகவென்றுரைத்தீர்" என்று கேட்கும் பகுதி எவ்வளவு கனிவாய் அமைந்திருக்கிறது! உள்ளத்திலே எழுகின்ற சோகத்தையெல்லாம் வடித்துக்காட்டுவதுபோல் அமைந்திருக்கிறது.

பாலையின்கொடுமையைப் "புரிந்து விடுகயிற்றின் மாசுணம் வீயு நீளத்த" மென்றும், "நெற்பொரி நீளத்த மென்றும்", "வார்கதிரால் வெந்தாறுபோற் றோன்று நீள்வேயத்தம்" என்றும் விளக்கியுள்ளார்.

இத்தகைய வெங்கானத்தினூடே வினைமுற்றிய தலைமகன் விரைந்து வருகிறான் வருகின்ற வழியில், தன் தலைவியின் உருவம் தன் மனக்கண்ணில் தோன்றியது. இங்குப் பேசப்படுகின்ற உருவெளிப்பாடு, கணிமேதாவியாரின் சொல்லோவியங்களில் ஒன்றென்று கூறவேண்டும்.

"தந்தார்
தகரக் குழல்புரளத் தாழ்துகில்கை யேந்தி
மகரக் குழை மறித்த நோக்கு"

மயிர்ச்சாந்திணையுடைய கூந்தல் அவிழ்ந்து புரளவும், பின்பக்கம் தொங்குகின்ற துகிலைத் தனது வலக்கையினாலே பற்றிக்கொண்டு, சுறாமீன் போன்ற காதணியோடு மறித்த நோக்குடனே என்முன் வருகின்றாள் என் தலைவி என்று வருணிக்கும் காட்சி படித்து இன்புறத்தக்கது.

## முல்லை

முல்லையாவது, தலைவி பொருள் முயற்சியாற் பிரிந்து சென்ற தலைவன் வருகையை எதிர்பார்த்துக் கற்புக்கடம் பூண்டிருக்கும் ஒழுக்கமாம் முல்லைப்பூ கற்பின் அடையாளம்; "முல்லை சான்ற கற்பின் மெல்லியல" என்று சிறுபாணாற்றுப்படையில் கூறப்பட்டிருக்கிறது. இம் முல்லைப்பகுதியில் தலைவி ஆற்றியிருத்தலும் கார்காலச் சிறப்பும் நன்கு பேசப்பட்டுள்ளன.

முல்லை நிலத்தை ஒரு நாடகசாலைக்கு ஒப்பிட்டு ஆசிரியர் பேசுகிறார். எங்ஙனம்? முல்லை நிலமே ஒரு நாடகவரங்கு. முகிற்கூட்டங்கள் இடிகுரலாகிய பாட்டினைப் பாடுகின்றன; வண்டுகள் பாடுவது சுருதிகூட்டுவது போலிருக்கிறது. மயில்கள் கார்மேகத்தைக்கண்டு ஆடுவது நடனம்புரிவதுபோல் தோன்றுகின்றது; காந்தள் மலர்கள் அசைவன, நாடகக்காட்சியைப் பார்த்து மகிழ்கின்றவர்கள் போல், கைதூக்கி அசைத்துக்காட்டுகின்றன.

> "கானங் கடியரங்காக் கைம்மறிப்பக் கோடலார்
> வானம் விளிப்பவண் டியாழாக—வேனல்
> வளரா மயிலாட வாட்கண்ணாய்! சொல்லா
> புளராகி யுய்யும் வகை."

தலைவன் கார்காலத்தில் வராததுகண்டு, தலைவி வருந்திப் புலம்புகின்றாள். கார்காலமானதால் முல்லை நிலத்தில் முல்லைப்பூக்கள் அழகாகப் பூத்திருக்கின்றன. இம்முல்லைகள், தலைவிபடுந் துயரைக்கண்டு சிரிப்பதுபோலிருக்கின்றன; மலையினின்றும் அருவி வீழ்வது, மலை, தலைவிநிலை கண்டு கண்ணீர்வடிப்பதைப்போலிருக்கிறது; முல்லை சிரிப்பது அதன் சிறுமைக்குணத்தைக் காட்டுகிறது. மலை, கண்ணீர்வடிப்பது அதன் பெருமைக்குணத்தைக் காட்டுகிறது; இதிலிருந்து நாம் ஓர் உண்மையைத் தெரிந்து கொள்கிறோம்; பெரியாரின் பெருமை பெரிதே; சிறியார் சிறுமைக்குணம் படைத்தவர்களே என்பதாம். அப்பாட்டு வருமாறு:

> "பெரியார் பெருமை பெரிதே இடர்க்காண்
> அரியார் எளியரென் றாற்றுப்—பரிவாய்த்
> தலையழுங்கத் தண்தளவம் தாஙகக்கண் டாற்கு
> மலையழுத சால மருண்டு." (கக0)

கார்காலச் சிறப்பு நன்றாகப் பேசப்படுகிறது. வெண்காந்தள் மழையினால் முதற்கண் துடுப்புப்போல் அரும்பிப் பின்பு அவ்வரும்பு பாம்பின்னைப்போல நீளப்பெற்று, அதன் பின்பு விரல்போல் விரிந்து மேலும் தளிர்போன்ற இதழ்

கலைக்கொண்டு, இறுதியில் கீழ்நோக்கி வெண்குடையினைப் போல் காட்சி அளிக்கும்.

"வண்டுடைப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுறியாய்
வெணகுடையாந் தண்கோடல் வீந்து."

கார் காலததின் சிறப்புக்களையெல்லாம் கவி மிக நன்றாய் வருணிக்கிறார். கடலிலே கரிய மேகங்கள் புகுந்து நீரினை நிறையவுண்டு, கடலினிடததே மாமர வடிவு கொண்ட சூரபன்மனை வெட்டி வீழ்ததிய முருகப்பெருமானின் வேலபோல மின்னி, இடிதது, ஆரவாரிதது மழை பெய்தலால் செம்முலலைகளெலலாம தளிர்த்துக் குருந்த மரங்களில் படர்ந்து நிற்தும் காட்சியினைக் கண்டு, தலைவி மனம் வருந்தினள். நிலைததிணைப் பொருளாகிய செம்முல்லை, குருந்த மரததிலே படர்நது நிற்கும இன்பக்காட்சி, தலைவிக்கு மிகுந்த மனவருததததை உண்டு பண்ணியது. முலலைக்கொடி குருந்ததததைத தழுவி நிற்பதுபோலத் தானும் தலைவனைச சார்ந்து வாழமுடியாத அவல நிலையை நினைத்து வாடினள்.

கார்காலத்து மழைத்துளிகளால் கொன்றைப் பூக்கள் மிகுதியாகப் பூக்கின்றன. கொன்றை அருமபுகள் பிள்ளைகள விளையாடும் கழற்சிக் காய்களைப்போல அரும்பிப் பின்னல் பொன் வட்டுபபோல முதிர்ந்து, அதன் பின்னர் மாலைபோன்று இதழாய், மேலுமம கூந்தல்போலக் காய்த்துப் பின்னர்த் துளையுடைய கொம்புபோன்றும் விளங்கி நிற்கின்றன. கொன்றையின் இவ்வரிய காட்சியைப் பார்ப்பாயாக என்று தோழியைப் பாரத்துத் தலைவி கூறும் பகுதி மிக அழகாக அமைநதிருக்கிறது.

கார்காலம் தோன்றியும் காதலரின் தேர் காணாமையினல், தலைவிக்குப் பீர தோன்றிக் கண்ணினின்றும நீர் தோன்றியது.

"கார்தோன்றக் காதலர் தேர்தோன்றா தாகவே
பீர்தோன்றி நீர் தோன்றுங் கண்."

என்று ஆசிரியர் கூறும் நயங்கண்டு மகிழ்க.

## மருதம்

இறுதியாக அமைந்த மருதத்திணையைப் பார்ப்போம். மருதத்திணையில் ஊடலும் ஊடல்நிமித்தமுமாகிய ஒழுக்கம் நன்கு பேசப்படும் "தண்பணை தழீஇய தளரா இருக்கை" என்றும், "மருதஞ் சான்ற மருதத் தண்பணை" என்றும் மருதநிலச் சிறப்பு சிறுபாணாற்றுப்படையிற் சிறப்பாகப் பேசப்பட்டிருக்கிறது. தலைவன் பரத்தையிடத்துச் சென்றான் என்ற காரணத்தினாலே, தலைவி ஊடல் கொள்ளுகிறாள். ஊடல் கூடற்கின்பம் என்பதுபோல் இவ்வூடலும் காதல் வாழ்க்கைக்கு வேண்டியதாகவே அமைகிறது. ஆனால் இவ்வூடல் அதிகமாகி விடக்கூடாது. அதிகமாகி விட்டால், காதல் இன்பம் நீங்கிச் சாதலே இன்பமென்ற நிலை வந்துவிடும். பரத்தையிடம் தலைவன் சேர்ந்து வாழ்கிறானென்பது, தலைவியின் மனக்கற்பனையே! இவ்வூடலை வைத்துக்கொண்டு மருதத்திணையை ஆரம்பிக்கிறார் புலவர். பாணன் தலைவனுக்காகப் பரிந்து, தலைவியிடம் சென்று, தலைவனை இல்லத்திற்கு வர அனுமதி வேண்டி நிற்கிறான். தலைவி, வாயில் மறுத்துப் பேசும்பகுதி மிக அழகாக அமைந்திருக்கிறது. தலைவியின் கூற்றைப்பார்ப்போம்: "செவ்வழிப் பாண்மகனே! சிறப்பினையுடைய சிறுதேரினைக் கையினால் இழுத்தின்புறுகின்ற என் செல்வ மகன் பிறப்பதற்கு முன்பு, தலைவன் விருப்பமிக்கவனாய் இவ்வில்லிலே தங்கி என்னோடு இன்புற்று வாழ்ந்தான். இப்பொழுதோ! பரத்தையர் தோள்களை விரும்பி என்மேல் வெறுப்புடன் வாழுகின்றான். ஆதலால் வயலூரன் மெய்ம்மையை எங்கட்கு உரையாது எழுந்து போவாயாக! நற்குலத்திலே தோன்றிய மனையாளிடம் வாழ்வது புண்ணிலேயிடும் காரமென என் தலைவன் நினைக்கின்றான். தம்மை அழகுறுத்தும் நல்லார்தோள் சேர்தலே இன்பம் பயக்குமென்று கருதுகிறான். நல்லகம் தழுவாது புல்லகம் தழுவுகிறான்," என்று தலைவி பாணனிடம் கூறினாள்.

தலைவியை விரும்பாது, பரத்தையை விரும்பித் தலைவன் வாழ்கின்ற வாழ்க்கையை உள்ளுறை உவமமாக ஒரு

பாட்டில் எடுத்துக் காட்டும் திறம் போற்றற்குரியது. அப்பாட்டைப் பார்ப்போம் :

"கருங்கோட்டுச செங்க ணெருமை கழனி
இருங்கோட்டு மென்கரும்பு சாடி—அருங்கோட்டால்
ஆம்பல் மயக்கி அணிவளை யாரந்தழகாத்
தாம்ப லசையினவாய் தாழ்ந்து."

பெரிய கொமபினையும, சிவந்த கண்களையுமுடைய, எருமை வயலிலே விழுநது, ஆங்குள்ள இனிய மெல்லிய கரும்பினை உண்ணுது, தனது கோட்டால முறித்துத் தள்ளி, ஆம்பல்களையுமகறறிக் குவளைப் பூக்களைத் தின்று இன்புற்றது எருமையைத் தலைவனுக்கும் மென்கரும் பினை த தலைவிக்கும, ஆமபலைத் தோழியாக்கும் குவளையைப் பரத்தையரின் அற்ப வாழ்க்கைக்கும ஒப்பிட்டுப் பேசுவது மிக அருமையுடைதது. எருமை மென்கரும்பைத் தின்னுது, கோட்டால முறித்துத தள்ளுவது தலைவன் தலைவியை விரும்பாத நிலையை யெடுத்துக்காட்டுகிறது. எருமை, குவளைப்பூவைத் தின்றின்புறுவது, பரத்தையரை விரும்பிச்சென்று இனபமெய்துவதை எடுத்துக்காட்டு கிறது.

பரத்தை, தலைவனோடு சேர்ந்து சிறப்புற்று மன வெழுச்சியினோடு வாழ்கின்றாள்; தலைவனைப் பிரிந்த காலத் திற் றலைவியும மனவெழுசசியோடு வாழ்வதாகவே பாண னிடம் தலைவி கூறினாள. மனவெழுசசிக்குக் காரணம் என்ன? தலைவியே கூறுகிறாள். இங்குத் திரிபவனுகிய என் மகன் கைகளாற் காட்டும் சாடையினைக் கண்டும, குழறிக் குழறிபபேசும் மழலைச்சொற் கேட்டும், தளர்நடையினைக் கண்டும, மகிழ்ச்சிபெற்று வாழ்கின்றேன்; எனக்கு ஒரு குறையுமில்லை.

"... ..... .............. ..... ................
தங்கையும் வாயு மறியாமல்—இங்கண்
உளர உளர உவனோடிச சால
வளர வளர்ந்த வகை."

என்ற அடிகள், பிரிந்த காலத்தும் தலைவி, தான்பெற்ற செல்வ மகனின் இளநலங் கண்டு மனமகிழ்வுற்றாள்.

தலைவனும் தலைவியும் இன்புற்று வாழ்ந்த வாழ்க்கையைத் தோழி எடுத்துச்சொல்லும் பகுதியினைப் பார்ப்போம்.

வாழை மரத்திடத்தே வைக்கப்பெற்ற தேனையுண்டு மயக்கமுற்ற மருதநிலத்தூர்த் தலைவனின் மகளாகிய தலைவி, தாமரைப் பூவினிடத்தும் தனது மனதிலேயும் எப்பொழுதும் நீங்காது நிறைந்து நிற்கின்ற தலைவனின் உருவத்தைக் கண்டு இன்புற்றுப் பூமாலை தொடுத்தாள். பார்க்குமிடமெல்லாம் தன் தலைவனின் உருவங் கண்டே மகிழ்ந்தாள் தலைவி. இத்தகைய காதல் வாழ்க்கையிலும் பிணக்கு ஏற்பட்டதை நினைந்து தோழி வருந்தினாள்.

> "பூந் தாமரைப் பூவுள்ளுங் கண்ணா
> வயலூரன் வணண மறிந்து"

என்ற பகுதி படித்தின்புறத்தகுந்தது.

ஊடல் தீர்ந்த பின்னர்த் தலைவி தலைவனோடு கூடி இன்புற்றாள். தான்பெற்ற வினபத்தைத் தலைவன வாழும் நாட்டினமேலேற்றித் தலைவி கூறும இரண்டு பாடல்களைப் பார்ப்போம.

எருமைகள் தம் கன்றினை நினைந்து சோரவிடப்பட்ட பால், தாமரையினிடத்தே வாழும் வெண்மையான அன்னத்தை உண்பிக்க, வாய்க்காலாகப் புறப்பட்டுத் தாமரைப் பொய்கையிடத்துப் போய்ச் சேருகிறது. மருதநிலக் கருப்பொருள்கள் தலைவனின் அருட்போக்குக்குச் சிறிது இயைந்த இறைச்சிப் பொருள்களாக அமைந்த முறையும் உன்னற்பாலதாம். பாடலைப் பார்ப்போம்:

> "கன்றுள்ளிச சோர்ந்தபால் காலொற்றித் தாமரைப்பூ
> வன்றுள்ளி யன்னத்தை யார்த்துவான்—சென்றுள்ளி
> வந்தையா வென்னும் வகையிற்றே மற்றிவன்
> தந்தையார் தம்மூர்த் தகை."

தலைமகன் தான் பெற்றெடுத்த செல்வ மகனுக்கு ஐம்படை பூட்டிப் பெயரிடுதலாகிய நன்னாளிலே, மங்கல வாத்தியங்கள் முழங்கத் தன் தோளிலே மைந்தனை வைத்துக்கொண்டு தலைவியொடு இந்திரன்போல வரும் காட்சியைக் கண்ட தோழி இன்பக்கடலில் ஆழ்ந்தாள். இவ்வின்பக் காட்சியைச் சித்திரித்துக் காட்டும சொல் லோவியத்தைப் பார்ப்போம்:

"பாட்டர வம்பண் ணரவம் பணியாத
கோட்டரவ மின்னிவை தாங்குழுமக்—கோட்டரவ
மந்திரங் கொண்டோங்க லென்ன மகசசுமந்
திந்திரன்போல் வந்தா னிடத்து.

## கைந்நிலை

இந்நூல் சங்கமருவிய பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்று. அகப்பொருளைப்பற்றிப் பேசுவது. மாறோக்கத்து முள்ளிநாட்டு நல்லூரக்காவிதியார் மகனார் புல்லங்காட னாரால், ஒவ்வொரு திணைக்கும் பன்னிரண்டு பாடலாக மொத்தம் அறுபது வெண்பாக்களையுடையது. சிறந்த உரையாசிரியர்களால் பாராட்டப்பட்ட பெருமையுடை யது; இக்காலததில் இநநூல் பெரிதும் போறறப்படாத நிலையிலிருக்கிறது. பல பெரியார்களின் நன்முயறசியினால் இந்நூல் வெளிவந்தது. இதுபோன்ற நூல்களையெல்லாம், மக்கள் படித்தின்புற வேணடும். இந்நூலின் திணைவைப்பு முறை குறிஞசி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ப தாகும். இநநூலில் பல பாடல்கள சிதைந்தும, குறைந் தும விளங்குகின்றன.

குறிஞ்சித்திணையில் நயமான கருத்துக்களை நாம் காணலாம். மலையிலே வேடாகள் தினைபபயிர் விளைவிப்ப தற்காகச் சந்தன மரங்களையெல்லாம் அடியோடு வெட்டி விட்டனர். மலையில் நறுமணங் கமழவில்லை. இக்குறையை நீக்குவான்பொருட்டு, அருவிகள் சந்தன மரங்களை அடித் துக்கொண்டு வருகின்றன. இத்தகைய வளங்கள் நிறைநத

" மலைநாடு
வெந்த புனத்துக்கு வாச முடைத்தாகச்
சந்தன மேந்தி யருவி கொணர்ந்திடேஉம்
வஞ்ச மலைநாடன் வாரான்கொல் தோழியென்
நெஞ்சம் நடுங்கி வரும்."

மலைநாடனின் பெருமையைக் கேட்டவுடன் என் கைவளை சோருகின்றன என்று தலைவி பேசுவது, தலைவியின் தலையான அன்பை எடுத்துக் காட்டுகிறது.

" மலை நாடன் றன் கேண்மை
சொல்லச் சொரியும் வளை."

என்பது பாட்டு.

பாலைக்காட்சியிற் சில நயங்களைப் பார்ப்போம். அரக்குப்போன்ற ஓமை மரத்தின் ஐதாகிய நிழலில் மகிழ்ச்சியில்லாத கடுநகன்று தூங்கா நிற்கும். 'ஆந்தை குறுங் கனி கொள்ள நமமாடவர் காய்ந்து கதிர்தெறூஉங் கானம்,' என்றும, 'கள்வர் திரிதரு கானம்,' என்றும், 'பேய்த் தேரை நீரென்று நினைத்து ஓயாது மான்கள் ஓடிக்கொண் டிருக்கும் கானம்,' என்றும் பலவாறாகப் பாலையின் கொடுமையினை ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

முல்லைத் திணையில், கார்காலச் சிறப்புகளெல்லாம் நன்கு பேசப்பட்டிருக்கின்றன. முல்லையின் முகை கூரெயிறுபோல இருப்பது என்று ஆசிரியர் காட்டியது எவ்வளவு பொருத்தமான உவமானம. காரகாலத்தில் முல்லைக் காடுகளில், குருந்தமும், பிடவங்களும், பிண்டிகளும் நன்கு பூத்திருந்தன. மடமையுடைய மயில்கள் கூவ, மந்திகளும், மான்களும் ஒடுங்கி நிற்கின்றன. இத்தகைய காரகாலம் வந்தற்றபோதும் கணவன் வரவில்லையே யென்று தலைவி வருந்தினாள்.

" காவாய் வழகங்கு களிதிரைத் தண்கடல்."

என்று நெய்தலைச் சிறப்பிக்கிறார். காய்ந்த மீன்களைப் புன்னை மரத்தடியிலிருந்து காவல் செய்து கொண்டிருக்

தாள் தலைவி. கடற்கரைக்குத் தலைவனும் வந்தான். இரு வரும் ஒருவரை யொருவர் நேசித்தார்கள். கடற்கரைச் சோலையிலே இருவருமகூடி இன்புற்றார்கள். நாள்தோறும் தலைவனும தலைவியும இஙஙனம சநதிப்பது வழக்கம. ஒரு நாள் தலைவன் வரவில்லை. தலைவனமீது மிக்க கோபங் கொண்டு தலைவி பேசுவது,

"என்னையா தந்த விறவுணஙகல் யாஙகடிந்து
புன்னையஙகான விருநதேமாப் பொய்தெதம்மைச
சொன்னலங் கூறி நலனுணட சேர்ப்பனை
யென்னைகொல் யாஙகாணு மாறு."

தலைவன் தன் சொன்னலததான என்னை ஏமாற்றி வஞ்சிததான் என்று தலைவி பேசுவது அவளது தலையான அனைபைத்தான் எடுத்துக்காட்டுகிறது.

## இன்னிலை

கழக வழி வெளிவந்துள்ள பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாக இவ் இன்னிலை தொகுககப்படவில்லை யாயினும் பண்டுதொட்டு 'இன்னிலை' என வழங்கி வருதலா னும் இதனை நாட்டு விடுதலை வீரர் திரு. வ. உ. சி. அவர்கள் ஆராய்ந்து கண்டு இன்னிலை எனத் தனியே பதிதது முன்பே வெளியிட்டுள்ளமையானும் இதையும் பதினெண்கீழ்க் குள் சேர்த்து எண்ணத் தக்கதாக உளது. ஆகவே, இதைக் குறித்தும் ஈண்டுச் சேர்த்துக்கூறி முடித்தல் தக்க தாகும்.

இன்னிலை என்னும் இந்நூல் "கீழ்க்கணக்கு" என் னும் பெயரால் தொடுக்கப்பட்ட நூல்களில் ஒன்று. இதன் ஆசிரியர் பொய்கையார். இந்நூலைத தொடுததவர் மதுரை யாசிரியர். பாரதம்பாடிய பெருந்தேவனார் இந்நூலுக்கு வாழ்த்துச் செய்யுளை இயற்றியிருக்கிறார். அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால், வீட்டுப்பால் என நான்கு பகுதிகளைக்கொண்டது இந்நூல். இந்நூலில் மொத்தம் நாற்பத்தைந்து செய்யுட்களே உள்ளன. நவில்தொறும்

நவில்தொறும் நூல்நயம் பயக்கும் என்று சொல்வது இந்நூலுக்குப் பெரிதும் பொருந்தும். நம் தமிழ்த் தொல்லாசிரியர்களில் பலர் இந்நூலை எடுத்தாண்டிருக்கிறார்கள்.

இன்னிலை என்பது இனிமையாகிய நிலை என்று பொருள்படும். இனிய நிலையைக் கொடுப்பதால் இந்நூலுக்கு இன்னிலை என்று பெயராயிற்று.

அறத்துப்பாலில் வரும் ஒரு சிறந்த உண்மையைப் பார்ப்போம். வினைகள் இருக்கும்வரை பிறப்பும் இறப்பும் வந்துகொண்டே இருக்கும். வினையை மூட்டோடு ஒழித்தால்தான் பிறப்பு ஒழியும். வினைகள் ஒழியாதவரை நம்மைவிட்டுப் பிறப்பும் நீங்காது. நாமும் பிறவிப்பெருங் கடலிலிருந்து கரையேறமாட்டோம். பசுவின் மடியில் பொருந்தியுள்ள இளம்பால், பிதுக்கப் பெய்தல்போல பிறப்பிறப்பும், வினைகள் இருக்கும்வரையும் நீடிக்கும். சித்தாந்த உண்மைக்குப் பொருந்திய கருத்து. பாடலைப் பார்ப்போம்:

"தாமீட் டருவினைகள் தண்டா உடம்பொன்ற
காமீட் டொறுக்கொணு ஞாங்கரடிப்பட்ட சீம்பால்
பிதுக்கப் பெயல்போற பிறப்பிறப்பும் போகா
கதுப்போ டிறுத்தல கடன்."

உண்மையான செல்வர் யார்? பொய்கையார் கருதும் செல்வரின் சிறப்பியல்புகளைப் பார்ப்போம். தூயசொற்களைச் சொல்லுதலும் பெரியோர் சொல்வியதை அறிதலும் பெரியோர் துணைக்கோடலும் துன்பம் நோந்தகாலத்தில், கலங்காதிருத்தலுமாகிய நற்குணங்களையுடையவர்களே செல்வரெனப்படுவர். சிறுமையுள் நீங்கிய இன்சொல் ஒருவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் இன்பம் நல்கும்.

மேகம் கடல்நீரையுண்டு, உப்பு நீக்கி, நல்ல மழையைப்பெய்து, உலகத்திற்கு நன்மை செய்வதுபோல், அறிஞர்களும் அறிவில்லாதவர்களின் மடமையைப்போக்கி நல்லறிவு புகட்டவேண்டும். இதுவே அறிஞரின் சிறந்த கடமை.

"கடன்முகந்து நீம்பெயலை யூழ்க்கு மெழிலி
மடனுடையார் கோதகற்றி மாண்புறதத லேமம்
படைத்தாக்கல் பண்பறிநதோர் சால்பு."

இனிப் பொருட்பாலினுள்ள சில நயங்களைப் பார்ப் போம். 'திரைகடலோடியும திரவியமதேடு' என்ற முது மொழிப்படி, நாம் முதற்கண் இவ்வுலகததில் அரும்பாடு பட்டுப் பொருளை ஈட்டவேண்டும். அதுவே நமக்கு யாண்டும் உறுதுணையாகும். செல்வமில்லாதவருக்குத் தம் சுற்றத்தாரும் வேறுவர். செல்வமுடையார்க்கு ஊரெலலாம் சுற்றம்தான்.

"உடைமையறு நீட்ட லுறுதுணையாம் யாண்டும்
உடைமையராச சென்றக்கால் ஊரெல்லாஞ் சுற்றம்
உடைமைக்கோ வின்றங்குச சென்றக்காற் சுற்றம்
உடையவரும் வேறு படும்."

செல்வத்தை இடைவிடாது ஈட்டுதலின் அவசியத்தை இப்பாடல் நமக்கு நன்கு எடுத்துக்காட்டுகிறது.

இளம்பருவத்தில் கல்வி அறிவைப் பெருக்குவதற்குப் பொருள் இன்றியமையாததாகும். பொருளில்லையேல், கல்விகற்பதற்கும் வழியில்லை. இஙஙனம் கல்வி அறிவை அடைவதற்குத் துணையான பொருளில்லாதவன், குருட் டிடையன் காட்டினை அடைதலை யொக்கும். "குருட்டாயன் நீள்கானங் கோடல் சிவண" என்று ஆசிரியா குறிப்பிடு கிறார். கல்வி நலமில்லாதவன் அறத்தைப்பேணுன்; சுற்றத்தை இழப்பான்; துன்பங்களுக்கெல்லாம் உறை விடமாவான்.

இன்பப்பாலில் புணர்ச்சியின்பச் சிறப்பை நாமெல் லாம் வியக்கும்வண்ணம் ஆசிரியர் குறிப்பிடுகிறார். உலகமே மன்மதனின நிலைபெற்ற ஆட்சியில் மாட்சிமைப்பட்டிருக் கிறது. இரத்த நீராலாக்கபபட்ட அழுக்குடம்பையுடைய பெண்ணை, வாசனைக்கூட்டால் முழுககாட்டி கடிமணப் பந்தலில் பெரியோாக்கு முன்பு அமருமபடி மக்கள் செய்கிறார்கள். இச்செயல் உலகம் காம இச்சையையே

பெரிதும் விரும்புவதைக் காட்டுகிறது. இதனால் ஒவ்வொரு வரும ஒவ்வொரு பெண்ணை மணக்கின்றனர்.

பெண்களின் அழகை வருணிக்கும் பகுதி மிக அருமை யாய் அமைந்திருக்கிறது. பெண்களின் பாதம் மெல்லிய தாக இருக்கிறது. அன்னத்தின் தூவியும் நெருஞ்சிக்காய் என்று சொல்லும்படியான அவ்வளவு மிருதுவான பாதம். தும்பை மலரை நீர்முள்ளியாகக்கொள்ளும். கண்கள் நீலோற்பல மலரையும், சேல்மீனையும் ஒத்தன. வளைகளை யணிந்த இம்மகளிரே, ஆடவருக்குத துணையாவர் பெண் ணின் இனிய துணையைக்கொளளாது வாழ்பவர், இவ் வுலகில் தனிமையுற்றுத் தளர்வர்.

"தூவி நெருஞ்சிக்காய் நீர்முள்ளி தும்பையலர்
காவியன சேற்கண் குறுநதொடியா—ராவிக்
கினிய ரிணைசேரா ரீர்ஙகண்மா ஞாலத்
தனிமைக் கவரோர் கரி."

தூய காதலர் நுகரும் இன்பமும் கடவுளுடைய பெரிய உருவமேயாகும் இது வெறுக்கததக்கதன்று. இவ்வுலகில் இன்பததின் தன்மையை அறியாதார், சாதல் நன்றென்று கூறுவர். இக் காதலஇன்பமும், உலகத்தை ஆக்கியும் காத்தும் அழித்து வரும கநதழியின் பெரிய உருவமே.

"காதல் விரிகிலத் தாரா வகைகாணார்
சாதனன் றென்ப தகைமையோர்—காதலும்
ஆக்கி யளிததழிக்குங கந்தழியின் பேருருவே
நோககிலரை நோவ தெவன்."

எல்லாம்வல்ல இறைவனைக் கந்தழி என்ற செம்மை மிகுந்த சொல்லால் பொய்கையார் குறிப்பது சாலவும போற்றற்குரியது. அருவமும உருவமும் இல்லாத பொருளே கந்தழி எனப்படும். நம் பண்டைத் தமிழ்மக்கள் கந்தழியையே கடவுளெனக்கொண்டு வாழ்ந்தார்கள். கந்தழியின் தண்ணளியில் நாம் வாழ்வோமாக!

---

# VI. மணிமொழிக் கோவை

## நான்மணி ஆசாரம் முதுமொழி - -

[திரு. தி. வ. காந்திமதிநாதன், பி. ஏ. (ஆனர்சு)]

### தோற்றுவாய்

பிற உயிரினங்களைவிட மனிதன் உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான். காரணம் மனிதன் சிந்திக்கத தெரிந்தவன். மலைச்சாரலிலும அகன்ற காடுகளிலும் வாழ்ந்த காலம் தொட்டு, அவன் எதையும் எண்ணிப் பாாக்கும் பழக்கத்தை வளர்தது வருகிறான். நேற்று வந்த துன்பத்தை நினைத்து இன்று வருநதிக்கொண்டுமட்டுமிராமல் தெளிவாகச் சிந்தித்து, நாளை அதைப் போக்குவதற்கு ஒரு வழியும் கண்டு பிடித்து விடுகிறான். உலகில நல்ல முறையில் நாடி வழி வகுத்துக் கொள்கிறான். காலப் போக்கிலே இவ்வாறு தாம் கண்ட உண்மைகளைப் பிறரும் அறிந்து பயன்பெறும் வண்ணம சிலர் ஏட்டிலே எழுதி வைத்தனர். அவ்வாறு எழுதப்பட்ட நூல்கள் மனிதனைத் தன் வாழ்நாளில் கூடியவரை துன்பத்தைக் குறைத்துக்கொள்ள வழி காட்டுகின்றன. அனைய நூல்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று தன் எண்ணத்தை நேரடியாகக் கூறுவது, மற்றொன்று மறைமுகமாகச சொல்லுவது. முன்னையதை அறநூல் என்று அழைக்கிறோம். பின்னையதை இலக்கியம் என்று பிரிக்கிறோம்.

பண்டு தொட்டே தமிழ்நாட்டில் அற நூல்கள் தோன்றி வளரலாயின. சங்க காலததைத தொடர்ந்தெழுந்த பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் அறத்தை வலியுறுத்துகின்றன. அவற்றுள நானமணிககடிகை, ஆசாரக் கோவை, முதுமொழிக்காஞ்சி யென்பன தலைசிறந்தன

வாகும். இம் மூன்றையும்பற்றிப் பேசுவதில் இப்பேச்சு மணிமொழிக் கோவை என்ற தலைப்புப் பெற்றது. இவை தோன்றிய காலம், இயற்றிய ஆசிரியர்களின் பிறப்பு வளர்ப்பு முதலியபற்றி விரிவான செய்திகள் எவையும் கிடைக்கவில்லை. இவற்றின் போக்கில் நாம் சங்க இலக்கிய மணத்தை நுகர முடியும். இடைஇடையே சங்க காலத்தில் இல்லாத சில புதுமைகளை நோக்கி இப்பாடல்கள் திரும்பு வதையும் தெளிவாக உணர்ந்து கொள்ளலாம்.

மனிதன் கூடிய வரையிலும் துன்பமின்றி வாழ உதவி செய்வதே இந் நூல்களின் நோக்கம் என்று முன்னரே பார்த்தோம். மேலே குறிப்பிட்ட மூன்று நூல்களின் மூலம் அவ்வுண்மையைத் தெளிவுபடுத்தலாம்.

## நான்மணிக்கடிகை

முதலில் நான்மணிக்கடிகையை எடுத்துக்கொள்வோம். நூல் முழுதும் பார்க்கக் காலம் இடம் கொடாதாகையால் ஒரு சில மேற்கோள்களைக் கண்டு மேலே செல்வோம்.

இந் நூலை இயற்றியவர் விளம்பி நாகனார் என்ற பெரும்புலவர். இவர் தமது நூலின் ஒவ்வொரு பாடலிலும் மணி போன்ற நான்கு கருத்துக்களை வெளியிடுவார். கடவுள் வாழ்த்துப்பாக்கள் இரண்டு நீங்கலாக நூற்று நான்கு பாட்டுகள் பாடியுள்ளார்.

சில முக்கியமான கருத்துக்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்களில் இடம்பெறுகின்றன. அத்தகைய கருத்துக் கள் மனிதன் வாழ்வில் இன்பம் பெருகப் பெரிதும் பயன் படுகின்றன. அக் கருத்துக்களைத் தொகுத்தும் விரித்தும் பார்ப்போமானால் அந் நூலின் அருமையும் பயனும் தெற் றென விளங்கும்.

சினத்தினால் கேடுவரும் என்பதை எல்லோரும் அறி வர். என்றாலும் அதனால் வரும் பெருந் தீங்குகளைப்பற்றிப் பொதுவாக யாரும் சிந்திப்பதில்லை. ஒருவன் நல்வாழ்வு வாழ வேண்டுமானால் முதலாவதாக சினத்தைக் கைவிட வேண்டும். சினம் மற்றவர்களுக்குத் துன்பம் கொடுப்ப

தோடு மட்டுமன்றிச் சினம் கொள்ளுவோனையும் கெடுத்து விடும். மூங்கிலிலே பிறந்த தீ மூங்கிலையே எரித்து விடுவது போலத், தன்னுள்ளே பிறந்த சினம் தன்னையே அழித்து விடும். வள்ளுவரும் 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என்று குறித்துள்ளார்.

மக்கள் இன்ப வாழ்விற்கு நோயின்மை முக்கிய காரணமாகும். ஆரோக்கிய வாழ்வே ஆனந்த வாழ்வு. உடல் நலத்திற்கு உடல் உறுப்புக்கள் மட்டுமன்றி அகத் துறுப்பாகிய மனமும் முக்கிய காரணமாகும் என்பதை நாம் மறந்துவிடுகிறோம். மனமாற்றம் உடல் மாற்றத்தைக் கொடுக்கும். மனத்தின் வலியும் தளர்ச்சியும் உடலின் வலிமைக்கும் தளர்வுக்கும் காரணமாகும். இதை அன்றாட வாழ்க்கையில் காணலாம். முதன் முதலாக இதைப்போல் ஒரு மேடையிலேறிப் பேசும் ஒருவனை யெடுத்துக்கொள் வோம். வாலிபன், நல்ல உடற்கட்டு வாய்ந்தவன். பேச்சைத் துவங்குவதற்கு முன்னரே அவன் உடலில் நடுக்கம் ஏற்படுகிறது; நெஞ்சு படபடவென்று அடிக்கிறது; உதடு துடிக்கிறது; மேனியெல்லாம் முத்து முத்தாய வியர்வை யரும்புகிறது உடலின் வலி குன்றி நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டாலதான் இத்தகைய மாறுதல்கள் நேரும் என்று நாம் அறிவோம். மேலே குறிப்பிட்ட வாலிபனோ நல்ல உடற்கட்டு வாய்ந்தவன். அவன் உடலில் இத்தகைய மாறுதல் தோன்றக் காரணம் என்ன? அதை அறிய முற் படும்போது ஓர் உண்மை வெளிவருகிறது. கன்னிப் பேச்சு என்ற எண்ணத்தால் அவன் உள்ளத்தில் அரும்பிய அச்சம் அவன் நரம்புகளைத் தாக்கி வலி குன்றச் செய்து விட்டது. இதனால் மனம் உடலைப் பாதிக்கும் என்பதை நன்கறிகிறோம். மனத்தின் திரிபுகள் பலவகைப்படும். அவை அச்சம், உவகை, துக்கம், வீரம், கோபம் முதலி யன. இவை உடலைத் தாக்கித் தனக்கு அடிமைப்படுத்தி விடுகின்றன. நல்ல மாறுதல்கள் நன்மை செய்யும். தீய மாறுதல்கள் தீமைசெய்யும். தீயனவற்றுள்ளும் மிகத்தீயது கோபமாகும்.

எதை எவ்வாறு செய்ய வேண்டும் என்று உணர்ந்து தெளிந்து அதன்படி நடப்பதால்தான் மனிதன் மிருகத்தினின்றும் வேறுபடுகின்றான். அதைவிட உயர்வடைகின்றான். கோபம் என்ற குணம் ஒருவன் உள்ளத்தை அடையுமானால் அவன் எதை எவ்வாறு செய்ய வேண்டும், எப்போது செய்ய வேண்டும், செய்வதால் வரும் விளைவென்ன என்பவற்றையெல்லாம் அறியும் சக்தியை இழந்துவிடுகின்றான் எனவே அவனுக்கு எவ்வித நன்மையும் உண்டாவதில்லை நன்மையடைய வேண்டும் என்று ஒருவன் விரும்பினால் முதலாவதாக அவன் கோபத்தைக் கைவிட வேண்டும் என்ற கருத்துத் தோன்ற நான்மணிக்கடிகை ஆசிரியர் ஒரு பாடல் பாடியுள்ளார்.

"கற்றார்முன் தோன்றா கழிவிரக்கம், காதலித்தொன்று
உற்றார்முன் தோன்றா உறாமுதல் ;—தெற்றென
அல்ல புரிந்தார்க(கு) அறம் தோன்றா ; எல்லாம்
வெகுண்டார்முன் தோன்றா கெடும்."

சினம் கொண்டவன் நன்மை எது தீமை எது என்பதையே அறிய முடியாதவனாகிவிடுவான். உண்மை அவன் முன் தோன்றாது. கண்ணிழந்தவன் நடப்பதைப்போலத் தான் அறிவிழநதவன் நடப்பான் என்றெலலாம் கூறிய ஆசிரியர் அதை அறவே கைவிட்டுவிட வேண்டும் என்று தொடர்நது கூறுகிறார். "கன்றாமை வேண்டும் கடிய; பிறர் செய்த நன்றியை நன்றாக் கொளல் வேண்டும் ; என்றும் விடல் வேண்டும் தன்கண் வெகுளி" என்ற பாடல் இக் கருத்தை வலியுறுததுகிறது.

இவ்வுண்மையை நன்றாக உணர்ந்து எவ்வெவ் வினையை எவ்வாறு செய்ய வேண்டும் என்று அமைதியாகச் சிந்தித்தால் உறுதியாக வாழ்வில் வெற்றி கிடைக்கும். கோபிப்பதால் நம்மை நாமே கெடுததுக்கொள்கிறோம். நமக்குப் பகைமையை நாமே தேடிக்கொள்கிறோம். செல்லிடததும அல்லிடத்தும் சினம் காத்து வாழ்ந்தால் நமமை எதிர்நோக்கி வரும் கேடெல்லாம் வெயில் முன் பனிபோல் மறைந்தொழியும்.

ஒருவன் தனக்குப் பொல்லாப்பு வேண்டும் என்று எண்ணினால் பிறரிடம சென்று தன் மானமிழந்து இரந்து நிற்க வேண்டும். இந்த மண்ணுலகில் என்றும் நிலைபெற்றிருக்க விரும்பினால் பலரும பாராட்டும முறையில வாழ்ந்து அழியாத புகழை ஈட்ட வேண்டும். மறு பிறவியில் தன்னுடன் வரத துணை வேண்டினால அறம செய்ய வேண்டும. நினைதத வற்றை நிறைவேறற வேணடும, செய்வினை முடித்த செமமல் உள்ளததோடு வாழ வேணடும் என்று விருமபினால் சினததைக் கைவிட வேணடும்.

"இன்னாமை வேண்டின் இரவெழுக; இந்நிலத்து
மன்னுதல் வேணடின இசைநடுக; தன்னொடு
செலவது வேண்டின் அறம்செய்க; வெலவது
வேணடின் வெகுளிவிடல்"

சில சமயஙகளில காரணம எளிதில சொலல முடியாத முறையில நிகழ்ச்சிகளை நடக்கக் காண்கிறோம. திறமையுளள ஒருவன முறையாகச் செயலாறறினும வெறறி அவனை அடைவதிலலை. மாறாகத திறமை குன்றியவன் அறியாத வகையில செயலாறறுமபோது, வெறறி அவனை நோக்கி விரைவதைப் பார்ககிறோம். அஃது இயற்கையின் செயல் எனறு அமைதி கூறுகிறோம். தளராத முயற்சியுடையவர்களுககு இயற்கை உதவியாயிருபபதுபோல, முனிவிலலாத மககளுககும் அவ்வுதவி பல வழிகளிலும கிடைக்கும். செலவம அவனைத தானுகவே வநது சேரும. செல்வம ஒருவனிடதது நிறைநதிருககுமானால அவனால் முடியாத காரியம எதுவும இலலையென்று கூறலாம். 'ஈட்டி எட்டிய மட்டும பாயும் பணம பாதாள மட்டும் பாயும்' என்பது பழமொழி. இந்நூலாசிரியரே,

"கல்விற் பிறக்கும் கதிர்மணி; காதலி
சொல்லிற் பிறககும் உயர்மதம்—மெல்லென்று
அருளிற் பிறககும அறநெறி; எல்லாம்
பொருளில் பிறநது விடும்."

என்று கூறுகிறார். அச் செல்வம் சினமில்லாதவனுக்குத் தான் துணை நிறகும்.

"கண்டதே செய்பவாம் கம்மியர்; உண்டுஎனக்
கேட்டதே செய்ப புலன்ஆள்வார்; வேட்ட
இனியவே செய்ப அமைந்தார; முனியாதார்
முன்னிய செய்யும் திரு." (நான்மணி: ௪௦.)

கம்மியர் தாம் எதைப் பார்க்கின்றனரோ அதையே செய்யும் திறமை படைத்தவர்கள். அறிஞர் உண்டு எனக் கூறும் நூலை முறையாகக் கேட்டு அதனையே செய்யும் தகுதிவாய்ந்தவர். நல்ல பண்பட்ட உள்ளம் படைத்தவர். இனியவற்றையே செய்யும் ஆற்றல் படைத்தவர். கோப மில்லாத சான்றோர் நினைத்தவற்றை யெல்லாம் செய்து கொடுக்கும் பேராற்றல் படைத்தது செல்வம்.

இப்பாடலில் திரு என்ற சொல்லை ஆசிரியர் கையாண்ட முறை வியந்து பாராட்டத் தக்கது. 'திரு' என்ற சொல்லுக்குப் பணம் என்று மட்டும் பொருள் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை செல்வம் என்றால் பணம் என்று மட்டும் நாம் வழங்குவதுமில்லை. செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் என்கிறோம். கல்வியைப் போல் செல்வம் காணக் கிடையாது என்கிறோம். 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்கிறோம். செல்வம் என்பது சிந்தையின் நிறைவே என்கிறோம். தம் பொருள் என்ப தம் மக்கள் என்றுரைக்கிறோம். எனவே பொன்னும் மணியும் நாணயமும் மட்டும் செல்வம் என்பதில்லை. சுருங்கக் கூறின் மக்களுக்கு நன்மையும் இன்பமும் தருவன வற்றையெல்லாம் செல்வம் என்கிறோம் இத்தனை பொருளும் இவனை வந்தடையும் என்ற பொருளும் தோன்றுமாறு திரு என்ற அழகிய சொல்லைப் பயன் படுத்தியுள்ளார்.

ஒன்றே செய்ய வேண்டும், ஒன்றும் நன்றே செய்ய வேண்டும், நன்றும் இன்றே செய்யவேண்டும், இன்றும் இன்னே செய்யவேண்டும் என்பது சான்றோர் வாக்கு. நல்ல முறையில் செய்யவேண்டும் என்று நினைத்தால் ஒன்றைத்தான் செய்யமுடியும் அந்த ஒன்றைச் செய்வதற்கு முன்னர் எதைச் செய்வதென்று நன்றாகச் சிந்தித்துத்

தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். எடுத்துக்கொண்ட காரியம் தனக்கும் பிறர்க்கும் நன்மையளிப்பதாக இருத்தல் வேண்டும் நன்மை இருவகையில ஏற்படும. ஒன்று நன்மையைச் செய்தல்; மற்றொன்று தீயனவற்றை விட்டு விடல். இவ்வாறு மேற்கொள்ளுதலையோ விடுதலையோ செய்து நாம நன்மை பெறலாம. தோநதெடுக்கப்படும் பொருள் நலலதாயினும அல்லதாயினும அவ்வவற்றுள் தலைசிறந்ததாக இருககவேணடும் எனபதில் ஐயமிலலை. ஏதேனும் ஒரு தீசசெயலை விட்டுவிடுவது நல்லது. இந் நூலாசிரியா கூறுவதைதக காண்போம:

"கொடுப்பின் அசனம் கொடுகக;—விடுப்பின்
உயிர்இடை யீட்டை விடுகக; எடுப்பின்
கிளையுள் கழிந்தாா எடுகக; கெடுப்பின்
வெகுளி கெடுத்து விடல்"

பிறருக்குக் கொடுக்கவேண்டும் என்று நினைத்தால் உணவுப் பொருளைக் கொடுககவேண்டும். ஏதாவது நீக்க வேண்டும் என்று நினைதகால ஓா உயிருக்கு நேர்ந்த இடையூற்றை நீக்குக. யாரேனும் ஒருவரை எடுக்க விரும்பினுல் தன் சுற்றததாரில மிகப் பினபட்டாரை எடுகக. ஏதாவது ஒன்றைக் கெடுதது விடவேண்டும் என்று நினைத்தால் சிறிதும தயக்கமின்றி தம உளளத்து வெகுளியைக் கெடுத்துவிடவேண்டும். "உள்ளம கவாநதெழுநது ஓங்கு சினம் காததுக்கொளளும் குணமே குணம எனக" என்ற அடிகள் நினைக்கற்பாலன. இதனுல தீயனவற்றுள்ளும் மிகத் தீயது கோபம எனபது சொல்லாமலே விளங்கும.

உண்மையில் அதனுல் வரும் தீமை மிக அச்சந்தருவது பாரதியார் அககருததைத் தெளிவாகப் பாடியுள்ளார்.

"கோனுகிச் சாத்திரத்தை ஆளும் மாண்பார்
ஜகதீச சந்திரவசு கூறு கின்ருன்
ஞானுநு பவத்தில்இது முடிவாம் கண்டீர்
நாடியிலே அதிர்ச்சியினுல் மரணம் என்ருன்

கோபத்தால் நாடியிலே அதிர்சசியுண்டாம்
..............................................
கோபததை வென்றிடலே பிறவற் றைததான்
கொல்வதற்கு வழியெனநான் குறிததிட்டேன்."

காஞ்சிப் புராண ஆசிரியரும்,

"வெகுளியே உயிாகளெலாம் விளைக்கும் தீவினை
வெகுளியே குணம்தவம் விரத மாய்ககுமால்
வெகுளியே அறிவினை சிதைககும் வெம்மைசால்
வெகுளியில் கொடும்பகை வேறென் றில்லையால்"

என்று கூறுகிறார்.

இவ்வாறு இதன் பயங்கரத்தை உணர்நத ஆசிரியர் அதைப போககிககொள்ள வழியும கூறுகிறா.

ஆன்றவிநதடங்கிய சான்றோர் நல்லன இவை, தீயன இவை, நல்லன செய்க, தீயன தவிாக என்று அறிவுரைகள் கூறுவா அவா கூறுவனவறறை அப்படியே பின்பற்றல் எலலோர்க்கும முடியாது. இதை அவாகளும அறிவர். அறிந்து ஒரளவு விலககளிபபாாகள் மணிமேகலையில் நாகர்குருமகனுககு மாமிசம் உண்ணக்கூடாது என்று அறிவுரை கூறிய சாதுவன் இறுதியில் மூத்துவிளிமாவொழிதது மறறெவ்வுயிா மாட்டும தீததிறம ஒழிகெனக் கூறுவதைக காணகிறோம. முற்றிலும முடியாதென்று கைவிடுதலின்றி, முடிந்த அளவேனும செய்யட்டும் என்று பெரியோர் கூறுதல மரபு. அதறகியைய நானமணி ஆசிரியர் இறுதியில ஒரு பாடல் பாடியுளளார்.

சினம் கொள்ளுதல் மிகக் கொடியது அதிலும் தன் கோபம் செல்லாத இடததில கொளளுமபோது மிக மிகக் கொடியது. ஆதலால முற்றிலும சினததைக் கைவிட முடியாதாயினும செல்லாத இடததிலேனும அதை விட்டுவிடுக என்று நயந்து கேட்கிறார் அதுவும முடியாது போனல் அக் கோபததைச் சுருககிககொளளும பழக்கத்தையாகிலும கொளளவேண்டும என்கிறார்:

"பெருக்குக நட்டாரை நன்றின்பால் உய்த்து ;
தருக்குக ஒட்டாரைக் காலம் அறிந்தாங்கு ;
அருக்குக யார்மட்டும் உண்டி ; சுருக்குக
செல்லா இடத்துச் சினம்."

விலக்கவேண்டியவற்றைக் கூறிய ஆசிரியர் கொள்ள வேண்டியவற்றையும் நிரலபடக் கூறுகிறார். அவர் கூறுவன வற்றுள் தலைசிறந்தது கல்வியே ஆகும்.

ஒருவர்க்குச் சிறப்பு அவர், பெற்ற செல்வத்தைப் பொறுத்தது. அதைவிடச் சிறப்புத் தருவது கல்வியே ஆகும்.

குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும் அழகல்ல. ஒருவற்குக் கல்வி யழகே யழகு உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றல் நன்று. கல்வி தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும். கற்றவர்க்குக் கல்வியே நல்ல அணிகலன். தொன்றுதொட்டே கல்வியின் பெருமையை உணர்ந்து அதன் பெருமையைப் பாராட்டி வந்திருக்கின்றனர். கற்றவர்களுக்கு மக்களிடையே நல்ல மதிப்பு உண்டு. கல்லாதவன் பலர் கூடிய அவையில் நுழைதலே முடியாது. அவன் கற்றவரிடை நுழைந்து உடன் இருந்தால் நாய் இருந்தது போலாகும். ஏதேனும் பேசினால் நாய் குரைத்தது போலாகும் என்று நாலடி ஆசிரியர் கடுமையாகக் கூறுகிறார். எண்ணற்ற பொன்னும் பொருளும் பெற்ற மன்னனுக்குக் கூடத் தன்னாட்டிலதான் பெருமையும் சிறப்பும் உண்டு. மாசறக் கற்ற வல்லாளனுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்புத்தான். நான்மணி ஆசிரியரும் தம் நூலில் பல விடத்தும் கல்விபற்றிக் கூறிச் செல்கிறார்.

ஒரு மனிதனை அவன் கல்வியைக் கொண்டே மதிக்கிறோம். அவன் எவ்வளவு கீழ்நிலையில் இருப்பானாயினும் கல்வி நிறைந்தவனாக இருந்தால் உலகம் அவனைப் பாராட்டும். ஒரே குடும்பத்தில் மூத்தோன் கல்லாதவனாக, இளையவன் கல்வியில் சிறந்திருந்தால் தாயின் மனம்கூட இளையவ

னிடத்தில் திரும்பும். அரசன்கூட இளையவன் எண்ணப் படி நடப்பான். நெருப்பு ஒரே நெருப்பாக இருந்தாலும் அது மேற்கொள்ளும இடத்தைககொண்டு. சிறப்படை கிறது. விறகிலே எரியும தீயை இகழ்ந்து பேசுகிறோம். விளக்கின் திரியாலே ஒளிவிடும தீயைக் கண்டால் பணிந்து வணங்குகிறோம். அதைப் போலவே ஒரே குடும்பத்தில் பிறந்தவர்களாக இருந்தாலும அவரவா மேற்கொள்ளும் தொழிலைப் பொறுத்தே மதிப்பளிக்கப்படுகிறது. கல்வியை மேற்கொண்டால் பெருமை கிடைக்கும் 'பிறப்பொக்கும் எல்லாஉயிர்க்கும் சிறப்பொவ்வா, செயதொழில் வேற்றுமை யான்' என்ற வள்ளுவர் வாக்கு நினைக்கற்பாலது. விளம்பி நாகனாரும்,

> "திரியழற் காணின் தொழுப விறகின்
> யெரியழற் காணின் இகழ்ப—ஒருகுடியில்
> கல்லாது மூத்தோனைக் கைவிட்டுக கற்றான்
> இளமை பாராட்டும் உலகு"

எனக் கூறியுள்ளனர். புறநானூற்றாசிரியரும்,

> "உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
> பிறறைநிலை முனியாது கறறல் நன்றே
> பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
> சிறப்பின் பாலால் தாயும் மனம்திரியும்
> ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
> மூத்தோன் வருக வென்னாது அவருள்
> அறிவுடை யோனாறு அரசும் செல்லும்
> வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
> கீழ்ப்பால ஒருவன் கற்பின்
> மேற்பால் ஒருவனும அவன்கட் படுமே"

எனத் தெளிவாகக் கூறுகிறார்.

சிலர் இயற்கையிலேயே அறிவுடையவர்களாக இருக்கி றார்கள். சிலர் கல்வி காரணமாக நல்லறிவு பெறுகின்றனர். அறிவுடையோர்களும் பல நூல் கற்றுத் தம் அறிவைப்

பெருக்கிக்கொள்ள வேண்டும். இல்லையேல் உள்ளம் அறிவை அடிமைப்படுத்திவிடும். உள்ளம் சூழ்நிலைக்கேற்ப மாறும் தன்மைவாய்ந்தது. எனவே அதை அடக்கி ஆளப், பல நூல்களைக் கற்றும் கேட்டும் நம் அறிவை உயர்த்திக் கொள்ள வேண்டும். இதையே ஆசிரியர், "பதிநன்று பல்லார் உறையின மதிநன்று மாசறக் கற்பின்" என்று கூறுகிறார்.

தவறுசெய்தல் மனித இயற்கை. தன் பிழையின் காரணமாக ஒருவன் இழிந்தநிலை யடைந்துவிடுகிறான். சிலர் வாழ்வில தாழ்நதுவிட்டால் மீண்டும் வாழ்வெய்துவ தில்லை. சிலர் தவறதை உணர்ந்து உயரும் வழியறிந்து முயன்று சீரடைகின்றனர் கற்றவர்கள இம்மாதிரி நிலை களில் உயர்நிலை யெய்துகின்றனர் காரணம் அவர்கள் கல்வியே. கலலாத மூடனே எனில் கால் முரிந்தவனாகி விடுகிறான்.

"கற்றான் தளரின் எழுந்திருக்கும் கல்லாத
பேதையான் வீழவானேல் கால்முரியும்

இத்தனை பெருமை பொருந்திய கல்வியைப் பாராட்டிய ஆசிரியர் அதைக் கற்கும் முறைதனையும் கூறுகிறார். எந்தச் செயலையும் நாம வெறறியுடன் முடிக்கவேண்டும என்றால் ஒருமைப்பட்ட மனதுடன் செய்யவேண்டும். பசிநோக்காது கண் துஞ்சாது மற்றவர் குறைபுரை நோக்காது கருமமே கண்ணாயிருததல் வேண்டும. இஃது எல்லோருக்கும் எளிதன்று. பலவிதப பொறுப்பும கவலையும் கொணடவர் எதையும் ஒருமைப்பட்ட மனத்துடன் செய்ய முடியாது. கவலையும் பொறுப்பும் மிகக் குறைந்த அளவில் உள்ளவர் மிகச் சிலரே. பொறுப்புணாந்தவர் ஆற்றும் செயல் மிக எளிதில் வெற்றிபெறும. இதை உணர்ந்த ஆசிரியர் மக்கள் கல்வியை இளமையிலேயே கற்றுவிட வேண்டும் என்கிறார். இளமையிற் கலவி பசுமரததாணிபோல் மனதில் பதியும். இளமையில் கல்லாமை பெருங் குற்றம்.

" இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளம்இலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்
கிளைஞர்இல் போழ்தில் சினமகுற்றம் குற்றம்
தமர்அல்லார் கையகத் தூண் " (நான்மணி)

மக்கள் இளமைபபருவததில் கற்கவேண்டும் என்ற உண்மையை முதுமைப பருவததிலேதான உணர்கிறார்கள். இளமையில கலவியை யாரும வெறுபபா. காரணம் அது வருத்தம கொடுபபது. தொடஙகுஙகால துன்பம் தந்து இன்பம பயப்பது உணர்ந்த பினனர், 'துள்ளித் திரி கின்ற காலததிலே என் துடுககடககிப் பளளிககனுப் பிலனே தந்தையாகிய பாதகனே' எனறு வருந்துதல் உணடு ஆதலால் அறியாத சிறுவாக்கு அறிநத தந்தையர் தாம் வருநதிக கல்வி பயிற்றுவிக்க வேணடும 'தந்தை மகற்காறறும நன்றி அவையதது, முந்தி யிருபபச் செயல்' என்ற வளளுவர் சொலலும பொருததமுடைத்தே. நான் மணிப் பாடலும் அவ் வழியே செலகிறது

" எல்லா இடத்தும் கொலைதீது ; மக்களைக்
கல்லா வளர விடல் தீது ; நல்லார்
நலமதீது நாணற்று நிற்பின் ; குலம்தீது
கொள்கை அழிநதக் கடை " (௩௧௧)

குற்றம் பொறுத்தல்

சாாபினால் அறிந்தும் அறியாமலும குற்றம் செய் வார்களாயின அஃது அவாகளுடைய சாாபுப பழக்கத்தால் நோநத தீமையெனறோாந்து சால்புடையோர் அவா குற் றததையும பொறுதது மேற்கொணடு அவாகட்கு நனமை யும புரிவர். அதுபோல சிற்றினததாா சார்பிற் பிறந்தா ரைப் பொறுத்து நன்மை செய்வதே முறறினைச் சார்பாம் மூதறிஞாகடன. இதனை உனனி அவரைச் சினவாதொழிக. சிறறிறபிறததல்—சிற்றினததாா சாாபாதல் உள் சுடினும் —அகததேகிடநது வருததுமாயினும, சிறறக—சினவா தொழிக. மேலவர்—சாலபுநிறை முற்றினததார், சால்பா வாவது, அனபு நாண் ஒப்புரவு கணணோட்டம் வாய்மை

என்னும் என்றும் மாறு ஐம்பெரும் பண்புகளாகும். இச் சால்பே நிறைவின் பயமாகும். இவ்வுண்மை வரும் திருப் பாட்டுக்களான் உணர்க :

"அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்" (குறள், ௯௮௩.)

"இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு" (குறள், ௯௮௭.)

"ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்" (குறள், ௧௫௬.)

"பெற்றியால் தவமுன் செய்தா
ரெயினும் பிறப்பின் சாரால்
குற்றமே குணமா வாழ்வான்
கொடுமையே தலைநின் றுள்ளான்
விற்றொழில் விறலின் மிக்கான்
வெஞ்சின மடங்கல் போல்வான்
மற்றவன் குறிச்சி வாழ்க்கை
மனைவியும் தத்தை என்பாள்"
(௧௨. கண்ணப்பர், ௮.)

சொற்களே செயலைக் காட்டிலும் மிக்க துன்பத்தைத் தருவது. அச்சொற்கள் வடுவாய் மனத்தகத்துக் கிடந்து என்றும் ஆறாது துன்புறுத்தும். சுட்டபுண் புறத்துக் கிடப்பதல்லால் அகத்துப் புகுவதில்லை. எனவே எவரும் ஆய்ந்தோய்ந்து பாராமல் படபடப்பாக விரைந்து பழிப் பன பகர்தல்கூடாது. மேலும் நல்லொழுக்க முடைய வர்க்கு மறந்தும் தீய சொற்களைச் சொல்லுதல் ஒல்லாது. 'நன்றென்றவற்றுள்ளும் நன்று முந்துகிளவா'மையாகும் இச் சீரியபண்பு 'இழைத்துணர்ந்து ஈண்டிய கேள்வியி' னர்க்கே வாய்க்கும். இதுவே தன்னிழப்பாகிய வீடாம். இவ்வுண்மை வரும் பாட்டுக்களான் உணர்க :

"தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு." (குறள், ௧௨௯.)

"பிழைத் துணர்ந்தும் பேதைமை
சொல்லா ரிழைத் துணர்ந்து
ஈண்டிய கேள்வி யவர்" (குறள், ௪௧௭.)

"ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்" (குறள், ௧௩௯.)

உண்டால்...

"புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்... (புறம். ௧௮௨.)

"எள்ளற்க என்றும் எளியாரென் றென்பெறினும்
கொள்ளற்க கொள்ளாரகைம் மேலவா—உள்சுடினும்
சீறற்க சிற்றிற் பிறந்தாரைக் கூறற்க
கூறல் லவற்றை விரைந்து."

உற்றதுணர்தல்

சிற்சில செயல்கள் நிகழ்ந்தபின் செம்மையும் உறுதியும் நிகழ்ந்து தோன்றும. அந்நிகழ்ச்சிகள் துன்பம் தருவனவாகக் காணப்பட்டினும் உறுதியுண்மை காட்டும் ஒண்மையால அவையனைத்தும் நன்மைக்கேயாம். அப்பொருளகளை விளக்கு நான்மணி காணக: ஒளிக்கற்களாகிய மணிகளின் நல் இயல்பை சாணையிட்டறிவர்; குதிரையின் நல்லியல்பைப் பண்ணமரச் செலுத்தியபின் அறிவா; பொன்னின நலலியலபைப் புடமிட்டுச் சுட்டறிவா; கேளிரால் உண்டாகும நற்பயனைச் செல்வக் குறைபாட்டின் வைததறிவர். மண்ணுதல் - கழுவுதல்; சாணையிடுதல் பண் - கலணை; சேணம் மா - பரிமா; குதிரை. கேளிர் - உறவினா; நட்டோர். இவ்வுண்மையுணர்த்தும் பாட்டுக்கள் வருமாறு:

"அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை" (குறள், ௮௧௪)

"சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடசுட நோற்கிற் பவர்க்கு." (குறள், ௨௬௭)

"கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்." (குறள், உ௧௬)

"மண்ணி அறிப மணிநலம் பண்ணமைத்து
ஏறிய பின்னறிப மாநலம் மாசறச
சுட்டறிப பொன்னின் நலங்காண்பார் கெட்டறிப
கேளிரான் ஆய பயன்."

நல்லாண்மை

சார்ந்தாரைக் காக்கும் தன்மையினர் ஒரோ வழித் துன்பப்படுத்தினும் சார்ந்தார் அவரைவிட்டகலாது அவர் பாலே அமைந்து வாழ்வர் சாரும் பண்பிலாதார் ஒரு காலத்தும் ஒட்டி வாழார். அவ்வுண்மை: பாகன் துன் புறுத்தினும் யானை அவனுடன் இணைந்தே வாழும். தாய் தான்பெற்ற சேயினைத் துன்புறுததினும அச் சேய் தாயைவிட்டு அகலாது வாழும். நட்டார் சினந்துரைப் பினும் அன்புற்று அகலார். மனம் ஒட்டாதவர்களும் இனம் ஒட்டி வாழ்தலிலர். மலைப்பினும் - துன்புறுத்தித் தெறுத்தாலும். வாரணம - யானை, தாங்கும - சுமக்கும். அலைப்பினும - அடித்து வருத்தினும். குழவி - சேய். சிலைப்பினும் - தவறுகண்டு இடித்துக் கூறினும. நடுங்கும் வினை - நீங்கி அகலற்காம் செய்கை. ஒட்டார் - மனம் பொருந்தார். உட னுறைதல் - கூடிவாழ்தல். இவ்வுண்மை உணர்த்தும் பாட்டுக்கள வருமாறு :

"அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்." (குறள், அ0எ)

"ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று." (குறள், ௧௬எ)

"நனைமுதிர் ஞாழற் சினைமருள் திரள்வீ
நெய்தன் மாமலர்ப் பெய்தல் போல
ஊதை தூற்றும் உரவு நீர்ச சேர்ப்ப
தாயுடன்று அலைக்குங் காலையும் வாய்விட்டு
அன்னா வென்னும் குழவி போல
இன்னா செயினும் இனிதுதலை அளிப்பினும்

நின்வரைப் பினளென் தோழி
தன்னுறு விழுமங் களைஞரோ இலளே."
(குறுந்தொகை, ௩௧௪)

"மலைப்பினும் வாரணம் தாங்கும் அலைப்பினும்
அன்னேயென் றோடுங் குழவி சிலைப்பினும்
நட்டார் நடுங்கும் வினைசெய்யார் ஒட்டார்
உடனுறையுங் காலமும் இல் "

கல்வி அதிகம் கற்றானாயினும் கற்றபடி நிற்பான் அல்லனாயின், அக் கல்வியால் ஒரு பயனுமில்லை. வள்ளுவரும்,

" கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக "

என்று கூறியுள்ளார் கற்றவரில் பலர் கற்றபடி நிற்றலைக் காண்கின்றோம இல்லை. ஒன்றைக் கற்று உள்ளத்தில் கொள்வதால மட்டும் உறுபயன் கிடைத்துவிடாது. கற்றவற்றை நன்றாகச் சிந்தித்து உணர்ந்து அதன்படி ஒழுக வேண்டும். அவ் வொழுக்கமே மனிதனை உயர்த்துவது. நல்ல ஒழுக்கமுடையவனே கல்வி கற்றவன் எனப்படுவான். இதையே 'ஆசாரம் என்பது கல்வி' எனச் சுருக்கமாகக்

" மனைக்கு விளக்கம் மடவாள் ; மடவாள்
தனக்குத் தகைசால் புதல்வர் ; மனக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியே ; கல்விக்கும்
ஓதின் புகழ்சால் உணர்வு."

என்ற நான்மணிக்கடிகையின பாடலும் இக்கருத்தையே வலியுறுத்துகிறது.

## ஆசாரக் கோவை

ஆசாரக்கோவை ஆசிரியர் பெருவாயின் முள்ளியார் என்பார். இவர் சங்ககாலத்திற்குப் பிற்பட்ட காலத்தில் வாழ்ந்தவர். இவர் செய்த இந்நூலபாயிரம் நீங்கலாக நூறு வெண்பாக்களைக்கொண்டது இது மக்கள் அன்றாட

வாழ்க்கையில் கடைப்பிடிக்கவேண்டிய முறைகளை விளக்கிக் கூறுகிறது. பாயிரத்தின்மூலம் இவ்வாசிரியர் சைவ சமயத்தில ஈடுபாடு உடையவா என்று எண்ண இடமிருக்கிறது. இந்நூலின் கருததுககள் மிகச சிறநத முறையில அமைந்திருபபதால் பிறகாலததாசிரியரும இவா பாடலகளை எடுத்துக கையாண்டிருக்கின்றனர். இந்நூலுககு மூலம ஆரிடம் என்ற வடமொழி நூலாகும.

தமிழ் என்றால் தலைவன் தலைவி என்ற இரு சொற்களில் அடஙகிவிடும என்று சிலா எள்ளி நகையாடுகின்றனர். தமிழில என்ன இருககிறது. காதல ஒனறைபபறறியே கூறும அகச்சுவை நிரமபியனவே தமிழ நூலகள என்று கூறுகின்றனா. இககூறறு முழு அளவு உணமையன்று என்று வாதாடத துணை நிறகும நூலகளுள பெருவாயின் முள்ளியார் இயற்றிய ஆசாரககோவையும ஒன்றாகும. நம் அன்றாட வாழ்வில் செயயும சிறுசிறு செயலகளையும எநத முறையில் செயயவேணடும என்று விளககமாகக கூறுகிறது.

ஆசாரம் என்பதற்கு நாம் தவறுதலாகவே பொருள் நினைதது விடுகிறோம. ஆசாரம என்பதை தெய்வீகததோடு இணைததே கூறி வருகிறோம. ஆசாரம என்றால் நல்லமுறையில் நடத்தல என்பதுதான பொருள. பொதுவாகக கடவுள் வழிபாடு செயயககூடியவாகள தினம நீராடித் தூய ஆடை உடுததது, நலல உணவு உட்கொண்டு வாழ்கின்றனா. அவாகளை ஆசாரததோடு வாழ்கிறவர் என்று கூறுகிறோம. காலபபோககிலே கடவுள வழிபாடு செய்தால நறபயன கிடைககும என்ற நிலைமை மாறி ஆசாரம் என்று நாம் கூறும நலல ஒழுககஙகள உடையவாகள் நற்பயன் அடைவா என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது. புறததே தூயமையாக இருபபதைமட்டும் ஆசாரம் என்று நினைக்கத தவஙகிவிட்டோம. அது முற்றிலும் தவறு. உளளும புறமும தூயமையுடைமையே ஆசாரமாகும. இவ்விருவகை ஆசாரததைபபற்றியும கூறுவதுதான் ஆசாரககோவை.

புறத்தூய்மையால் பயனில்லை என்பதை ஒரு புலவர் மிகத் தெளிவாய் விளக்கியுள்ளார். நாள்தோறும குளிப்பதே கடவுளையடைவதற்கு வழியென்றால் தத்தும் தவளையும் மீன்களுமே கடவுள் உலகில் முதலிடம் பெறவேண்டும். காய்களையும கனிகளையும தின்பதனால் மட்டும் இறைவனடி சேரமுடியுமானால மரக்கிளையிலே தாவி விளையாடும் குரங்குகளே முதலிடமபெறும் என்று பலவாறாக அவர் இவ்வெளி ஆசாரத்தை இகழ்ந்துள்ளார்.

வெளி ஆசாரமட்டும் ஒருவன் மேற்கொண்டால் உள்ளததிற்கும உயிருக்கும பயன கிட்டாது போனாலும் உடல் நலமபெறும் எனபது உறுதி.

ந் நூலாசிரியர் இவைகளைப்பற்றி என்ன கூறியுள்ளார் என்பதைப் பார்பபோம்.

எதை எவ்வாறு செய்வது என்பதைக் கற்று அதன்படி நடபபதே ஆசாரம என்ற கருத்தை நான்மணிக்கடிகை ஆசிரியர் கீழ்வரும் பாடலில் குறிப்பிடுகிறார்.

> "ஆசாரம் என்பது கல்வி ; அறம் சேர்ந்த
> போகம் உடைமை பொருளாட்சி ; யார்கண்ணும்
> கண்ணோட்டம் இன்மை முறைமை ; தெரிந்து ஆள்வான்
> உண்ணாட்டம் இன்மையும் இல்."

உணவு கொள்ளுதல் எவ்வாறு என்பதைப்பற்றி மட்டும் பல பாடல்களை இந்நூலில் காணமுடியும்.

முறையாக உணவு கொள்ளக்கூடியவர்கள் தம்பசியை ஆற்றிக்கொள்ளுமுன்னர்த், தம்மைப்போல் பிறருக்குக் கொடுததுப் பினனே தாம உண்ணுவர். ஒழுக்கம் தவறாத சான்றோர் வயது முதிர்ந்தவர்களுக்கும் பசுக்களுக்கும் பறவைகட்கும் பிள்ளைகளுக்கும் கொடுததுப் பினனரே தாம் உண்பர். இன்றும் நம் தமிழகததில் பல வீடுகளில் இவ்வழக்கம் முறைபிறழாமல் நடபபதைக் காண்கிறோம். இக்கருத்தமைந்த ஆசாரக்கோவைப் பாடல் பின்வருமாறு.

"விருந்தினர் மூததோர் பசுசிறை பிள்ளை
இவர்க்கூண் கொடுத்தலால் உண்ணூரே என்றும்
ஒழுக்கம் பிழையா தவர்."

மற்றவர்கள் பசியை ஆற்றியபின், தாம் உண்ணும் நல்லார் தமமைத் தூய்மைபபடுததிய பின்னரே அருநது வர். நன்றாகக் குளிதது, அதற்குப பின்னரும் காலைக் கழுவி வாயை நன்றாகத் துடைதது, உண்ணும பாததிரத் தைச் சுற்றி நீர்தெளித்து அதற்குப பினனரே உணபர். காலை நனைதத நீர் காய்வதற்கு முனனரே உணவு கொளள வேண்டும் என்பது இவ்வாசிரியர் கருத்து. 'காலின் நீர் நீங்காமை உண்டிடுக' என்பது ஆசாரககோவையில் ஒரு வரி. இவ்வாறு முறையாக உண்டவரே உண்டாரெனப் படுவர். அவ்வாறு உண்ணாதவர் உண்டாலும உண்டவ ராக எண்ணப்படமாட்டார்.

"நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலம்செய்
துண்டாரே உண்டா ரெனப்படுவா அல்லாதார்
உண்டாரபோல் வாய்பூசிச செல்வ ரதுவெறுத்துக்
கொண்டார் அரக்கர் குறித்து."

உண்ணும்பொழுது ஒரு மனதுடன் உண்ணவேண் டும். வேறு செயலகளில் உளள ததைச் செலுததிய வண் ணம் உணவு கொள்ளல் உடல் நலத்தைக் கெடுததுவிடும. சினம், வெறுப்பு முதலிய விஞ்சியிருக்கும் நேரத்திலும் உணவருந்தல் தகாது. முறையற்ற சமயத்தில் சாபபிட் டால் செரிநீர் சுரக்கமாட்டாது. அதனால உணவு உடம் பில் நல்ல முறையில் சேராது. இவறறைக் கருதியே ஆசி ரியர் ஒரு பாடல் பாடியுள்ளார்.

"உண்ணுங்கால் நோக்கும் திசைகிழக்குக் கண்ணமர்ந்து
தூங்கான் துளஙகாமை நன்கிரீஇ யாண்டும்
பிறிதியாது நோக்கா னுரையான் தொழுதுகொண்டு
உண்க வுகாமை நன்கு."

உண்ணும்போது கிழக்கு முகமாக இருந்து உண்ண வேண்டும். தூங்காமல் அசையாமல் வேறு எதையும்

பற்றியும் சிந்தியாமல் உணவைத்தொழுதுண்ணவேண்டும் என்பதே இதனபொருள் இன்னும் நின்றும் கிடந்தும் உண்ணலாகாது. வெளளிடையிலும உண்ணுதல் கூடாது. கட்டிலில் இருந்தோ அளவுக்கு மிஞ்சியோ உண்ணுதல் முறையாகாது இக்கருததைக கிடந்துண்ணார் நின்றுண்ணார் வெள்ளிடையுமுண்ணார், சிறந்து மிக உண்ணார் கடடின்மேல் உண்ணா, இறந்தொனறும் தின்னற்க நின்று" என்ற பாடலில காணலாம

பெரியோருடன் இருந்து உண்ணும் காலத்து அவருக்கு முன்னால உண்ணுதல கூடாது. அவருக்கு முன்னால் எழுநது செலலுதலும கூடாது. மிகுதியாக உணவு கிடைத்தாலும அவாகளுக்கு வலமாக இருநது உண்ணுதல் முறையாகாது எனபன போனற அறிவுரைகளை இநநூலில் இருபததுநான்காவது பாடலில காணலாம.

> " முன்றுவவாா முன்னெழாா மிககுறூ ரூணின்கண்
> எனபெறினு மாற்ற வலமிராா தம்மிற்
> பெரியாாதம் பாலிருநதக கால்."

இன்னும் உணவு கொளளுமபோது கடைப்பிடிக்க வேண்டிய வேறுபல விதிகளையும கூறுகிறார். உண்ணுங் காலததுத தமககு மூததவரை அருகில வைததுணண மாட்டாாகள். உண்ணும காலங்களில் மிகச் சிறியவற்றை முதலில் உணடு பின்னா அவறறை நீக்கிவிட வேண்டும.

பிற நாடுகளில் உணவுப பொருள்களில் எதை முதலில் உண்ண வேண்டும, எதைக கடைசியில் உண்ண வேண்டும என்று பழக்கங்கள இருப்பதுபோல நம் நாட்டிலும் உண்டு என்பதை நமமில பலருக்குத் தெரியாது. செவிச் சுவையை நன்றாக உணாந்து எவ்வெப் பண்ணை எவ் வெவ் வேளையில பாட வேண்டும் வாசிக்கவேண்டும் என்று பகுதத தமிழகத்தில இமமுறை இல்லாமலிருத்தல் முடியாது. அதைபபற்றியும கூறியுளளனா. முதலில் இனிப் பான பண்டங்களை அருந்த வேண்டும். இறுதியில் கசப் பானவறறை உட்கொளள வேண்டும். வேறு சுவைப் பொருள்களை இடையே சுவைத்தல வேண்டும்.

"கைப்பண எல்லாம் கடைதலை நித்திப்ப
மெசசும் வகையால் ஒழிந்த இடையாகத்
துய்க்க முறைவகையால் ஊண்."

என்பதாம். உண்ட பின்னர் வாயை நன்றாகக் கொப்புளித்து எச்சிலற நன்றாகச் சுத்தம் செய்ய வேண்டும என்பதையும் ஆசிரியர் நினைவுபடுததித்தான் செல்கிறார்.

விருந்து பேணுதல் என்பது தமிழகத்தின் தனிப் பெருஞ் சிறப்பாகும. இங்குத் தோன்றிய அற நூல்களும் இலக்கியங்களும அப் பண்பை மிக உயர்த்திப் பேசுவதை அங்கங்கே காண்கிறோம் கணவனைப் பிரிந்து வாழ்ந்த சீதையும் கண்ணகியும் தம்மால் விருந்தினரை முறையாகப் பேண முடியவில்லையே என்று வருந்தியதாகத் தமிழ்ப் பாடல்களில் காண்கிறோம். கணவன் மனைவியிடை ஏதே னும் சிறு காரணத்தால் ஊடல் ஏற்பட்டிருந்தாலும்கூட விருந்ினரைக் கண்ட நேரததில் தங்களை மறந்து, இரு வரும் சேர்ந்து வந்தவரைப் போற்றுதலை இங்குக் காண முடியும். எனவேதான் ஊடலுக்கு மருந்தாகக் கூறுங் கால் அவ்வரிசையில் விருந்தையும் பண்டைப் புலவர்கள் சேர்த்து வைத்தனர். கணவன் தன்மீது அன்பு இல்லாமல் பரத்தையர்பால் சென்று காலம் கழித்த காலத்திலும் தமிழ் நாட்டுப் பெண்டிர் விருந்தினரை மனம் கோணுமல் வரவேற்று உபசரித்ததாகச் சங்க இலக்கியம் நமக்குக் கூறுகிறது. காரணம்.

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி,
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்பதை அவர்கள நன்குணர்ந்து கொண்டார்கள். விருந் துக்கு இவ்வளவு சிறப்புக் கொடுக்குமவர்கள் பேணும் முறையை அறியாமல் இருக்க முடியாது. அவர்கள் முறை பாராட்டத்தகுந்தது. விருந்தினர்கள நம்மைக் கண்டதும் நம் முகததைப் பார்த்தே உள்ளததை அறிந்து கொள்வார் கள். முகம மாறிவிட்டால் அவர்கள் உள்ளமும் மாறிவிடும். அனிச்ச மலரானது முகர்ந்தால் வாடும். விருந்தோ முகக்

திரிந்த ஞான்றே வாடிவிடும். ஆதலால் சிரித்த முகத்தோடு அவர்களை வரவேற்றல் வேண்டும். பின்னர் அவர்களிடத்து இனிய சொல்லால் பேசுதல் வேண்டும் மேலும் கால் கழுவ நீரும், படுக்கப் பாயும், அமர இருக்கையும அளித்து அவர்களைப் பாராட்ட வேண்டும இதுவே பெருவாயின் முள்ளியார் தம நூலில் கூறும் விருந்து பேணும முறை யாகும் இதற்குமேல் நல்ல உணவு படைத்து அவர் பசி யைப் போக்குதல் வேண்டும்.

"முறுவ லினிதுரை கானீர ம
கிடக்கையோ டிவவைநது மென்ப தலைசென்றார்க்கு
ஊணொடு செயயும் சிறப்பு."

இவ்விடத்துக் காசி காண்டப் பாடலொன்று ஒத்து நினைக்கற்பாலது.

"விருந்தின னாக ஒருவன்வந் தெதிரில்
வியத்தல்நன் மொழியினி துரைத்தல்
திருந்துற நோக்கல் வருகென உரைத்தல்
எழுதல்முன் மகிழவன செப்பல்
பொருந்துமற் றவன்தன் அருகுற இருத்தல்
போமெனில் பின்செல்வ தாதல்
பரிந்துநன் முகமன் வழங்கலிவ் வொன்பான்
ஒழுக்கமும் வழிபடு பண்பே."

பேச்சு ஒரு கலை. ஒரே செய்தியை ஒவ்வொருவர் சொல்லும்போது ஒவ்வொரு உணர்ச்சியைத் தரும். பலரும பாராட்டத் தகுந்த முறையில் சொல்லுவதென் பது எளிதான காரியமன்று சங்க காலத்தில் தோழியரின் கூற்று மிகச் சிறந்த முறையில் அமைநதிருக்கக் காண் கிறோம். காரணம் அவர்கள் நேரமறிந்து முறையறிந்து சொல்லும் நெறியறிந்தவர்கள். அதைப்போலப் பிற் கால இலக்கியங்களிலும சில வாயில் (பாத்திரங்)களைச் சந்திக்கிறோம் சில சமயங்களில் சொல்லும் முறையினால் பல இன்னல்களும் ஏற்படக்கூடும். அதனால் எவ்வாறு சொல்வது எனபதையும் ஒருவன் தெரிந்துகொள்ள

வேண்டியது அவசியமே. நூலாசிரியரும் அதைப்பற்றித் தம் கருத்துக்களைக் கூறிச் செல்கிறார்.

மிக விரைவாக ஒருவரிடம் ஒரு செய்தியைச் சொல்லக்கூடாது திரும்பத் திரும்பச் சொல்லியவற்றையே சொல்லுதலும் கூடாது. பொய்யுரையும் மிகைப்படுத்தலுமின்றிக் கூறுதல் வேண்டும். நாம் எதைச் சொல்ல நினைக்கிறோமோ அதைத் தெளிவாகக், காலத்திற் கேற்றவாறு அறிந்து சுருக்கமாகச் சொல்லல் வேண்டும். இத் திறமை இல்லாதவர்கள் தான் பலபலவிதமாகச் சொல்ல விரும்புவார்கள் என்ற கருத்துப்பட வள்ளுவரும் கூறுகிறார்.

“பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்.” (௬௪௯)

இவற்றை உள்ளடக்கிய பாடல் வருமாறு,

“விரைந்துரையார் மேன்மே லுரையார் பொய்யாய
பரந்துரையார் பாரித் துரையார் ஒருங்கெனைத்தும்
சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற்
சொல்லுக செவ்வி யறிந்து.”

இது பொதுவாக ஒருவரிடத்தில் சொல்லும்போது மேற்கொள்ள வேண்டிய நெறியாகும். பெரியோரிடத்துச் சொல்லும்போது கடைப்பிடிக்க வேண்டிய விதியும் வேறொன்றுண்டு. அவர்களிடம் ஒரு செய்தியைச் சொல்லும் பொழுது அவர்களை வணங்கியாகிலும் வாய்பொத்தியாகிலும்தான் செப்பல் வேண்டும். கூறும்போது உரையில் குற்றம்படாமல் கவனித்துக்கொள்ள வேண்டும்.

சொல்லும் முறையைக் கூறியவர் சில செய்திகளை யாரிடத்தும் கூறுதலே கூடாது என்கிறார். வேந்தனிடத்துத் தனக்குக் கிடைத்த உறுதிமொழி, அரசனால் சிறப்பிக்கப்பட்டவர் கட்டுரை, பிறருக்களித்த உறுதிச்சொல் இவற்றை அரசனிடத்தும் சொல்லுதல் கூடாது. அரசர் என்பதை நாம் எக்காலத்துக்கும் பொருந்துமுறையில் தலைவன் எனக் கொள்ளலாம். இவையன்றி நமமுடைய

கல்விப்பயிற்சி, செல்வவளம், குணநலன் இவற்றையும் மன்னனிடத்தில் கூறுதல் கூடாது. கூறினால் கேடுவரும் என்பதே ஆசிரியர் கருத்து.

இது போல எத்தனையோ அறிவுரைகளையும் முறைகளையும் ஆசிரியர் தம் நூலில் விளக்கமாகக் கூறுகிறார். இக்காரணத்தால் இந்நூல் என்றும் பயனுள்ளதாய் நின்று நிலவும் என்பதில் ஐயம் ஒரு சிறிதும் இல்லை.

## முதுமொழிக் காஞ்சி

மூன்றாவதாக முதுமொழிக் காஞ்சியைப் பார்ப்போம். இது மிகச் சிறிய நூல். இதை இயற்றியவர் மதுரைக் கூடலூர்கிழார் என்பவர் ஆவர். இவர் இயற்றிய வேறு பாடல்களும் பல அறிஞர்களால் போற்றப்படுகின்றன. சிறந்த பெரியார்கள் ஆராய்ந்து முடிவுகட்டிய உலக முறைகளைப் பற்றிக் கூறுவதே இந்நூலின் முக்கிய நோக்கமாகும். இந்நூல் சிறந்த பத்து, அறிவுப்பத்து, பழியாப் பத்து, துவ்வாப்பத்து, அல்லபத்து, இல்லைப்பத்து, பொய்ப் பத்து, எளியபத்து, நல்கூர்ந்த பத்து, தண்டாப்பத்து, எனப் பத்து அதிகாரங்களையுடையது. ஒவ்வொரு அதிகாரமும் பத்துப் பத்துப் பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு முதுமொழி காணலாம்

பள்ளிக்கனுப்புகிறாரே என்று தன் தந்தையை மிகக் கடிந்துகொண்ட ஒருவன், தான் தந்தையான காலத்தில் தன் மகனைக் கண்டித்துப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதை நாம் நடைமுறையில் காண்கிறோம். இளமையில் கல்வி கற்கவேண்டும் என்பது உண்மையே ஆனால் அதை ஒருவன் தன் முதுமைப்பருவத்தில்தான் உணர்ந்து கொள்கிறான். அதை உணர்ந்து கொள்வதற்கு அவனுக்கு அத்தனை கால அனுபவம் வேண்டும் உணர்ந்தபின், தான் எண்ணியபடி அவனால் நடக்கமுடியாது காரணம் சென்ற இளமைப்பருவம் மீண்டும் வருவதில்லை. எனவே அவனைப் பொறுத்தவரையில் அவன் அனுபவம் ஓரளவு பயனில்லா

மல் போகிறது. அயல் நாட்டுப் பழமொழி ஒன்று நினைவிற்கு வருகிறது. "ஆண்டவன் மனிதனுக்கு அனுபவம் என்ற சீப்பை அவனது தலைமயிரெல்லாம் உதிர்ந்தபின் பரிசாக அளிக்கிறான்" என்பதே அம் முதுமொழியாகும். அதனால் பெற்ற அனுபவம் முற்றிலும் பயனற்றது என்று கூறிவிடமுடியாது. தந்தையின் அனுபவத்தைத் தெரிந்து மகன் நடந்தால் நல்ல பயன்பெறமுடியும். மேலே கூறிய தந்தையைப்போல எத்தனையோ தந்தையர் எத்தனையோ சான்றோர் தங்கள் அனுபவ மொழிகளை ஏட்டிலே எழுதிச் சென்றிருக்கிறார்கள். மேலே கண்ட மகனைப்போல இந்த உலகத்து மக்கள் பலர் அதைத் தெரிந்து பயனடைந்திருக்கின்றனர். உலக மக்களுக்கு அம்மொழி மிகுதியும் பயன்படும். இதை உணர்ந்துதான் ஆசிரியர் ஒவ்வொரு அதிகாரத் துவக்கத்திலும் "ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம்" என்று துவங்கினார்.

"சமையல் செய்வது எவ்வாறு?" என்ற புத்தகத்தைப் பார்த்துக் கற்றுக்கொள்வதைவிட, சமையல் செய்கிறவரைக் கலந்து பேசினால் சில உண்மைகள் தெளிவாகும். சான்றோர்கள் அறிவைப் பயன்படுத்தி எதை எவ்வாறு செய்ய வேண்டும் என்று முறைகளை எழுதியிருப்பார்கள். அதைப் பலர் தங்கள் வாழ்நாளில் செயற்படுத்தியிருப்பார்கள். அவ்வாறு செயலாற்றும்போது பல உண்மைகளை அவர்கள் கண்டிருக்கமுடியும் கண்ட உண்மைகளே முதுமொழிகள். அவை வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படும் என்பதை ஒன்று அல்லது இரண்டு உதாரணங்களின் மூலம் பார்ப்போம்.

என்றால் கற்றுக்கொள்ளுதல் உலகம் எவ்வாறு நடக்கவேண்டும் என்பதைப் பிறரைப் பார்த்துக் கற்றுக்கொள்கிறோம். இதையே ஆசாரம் என்பர். "ஆசாரம் என்பது கல்வி" என்ற வரி நினைவிற்குரியது. ஓர் இடத்தின் பழக்க வழக்கங்களைக் கற்று அதன்படி ஒழுகுதலே ஆசாரம் இஃது இனத்திற்கு இனம் வேறுபடும். நாட்டிற்கு நாடு மாறுபடும் ஏன் ஒரே நாட்டில்

ஒரு காலத்தில் ஆசாரம் என்று கருதப்படுவது பிறிதொரு காலத்தில் அவ்வாறு கருதப்படாமையும் உண்டு.

ஒரு நாட்டிலேயே இவ்வாறு என்றால் வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு விதமாகும் என்பது சொல்லின்றியே தோன்றும். 'நிர்வாண தேசத்திலே ஆடையுடுத்தியவன் பைத்தியக்காரன்' என்பது பழமொழி. ஆகவே நாம் ஏட்டிலே கண்டவற்றைக் கொண்டு மற்றவர்களை ஆசாரம் இல்லாதவர்கள் என்று பழித்துவிடக்கூடாது. எது பலராலும் போற்றப்படுகிறதோ அதுவே ஆசாரம். அது புதுமையாகவும் இருக்கலாம். அக்குறையை நாம் உணர்ந்தாலும் பலரும் சென்ற வழியிலேயே நாம் செல்ல வேண்டும். இதையே வள்ளுவரும்,

"செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்"

என்று கூறியுள்ளனர். அவ்வாறு உலகத்தோடு ஒட்ட ஒழுகக் கல்லாதவன் பல நூல்களைக் கற்றிருந்தாலும் கற்றவனாக மாட்டான் என்றும் கூறுகிறார். இதை உள்ளடக்கியே முதுமொழிக் காஞ்சி ஆசிரியர் கூறுகிறார்.

"அறியாத் தேசத் தாசாரம் பழியார்"

இப்பாடலுடன் கீழ்வரும் ஆசாரக்கோவைப் பாடலையும் ஒப்பு நோக்கி மகிழலாம்.

"அறியாத தேயத்தா னாதுலன் மூத்தான்
இளையா னுயிரிழந்தான் அஞ்சினான் உண்டான்
அரசன் தொழிறலை வைத்தான மணாளனென்
றென்பதின்மர் கண்ட ருரைகருங்கால் மெய்யான
ஆசாரம் வீடுபெற் றார்."

இதைப்போலவே வேறொரு எடுத்துக்காட்டு.

ஈகை வேண்டும் என்று பல நூற்களும் வலியுறுத்துகின்றன. அதற்கும் ஒரு வரையறை உண்டு. அவ்வரம்பை அம்மாதிரி நூற்களில் நாம் காண்டல் அரிது. முதுமொழிகள் வழிகூறும். இந்நூலிலேயே அதைக் காணலாம்.

"வறியோன் வள்ளிய னன்மை பழியார்"
(பழியாப்பத்து ஒன்பதாவது செய்யுள்)

பொருள் இல்லாத வறியவன் ஒருவனை ஈகையுடைய னல்லன் என்று யாரும் பழிக்கமாட்டார்கள் என்பதே இதன் பொருள். தனக்குபபோகத் தானம என்பதே முறை. தனக்கு இல்லாதபோது பிறருக்களிததுப் பின் தானும பிறா முன்னால இரந்துநிற்கும நிலையடைதல் முறையான செயல இலலை. இரததலைபபோன்று இழிந்த செயல் எதுவும் இல்லை.

இக் கருத்தடஙகிய நான்மணிப்பாடலை அடியிற் காணலாம்.

"இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளம்இல்லாப் போழதத்து வள்ளன்மை குற்றம்
கிளைஞாஇல் போழதில் சினம்குற்றம் குற்றம்
தமர்அல்லார் கையகத் தூண்."

நண்பு

வாழ்க்கைக்கு அகத்து இன்றியமையாது வேண்டப் படும் வாழகைத்துணை நலம்போல புறத்து நட்பின் நல மும் வேண்டத் தக்கதாம. நண்பு இனறேல் பண்பு இன்றாம். பண்பே ஒண்மையுணாச்சியை வளர்க்கும். அவ் வுணர்ச்சியின் அரணாக நிறபது நண்பே. அதனாலேயே தொஞ்சியாசிரியர் 'நன்னட்பு' என நவில்வாராயினர். அறிவு மனததுளதுபோலத் தோன்றும் உண்மையான் நோக்கின் அஃது இனத்துளதாகும. எல்லாவுதவியினும் இணையின்றி உயர்ந்தது அறிவு கொடுப்பதேயாகும் அத னையே இவ்வாசிரியரும் உதவியென உணர்ததினர். இவ் வுண்மைகள் வரும் பாட்டுக்களான் உணர்க:

"மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகும் அறிவு." (குறள், ௪௫௪.)

"அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு." (குறள், ௭அ௭.)

"சோரா நன்னட்பு உதவியின் அறிப."

**நாண்**

மக்கள் ஏனைய ஐயறிவுடைய உயிர்களினும் சிறந்தாராக மதிக்கப்படுதற்குக் காரணம் நாணுடைமையே இப்பொருள் தோன்ற "நாணகததில்லாா இயக்கம மரப்பாவை நாணால் உயிர்மருட்டி அற்று" எனறு நவில்கின்றனர் திருவள்ளுவநாயனா. காஞசி யாசிரியரும் அழகினும் நாணை சிறந்ததெனை அறைகின்றனர். நாணால் நலம ...ந்மென்பதும பணிவால் குலமுறும் என்பதும் வாய்மைக் கட்டுரை. தன குற்றம கண்டு பிறர் நாணுகின்றனா அக்குற்றம புரியத் தான நாணவில்லையாயின் அவனை அறக்கடவுளும் நாணுவன். உயிரினும நாண் சிறநதது என்பது தமிழர் தனிபபண்பு. இவ்வுண்மைகளை வரும் பாட்டுக்களான் உணாக:

> "உயிரினுஞ் சிறந்தன்று நாணே"
> (தொல். பொருள். களவு-உஉ.)

> "பிறர்நாணத தக்கது தான்நாணான் ஆயின்
> அறம்நாணத் தக்கது உடைத்து." (குறள், ௧0௧அ.)

> "நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
> வேண்டுக யார்க்கும பணிவு. (குறள், ௯௬0.)

> "நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
> நாணதுறவார் நாணாள் பவர்." (குறள், ௧0௧எ.)

> "நலனுடை மையி னுணுச சிறந்தன்று."

இவை போலவே, பிற பாடல்களும் பயன் தரும் முறையில் அமைந்துள்ளன. இநநூலைக கறறு அதன்படி நடந்தால் வையததுள் வாழவாங்கு வாழ்ந்து பெருமை பெறலாம். நூலின் பயனும் அதுவேயாகும.

